# ஆங்கிலேயரின்

# சமுதாய வரலாறு-II

(ENGLISH SOCIAL HISTORY-II)

(சாஸர் முதல் விக்டோரியா அரசிவரை
ஆறு நூற்றாண்டுகள்—ஒரு கண்ணோட்டம்)

ஆசிரியர் :

ஜி. எம். டிரெவெலியன்

தமிழாக்கம் :

சி. ஈ. இராமச்சந்திரன்

இர. ஆலாலசுந்தரம்




தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழக அரசு

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண் – 177

# ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு–II

## (ENGLISH SOCIAL HISTORY-II)

(சாஸர் முதல் விக்டோரியா அரசிவரை
ஆறு நூற்றுண்டுகள்—ஒரு கண்ணோட்டம்)

ஆசிரியர் :
ஜி. எம். டிரெவெலியன்

தமிழாக்கம் :
சி. ஈ. இரர்மச்சந்திரன், எம்.ஏ., எம்.லிட்.,
இந்திய வரலாற்று விரிவுரையாளர்,
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை

இர. ஆலாலசுந்தரம், எம்.ஏ.,
வரலாற்றுப் பேராசிரியர்,
அரசினர் கலைக் கல்லூரி, சேலம்




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

First Edition—December 1968

B.T.P. No. 177



English Social History–II

G. M. Trevelyan

*Translation*

C. E. Ramachandran

R. Alalasundaram

***Price Rs. 6·75***

This Tamil edition of 'English Social History' by G.M. Trevelyan is published by arrangement with Messrs. Longmans, Green and Company Limited, London.

*Printed by*
Kabeer Printing Works,
Madras-5

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஏழு ஆண்டுகள் ஆகி விட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான '**ஆங்கிலேயரின் சமுதாய வரலாறு–II**' என்ற இந்நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 177ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 212 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலை மண்டபத்தில் கொலு வீற்றிருக்கிறாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# பொருளடக்கம்

# 8. சார்லஸ், கிராம்வெல் ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் இங்கிலாந்தின் நிலை

பிறநாடுகளில் ஆங்கிலேயர் குடியேறத் தொடங்கியது—கிழக்கு இந்தியக் கம்பெனி—சதுப்பு நிலங்களை வடித்தல்—புரட்சியின் காரணமாகச் சமுதாயத்தில் ஏற்பட்ட விளைவுகள்—வீடுகளில் மக்களின் வாழ்க்கை.

(முதலாம் ஜேம்ஸ், 1603–1625. முதலாம் சார்லஸ், 1625–1649—நீடித்த பார்லிமென்ட் கூட்டப்படுதல், 1640—உள்நாட்டுப் போர் தொடக்கம், 1642—ஆலிவர் கிராம்வெல், பாதுகாப்பாளர் பதவியில் இருந்தது, 1653–1658.)

முதலாம் சார்லசின் காலத்தில் புரட்சி ஏற்படும்வரை குறிப்பிடத் தக்க நிகழ்ச்சியொன்றும் நிகழவில்லை என்று கூறலாம். நாட்டில் அமைதியும் பாதுகாப்பும் இருந்தது. உள்நாட்டுக் கலவரமும் பிறநாடுகளுடன் போரும் நிகழவில்லை. இங்கிலாந்தின் சமுதாய, பொருளாதார வரலாற்றை நோக்குங்கால், புரட்சி ஏற்படும்வரை ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சி, எலிசபெத்தின் ஆட்சித் தொடர்ச்சியைப்போல் இருக்கின்றது. விவசாயம், கைத்தொழில், வாணிபம் ஆகியவை முன் இரண்டு அத்தியாயங்களில் குறிப்பிட்டது போலவே தொடர்ந்து நடைபெற்றுவந்தன. நாட்டுப்புறங்களில் அனேகமாக எல்லோரும் சொத்து உடையவராகவும், வாழ்க்கையில் முன்னேறுவதற்கு வசதியுள்ளவராகவும் இருந்தனர். எனினும், விலைவாசி உயர்வினால் அனேகர் பாதிக்கப்பட்டனர். டியூடர் வம்சத்தினரின் காலத்தில் கைத்தொழிலும், வியாபாரமும் வளர்ச்சியடைந்த விதத்திலேயே மேலும் வளர்ந்துவந்தன. எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் தொலைநாடுகளுடன் வியாபாரம் செய்வதற்காகத் தோன்றிய கம்பெனிகள் செல்வாக்கிலும் செல்வத்திலும் வளர்ந்துகொண்டே வந்தன. அவை வளர வளர லண்டன் நகரமும் வளர்ந்துகொண்டே வந்தது. லண்டன் நகரம், மற்ற நகரங்களைவிட, ஜனத்தொகையிலும் செல்வத்திலும் மிஞ்சியதாகவிருந்தது. நீடித்த பார்லிமெண்ட் (Long Parliament) கூடியபோது, தொழில் கற்கும் முறை, ஏழைகளைக் காக்கும் சட்டம், கூலியையும் விலைகளையும் நிர்ணயிக்கும் முறை,

அமைதிக் காவலர் பிரிவி கவுன்சிலுக்கு அடங்கிப் பணியாற்றிவந்த விதம், ஆகிய அனைத்தும் எலிசபெத் இறந்தபோது எப்படியிருந்தனவோ, அப்படியே இருந்தன. எலிசபெத் இறந்து நாற்பது ஆண்டுக் காலத்திற்குக் கைத்தொழிலிலும், விவசாயத்திலும், சமுதாயத்திலும் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்படவில்லை என்றே கூறலாம். ஆனால், அதே சமயம் பியூரிடன் புரட்சி கண்ணுக்குத் தெரியாமல் வளர்ந்துகொண்டேவந்தது என்பதைக் குறிப்பிடவேண்டும்.

பதினேழாம் நூற்றாண்டின் முதல் நாற்பது ஆண்டுகளில் மக்களின் வாழ்க்கையும், பொருளாதார நிலையும் கொஞ்சம் கொஞ்சமாக மாறிக் கொண்டே வந்தன. இங்கிலாந்தும், ஸ்காட்லாந்தும் ஒரே அரசரின்கீழ் வந்ததும், மாற்றங்களின் வேகம் சிறிதே அதிகரித்தது. இரு நாட்டின் பார்லிமெண்டுகளும், மதஸ்தாபனங்களும், வியாபார நிறுவனங்களும், மேலும் ஒரு நூற்றாண்டுக் காலத்திற்கு ஒன்றிலிருந்து ஒன்று மாறுபட்டதாகவே இருந்துவந்தன. அத்துடன் ஒரு நாட்டில் இருந்த மக்கள் மற்றொரு நாட்டிற்குச் செல்லவில்லை. ஸ்காட்லாந்தின் ஏழ்மைநிலை ஆங்கிலேயரை ஸ்காட்லாந்திற்குச் சென்று குடியேறத் தூண்டவில்லை. அத்துடன் ஸ்காட்லாந்தியர், ஆங்கிலேயரைத் தங்கள் நாட்டில் வரவேற்கத் தயாராய் இல்லை. கி.பி. 1603-ல் ஸ்காட்லாந்தின் அரசனை ஆறாம் ஜேம்ஸ் இங்கிலாந்தில் முதலாம் ஜேம்ஸாகப் பட்டமேற்றபோது அவருடன் அனேக அவையினரும், ஊதியம் தேட நினைத்தோரும் இங்கிலாந்து வந்தடைந்தனர். அதுமுதல் ஸ்காட்லாந்தியருக்கு எல்லையைக் கடந்து இங்கிலாந்தில் குடியேறுவது பழக்கமாகிவிட்டது. ஆனால், ஸ்காட்லாந்தியர் இங்கிலாந்திற்கு வருவது நாளாக நாளாகத்தான் அதிகரித்தது. பல தலைமுறைக் காலங்களுக்குப் பிறகுதான் கூட்டம் கூட்டமாக, ஸ்காட்லாந்தியர் இங்கிலாந்திற்கு வந்தனர். அப்படி வந்தோரில், விவசாயிகள், கைத்தொழிலில் தேர்ந்தவர், தோட்டங்களை வைத்துக் காப்போர், அரசாங்கத்தில் பணிபுரிந்தோர், மருத்துவர், தத்துவஞானிகள் ஆகியோர் இருந்தனர். அவர்கள் பல துறைகளில் சிறந்தவர்களாக இருந்ததால் இங்கிலாந்தின் கைத்தொழில் வளர வழியேற்பட்டது. அதனால் இங்கிலாந்தின் செல்வம் மேலும் பெருகத் தலைப்பட்டது. மக்களின் வாழ்க்கையிலும் மாறுதல் ஏற்பட்டது. ஆனால், பதினேழாம் நூற்றாண்டு முழுவதும், மதம், அரசியல், விவசாயம், சதுப்பு நிலங்களை வடித்தல், தோட்டங்கள் வைத்தல், வியாபாரம், கடல் பிரயாணம், தத்துவம், விஞ்ஞானம், கலை ஆகியவற்றைப்பற்றிய புதிய கருத்துகளை ஸ்காட்லாந்திடமிருந்தல்லாமல், ஹாலண்டிடமிருந்தே ஆங்கிலேயர் கற்றனர்.

ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலத்தில் ஆங்கிலேயரின் கருத்துகளும், முறைகளும் ஸ்காட்லாந்தினுள் புகவில்லை. ஸ்காட்லாந்தியர்

தனிப்பட்ட மதஸ்தாபனத்தை ஏற்படுத்திக்கொண்டிருந்தனர். அவரது மதமானது ஆங்கிலிகன் மதத்திற்கும், ஆங்கிலேய பியூரிடன் மதத்திற்கும் முரணானதாகவிருந்தது. பண்ணைமுறை ஆட்சியில் பிரபுவிற்கும் குடியானவருக்கும் இடையே காணப்பட்ட விசுவாசம் ஸ்காட்லாந்து மக்களிடையே காணப்பட்டது. அத்துடன் பல வகுப்பினரும் ஒன்றுகக் கலந்தனர். சர் வால்டர் ஸ்காட் (Sir Walter Scott) எழுதிய நாவல்களைப் படித்த பிறகுதான் இவற்றை ஆங்கிலேயர் உணர்ந்தனர்.

வெளிநாடுகளுடன் நடந்த வியாபாரத்தில் ஆங்கிலேயருக்கும் ஸ்காட்லாந்தியருக்கும் இடையே முன்போலவே போட்டியிருந்து வந்தது. ஆங்கிலேயர் செல்வம் படைத்தவராக இருந்ததால் வெளிநாட்டு வியாபாரத்தில் அவர்கள் கை ஓங்கியிருந்தது. முடிந்த வரை ஸ்காட்லாந்தியர் வெளிநாடுகளுடனும், ஆங்கிலேயரின் குடியேற்றங்களுடனும் வியாபாரம் செய்யவொட்டாமல் ஆங்கிலேயர் தடுத்துவந்தனர்.

நாட்டில் ஆங்கிலேயரும் ஸ்காட்லாந்தியரும், எல்லைக்கப்பால் இருந்த மற்றவரை வெறுப்புடன் பார்த்துக்கொண்டனர். மூன்று நூற்றுண்டுக்காலமாக ஆங்கிலேயருக்கும் ஸ்காட்லாந்தியருக்கும் இடையே நடந்துவந்த எல்லைப்போர், இருநாடுகளும் ஒரே அரசரின்கீழ் வந்ததால் நின்றது. ஆனல், போர்கள் நடந்தபோது ஒரு நாட்டவர் மற்ற நாட்டவருக்கு இழைத்த தீங்கும், அதனல் உண்டான பழிவாங்கும் மனப்பான்மையும் தணிவதற்கு நீண்ட காலம் பிடித்தது. ஸ்டுவர்ட் வம்சத்தினரின் காலத்தில் மதத்தின் காரணமாகத் தோன்றிய சச்சரவு களிலும் உள்நாட்டுப்போரிலும், ஆங்கிலேயரும் ஸ்காட்லாந்தியரும் ஒன்றுகச் சேர்ந்து, அரசனுக்கோ அல்லது பார்லிமெண்டிற்கோ உதவி புரிந்தனர். ஆனல், நெருங்கிப் பழகும் சந்தர்ப்பம் ஏற்பட்டால் அவரிடையே இருந்த வேற்றுமைகள் அதிகமாக வெளிப்பட்டன. இரு நாட்டவரும், கருத்திலும் உணர்விலும் தொடர்ந்து மாறுபட்டவராய் இருந்துவந்தனர்.

பதினேழாம் நூற்றுண்டின் முதல் நாற்பது ஆண்டுக்காலத்தில், இங்கிலாந்தில் மாற்றங்கள் கொஞ்சம் கொஞ்சமாகவே ஏற்பட்டுவந்தன என்று மேலே குறிப்பிட்டோம். இரு நாடுகளும் ஒரே அரசரின்கீழ் வந்தமை இரு நாட்டவரின் சமுதாயத்தை எவ்விதத்திலும் பாதிக்க வில்லை என்பதையும் அறிந்தோம். ஆனல், அதே காலத்தில் ஆங்கிலேயர் பிற நாடுகளில் குடியேறத் தொடங்கினர். முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலத்திலும், முதலாம் சார்லஸின் ஆட்சியின் முற்பகுதியிலும், வெர்ஜீனியா (Virginia), நியூஇங்கிலாந்து (New

England), மேற்கிந்தியத் தீவுகளில் ஒன்ருன பரபடாஸ் (Barabados) ஆகியவிடங்களில் குடியேற்றங்களையும், இந்தியாவின் கரையோரம் வியாபாரஸ்தலங்களையும் ஆங்கிலேயர் உண்டாக்கினர். இவையே முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் நிகழ்ந்த அதிமுக்கிய நிகழ்ச்சிகளாகும்.

ஆங்கிலேயர் திரும்பவும் தங்கள் நாட்டைவிட்டுப் பிற நாடுகளுக்குச் சென்றனர். இக்காலத்தில் அவர்கள் செய்த முயற்சி அவர்களுக்கு வெற்றியளித்தது. நூற்ருண்டுப் போரின் காலத்தில் ஆங்கிலேயர், ஃபிரெஞ்சு நாட்டைக் கவர்ந்து இங்கிலாந்தின் ஒரு மாகாணமாக்க முதன் முதலாக முயன்றனர். நூற்ருண்டுப் போரின் காலத்திலே மக்க ளிடையே நாட்டுப்பற்று தலைதூக்கியது. ஃபிரெஞ்சு நாட்டைக் கவரும் முயற்சி தோல்வியடைந்துவிடவே, ஒன்றரை நூற்ருண்டுக் காலம், ஆங்கிலேயர் தங்கள் நாட்டிலேயே அடைந்துகிடந்தனர். ஆனுல், அக் காலத்தில் நாட்டின் செல்வம், அறிவு, கடற்படைப் பலம் ஆகியவற்றைப் பெருக்கிக்கொண்டேவந்தனர். அதனுல் பதினேழாம் நூற்ருண்டில் திரும்பவும் 'வெளிநாடுகளை அடைவதில் முயற்சி செய்தனர். இம் முயற்சியின்போது புது முறையைக் கையாண்டனர். அத்துடன் வெளி நாடுகளுக்குச் செல்லும்போது அவர்கள் முன்போல் தங்கள் அரசரைத் தலைவர்களாகக் கொண்டிருக்கவில்லை. அவர்கள் முற்காலத்தில் உப யோகித்த நீண்ட வில்லையும் எடுத்துச் செல்லவில்லை. அத்துடன் பழங்காலந்தொட்டு நாகரிகமாக வாழ்ந்துவந்த மக்களை வென்று அவர்களது நாட்டைப் பிடிக்கச் செல்லவில்லை. அதற்கு மாருகக் கலப்பையை எடுத்துச் சென்று நாகரிகமற்ற நாட்டில் நாகரிகத்தை நிலைநாட்டச் சென்றனர்.

இத்தகைய வேலையைச் செய்வதற்கு நாட்டில் அமைதி நிலவ வேண்டியிருந்தது. ஸ்பெயினுடன் போர் நடந்துவந்தவரை, ஆங்கி லேயர் செல்வத்தையும் தங்கள் சக்தியையும், கடலில் போர்புரிந்து நாட்டைக் காப்பாற்றுவதிலும், அயர்லாந்து, நெதர்லாந்து ஆகிய நாடுகளில் போர் நடத்தவும் செலவிட வேண்டியிருந்தது. போர் நடந்துவந்த காலத்தில் வெர்ஜினியா குடியேற்ற நாட்டை ஏற்படுத்த ஆங்கிலேயர் செய்த முயற்சி பயனளிக்கவில்லை. முதலாம் ஜேம்ஸ் பட்டமேற்ற ஆண்டிலேயே இங்கிலாந்திற்குச் சாதகமாகச் சமாதானம் ஏற்பட்டது. இது ஒன்றைத் தவிர மற்றவிதத்தில் அவரது வெளி நாட்டுக் கொள்கை நாட்டுக்குப் பயனுள்ளதாக இருக்கவில்லை. கப்பற் படையின் பலம் குறையாமல் பார்த்துக்கொள்வதை அவர் விடுத்தார். ஸ்பெயின் நாட்டவரைச் சந்தோஷப்படுத்துவதற்காக, ராலேயைக் கொல்ல உத்தரவிட்டார். இப்படி அவர் செய்தாலும், அதனுல் நாட்டிற்குத் தேவைப்பட்ட அமைதி கிடைத்தது. அந்த அமைதி

நிலையைப் பயன்படுத்திக்கொண்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் தோன்று வதற்கும், அமெரிக்க ஐக்கிய நாடுகள் தோன்றுவதற்கும் வழி செய்தனர். முதலாம் சார்லஸ் கப்பற்படையின் பலத்தைத் திரும்பவும் அதிகரிக்கச் செய்தார். அவருக்குப்பின் அரசாண்டவர்களும் கப்பற் படையின் பலத்தை அதிகரித்துக்கொண்டே வந்தனர். அதனால் குடியேற்ற நாடுகளை ஏற்படுத்துவது சாத்தியமாயிற்று. அரசாங்கம் குடியேற்ற நாடுகள் ஏற்படுத்துவதற்கு ஏற்ற சூழ்நிலையை அமைத்துக் கொடுத்தது. எனினும், தனிமனிதரின் முயற்சியே குடியேற்ற நாடுகள் ஏற்படுத்துவதற்கு முக்கியக் காரணமாகவிருந்தது.

லண்டனில் இருந்த வெர்ஜீனியா கம்பெனி (Virginia Company), மசாசூசெட்ஸ் விரிகுடா கம்பெனி (Massachusetts Bay Company) ஆகிய இரண்டும் குடியேற்ற நாடுகள் ஏற்படுத்தத் தேவைப்பட்ட பணத்தையும் வசதிகளையும் செய்துகொடுத்தன. எனினும், அரசாங்கம் குடியேற்ற நாடுகள் ஏற்படுத்துவதற்குத் தன் ஆதரவைக் கொடுக்காதிருந்தால் கம்பெனிகளின் முயற்சியால் குடி யேற்ற நாடுகள் ஏற்படுத்துவது சாத்தியமாய் இருந்திருக்காது. பிரபுக் களும், ஜென்டரி வகுப்பினரும், வியாபாரிகளும் தங்கள் செல்வத்தைப் பெருக்கக் குடியேற்ற நாடுகள் உதவும் என்று நினைத்தனர். மேலும் அட்லான்டிக் மகா சமுத்திரத்திற்கும் அப்பால் ஆங்கிலேயருக்கு என் றும் நிலைத்திருக்கும் வியாபாரஸ்தலங்களை ஏற்படுத்துவதும் அவரது நோக்கமாக விருந்தது. அதேசமயம் குடியேற்ற நாடுகளில் கிடைத்த பொருள்களைப் பெறுவதும் அவரது நோக்கமாகும். உதாரணமாக வெர்ஜீனியாவில் ஏராளமாகப் பயிரிடப்பட்ட புகையிலையை, தங்கள் பொருள்களுக்குப் பதிலாகக் கொண்டுவருவதை நோக்கமாகக் கொண்ட னர். நாட்டுப்பற்றும் மதமும் அனேக ஆங்கிலேயரைக் குடியேற்றத்திற் குத் தேவைப்பட்ட பொருளை வழங்கச்செய்தன. அவர்கள் குடியேற்ற நாடுகளை ஏற்படுத்த கப்பல்களையும் தேவைப்பட்ட கருவிகளையும் கொடுத்தனர். கி.பி. 1630-க்கும் கி.பி. 1643-க்கும் இடையே, 20,000 ஆண், பெண், குழந்தை ஆகியோர் நியூஇங்கிலாந்து (New England) பிரதேசத்திற்கு 200 கப்பல்களில் அனுப்பப்பட்டனர். இதற்காக, 200,000 பவுன்கள் செலவிடப்பட்டன. அதே காலத்தில் 40,000 பேர், வெர்ஜீனியா, மற்றும் இதர குடியேற்ற நாடுகளுக்கு இங்கிலாந்தில் இருந்து சென்றனர்.[1]

குடியேற்றநாடுகள் ஏற்படுத்துவதற்குப் பல பிரபுக்களும்.செல்வந் தர்களும் உதவினர். ஆனால், குடியேற்ற நாடுகளில் குடியேறியவர், ஏழைகளும் மத்திய வகுப்பைச் சார்ந்தோருமாவர். அவர்களும் தங்கள்

[1] கியாப்ரி டேவிஸ் எழுதிய 'முந்திய ஸ்டுவர்ட்டுகளின் காலம்', பக்கம் 337.

வாழ்க்கைத்தரத்தை உயர்த்திக்கொள்ளும் எண்ணத்துடனே அங்கே சென்றனர். மதத்தின் காரணமாகவும் அவர்கள் அங்குச் சென்றனர். எனினும், அனேகர் மதத்தின் காரணமாகவன்றி, தங்கள் வாழ்க்கைத் தரத்தை உயர்த்திக்கொள்ளவே சென்றனர். ஆனால், யாத்திரீகத் தந்தையரும் (Pilgrim Fathers), அவருக்குப்பின் ஜான் வின்த்ராப்பும் (John Winthrop), அவரைச் சார்ந்தவரும் மதத்தின் காரணமாகவே நியூ இங்கிலாந்திற்குச் சென்றனர். அவரது மதப்பற்று வடஅமெரிக்காவின் வடக்குப் பாகத்தில் தோன்றிய குடியேற்ற நாடுகளைப் பியூரிடன் மதச் சார்புடையவையாய் இருக்கச்செய்தது. அத்துடன் வருங்காலத்தில் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் சமுதாயம் வளர்வதற்கு வழி செய்து கொடுத்தது.

மதத்தின் காரணமாக அட்லான்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்து சென்றவர், பிஷப்புகளின் கோபத்திலிருந்து தப்புவதற்காகவே அப்படிச் செய்தனர் என்று ஆண்டுரூ மார்வெல் (Andrew Marvell) குறிப்பிட்டுள்ளார்.

முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் இங்கிலாந்தில் பியூரிடன் மதத்திற்கு அங்கீகாரம் அளிக்கப்படவில்லை. நியூ இங்கிலாந்தில் குடியேறியவரில் சிலர் பியூரிடன் மதத்தை அடிப்படையாகக் கொண்ட குடியேற்றநாட்டை ஏற்படுத்த எண்ணினர். அப்படித்தான் மசாசூசெட்ஸ் முதலில் ஸ்தாபிக்கப்பட்டது. ரோட் ஐலண்டு (Rhode Island) நாட்டைத் தோற்றுவித்த வில்லியம் ரோகர் (William Roger) என்பாரும், நியூ ஹாம்ப்ஷயர் (New Hampshire), கனெக்டிகட் (Connecticut) ஆகிய நாடுகளைத் தோற்றுவித்த பியூரிடன் மதத்தவரும், மதவிஷயத்தில் சுதந்திரம் இருக்கவேண்டும் என்றும், எவரேனும் எம் மதத்தையாவது தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமை வழங்கப்பட வேண்டும் என்றும் எண்ணினர். அரசாங்கம் ஒருவருடைய மதம் இதுவாக இருக்க வேண்டும் என்று நிச்சயிப்பதை எதிர்த்ததன் காரணமாகவே, வில்லியம் மசாசூசெட்சில் இருந்து துரத்தப்பட்டிருந்தார். இங்கிலாந்தில் உருண்டைத் தலையர்கள் (Round heads) என்று அழைக்கப்பட்ட பியூரிடானியரிடையே, அரசாங்கம் மக்களின் மதத்தை நிச்சயிப்பதைப் பற்றிக் கருத்து வேறுபாடு தோன்று முன்பே, கி.பி. 1635-ல் நியூ இங்கிலாந்தில் அக் கருத்து வேறுபாடு தோன்றியது. ஆங்கிலிகன் மதம் நிலவிவந்த வெர்ஜீனியாவிலும், கத்தோலிக்க மதத்தைச் சார்ந்த லார்டு பால்டிமோர் தோற்றுவித்த மேரிலாந்திலும் மத விஷயத்தில் எவ்விதக் கட்டாயமும் இருக்கவில்லை.

வெர்ஜீனியா, மேற்கிந்தியத் தீவுகள், நியூ இங்கிலாந்து ஆகிய நாடுகளில் குடியேறியவர்களில் பலர் மதத்தின் காரணமாக அந்நாடுகளில்

குடியேறவில்லை. வெளிநாடுகளுக்கு ஆங்கிலேயர் நிலக்கிழார்களாக வாழ்வதற்காகவே முக்கியமாகச் சென்றனர். குடியேற்ற நாடுகளைத் தோற்றுவித்த கம்பெனிகள், அங்குச் செல்வோருக்கு நிலம் இலவசமாகக் கொடுக்கப்படும் என்று அறிக்கை விட்டன. மதவிஷயத்தில் சுதந்திரம் அளிக்கப்படும் என்று அவை அறிக்கைவிடவில்லை. அச்சமயத்தில் இங்கிலாந்தில் பயிர் செய்யக்கூடிய நிலத்தைச் சொந்தமாக்கிக்கொள்ள அலைந்தனர். இங்கிலாந்தில் குடியானவர், இயோமென் வகுப்பினர் ஆகியோரின் குடும்பங்களில் இருந்த இளைய புதல்வர்களுக்குத் தங்கள் தந்தையின் நிலத்திலே பாகம் கிடைக்க வழியில்லாதிருந்தது. முற்காலத்தில் கொடுக்கப்பட்ட ஓர் பத்திரத்தின் உதவியால் நிலத்திற்கு உரிமை கொண்டாடிவந்தவர் கொஞ்சம் கொஞ்சமாகக் குத்தகைக்குப் பயிர் செய்யும் குடியானவர்களாக மாறிக்கொண்டுவந்தனர். குத்தகைப் பணம் அதிகரித்துக்கொண்டேவந்தது. எனினும், குடியானவர் ஒருவருக்கொருவர் நிலத்திற்காகப் போட்டியிட்டுவந்தனர். வேலையற்றுவாளாவிருந்த கைத்தொழிலாளிகள், குடியேற்ற நாடுகளில் தங்களுக்கு மதிப்பு இருக்கும் என்றும், நிறைய வேலை கிடைக்கும் என்றும் எண்ணினர். துணிகரம் வாய்ந்த பிரபுக்கள், குடியேற்ற நாடுகளில் தாம் பெரிய நிலப்பரப்பிற்கு உரிமையாளராகலாம் என்ற எண்ணத்துடன் சென்றனர். அத்துடன் அந்நாடுகளில் புதியனவற்றையும் அதிசயிக்கத்தகும் பொருள்களையும் காணலாம் என்ற எண்ணத்துடனும் சென்றனர். மேலும் அந்நாடுகள் செல்வத்தில் கொழிக்கின்றன என்று சொல்லக்கேட்டு அச் செல்வத்தை அடையும் நோக்கத்துடனும் அங்குச் சென்றனர். ஆரம்பத்தில் நியூ இங்கிலாந்து வருங்காலத்தில் வாழ்க்கையில் உயர்வைக் கொடுக்கக்கூடியதாகவும், இங்கிலாந்தைவிடச் செல்வத்தில் மிக்கதாகவும் தோன்றவில்லை.

குடியேற்ற நாடுகளுக்குச் சென்று குடியேறும்படி வியாபாரக் கம்பெனிகளும், தனிப்பட்டோரும் மக்களைத் தூண்டினர். அரசாங்கம் தண்டனை கொடுக்கப்பட்ட குற்றவாளிகளைத்தான் அந்நாடுகளுக்கு அனுப்பிவைத்தது. பிறகு உள்நாட்டுப் போரில் பிடிக்கப்பட்ட கைதிகளை அங்கு அனுப்பிவைத்தது. சில வியாபாரிகளால் இளைஞர்கள் திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டு அங்கே வேலையாட்களாக விற்கப்பட்டனர். மேற்கிந்தியத் தீவான பார்படாஸ், மற்றும் வெர்ஜீனியா குடியேற்றநாடு ஆகியவைகளுக்கு அவ்விளைஞர்கள் கொண்டுசெல்லப்பட்டனர். மேற் குறிப்பிட்ட அனைவரும் பல ஆண்டுக்காலம் அங்கே உழைத்துச் சுதந்திர மனிதராகவும், பெருஞ் செல்வம் படைத்தோராயும் மாறினர். அவர்கள் செல்வம் படைத்த குடும்பங்கள் பலவற்றைத் தோற்றுவித்தனர். இதற்குக் காரணம், ஆஃப்ரிக்காவில் இருந்து வந்த நீக்ரோக்கள் மட்டுமே தங்கள் வாழ்நாள் முழுவதும் அடிமைகளாகவே வைத்திருக்கப்பட வேண்டியவர் என்ற கருத்துத் தோன்றியதாகும்.

மற்றவர் தன் உழைப்பால் சுதந்திர மனிதராக வழி பிறந்தது. ஹாக்கின்ஸ் துவக்கி வைத்த அடிமை வியாபாரம் தொடர்ந்து நடத்தப்பட்டு வந்தது. வெர்ஜீனியாவும் ஆங்கிலேயருக்குச் சொந்தமான மேற்கிந்தியத் தீவுகளும், அவ்வியாபாரத்தின் மூலம் அடிமைகளைப் பெற்று வந்தன.

சார்லஸுக்கும் கிராம்வெல்லுக்கும் இடையே நடந்த உள்நாட்டுப் போரின்போது தானாகவே நாட்டைவிட்டுச் சென்று பிற நாடுகளில் குடியேறியவரின் எண்ணிக்கை குறைந்துவந்தது. வெர்ஜீனியாவும், மேரிலாந்தும் (Maryland) அரசனிடம் விசுவாசமுள்ளவையாக இருந்தன. நியூ இங்கிலாந்து குடியேற்ற நாடுகள் பியூரிடன் மதத்தவருக்கு அனுதாபம் காட்டின. எனினும், கிராம்வெல்லின் தலைமையின்கீழ் பியூரிடன் மதத்தவருக்கும் சார்லஸுக்கும் இடையே நடந்த உள்நாட்டுப் போரில் தலையிடவில்லை. ஏற்கெனவே, ஐரோப்பாவில் நடக்கும் சச்சரவுகளில் தாம் தலையிடக்கூடாது என்ற மனப்பான்மை தீவிரமாக இருந்துவந்ததே அதற்குக் காரணமாகும். மூவாயிரம் மைல்களைக் கடந்து ஐரோப்பாவிற்குச் செல்வது கடினமான காரியமாகவிருந்தது. அட்லான்டிக் மகா சமுத்திரத்தைக் கடக்கப் பல மாதங்கள் ஆயின. தவிரவும், சுகாதாரமும் போதிய வசதிகளும் அற்ற கப்பல்களில் பிரயாணம் செய்யவேண்டியிருந்ததால் பலர் வழியிலேயே இறக்க நேரிட்டது. அதனால் குடியேற்ற நாடுகள் ஸ்தாபிக்கப்பட்ட கொஞ்சகாலத்திற்குப்பின், அமெரிக்காவில் இருந்து இங்கிலாந்திற்கு மக்கள் வந்து தம் வாழ்நாளைக் கழிப்பது நின்றது. அதனால் அமெரிக்காவின் சமுதாய வரலாற்றிற்கும், ஆங்கிலேயரின் சமுதாய வரலாற்றிற்கும் இருந்துவந்த தொடர்பு துண்டிக்கப்பட்டது. அமெரிக்காவிற்குச் சென்று குடியேறியவர் தங்கள் குணநலங்களில் மாறுபட்டனர். அதற்குக் காரணம் அமெரிக்காவின் சூழ்நிலை இங்கிலாந்தின் சூழ்நிலையிலிருந்து மாறுபட்டிருந்ததாகும். எனினும், அமெரிக்காவில் குடியேறிய ஆங்கிலேயர், பதினேழாம் நூற்றுண்டில் சென்றதால், பதினேழாம் நூற்றுண்டு ஆங்கிலேயரின் பண்பாட்டையும் கருத்துகளையும் உடையவராய் இருந்தனர் எனக் கூறலாம்.

இங்கிலாந்து அக்காலத்திலும், அதன்பின் இருநூறு ஆண்டுக் காலத்திற்கும், குடியேற்ற நாடுகளைத் தோற்றுவிப்பதற்கு ஏற்ற மனிதர்களை உடையதாய் இருந்தது. வட அமெரிக்காவிலும், ஆஸ்திரேலியாவிலும் ஆங்கிலம் பேசப்படுகிறது என்றுல் அதற்குக் காரணமாய் இருந்தது, ஆங்கிலேயர் குடியேற்ற நாடுகளைத் தோற்றுவிப்பதில் திறமையுடையராய் இருந்ததுதான். பத்தொன்பதாம் நூற்றுண்டின் பிற்பகுதிவரை ஆங்கிலேயர் விவசாயிகளின் வாழ்க்கையையே வாழ்ந்து வந்தனர். பழங்காலப் பழக்கங்கள் அவரது வாழ்க்கையில் இடம்

பெற்றிருந்தன. ஆங்கிலேயர் அனேகமாக நகரங்களில் வாழ்ந்தோராக இருக்கவில்லை. அவர்கள் குமாஸ்தா வேலையில் விருப்பமுள்ளவராகவோ, அல்லது ஒரு தனிப்பட்ட தொழிலில்மட்டும் தேர்ந்தவராகவோ இருக்க வில்லை. அதனுல் எந்தத் தொழிலேயும் மேற்கொள்ளக்கூடியவராய் இருந்தனர். உயர்ந்த வாழ்க்கைத்தரத்தவராக இருப்பினும் முன்பின் தெரியாத நாடுகளுக்குச் சென்று கடும் உழைப்பினுல் வாழ்க்கை நடத்த அவர்கள் தயங்கவில்லை. ஸ்டுவர்ட், ஹாஞேவர் வம்சத்தினரின் காலத்தில் வாழ்ந்த ஆங்கிலேயர் சூழ்நிலைக்கேற்றவாறு தங்கள் வாழ்க்கையை மாற்றி அமைத்துக்கொள்ளும் திறமையுடையவராய் இருந்தனர். அத்துடன் பிறநாடுகளுக்குச் சென்று குடியேறும் மனப் பான்மை, அவரிடையே, பிற்காலத்திருந்தவரிடம் காணப்பட்டதைவிட அதிகமாகவிருந்தது. இங்கிலாந்தில் இருந்த ஆங்கிலேயர் தங்கள் வாழ்க்கைத் தரத்தைத் தங்கள் முயற்சியால் காத்துக்கொள்ளவேண்டி யிருந்தது. முதியோருக்கும் உபகாரச் சம்பளம் கொடுக்கப்படவில்லை. அதனுல் அவர்களும் உழைத்தே தங்களைக் காத்துக்கொள்ளவேண்டி யிருந்தது. ஏழைகள் பாதுகாப்புச் சட்டம் ஏழைகளுக்கு உணவு அளிக்கப்படவே வழி செய்திருந்தது. பதினேழாம் நூற்ருண்டில் இங்கிலாந்தின் நகரங்களில் வாழ்ந்தோர் விவசாயம் செய்வதை மறந்து விடவில்லை. அதேபோல் கிராமங்களில் வாழ்ந்தோரும் கைத்தொழில் களைக் கற்றிருந்தனர். நகரங்களில் வாழ்ந்தோர், நகரத்திற்குச் சொந்தமான நிலங்களைத் தாங்களே பயிர் செய்துவந்தனர். கிராமங் களில் பயிர்த்தொழில் செய்தோர் மட்டுமல்லாமல், வீடு கட்டுவோரும், ஆடை நெய்வோரும், ஆடை செய்வோரும், மரச்சாமான்கள் செய்வோரும், பயிர்த்தொழிலுக்குத் தேவைப்பட்ட கருவிகள் செய் வோரும் இருந்தனர். கிராமப்பெண்மணிகள், ரொட்டி தயாரிக்கவும், பால் கறக்கவும் கற்றிருந்தனர். வீட்டில் சமைப்பதுடன் அவர்கள் அறுவடையின்போது உதவிசெய்தனர். நூல் நூற்கவும், ஆடை நெய்யவும், பழுதுபார்க்கவும் கற்றிருந்தனர். மேலும் குழந்தைகளை வளர்ப்பதிலும் திறமையுடையவராக இருந்தனர். அத்தகைய கிராமத் தவரை ஒரு கப்பல் நிறைய ஏற்றிச்சென்று, எவரும் இல்லாத இடத்தில் விட்டுவிட்டாலும், அவர்கள் புதிய கிராமத்தைத் தோற்றுவித்துப் பிறர் உதவியின்றி வாழ்க்கை நடத்தக்கூடிய திறமையுள்ளவராய் இருந்தனர்.[1]

அமெரிக்காவிற்குச் சென்று முதன்முதலில் குடியேறிய ஆண்களும் பெண்களும், பலவிதத்திலும் திறமை வாய்ந்தவராகவும், எவ்வித

[1] நியூ இங்கிலாந்தில் தோன்றிய குடியேற்ற நாடுகள் சிலவற்றில் சிலகாலம், வேலியிடப்படாமல் யாவரும் சேர்ந்து பயிர் செய்யும் முறையையும், பொதுவான மேய்ச்சல்நிலம் வைத்திருக்கும் முறையையும் அங்குக் குடியேறிய ஆங்கிலேயர் கையாண்டனர். இங்கிலாந்தில் இருந்தபோது அம்முறைகளை அவர்கள் கையாண்டு வந்ததே அதற்குக் காரணமாகும். கில்பர்ட் ஸ்லேடர் எழுதிய, 'ஆங்கிலேயக் குடியானவர்களும், வேலியிடப்பட்ட நிலங்களும்' என்ற நூலில் அத்தியாயம் 16.

இன்னல்களையும் சகிக்கக்கூடியவராகவும், அச்சமற்றவராகவும் இருந்திருக்க வேண்டும். முதன் முதலில் குடியேறியவரில் முக்கால் பாகம் சிறுவயதினராகவே இறந்துபோயினர். பிரயாணத்தின் கடுமை, வியாதி, பஞ்சம், பாதுகாப்பின்மை, மேற்கிந்தியருடன் நடத்திய போர் ஆகியவை அவர்கள் சிறுவயதினராக இறந்ததற்குக் காரணமாய் இருந்தன. பிழைத்தவர்களே தங்கள் குடியேற்றங்களைப் பெரிதாக்கி வந்தனர். பலவிதங்களிலும் ஆங்கிலேயர் அமெரிக்காவில் குடியேறியது, ஆங்கிலோ-சாக்ஸன்கள் பிரிட்டனில் குடியேறியதைப் போல் இருந்தது. ஆங்கிலோ-சாக்ஸன்கள் பிரிட்டனில் குடியேறிய போது அவர்கள் காடுகளை அழித்து நாடாக்கவேண்டியிருந்தது. அதேபோல் சதுப்பு நிலங்களையும் வடிக்கவேண்டியிருந்தது. அத்துடன் அவர் வருகைக்கு முன்னரே அங்கு வாழ்ந்துவந்தோருடன் போர்புரிய நேரிட்டது. ஆனால், ஆங்கிலோ-சாக்ஸன்கள் இங்கிலாந்திற்குள் நுழைந்தபோது நாகரிகமடைந்தவராய் இருக்கவில்லை. அதற்குமாறாக அமெரிக்காவில் புகுந்த ஆங்கிலேயர் நாகரிகத்தில் முதிர்ந்தவராக இருந்தனர். அவர்களில் சிலர் சிறந்த கல்வியறிவுடையவராக இருந்தனர். மசாசூசெட்சில் அவர்கள் குடியேறிய பின் அவர்கள் செய்த முதல் வேலைகளில் ஒன்று, சர்வகலாசாலை ஒன்றை நிறுவியதாகும். இங்கிலாந்தில் இருந்த கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையை அங்கு ஏற்படுத்தியதுபோல் இருந்தது. நாகரிகமடையாத நாடுகளில் நாகரிகமடைந்தோர் குடியேறியபோது, அங்கே இருந்த இன்னல்களைச் சமாளிக்கும் திறமைபடைத்தவராய் இருக்க வேண்டும். அக்காலத்தில் அத்தகையோர் இங்கிலாந்தில் அனேகர் இருந்தனர்.

அமெரிக்காவிலும், அதை அடுத்த தீவுகளிலும் ஸ்தாபிக்கப்பட்ட குடியேற்றங்கள், லண்டன் கம்பெனிகள், அல்லது அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின்கீழ் இருந்தன. எனினும், குடியேற்றங்களில் வாழ்ந்த மக்கள் உடனடியாக அதிகமான அளவு சுதந்திரத்தை அனுபவிக்கத் தலைப்பட்டனர். குடியேற்ற நாடு ஒவ்வொன்றிலும் தேர்தலின் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக்கொண்ட சபைகள் ஏற்படுத்தப்பட்டன. குடியேற்ற நாடுகளில் இருந்த நகரங்கள் ஒவ்வொன்றும் தங்களைத் தாங்களே கவனித்துக்கொண்டன. நியூ இங்கிலாந்தில் மத விஷயத்திற்காக அனைவரும் ஒன்றுகூடியது, அவரிடையே ஏற்கெனவே இருந்த பிணைப்பைப் பலப்படுத்தியது. அரசனின் அதிகாரத்தையும் கம்பெனிகளின் கட்டுப்பாடுகளையும், குடியேற்ற நாடுகள் முதலில் இருந்தே அமெரிக்காவில் அழித்துவிட எண்ணம் கொண்டிருந்தன. முக்கியமாக மசாசூசெட்சில் இவ்வெண்ணம் நிலவிவந்தது. ஜியார்ஜ் வாஷிங்டனின் (George Washington) காலத்தில் அவ்வெண்ணம் அமெரிக்கா முழுவதிலும் காணப்பட்டது.

அமெரிக்காவில் இருந்த குடியேற்ற நாடுகளில் வாழ்ந்துவந்த ஆங்கிலேயர், தங்கள் விவகாரங்களைத் தாங்களே நடத்திக்கொள்ள நினைத்தது, அமெரிக்காவிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையே இருந்த ஆயிரக்கணக்கான மைல் தூரத்தினால் அன்று என்று கூறலாம். அமெரிக்காவிலும், தென் ஆஃப்ரிக்காவிலும் இருந்த ஸ்பெயின், ஃபிரஞ்சு, டச்சு குடியேற்ற நாடுகள், அமெரிக்காவில் இருந்த ஆங்கி லேயக் குடியேற்ற நாடுகளைப்போல் வெகு தொலைவில்தான் இருந்தன. அவை வெகு காலம் தாய்நாடுகளின் அதிகாரத்திற்கு அடங்கி இருந்து வந்தன. அத்துடன் அக் குடியேற்ற நாட்டு மக்களிடம் குடியாட்சி மனப் பான்மை இல்லாதிருந்தது. எந்தச் சூழ்நிலை ஆங்கிலேயக் குடியேற்ற நாடுகள் தோன்றுவதற்குக் காரணமாகவிருந்ததோ, அதே சூழ்நிலை அவைகளிடையே தம்மைத்தாமே காப்பாற்றிக்கொள்ளும் மனப் பான்மை தோன்றுவதற்கும் காரணமாயிருந்தது. அரசாங்கம் குடியேற்ற நாடுகளைத் தோற்றுவிக்கவில்லை. அதற்கு மாறாக, தனிப்பட்டோரின் முயற்சியும் கம்பெனிகளின் முயற்சியுமே ஆங்கிலேயரின் குடியேற்ற நாடுகள் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தன. அத்துடன் பிற நாடு களில் குடியேறியவரில் அனேகர், இங்கிலாந்தின் மதச் சார்புடைய ஆட்சியில் இருந்து தப்பிக்கவே பிற நாடுகளுக்குச் சென்றனர். அதைப்போலவே, ஹுக்நாட்ஸ் (Huguenots) என்றழைக்கப்பட்ட ஃபிரஞ்சு பிராடஸ்டென்டுகள், ஃபிரஞ்சு நாட்டிற்குச் சொந்தமான கானடாவிற்குச் சென்று குடியேற முடியாததாய் இருந்தது.

ஆங்கிலேயர் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்வதில் பழக்கப் பட்டவராய் இருந்தனர். அப்பழக்கம் அப்படியே அமெரிக்காவிற்கு அவர்களால் கொண்டுசெல்லப்பட்டது. இங்கிலாந்தின் ஒவ்வொரு ஷயரிலும் இருந்த நிலக்கிழார்கள், அமைதிக் காவலராகப் பணியாற்றி, தத்தம் வட்டாரங்களின் ஆட்சியைக் கவனித்துவந்தனர். கூடிய சீக்கிரத்தில் அம்முறை வெர்ஜீனியாவில் தோற்றமளித்தது. வெர்ஜீனி யாவின் வட்டாரங்களின் ஆட்சியைக் கவனித்துவந்த நிலக்கிழார் களுக்கும், இங்கிலாந்தில் அவரைப்போல் பணியாற்றிவந்த நிலக்கிழார் களுக்கும் இடையே இருந்த வித்தியாசம் என்னவென்றால் அமெரிக்காவில் இருந்தவர் நீக்ரோ அடிமைகளை வைத்து வேலை வாங்கினதாகும். ஆகையால் வெர்ஜீனியாவில் செல்வந்தரின் ஆட்சியே நிலவியது எனலாம். அச் செல்வந்தரின் ஆட்சி, வெர்ஜீனியாவில் புகையிலைத் தோட்டங்கள் பெருகப்பெருக, பலம் பெற்று வந்தது. வெர்ஜீனியாவின் செல்வப் பெருக்கிற்குப் புகையிலை பயிர் செய்தல் காரணமாகவிருந்தது.

நியூ இங்கிலாந்து குடியேற்ற நாட்டில் வாழ்ந்த பியூரிடன் மதத்தைச் சார்ந்த விவசாயிகளும், வியாபாரிகளும் குடியாட்சி மனப்பான்மை

யுடையவராய் இருந்தனர். அத்தகைய மனப்பான்மை தங்கள் சொந்த நாடான இங்கிலாந்திலிருந்து வந்ததேயாகும். பதினேழாம் நூற்ருண்டின் முற்பகுதியில் இங்கிலாந்தில் இருந்த ஷயர்களிலும், கிராமங்களிலும் மக்கள் தங்கள் விவகாரங்களைத் தாங்களே நிச்சயித்து வந்தனர். ஒவ்வொரு கவுன்டியிலும் இருந்த நீதிமன்றங்களில், சுதந்திரத்துடன் வாழ்ந்துவந்த அனைவரும் பங்கு கொண்டனர். பண்ணை வீடுகளில் நடத்தப்பட்ட கோர்ட் லீட் (Court Leet) என்றழைக்கப்பட்ட மன்றங்களில், சுதந்திரக் குடியானவர்கள் பங்கு கொண்டனர். விவகாரங்கள் அனேகமாக அவர்களால் நிச்சயிக்கப்பட்டன எனக் கூறலாம். ஒவ்வொரு கிராமத்திலும் போலீஸ்காரர், ஏழைகள் பாதுகாப்புச் சட்டத்தை அமல் நடத்துபவர், பீர் போன்ற மதுபானங்கள் நல்ல முறையில் செய்யப்பட்டனவா என்று கவனிப்பவர், சாலைகளைப் பழுதுபார்க்கும் வேலையைக் கவனிப்பவர், ஆலயங்களைக் கவனித்துக் கொள்பவர் ஆகியோர்களைச் சாதாரண மக்களிலிருந்தே ஒவ்வொரு கிராமமும் தேர்ந்தெடுத்தது. தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் இப் பழக்கம், நியூ இங்கிலாந்தில் நகரசபை தோன்ற வழி செய்தது.

இங்கிலாந்தைவிட்டு வெளிநாடுகளுக்குச் சென்று குடியேறியவர், தங்களுடன், இங்கிலாந்தின் சட்டங்களையும், சட்டத்தின் அடிப்படைக் கொள்கையான சுதந்திர வாழ்வையும், ஜூரி முறையையும் கொண்டு சென்றனர். முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில், பார்லிமென்டிற்கு வேண்டும் பணத்தை அரசன் கொடுக்கவோ அல்லது மறுக்கவோ உரிமையுண்டு என்ற எண்ணம் வலுப்பெற்றிருந்தது. அவ்வெண்ணம் முக்கியமாக வெர்ஜீனியாவைத் தோற்றுவிப்பதில் முக்கிய பாகம் தாங்கிய ஸர் எட்வின் சான்டிஸ் (Sir Edwin Sandys) என்பாரிடம் காணப்பட்டது. அதேபோல் கிழக்கு ஆங்கிலியாவில் இருந்த பீயூரிடன் ஜென்ட்ரிகள், இயோமென்கள் ஆகியோரிடமும் அவ்வெண்ணம் நிலவிவந்தது. நியூ இங்கிலாந்தைத் தோற்றுவிப்பதில் அவர்கள் முக்கிய பாகம் தாங்கினர். அவர்கள் குடியேற்ற நாடுகளில் விவகாரங்களை நிர்ணயிக்கும் சபைகளை உண்டாக்கினர்.

அமெரிக்காவில் குடியேறியவர்களிடையே காணப்பட்ட சுதந்திர உணர்ச்சியும், இங்கிலாந்திலிருந்து வந்ததே. மத விஷயங்களில் கருத்து வேற்றுமை தோன்றினால் பைபிளின் கோட்பாடுகளைக் கொண்டே எது சரி என்று நிச்சயிக்கும் பிராடஸ்டென்ட் மதமே அச் சுதந்திர உணர்ச்சியை ஆங்கிலேயரிடையே வளர்த்திருந்தது. முதன் முதலில் மசாசூசெட்ஸில் இருந்த பாதிரியார்கள் மக்களைத் தங்கள் அதிகாரத்திற்குப் பணியவைத்தாலும், அவர்களுக்குச் சட்டபூர்வமான அதிகாரம் இருக்கவில்லை. மக்கள் தாங்களாகவே சிறிது காலத்திற்குப் பணிந்துபோயினர். நியூ இங்கிலாந்தில் இருந்த பாதிரியார்கள்,

தாங்கள் அரசரிடமிருந்து அதிகாரம் பெற்றவர் என்று சொல்லிக்கொள்ள முடியாமல் இருந்தது. ஃபிரஞ்சுக்காரருக்குச் சொந்தமான கானடாவில் இருந்த கத்தோலிக்கப் பாதிரியார்கள் தங்கள் அதிகாரத்தைப் போப்பிடமிருந்து பெற்றவர் என்று சொல்லிக்கொண்டதுபோல் நியூ இங்கிலாந்து பாதிரியார்கள் சொல்லிக்கொள்ள முடியவில்லை. நியூ இங்கிலாந்து, வெர்ஜீனியா ஆகிய நாடுகளில் இருந்த மதஸ்தாபனங்களின் அதிகாரம் மக்களின் சம்மதத்தைப் பொறுத்திருந்தது. அதனால் ஆங்கில மொழி பேசப்பட்ட அமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் மதமும் சுதந்திர உணர்ச்சியை மக்களிடையே வளர்க்கக் காரணமாயிருந்தது எனச் சொல்லலாம்.

கி.பி. 1655-ல் கிராம்வெல், ஸ்பெயினிடமிருந்து ஜெமைக்காவைக் கைப்பற்றியபோதுதான், முதன்முதலில் அரசாங்கம் படைபலத்தை உபயோகித்துத் தன் ஆட்சியை மற்ற நாடுகளிலும் புகுத்த முற்பட்டது. அதேபோல் இரண்டாம் சார்லஸ் டச்சுக்காரர்களிடம் இருந்து பிடித்த பகுதிகளில்தான், நியூயார்க் (New York), நியூஜெர்சி (New Jersey), பென்சில்வேனியா (Pennsylvania) ஆகிய குடியேற்ற நாடுகள் தோன்றின (கி.பி. 1667). ஆனால், அமெரிக்காவில் ஏற்கெனவே இருந்த ஆங்கிலேயரின் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் மனப்பான்மையை அரசாங்கத்தினால் மாற்ற முடியவில்லை. எனினும், அட்லான்டிக் மகாசமுத்திரத்தில் வியாபாரக் கப்பல்களை, ஆங்கிலேயரின் எதிரிகளிடமிருந்து காக்க, அரசாங்கக் கடற்படையை உபயோகிக்கவேண்டியிருந்தது. அதற்காகக் கடல் வாணிபச் சட்டங்களை (Navigation Laws) அமல் நடத்தவேண்டியிருந்தது. அச்சட்டங்களை அமல் நடத்தும் வகையில் அரசாங்கம் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் விவகாரங்களில் தலையிட முற்பட்டது. கிராம்வெல்லின் ஆட்சிக்காலம்தொட்டு கடல் வாணிபச் சட்டங்கள் ஓரளவு அமல் நடத்தப்பட்டன. ஆங்கிலேயரின் கப்பல்களில் இங்கிலாந்தின் பொருள்களைக் குடியேற்ற நாடுகளுக்கு எடுத்துச் செல்வதை அதிகரிப்பது, அக்கடல் வாணிபச் சட்டங்களின் ஒரு நோக்கமாக இருந்தது. அத்துடன் குடியேற்ற நாடுகளின் பொருள்கள் இங்கிலாந்திற்கே ஏற்றுமதி செய்யப்படவேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதும் அச்சட்டங்களின் நோக்கமாகும்.[1]

உலகத்தின் மற்றொரு பாகத்தில் மற்றொரு லண்டன் கம்பெனியானது இங்கிலாந்தின் எதிர்காலத்தை உருவாக்கிவந்தது. கி.பி.

[1] முதன் முதலில் ஏற்படுத்தப்பட்ட குடியேற்ற நாடுகளைப்பற்றிச் சிறந்த முறையில் சார்லஸ் எம். ஆண்ட்ரூஸ் எழுதியுள்ளார். (A high authority on the original settlements is Charles M. Andrews, 'The Colonial Period of American History', Vol. I, The Settlements. (Yale Univ. Press, 1933.)

1600-ல் எலிசபெத் அளித்த சாசனத்தின், அடிப்படையில் கிழக்கு இந்தியக் கம்பெனி உருவெடுத்தது. கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கீழை நாடுகளுடன் வியாபாரம் செய்ய தனி உரிமை கொடுக்கப்பட்டது. கம்பெனியில் வேலை செய்தோர் எவ்விதம் நடந்துகொள்ளவேண்டும் என்பதை,நிர்ணயிக்கச் சட்டங்கள் இயற்றவும், வேலை செய்தோரிடையே தோன்றும் சச்சரவுகளைத் தீர்த்துவைக்க ஏற்பாடுகள் செய்யவும், கம்பெனிக்கு உரிமை கொடுக்கப்பட்டது. நன்னம்பிக்கைமுனைக்கு அப்பால் இருந்த நாடுகளுடன் போர்தொடுக்கவும், சமாதான உடன் படிக்கைகள் செய்துகொள்ளவும் கம்பெனியின் நிர்வாகிகளுக்கு உரிமை இருந்தது. பல தலைமுறைக் காலங்களுக்கு இங்கிலாந்தின் கடற் படையைச் சேர்ந்த கப்பல் ஏதும் நன்னம்பிக்கைமுனையைக் கடந்து செல்லவில்லை. அரசாங்கம் தூரக்கிழக்கு நாடுகளில் இருந்த ஆங்கிலே யரின் வியாபாரஸ்தலங்களுக்குக் கடற்படையைக்கொண்டு பாதுகாப்புக் கொடுக்க முயற்சிக்காததே அதற்குக் காரணமாயிருந்தது. அதனால் கிழக்கிந்தியக் கம்பெனிக்குத் தன் வியாபாரஸ்தலங்களைச் சிப்பாய்களைக் கொண்டு பாதுகாத்துக்கொள்ளவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அத்துடன் கம்பெனியானது பொருள்களை ஏற்றிச் செல்லவும், கடலில் போர்புரியவும் தகுந்த கப்பல்களை வைத்திருக்க வேண்டியிருந்தது. கடல்களில் போர்த்துகீசியர், டச்சுக்காரர் ஆகியோருடன் போட்டியிட நேரிட்டதால் போர் புரியத்தக்க கப்பல்களை, கம்பெனி வைத்திருக்க வேண்டியது அவசியமாயிற்று. கிழக்கிந்தியக் கம்பெனி இந்திய அரசர் களுடன் சச்சரவு ஏற்படாமல் பார்த்துக்கொண்டது. அப்போது கம்பெனிக்கு நாட்டைக் கவரும் எண்ணமோ அல்லது நாட்டை ஆளும் எண்ணமோ இருக்கவில்லை.

முதலாம் ஜேம்ஸின் காலத்தில், சர் தாமஸ்ரோ (Sir Thomas Roe) என்பார், முகலாயச் சக்கரவர்த்தியின் அவைக்குத் தூதுவராக அனுப்பப்பட்டார். அவர் கிழக்கிந்தியக் கம்பெனியின் அதிகாரியாகவும் இருந்தார். அவர் ஆங்கிலேயர் கீழை நாடுகளில் எவ்விதம் நடந்து கொள்ளவேண்டும் என்பதை எடுத்துக் கூறினர். அவர் கூறிச் சென்றபடி ஆங்கிலேயர் ஒரு நூறு ஆண்டுக்காலத்திற்கு மேல் நடந்து கொண்டனர்.

'போர் புரிவதும், வியாபாரம் செய்வதும் ஒன்றுக்கொன்று முரணானவையாகும். செல்வத்தைப் பெருக்கவேண்டுமானல் கடலில் கலங்களைச் செலுத்தி வாணிபம் செய்வதொன்றையே குறிக்கோளாகக் கொள்ளுங்கள். இந்தியாவில் கோட்டைகளைப் பிடிக்கவும், நிலத்தில் போர்புரியவும் முயற்சிப்பது தவருனது என்று திட்டவட்டமாகக் கூறலாம்' என்று அவர் கூறிச் சென்ருர். ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலத்தில் இருந்ததுபோல் முகலாய சாம்ராஜ்யம் பலமுள்ளதாக

இருந்தவரை கிழக்கிந்தியக் கம்பெனியோ மேற்கூறியபடியே நடந்து வந்தது. முகலாய சாம்ராஜ்யத்தின் பலம் குறைந்து நாட்டில் குழப்பம் நிலவியபோதே ஆங்கிலேயர் இந்தியாவில் நடைபெற்ற போர்களில் பங்குகொள்ளவும், நாட்டைப் பிடிக்கவும் தலைப்பட்டனர். ஆங்கிலேயர் அப்படி நடந்துகொள்ள விருப்பமில்லாதவராக இருப்பினும், கிளைவின் (Clive) காலத்தில் தங்கள் வியாபார ஸ்தலங்களை, இந்தியர், ஃபிரெஞ்சுக்காரர் ஆகியோரின் படையெடுப்புகளிலிருந்து காத்துக்கொள்ளவே அப்படிச் செய்தனர்.

ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சியின் முற்பகுதியில் கிழக்கிந்தியக் கம்பெனியினர், சென்னையிலும், பம்பாய்க்கு[1] வடக்கே இருக்கும் சூரத்திலும் தங்கள் வியாபாரஸ்தலங்களை ஏற்படுத்தினர். கி.பி. 1640-க்குள் வங்காளத்திலும் நிறுவினர். ஆங்கிலேயர் தங்கள் வியாபாரஸ்தலங்களில் அனுபவித்துவந்த அதிகாரமும், சலுகைகளும், இந்தியாவில் பல பாகங்களிலும் அரசு செலுத்திவந்த இந்தியச் சிற்றரசர்களுடன் செய்து கொண்ட உடன்படிக்கைகளால் பெற்றவையாகும். ஆங்கிலேயரின் விரோதிகள் போர்த்துகீசியர் ஆவர். ஆனால், விரைவில் அவர்கள் பலம் குறைந்துவிட்டது. டச்சுக்காரர்கள் கி.பி. 1623ஆம் ஆண்டில் ஆங்கிலேயரைக் கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்து துரத்தியடித்தனர். அதனால் ஆங்கிலேயர் இந்தியாவில் தங்கள் நிலையைப் புலப்படுத்திக் கொள்ளவேண்டியதாயிற்று. சென்னை, பம்பாய் ஆகிய வியாபாரஸ்தலங்களில் இருந்து ஆங்கிலேயர் சீனாவில் இருந்த கான்டனுடன் (Canton) வியாபாரம் செய்யத் தொடங்கினர். கான்டனுக்கும் வடக்கே இருந்த பிரதேசங்களைப்பற்றி லண்டனில் இருந்த வியாபாரிகள் நன்கு அறிந்திராததால் அவர்கள் சீனாவுடன் கம்பெனியின் வியாபாரத்தை நடத்த எண்ணவில்லை. ஆனால், இந்தியாவில் வேலை பார்த்துவந்த கம்பெனியின் சேவகர்கள் சீனாவைப்பற்றி அறிந்திருந்தனர். அதனால் அவர்கள் தாங்களே சீனாவுடன் வியாபாரம் நடத்தி, செல்வத்தைப் பெருக்கிவந்தனர். கி.பி. 1628-ல் லண்டன் கம்பெனி, பாரசீக விரிகுடாவிற்கு முதன்முதலாகத் தன் கப்பல்களை அனுப்பிவைத்தது. இதற்கு முன்பே லெவான்ட் கம்பெனி (Levant Company) பாரசீகத்துடன் தரைமார்க்கமாக வியாபாரம் நடத்திவந்தது.

கிழக்கிந்தியக் கம்பெனியின் கப்பல்கள் பத்தாயிரம் மைல்களைக் கடந்து இந்தியாவை அடையவேண்டியிருந்தது. அப்படிச் செய்வதற்கு ஓர் ஆண்டுக் காலம் பிடித்தது. இத்தகைய நீண்ட பிரயாணம், கப்பல் செலுத்தும் முறையையும், கப்பல் கட்டும்

[1] பிற்காலத்தில் இரண்டாம் சார்லஸ் போர்த்துகீசிய இளவரசியை மணந்து கொண்டபோது பம்பாய் அவருக்குச் சீதனமாகக் கொடுக்கப்பட்டது.

விதத்தையும் மேம்பாடு அடைய வழி செய்தது. முதலாம் ஜேம்ஸின் காலத்திலேயே கிழக்கிந்தியக் கம்பெனி, அதற்குமுன் கண்டிராத அளவு பெரிய கப்பல்களைத் தன் வியாபாரத்திற்காக உருவாக்கியது. லெவான்ட் கம்பெனி உபயோகித்துவந்த கப்பல்கள் 100-ல் இருந்து 350 டன் எடையுள்ளவையாக இருந்தன. ஆனால், கிழக்கிந்தியக் கம்பெனி அனுப்பிய முதல் கப்பலே 600 டன் எடையுள்ளதாக இருந்தது. இந்தியாவிற்கு அனுப்பப்பட்ட ஆறாவது கப்பல் 1,100 டன் எடையுள்ள தாகவிருந்தது.[1]

ஸ்கர்வி (Scurvy) எனப்பட்ட வியாதியால் ஆங்கிலேய மாலுமிகள் அவதியுற்றிருந்தால், நீண்டநாள் பயணத்திற்குப் பிறகே இந்தியாவை அடைந்திருக்க முடியும்; அதனால் வியாபாரமும் தடைப்பட்டிருக்கும். தொடக்கத்தில் இருந்தே கிழக்கிந்தியக் கம்பெனி தன் மாலுமிகளுக்கு எலுமிச்சை ரசமும், ஆரஞ்சுகளும் கொடுத்து அனுப்பியது. ஸ்டுவர்ட், ஹானோவர் வம்சங்களின் ஆட்சிக் காலத்தில் கடற்படையில் பணிபுரிந்து வந்த மாலுமிகள் மேற்குறிப்பிட்ட வண்ணம் ஸ்கர்வி வியாதியில் இருந்து காக்கப்படவில்லை. அதனால் கப்பற்படையில் பணியாற்றி வந்த மாலுமிகள் மிகவும் தொல்லையுற்றனர். ஆஸ்திரேலியா கண்டத்தைக் கண்டுபிடித்த காப்டன் குக் (Captain Cook) மாலுமி களுக்குக் கொடுக்கப்பட்டுவந்த உணவு, பானங்கள் ஆகியவற்றை மாற்றி வியாதிகளைத் தடுக்கக்கூடியனவாகச் செய்தபின்பே கடற்படை மாலுமிகள் தொல்லைப்படாமல் பிரயாணம் செய்ய முடிந்தது.

ஸ்டுவர்ட் வம்சத்தினரின் காலத்தில் கிழக்கிந்தியக் கம்பெனியானது, நன்னம்பிக்கைமுனையைச் சுற்றி இந்தியாவிற்குச் செல்வதற்கு முப்பது பெரிய கப்பல்களை வைத்திருந்தது. அத்துடன் எண்ணிறந்த சிறிய கலங்களையும் வைத்திருந்தது. அவை கீழைக் கடல்களில் பிரயாணம் செய்வதற்காகக் கீழைநாடுகளிலேயே வைத்திருக்கப்பட்டன. சிறிய கலங்கள் சில டச்சுக்காரர்களால் பிடிக்கப்பட்டன; சில கடற் கொள்ளைக்காரர்களால் பிடிக்கப்பட்டன; பல கடலில் சிதறுண்டன. ஆனால், பெரிய கப்பல்கள் இங்கிலாந்தில் கிடைத்த சிறந்த ஓக் மரத்தினால் செய்யப்பட்டன. அவை பெருங் கடல்களில் முப்பது அல்லது அறுபது ஆண்டுக்காலங்களுக்குப் பிரயாணம் செய்யத் தகுந்தவையாய் இருந்தன. முதலாம் ஜேம்ஸின் ஆட்சிக் காலத் திலேயே கிழக்கிந்தியக் கம்பெனி ஒரு சமயம் 30,000 பவுன்களைக் கப்பல் கட்டுவதற்குச் செலவிட்டது. அப்படிக் கம்பெனியால் கட்டப்பட்ட

[1] எலிசபெத்தின் கடற்படையில் இருந்த பெரிய கப்பல்களில் ஒன்றான ரிவெஞ்ச் (Revenge) எனப் பெயரிடப்பட்டிருந்த கப்பல் 500 டன் எடை இருந்தது. மேஃப்ளவர் (Mayflower) என்ற கப்பல் 180 டன் எடை இருந்தது. அமெரிக்கா விற்கு அக்கப்பல் செல்லுமுன் இங்கிலாந்திற்கும் மத்தியதரைக்கடல் துறைமுகங் களுக்கும் இடையே நடந்துவந்த மது வியாபாரத்திற்காக உபயோகிக்கப்பட்டது.

கப்பல்கள், ஜேம்ஸின் கப்பற்படையில் இருந்த கப்பல்களைவிட எண்ணிக்கையில் அதிகமாகவிருந்தன. இந்தியாவுடன் நடந்துவந்த வியாபாரம் நாட்டிற்குப் பெரிய கப்பல்களையும் திறமைவாய்ந்த மாலுமிகளையும் தேடித்தந்தது.

கம்பெனியின் கடற்படை நாட்டின் பலத்தை அதிகரித்தது. அத்துடன் பெரும்பான்மையான ஆங்கிலேயர் பெருங்கடல்களில் பிரயாணம் செய்வதைக் கற்றுக்கொண்டனர். மேலும், தொலைவில் இருந்த நாடுகளுடன் வாணிபம் செய்யவும் பழகிக்கொண்டனர். கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைமைக் காரியாலயம் லண்டனில் இருந்ததால், இங்கிலாந்து கீழைநாடுகளுடன் நடத்திவந்த வியாபாரம் லண்டன் வழியாகவே நடத்தப்பட்டுவந்தது. அட்லான்டிக் மகாசமுத்திரத்தின் குறுக்கே அமெரிக்காவிற்கும் இங்கிலாந்திற்கும் இடையே நடந்துவந்த புகையிலை, அடிமைகள் வியாபாரத்தில், பிரிஸ்டலும் (Bristol), லீவர்பூலும் (Leverpool) பங்குகொண்டன. எனினும், அமெரிக்காவுடனும், இந்தியாவுடனும் நடந்துவந்த வியாபாரம் பெருகியதாலும், வர்த்தகக் கப்பல்களின் அளவு பெரிதாக்கப்பட்டதாலும், லண்டன் மேலும் இங்கிலாந்தின் முக்கிய நகரமாகத் திகழத் தொடங்கியது. இங்கிலாந்தின் மற்றச் சிறிய துறைமுகங்களில் வெகுதூரம் பிரயாணம் செய்யத் தகுதியற்ற சிறு கப்பல்களே நுழையவும் தங்கவும் முடிந்ததால் அத்துறைமுகங்கள் தங்கள் முக்கியத்துவத்தை இழந்தன.

இந்தியாவுடன் நடந்துவந்த வியாபாரம் கப்பல் கட்டுவதையும், கடல் பிரயாணத்தையும் பெருகச் செய்ததுடன் இங்கிலாந்தின் செல்வம் பெருகவும் வழிசெய்தது. இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட ஆடைகள் தூரக்கிழக்கு நாடுகளின் சீதோஷ்ண நிலைக்கு உகந்ததாய் இருக்கவில்லை. அதனால் தயாரிக்கப்பட்ட ஆடைகளில் ஒரு பகுதியையே அங்கு விற்கமுடிந்தது. இதைப் பயன்படுத்திக்கொண்டு கம்பெனியின் விரோதிகள் கம்பெனியால் வியாபாரம் செய்யமுடியவில்லை என்று குற்றம் சாட்டினர். கம்பெனிக்கு ஓர் அளவு தங்க வெள்ளி நாணயங்களைத்தான் இந்தியாவிற்குக் கொண்டு செல்ல எலிசபெத் அரசியால் அனுமதிக்கப்பட்டிருந்தது. அத்துடன் எத்துணை அளவு தங்கமும் வெள்ளியும் இந்தியாவிற்குக் கொண்டு செல்லப்பட்டதோ அதே அளவு திரும்பவும் இங்கிலாந்திற்குக் கொண்டுவர வேண்டும் என்றும் எலிசபெத் அரசி கட்டளையிட்டிருந்தார். கி.பி. 1621-க்குள் இங்கிலாந்திலிருந்து 100,000 பவுன் தங்கம் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டது. அதற்குப் பதிலாக அதைப்போல ஐந்து மடங்கு மதிப்புள்ள கீழை நாட்டுப் பொருள்கள் இங்கிலாந்திற்குக் கொண்டுவரப்பட்டன. அப்படிக் கொண்டுவரப்பட்ட பொருள்களில் கால்பாகமே ஆங்கிலேயருக்குத் தேவைப்பட்டது. மீதம் நின்ற பொருள் அதிக லாபத்திற்குப் பிற

நாடுகளில் விற்கப்பட்டது. இப்படி விற்கப்பட்டதால் நாட்டின் செல்வம் பெருகியது.

உள்நாட்டுப் போருக்குமுன், கம்பெனியின் பெரிய கப்பல்கள், வெடியுப்பு, கச்சாப் பட்டு, வாசனைத்திரவியங்கள், மிளகு ஆகியவற்றை, தேம்ஸ் நதியின் முகத்துவாரத்திற்குக் கொண்டுவந்தன. மழைக் காலத்தில் கால்நடைகளுக்குப் போதிய உணவு கிடைக்காததாலும் கால் நடைகளை வளர்ப்பது கடினமாகவிருந்ததாலும் புதிய இறைச்சி கிடைப்பது அரிதாயிருந்தது. அதனால் இறைச்சியைப் பக்குவப்படுத்தி மழைக்காலத்தின் உபயோகத்திற்காக வைத்துக்கொள்ள வாசனைத் திரவியங்கள் தேவைப்பட்டன. உள்நாட்டுப் போருக்குப் பிறகு அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது, டீ, காப்பி முதலியன இங்கிலாந்திற்குக் கொண்டுவரப்பட்டன. அத்துடன் கீழை நாடுகளில் தயாரிக்கப்பட்ட பட்டும், சீனாவில் தயாரிக்கப்பட்ட பீங்கான் சாமான் களும் கொண்டுவரப்பட்டன. ஆன் (Anne) அரசியின் ஆட்சிக்காலத் திற்குள், இந்தியாவுடன் நடந்துவந்த வியாபாரம், செல்வந்தரின் வாழ்க்கையில் மாறுதல்களை ஏற்படுத்தியது. அவர்கள் அருந்திவந்த பானங்களில் மாறுதல் ஏற்பட்டது; அவர்கள் ஒன்று கூடும் போது நடந்துகொண்ட விதமும் மாறியது; அவர்களின் ஆடையிலும் மாற்றம் தோன்றியது; அவர்களின் கலை உணர்ச்சியும் மாறுதல் அடைந்தது.

ஸ்டுவர்ட் வம்சத்தினர் காலத்தில் தூர நாடுகளுடன் வியாபாரம் செய்துவந்த கம்பெனிகள் அரசியல் நிலையையும் பாதித்தன. லண்டனில் இருந்தோரில் பெரும்பான்மையோர், உருண்டைத் தலையர் களாக (பியூரிடன் மதத்தவராக) இருந்தனர். உள்நாட்டுப் போரின் போது வியாபாரக் கம்பெனிகள் அரசனுக்கு எதிராகத் தங்கள் செல்வத் தையும் செல்வாக்கையும் பயன்படுத்தினர். முதலாம் ஜேம்சும், முதலாம் சார்லசும் வியாபாரிகளை நல்லமுறையில் நடத்தாததும் அவர்கள் அரசனை எதிர்த்ததற்கு ஒரு காரணமாக விருந்தது. பல பொருள்களைத் தயாரிக்கவும் விற்கவும் அவையினருக்குத் தனி உரிமை அரசனால் வழங்கப்பட்டுவந்தது. முதலாம் சார்லசின் காலத்தில் அப்படிச்செய்தது அதிகரித்தது. தனக்கு வேண்டிய பணத்தைப் பார்லி மென்டின் உதவியில்லாமலேயே பெறுவதற்காக, அரசன் அவ்வாறு செய்துவந்தான். இவ்வகையில் பணம் திரட்டுவதை வழக்கறிஞர்களும் பார்லிமென்டின் அங்கத்தினர்களும் வெறுத்தனர்; அத்துடன் அரசனின் கொள்கையால் பொருள்களின் விலை உயர்ந்தது. பொருள்களின் விலை அதிகரித்ததால் மக்கள் அரசனைக் குறைகூறினர். அவையினருக்குப் பொருள்களைத் தயாரிக்கவும் விற்கவும் தனியுரிமை கொடுத்தது, அது வரை அப்பொருள்களில் வியாபாரம் செய்துவந்த வியாபாரிகளின்

வியாபாரத்தைக் கெடுத்தது. அதனுல் அவ்வியாபாரிகளும் அரசனே வெறுக்கத் தலேப்பட்டனர்.

கிழக்கிந்தியக் கம்பெனி வியாபாரிகள் தங்களுக்கு அரசன் தீங்கிழைத்துவிட்டதாகக் கருதினர். அதற்குக் காரணம் அரசன் தாங்கள் அனுபவித்துவந்த தூரக்கிழக்கு நாடுகளுடன் வியாபாரம் செய்யும் தனி உரிமையைக் குறைத்ததாகும். கம்பெனி கீழை நாடு களில் வியாபாரம் செய்வதற்காகச் சிப்பாய்களே வைத்திருக்க நேரிட்டது; அத்துடன் ஒப்பந்தங்கள் செய்துகொள்ளவும் வேண்டியிருந்தது. இதனுல் ஏற்பட்ட செலவுகள் அனேத்தையும் கம்பெனியே ஏற்றுக் கொண்டது. அரசாங்கம் அச்செலவுகளில் பங்கு கொள்வதில்லே. முதலாம் சார்லஸ் இந்தியாவுடன் வியாபாரம் செய்யும் உரிமையை மற்ருெரு கம்பெனிக்கும் அளித்தார். அக்கம்பெனி கோர்டீன் அசோசி யேஷன் (Courteen Association) என அழைக்கப்பட்டது. நீடித்த பார்லிமென்ட் கூட்டப்பட்டபோது, அக்கம்பெனி, பொருமையாலும், வியாபாரத்தைத் திறமையுடன் நடத்தாததாலும், தன் வியாபாரத்தையும், கிழக்கிந்தியக் கம்பெனியின் வியாபாரத்தையும் கெடுத்தது. பிம் (Pym) என்பாரும், பார்லிமென்டும் உள்நாட்டு வியாபாரத்தில் தனியுரிமை கொடுப்பதை நிறுத்த நிச்சயித்தனர். தூரநாடுகளுடன் நடந்துவந்த வியாபாரத்திற்கே அத்தகைய தனியுரிமை வழங்க நிச்சயித்தனர். இக்கொள்கையை லண்டன் நகரத்தவர் ஆதரித்தனர். உள்நாட்டுப் போரில் பார்லிமென்ட் கட்சியினர் வெற்றி உள் நாட்டு வியாபாரத்தில் தனி உரிமைகள் அழிவதற்கு வழி செய்தது. வருங்காலத்தில் உள்நாட்டு வியாபாரமும் வெளிநாட்டு வியாபாரமும் அரசாங்கத்தின் கட்டுப்பாட்டின் கீழ் கொண்டுவரப்பட்டாலும் கைத்தொழிலில் அரசாங்கம் தலேயிட வில்லே. மற்ற ஐரோப்பிய நாடுகளில் இடைக்காலம்தொட்டு இருந்து வந்த கட்டுப்பாடுகள் கைத்தொழில் வளர்ச்சியைப் பாதித்துவந்தது. பதினெட்டாம் நூற்ருண்டில் இங்கிலாந்து தொழிற்புரட்சியைத் துவக்கி வைத்ததென்ருல் அதற்குக் காரணம் இங்கிலாந்தில் கைத்தொழில்கள் அரசாங்கத்தால் கட்டுப்படுத்தப்படாததாகும்.

முதலாம் ஜேம்சும், முதலாம் சார்லசும் கீழை நாடுகளில் கம்பெனிக்குச் சொந்தமான வியாபார ஸ்தலங்களேயும், கப்பல்களேயும் டச்சுக்காரர்களின் தாக்குதல்களில் இருந்து காப்பாற்ற ஐரோப் பாவிலும் ஆசியாவிலும், ஏதும் செய்யவில்லே. கி.பி. 1623-ல் டச்சுக் காரர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் ஆங்கிலேயரை அம்பாய்ளு (Amboyna) என்ற இடத்தில் படுகொலே செய்தனர். அப் படு கொலேயின் காரணமாக ஆங்கிலேயர்கள் கிழக்கிந்தியத் தீவுகளேவிட்டே ஓட நேரிட்டது. இந்நிகழ்ச்சி ஆங்கிலேயரின் உள்ளத்தில் ஆழப் பதிந்திருந்தது. முப்பது ஆண்டுக்காலம் சென்றபின் கிராம்வெல்

இதற்காக டச்சுக்காரர்களைப் பழிவாங்கினர். போர் தொடுத்தும், ராஜதந்திரத்தினாலும் அவர் டச்சுக்காரர்களைப் பழிவாங்கினர். பாதுகாப்பாளராக (Protector) நாட்டை ஆண்டுவந்த கிராம்வெல், ஆங்கிலேயரின் வியாபாரத்திற்கு உலகமுழுவதிலும் பாதுகாப்பளித்தார். ஆனால், படைக்காகவும், கப்பற்படைக்காகவும் செலவு செய்வதற்காக அவர் விதித்த வரிகள் அவர் இறக்குமுன்பே அதிக பளுவானவைகளாகக் கருதப்பட்டன. அதனால் வியாபாரம் பாதிக்கப் பட்டது. உள்நாட்டுப் போருக்குப்பிறகு அரசாட்சி திரும்பவும் நிறுவப் பட்டதும், படைக்காகச் செலவு செய்த தொகை குறைந்தது. அதனால் வரிகளும் குறைந்தன. வியாபாரம் முன்போலவே தலைதூக்கி நின்றது. கிராம்வெல் சாம்ராஜ்யத்தை நிறுவ முயற்சித்தவர் என்று கூறுவது மிகையாகாது. ஜமைக்காவைக் கைப்பற்றியதன் மூலம் தனக்குப் பின்னால் இங்கிலாந்தை ஆண்டவர்களுக்குச் சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்கும் வழியைக் காட்டினர். தருணம் கிடைத்தபோது மற்ற ஐரோப்பிய நாடுகளுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளைப் போர் தொடுத்துக் கைப்பற்றுவது அவரது கொள்கையாக விருந்தது.

கோர்டன் அசோசியேஷனின் போட்டியும், உள்நாட்டுப் போரின் காரணமாக நாட்டில் நிலவிய குழப்பநிலையும், கிழக்கிந்தியக் கம் பெனியின் வியாபாரத்தைப் பாழ் செய்தன. ஆங்கிலேயர் இந்தியா வுடன் கொண்டிருந்த தொடர்பு நின்றுவிட்டது என்று கூறலாம். பாது காப்பாளரின் ஆட்சியின்போது கிழக்கிந்தியக் கம்பெனி திரும்பவும் தலை தூக்கியது. அதற்குக் காரணம் கிராம்வெல் அளித்த உதவியாகும். கிழக்கிந்தியக் கம்பெனி பலரும் சேர்ந்து கூட்டாக முதல்வைத்து (Joint-Stock) வியாபாரம் செய்த கம்பெனியாகத் திகழத் தொடங்கி யது. அதுவரை ஒவ்வொரு பிரயாணத்தின்போதும் முதல் திரட்டப் பட்டது. முதன்முதலில் இந்தியாவிற்கு அனுப்பப்பட்ட பயணங்களில், இருபது அல்லது முப்பது சதவிகிதம் லாபம் கிடைத்தது. சிலசமயம் ஐந்து சதவிகித லாபமே கிடைத்தது. சிலசமயம், கப்பல் உடைந்த தாலோ, அல்லது கடற்போரின் காரணத்தாலோ கம்பெனி பூரண நஷ்ட மடைந்ததும் உண்டு. கி.பி. 1657-ல் புதியதாக முதல் திரட்டப்பட்டது. அம் முதல் வருங்காலத்தில் கம்பெனியின் வியாபாரத்திற்காக உபயோ கிக்கப்பட்டது. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் முப்பது ஆண்டுக் காலத்திற்குக் கம்பெனிக்கு நல்ல லாபம் கிடைத்துவந்தது; இருபதில் இருந்து நாற்பது சதவிகிதம் லாபம் கிடைத்துவந்தது. கி.பி. 1685-ல் கம்பெனியின் முதலில் 100 பவுன் பங்கின் (Share) மதிப்பு 500 பவுனாக உயர்ந்தது. கம்பெனியின் முதலை (Capital) அதிகரிக்க வேண்டிய அவசியம் தோன்றவில்லை. அப்படி ஏற்கெனவே இருந்த முதலைவிட அதிகமான தொகை தேவைப்பட்டால், குறுகிய காலத்திற்கு, குறைந்த வட்டிக்குக் கம்பெனி கடன் வாங்கிக்கொண்டது.

உதாரணமாக மூன்று சதவிகித வட்டிக்குக் கடன் வாங்கி அதைக் கொண்டு பெருத்த லாபத்தை அடைந்தது.

இப்படி நடந்துவந்ததால், கீழை நாடுகளுடன் நடந்துவந்த வியாபாரத்தில் கிடைத்த லாபம் அனைத்தும் ஒரு சில கொழுத்த செல்வந்தர்க்கே உரித்தாய் இருந்தது. ஸ்டுவர்ட் வம்சத்தின் கடைசி இரண்டு அரசர்களின் காலத்தில், கம்பெனி அனுபவித்துவந்த தனி உரிமையைக் காத்துக்கொள்வதற்காக, கம்பெனியைச் சார்ந்த சர் ஜோஷிய சைல்டு (Sir Josiah Child) என்பார் அவையினருக்கு லஞ்சம் கொடுத்துவந்தார். கி.பி. 1688-க்குப் பிறகு பார்லிமென்டின் அங்கத்தினர்களுக்கு லஞ்சம் கொடுத்துவந்தார். சாதாரண மனிதர் கம்பெனியில் பங்குகளை வாங்கமுடியாததாய் இருந்தது. அதற்குக் காரணம் பங்குகளின் விலை மிக அதிகமாயிருந்ததே. அதனால், பங்குகளை, ஏற்கெனவே பங்குதாரர்களாக (Share-holders) இருந்தவர்களே வாங்கிக்கொண்டனர். சாதாரண வியாபாரிகள் அதனால் நன்னம்பிக்கை முனையைக் கடந்து சென்று வியாபாரம் செய்ய முடியாததாய் இருந்தது. பிரிஸ்டல் நகரில் இருந்தும், மற்ற நகரங்களில் இருந்தும், மற்ற வியாபாரிகள் கம்பெனிக்குத் தெரியாமல் தங்கள் கப்பல்களை அனுப்பி வியாபாரம் செய்துவந்தனர். ஆனால், கிழக்கிந்தியக் கம்பெனி ஒன்றிற்கே கீழை நாடுகளுடன் வியாபாரம் செய்யும் தனி உரிமை கொடுக்கப்பட்டிருந்ததால் கம்பெனியின் அதிகாரிகள் திருட்டுத்தனமாக வியாபாரம் செய்தவரைத் தண்டித்துவந்தனர்.

இரண்டாம் சார்லஸ், இரண்டாம் ஜேம்ஸ், மூன்றும் வில்லியம் ஆகியோரின் ஆட்சிக் காலங்களில் கம்பெனியைச் சார்ந்தோர் அல்லாதவர் கீழை நாடுகளுடன் வியாபாரம் செய்வதைத் தடுக்க சர் ஜோஷிய சைல்டு பாடுபட்டுவந்தார். முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ், கிராம்வெல் ஆகியோரின் ஆட்சிக் காலங்களிலும் கிழக்கிந்தியக் கம்பெனியின் அதிகாரிகள் கம்பெனியைச் சேராத வியாபாரிகள் கீழை நாடுகளுடன் வியாபாரம் செய்வதைத் தடுக்க முயற்சியெடுக்க வேண்டியிருந்தது. ஸ்டுவர்ட் வம்சத்தினரின் காலம் முழுவதும் கிழக்கிந்தியக் கம்பெனியுடன் பலர் கீழை நாடுகளுடன் வியாபாரம் செய்வதில் தீவிரமாகப் போட்டியிட்டனர். இப்படிப் போட்டி இட்டதற்குக் காரணம், வேறுவழியில் முதலை இட்டு லாபம் அடைய முடியாததேயாகும். அக்காலத்தில் பங்குகளை விற்கும் நிறுவனங்கள் இருக்கவில்லை. அதனால் மக்கள் அத்தகைய நிறுவனங்களுக்குச் சென்று தங்களுக்கு வேண்டிய கம்பெனியின் பங்குகளை வாங்குவது இயலாததாகவிருந்தது. சாதாரணமாக முதல் வைத்திருந்தோர் நிலங்களை வாங்குவதிலும், நிலத்தை அடைமானத்திற்கு ஏற்றுக்கொள்வதிலும் தங்கள் முதலைப் பயன்படுத்தி வந்தனர். ஆனால், அவ்வாறு வாங்கி அளவை அதிகரித்துக்கொண்டே

போவதற்குப் போதிய நிலம் இருக்கவில்லை. மேலும் நிலத்தின் உரிமை யாளர்கள் நிலத்தை விற்க மனமில்லாதிருந்தனர். ஆகையால் தாம் சேகரித்துவந்த முதலைக் கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் மக்கள் விழித்தனர்.

ஜனத்தொகையில் ஐந்தில் நான்கு பங்கு நிலத்தைப் பயிரிட்டு வந்தனர். எனினும், வியாபாரத்திலும் கைத்தொழிலிலும் ஈடுபட்டிருந் தோரின் எண்ணிக்கை கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துவந்தது. இந்நிலை நகரங்களில் இருந்ததைவிட நாட்டுப் புறங்களில் அதிகமாக விருந்தது. அக்காலம் சிறிய அளவில் வியாபாரம் செய்வதற்கு உகந்த தாய் இருந்தது. அதனால் அதில் ஈடுபட்டிருந்தோரின் எண்ணிக்கை யும் அதிகரித்துக்கொண்டே வந்தது. இயோமென் வகுப்பைச் சார்ந்த வரும், கைத்தொழிலாளியும், தாம் சேர்த்து வைத்திருந்த சிறு தொகையைக் கொண்டு, அக்காலத்தில், மதுபானம் செய்யும் கம்பெனி யிலும், ரயில்வே கம்பெனியிலும் பங்குகளை வாங்க வழியில்லாதிருந் தனர். அப்படிப் பணம் சேர்த்து வைத்திருந்தோர், அதில் ஒரு பகுதி யைத் தங்கள் பெண்களுக்கு மணமுடிப்பதில் செலவிடுவர். மீதம் உள் ளதை வைத்துக்கொண்டு, தாங்களே புதியதாக ஒரு கைத்தொழிலைத் தொடங்குவர். அப்படியும் செய்ய முடியாவிட்டால் குதிரைகளையும் வண்டிகளையும் வாங்கிப் போக்குவரத்துச் சாதனங்களாக உபயோகித்துச் செல்வத்தைப் பெருக்கிவந்தனர்.

சிறிய அளவில் வியாபாரம் அல்லது கைத்தொழில் செய்துவந் தோரின் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே வந்தது. அவர்களும் கிழக்கிந்தியக் கம்பெனியைப்போல், தங்கள் தொழிலை நடத்தக் கடன் வாங்க முற்பட்டனர். அதைப்போலவே நிலம் வைத்துள்ளோரும் கடன் வாங்க முற்பட்டனர். நிலக்கிழார்களில் சிலர் ஆடம்பர வாழ்வு வாழ்ந்துவந்ததால் கடன் வாங்கி நிலத்தைப் பயிர் செய்யும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது. நிலக்கிழார்களில் சிலர் தங்கள் நிலத்தைச் செழிப்புள்ள தாகச் செய்வதற்காகவும், சதுப்பு நிலங்களை வடித்தும், காடுகளை அழித்தும் பயிர் செய்யப்பட்டுவந்த நிலத்தின் அளவை அதிகரிக்கவும் கடன் வாங்கினர். இப்படிக் கடன் வாங்கவேண்டியவர், எப்படிக் கடன் வாங்கினர் என்பதை ஆராய வேண்டும். அத்துடன் கடன் வாங்குபவ ரையும், கடன் கொடுப்பவரையும் யார் சேர்த்துவைத்தனர் என்பதை யும் ஆராயவேண்டும்.

டியூடர் வம்சத்தினரின் காலத்தில் வட்டிக்குக் கடன் கொடுப்பதில் தவறு ஏதும் இல்லை என்பது சமுதாயத்தில் ஒத்துக்கொள்ளப்பட்டது. குறிப்பிட்ட வட்டிக்குக் கடன் கொடுப்பதைப் பார்லிமென்ட் ஒரு சட்டத்தின் மூலம் அங்கீகரித்தது. ஆனால், அதிகமான வட்டி வாங்க

வழியில்லாமலிருந்தது. ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில் கடன் கொடுத்தல், கடன் வாங்கல் ஆகிய செயல்கள் புரிவதற்கு ஒரு குறிப்பிட்ட இடம் தோன்றுவதை எதிர்நோக்கினர். செல்டன் (Selden) என்பார் ' பணத்தைக் கொண்டு பணம் ஈட்டலாம் ' என்று குறிப்பிட்டார். தாமஸ் மன் (Thomas Mun) என்ற பெயருடைய தத்துவ ஆசிரியர் கீழ்வருமாறு குறிப்பிட்டார் :

' எத்தனை வியாபாரிகள், தங்கள் கைகளில் ஒன்றும் இல்லாமலேயே வியாபாரத்தைத் தொடங்கி நடத்திவருகின்றனர் என்று எண்ணிப் பாருங்கள். அவர்கள் பிறரிடமிருந்து கடன் வாங்கி வியாபாரத்தைத் தொடங்கிப் பெரும் செல்வந்தராக மாறியிருக்கின்றனர்.'

அப்படியிருந்தும் அக்காலத்தில் இங்கிலாந்தில் பாங்குகள் இல்லை. எனினும், தற்காலத்தில் பணம் கொடுக்கல், வாங்கல் முதலியவற்றைச் செய்வோரைப் போன்றவர் அக்காலத்திலும் இருந்தனர். அத்தகையோர் சேமிப்புப் பணத்தைப் பெற்றுக்கொண்டும், அதை வட்டிக்குக் கடன் கொடுத்தும் வந்தனர். வட்டிக்குப் பணம் கடன் வாங்குவோரையும், வட்டிக்குப் பணம் கொடுப்போரையும் ஒன்றுசேர்த்துவைக்கத் தரகர்கள் அக்காலத்திலும் இருந்தனர்.

பாதுகாப்பாளரின் ஆட்சியின் போதும் (Commonwealth), அரசாட்சி திரும்ப நிறுவப்பட்ட பின்னும், சேமிப்புப் பணத்தைப் பெற்றுக் கொள்வதும், வட்டிக்குக் கடன் கொடுப்பதும், லண்டன் நகரில் இருந்த பொற்கொல்லரின் வேலையாய் இருந்தது. லண்டன் நகர வியாபாரிகள் தங்கள் சேமிப்புப் பணத்தை நாணயம் அச்சிடும் நிலயத்தில் (Tower Mint) வைத்திருப்பது வழக்கமாய் இருந்துவந்தது. ஆனால், முதலாம் சார்லஸ் அப்படி வியாபாரிகள் அந்நிலையத்தில் வைத்திருந்த சேமிப்புப் பணத்தை அபகரித்துக்கொண்டார். அதுமுதல் லண்டன் நகர வியாபாரிகள் தங்கள் சேமிப்புப் பணத்தைப் பொற்கொல்லரிடம் கொடுத்து வைத்தனர். உள்நாட்டுப் போர் தொடங்கியபோது பொற்கொல்லர்கள், பொன்னும் வெள்ளிப் பாத்திரங்களும் விற்பது தடை செய்யப்பட்டது. அதனால் பொற்கொல்லர்கள் வியாபாரிகளின் பணத்தைப் பாதுகாத்துத் திருப்பிக் கொடுக்கும் வேலையை மேற்கொண்டனர். பொற்கொல்லர்கள் ஒருவரிடம் இருந்து எவ்வளவு தொகை பெற்றுக் கொண்டனரோ அவ்வளவு தொகையையே திருப்பிக் கொடுத்தனர். அதாவது அவர்கள் பெற்றுக்கொண்ட பணத்திற்கு வட்டி போட்டுக் கொடுக்காமல் எவ்வளவு பெற்றுக்கொண்டனரோ அவ்வளவே திருப்பிக் கொடுத்தனர். பொற்கொல்லர்கள் தங்களிடம் மற்றவர் கொடுத்து வைத்த பணத்தை வட்டிக்குக் கொடுத்துப் பொருள் சேர்க்க நினைத்தனர். அப்படி வட்டிக்குக் கடன் கொடுப்பது அவர்களுக்குப் பெருத்த லாபத்

தைக் கொடுத்தது. அதனுல் அவர்கள் வியாபாரிகளை அவர்களுடைய சேமிப்புத் தொகையை மேலும் அதிகமாகத் தங்களிடம் கொடுத்து வைக்கத் தூண்ட நினைத்தனர். அதற்காகத் தாங்கள் பெற்றுக் கொண்ட சேமிப்புத் தொகைக்கு வட்டி கொடுக்கச் சம்மதித்தனர். இரண்டாம் சார்லஸின் காலத்தில் தாங்கள் பெற்றுக்கொண்ட சேமிப்புத் தொகைக்கு ஆறு சதவிகித வட்டி கொடுத்தனர். அந்தச் சேமிப்புத் தொகையைக் கடனுக வட்டிக்குக் கொடுத்துப் பெருத்த லாபம் சம்பாதித் தனர். லம்பார்டு தெருவில் (Lombard Street) இருந்த பொற் கொல்லரே இத்தகைய செயலில் முக்கியமாக ஈடுபட்டிருந்தனர்.[1]

பொற்கொல்லர்கள் இத்தகைய தொடர்பை நகரத்தவருடன் மட்டும் வைத்திருக்கவில்லை. பல நிலக்கிழார்கள் தங்களுக்கு வந்த குத்தகைப் பணத்தைப் பொற்கொல்லரிடம் கொடுத்துவைத்தனர். அத்துடன் நாட்டின் பல பாகங்களில் இருந்தும் கடன் வாங்குவதற்காக லம்பார்டு தெருவிற்கு வந்தனர். இத்தகைய வசதியின் முக்கியத்துவத்தை, முதலாம் சார்லஸின் காலத்தில் ஒரு பிரபுவின் குடும்பம் எப்படித் தன் காரியங்களை நடத்திவந்தது என்பதில் இருந்து அறிந்துகொள்ளலாம்.

பெட்ஃபோர்டின் (Bedford) அதிகாரியாக (Earl) இருந்த ஃபிரான் சிஸ் ரஸ்ஸல் என்பார் கி.பி. 1641-ல் இறந்தார்.[2] அக்காலத்தில் பாங்குகள் இல்லாததால் ஸ்டிராண்டு (Strand) என்ற இடத்தில் இருந்த அவரது பெட்ஃபோர்டு இல்லத்தில் ஒரு பெரிய இரும்புப் பெட்டியில் அவரது செல்வம் அனைத்தும் வைக்கப்பட்டிருந்தது. ரஸ்ஸலின் மகன் வில்லியம் பெட்டியைத் திறந்தபோது அதில் 1,557 பவுன், 14 ஷில்லிங், 1 பென்ஸ் இருந்தது. அதில் இருந்து தந்தையின் ஈமச்சடங்கிற்குச் செலவிட்டார் வில்லியம். தான் கொடுக்க வேண்டியிருந்தவர்களுக்கும் அப்பெட்டியில் இருந்த பணத்தில் இருந்து கொடுத்தார். அப்படிச் செய்தும் அடுத்த ஓர் ஆண்டுக் காலத்திற்குள் அப்பெட்டியில் 8,500 பவுன்கள் சேர்ந்துவிட்டன. குத்தகைப் பணம், அபராத பணம் ஆகிய வையும், பண்ணையின் பொருள்களை விற்றதால் கிடைத்த தொகையும் சேர்ந்து அவ்வளவாயிற்று.

எர்ல் வில்லியத்தின் அதிகாரி 'பெட்ஃபோர்டு ஹவுஸ்' என்ற பெயருடைய இல்லத்தில் வசித்துவந்தார். அவர் அவ்வில்லத்தில்

[1] பொற்கொல்லரிடம் பணம் கொடுத்து வைத்திருந்தோர், சீட்டுக் கொண்டு வருபவர்க்கு அச்சீட்டில் குறிப்பிட்ட தொகையைக் கொடுக்கவும் என்று எழுதி அனுப்பிய சீட்டில் இருந்துதான் தற்காலத்தில் உண்டியல் எனப்படும் சீட்டு (cheque) தோன்றியது எனக் கூறலாம்.

[2] இந்தக் குடும்பத்தினர் எப்படித் தங்கள் செல்வத்தை வைத்திருந்தனர் என்பதைப்பற்றி, ஸ்காட் தாம்சன் எழுதிய நூலில் காணலாம் [Miss Scott Thomson, 'Life of a noble household' 1641-1700 (1937)].

இருந்த முக்கியமான பெட்டியின் திறவுகோலை வைத்திருந்தார். எர்லுக்கு வரும் வரும்படி அனைத்தையும் அவர் பெற்றுக்கொண்டார். அவரிடம் கொடுக்கப்பட்டவை எப்பொருளாக இருப்பினும் அவைகளை அவர்தான் அப்பெட்டியில் வைத்துப் பூட்டுவார். அப்படியே எதையும் அவர்தான் அப்பெட்டியில் இருந்து எடுத்துக் கொடுப்பார். கார்ன்வால் (Cornwall), டெவான் (Devon) ஆகிய பிரதேசங்களில் இருந்த சொத்துகளில் இருந்து கி.பி. 1641-ல் 2,500 பவுன் வரும்படி வந்தது. இப்பிரதேசங்களில் இருந்து கிடைத்த வரும்படியை, அப்பிரதேசங்களில் இருந்து கொண்டுவராமல், லண்டனிலேயே கிடைக்க வழி செய்யப்பட்டது. கிழக்கு ஆங்கிலியாவும் (East Anglia), மற்றப் பிரதேசங்களும் அப்பிரதேசத்தில் கிடைத்த வரும்படியைச் சாலை வழியே குதிரைச் சேவகர்கள் மூலம் லண்டனுக்கு அனுப்பி வைத்தன. ஆனால், மேற்குப்பகுதியின் வரும்படியை வசூலிக்க, எக்ஸீடர் (Exeter) நகரத்தில் ஓர் அதிகாரி இருந்தார். டெவான், கார்ன்வால் ஆகிய பிரதேசங்களில் இருந்த பெயிலிப்புகள் (Bailiffs) தாங்கள் வசூலித்த பணத்தை அவரிடம் லேடி டே (Lady Day), மைகல்மஸ் (Michaelmas) ஆகிய பண்டிகைக் காலத்தில் கொண்டு சேர்த்தனர். அப்பணத்தைக் கொண்டு எக்ஸீடர் நகரில் இருந்த அதிகாரி, ஓர் உண்டியல் வாங்கி லண்டனில் லம்பார்டு தெருவில் வாழ்ந்துவந்த தாமஸ் வினர் (Thomas Viner) என்ற பெயருடைய பொற்கொல்லருக்கு அனுப்பி வைத்தார். அவ்வுண்டியல் கிடைத்ததும் வினர், பெட்ஃபோர்டு ஹவுசின் அதிகாரிக்குச் செய்தி அனுப்புவார். அச்செய்தி கிடைத்ததும் அவ்வதிகாரி வினர் வீட்டிற்குச் சென்று எர்ல் வில்லியத்திற்குச் சேர வேண்டிய பணத்தை எடுத்துச் செல்வார். அப்படி வினர் வீட்டில் இருந்து கொண்டுவந்த பணத்தையும் அவ்வதிகாரி பொருள்கள் வைக்கப்பட்டிருந்த பெட்டியில் வைத்துப் பூட்டுவார்.[1]

பெட்ஃபோர்டு எர்லாக இருந்துவந்தோர் வரும்படியை மாத்திரம் வாங்கிச் சேர்த்துக்கொள்வதுடன் நிறுத்திவிடவில்லை. கி.பி. 1641-ல் இறந்த எர்ல் ஃபிரான்சிசும் (Francis) அவருடைய புதல்வர் வில்லியமும் கி.பி. 1700 வரை ரஸ்ஸல் குடும்பத்திற்குச் சொந்தமான சொத்துகளுக்கு அதிபதிகளாக இருந்தனர். லண்டன், பெட்ஃபோர்டுஷயர் தென்மேற்குப் பிரதேசம், ஃபென் மாவட்டம் (Fen District) ஆகிய பிரதேசங்களில் இருந்த ரஸ்ஸல் குடும்பத்தின் சொத்துகளை நல்ல

[1] தாமஸ் வினர், கிராம்வெல்லிற்கும் கிழக்கிந்தியக் கம்பெனிக்கும் தங்கமும் தங்கத்தட்டுகளும் ஏராளமாகக் கொடுத்தார். அதற்குப் பதில் நாணயங்கள் செய்யும் உரிமையைப் பெற்றார். இதிலிருந்து பொற்கொல்லர்கள் ஆற்றிவந்த முக்கியப் பணிகள் விளங்குகின்றன. கி.பி. 1656-ல் வினரும், பிளாக்வெல் (Blackwell) என்பாரும் ஸ்பெயின் நாட்டுத் தங்கத்தட்டை 60,000 பவுன் விலை கொடுத்து வாங்கினர்.

முறையில் கண்காணித்து விருத்தி செய்வதில் தங்கள் கவனத்தைச் செலுத்திவந்தனர்.

ஃபென்லாந்து (Fenland) சதுப்பு நிலங்களை வடிப்பதற்கு முக்கியக் காரணமாக அவ்விருவர் இருந்தனர். அவர்களின் முன்னேர் ஒருவர் எலிசபெத்தின் ஆட்சிக்காலத்தில் அரசாங்கத்தின் அதிகாரியாக ஹாலண்டில் பணியாற்றிவந்தார். அங்கே அந்நாடு எப்படி வடிக்கப் பட்டு அமைக்கப்பட்டிருந்தது என்பதை நேரில் கண்டறிந்தார். அவர் நாடு திரும்பியபோது தன்னுடன் டச்சு பொறி இயல் வினைஞரைக் கூட்டிவந்து ஃபென்லாந்தில் ரஸ்ஸல் குடும்பத்திற்குச் சொந்தமான நிலங்களைக் காட்டினர். ஆனல், நாற்பது ஆண்டுகளுக்குப் பிறகு, எர்ல் ஃபிரான்சிஸின் காலத்தில்தான் அந்நிலங்களை வடிப்பதற்கு வழி செய்யப்பட்டது. கி.பி. 1630-ல் இலி தீவைச் சுற்றி இருந்த ஃபென்லாந் தின் தெற்குப்பகுதியை வடிப்பதற்காக ஒரு கம்பெனியை உண்டாக்கி ஞர். தானே 100,000 பவுனை அக்கம்பெனியின் சார்பாகச் செலவு செய்தார். கம்பெனியில் சேர்ந்தவர்க்கு அவரவர் போட்ட முதலுக்கு ஏற்றவாறு வடிக்கப்பட்ட நிலத்தில் பங்கு கொடுக்கப்பட்டது.

வெர்முடென் (Vermuyden) என்ற பெயருடைய டச்சு பொறியியல் வினைஞர் பழ ஆறுகள் ஓடிவந்த பாதையை ஆழமானதாக ஆக்கினல் மட்டும், ஃபென்லாந்து சதுப்பு நிலத்தை வடிக்கமுடியாது என்றும், கால்வாய்கள் வெட்டவேண்டும் என்றும் எடுத்துரைத்தார். அவரது யோசனையின்பேரில் எழுபது அடி அகலமும், இருபத்தோரு மைல் நீளமும் உள்ள கால்வாய் ஒன்று ஏரித் (Earith) என்ற இடத்தில் இருந்து டென்வெர் (Denver) வரை வெட்டப்பட்டது. இக்கால்வாய் தான் பிற்காலத்தில் பழைய பெட்ஃபோர்டு நதி (Old Bedford River) என அழைக்கப்பட்டது. அந்நதி ஏற்படுத்தப்பட்டு இருபது ஆண்டுக் காலம் கழித்து அதே போக்கில் மற்ருெரு கால்வாய் வெட்டப்பட்டது. அக்கால்வாய் புதிய பெட்ஃபோர்டு நதி (New Bedford River) எனப் பெயர்பெற்றது. ஊஸ் (Ouse) நதி தோன்றுமிடத்தில் சேர்ந்த தண்ணீர் ஃபென்லாந்து முழுவதும் எப்போதும்போல் பரவாமல், அக்கால்வாய் வழியே ஓடி, ஃபென்லாந்தைச் சதுப்பு நிலமாக்காமல் விடுத்தது. கோரை வளர்ந்திருந்த இடத்திலே, மீன்பிடிப்பதும் நீர்க் கோழியை வேட்டையாடுவதும் நடந்துவந்ததற்குப் பதிலாக விவசாயமும், கால்நடைகளை மேய்ப்பதும் நடக்கத்தொடங்கியது. இம் மாறுதலை ஃபென்லாந்தில் வசித்துவந்த மக்கள் விரும்பவில்லை. அவர்கள் அப்பிரதேசத்தில் கிடைத்ததைக்கொண்டு வாழ்ந்து வந்தனர். பலர் மீன்பிடித்தும், நீர்க் கோழிகளை வேட்டையாடியும், கோரைகளை வளர்த்தும் தம் வாழ்க்கையை நடத்திவந்தனர். சதுப்பு நிலங்கள் வடிக்கப்பட்டபோது அவர்களால் தங்கள் தொழிலைத்

தொடர்ந்து நடத்தமுடியாமற்போயிற்று. அவர்களுக்கு ஏற்பட்ட நஷ்டத்திற்கு ஈடு செய்யப்பட்டதா என்பதை அறியமுடியாத நிலையில் இருக்கிறோம். ஆனால், ஃபென்லாந்து மக்கள் இரவோடு இரவாகக் கால் வாய்களின் கரைகளை உடைத்துச் சதுப்புநிலம் வடிக்கப்படும் வேலை துரிதமாகச் செய்யப்படுவதைத் தடுத்தனர் என்று மட்டுமே தெரிய வருகின்றது.

உள்நாட்டுப்போரின் காலத்தில் சதுப்பு நிலத்தை வடிக்கும் வேலை நின்றுவிட்டது என்று கூறலாம். அதற்கு ஒரு காரணம் என்ன வென்றால், நாட்டில் நிலவிய குழப்பத்தைப் பயன்படுத்திக்கொண்டு ஃபென்லாந்துமக்கள் கால்வாய்களின் கரைகளை உடைத்துவந்ததாகும். ஆனால், பாதுகாப்பாளரின் ஆட்சியின்போது (Commonwealth) ஸ்காட்லாந்து, டச்சு ஆகிய நாடுகளில் இருந்து பிடித்த போர்க் கைதி களைக் கொண்டு கரைகள் கட்டப்படும் வேலை ஓர் அளவு முடிக்கப் பட்டது. பாதுகாப்பாளராக (Protector) நாட்டை ஆண்டுவந்த கிராம்வெல் சதுப்பு நிலங்கள் வடிக்கப்படுவதை ஆதரித்தார்.[1] அவரது ஆட்சிக்காலத்தில் சதுப்பு நிலங்களில் பயிர் விளைந்தது. ஆயிரக்கணக் கான கால்நடைகள் மேய்வதற்கு வழி பிறந்தது. பெட்ஃபோர்டு எர்ல், தன் தகப்பனாரும் தானும் நிலம் வடிக்கப்படுவதற்காகச் செலவிட்ட தொகைக்கு நல்ல லாபத்தைப் பெற்றார். கி.பி. 1660-க்குள், தன் சொத்தை அடைமானம் வைத்து வாங்கியிருந்த கடனையெல்லாம் தீர்த்து விட்டார். அக்கடன் பெரும்பாலும் சதுப்பு நிலத்தை வடிக்கவே செலவிடப்பட்டது. ஆனால், செலவிடப்பட்ட தொகை நல்ல லாபத்தை அக்குடும்பத்திற்கு அளித்தது.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது, சதுப்பு நிலங்களை வடித்தது, ஆங்கிலேயர் பொறியியல் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் கண்ட வெற்றியாகத் திகழ்ந்தது. ஆனால், பதினேழாம் நூற்றாண்டு முடிவதற்குள் இயற்கையின் காரணமாக மிகுந்த கஷ்டங் கள் தோன்றின. முதலில் கால்வாய்கள் வழியே ஓடிய ஊஸ் (Ouse), நீன் (Nene) ஆறுகளின் முகத்துவாரத்தைச் சேர்ந்த தண்ணீர் வேகமாக ஓடியதால் சதுப்பு நிலத்தில் நீர் தேங்க வழியில்லாதிருந்தது. ஆனால், கொஞ்சகாலத்திற்குப்பிறகு முகத்துவாரம் அடைபடத் தொடங்கியது. அத்துடன் வடிக்கப்பட்ட நிலங்களின் தரைமட்டம் குறைந்து கொண்டேபோயிற்று. நிலம் உலர உலர மட்டம் குறைந்துவந்தது.

[1] கி.பி. 1638-ல் கால்வாய் கட்டி சதுப்பு நிலத்தை வடிப்பதற்காக அவ்வேலையில் ஈடுபட்டோருக்கு நிலம் கொடுக்கப்படுவதை கிராம்வெல் எதிர்த்தார். ஆனால், அதே சமயம் சதுப்பு நிலங்கள் வடிக்கப்படுவதை ஆதரித்தார். கி.பி. 1649-ல் சட்டம் ஒன்று இயற்றி சதுப்பு நிலங்கள் வடிக்கப்படும் வேலை முழுவதும் முடிவதற்குச் காரணமாய் இருந்தார்.

அதனால் பெட்ஃபோர்டு நதி என்று அழைக்கப்பட்ட கால்வாயும் மற்றக் கால்வாய்களும் தரைமட்டத்தில் மேலே உயரத்தில் நின்றன. அதனால் தரைமட்டத்தில் தேங்கிய நீரைக் கால்வாய்களில் சேர்க்க வழி செய்ய வேண்டியிருந்தது. பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதும் நீரை இறைக்கும் வேலை தொடர்ந்து நடந்துவந்தது. தரைமட்டத்தில் இருந்த நீரைக் கால்வாய்களில் இறைப்பதற்காக நூற்றுக்கணக்கான விண்டுமில் (Windmill) என்று அழைக்கப்பட்ட இயந்திரங்கள் பொருத்தப்பட்டன. அப்படிச் செய்தும் தேங்கிய நீர் முழுவதையும் இறைப்பது முடியாததாய் இருந்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நீராவியைக்கொண்டு ஓட்டப்பட்ட இயந்திரங்களைக் கொண்டு நீரை இறைக்க ஏற்பாடு நடந்தபோதுதான் நீர் முழுவதையும் கால்வாய்களில் சேர்க்க முடிந்தது.

ஊஸ், நீன் ஆகிய ஆறுகளின் பள்ளத்தாக்கில் இருந்த தென் ஃபென்லாந்து வடிக்கப்பட்டதைக் கண்டு, வடக்கே, வெல்லாண்டு (Welland) விதாம் (Witham) ஆகிய நதிகளின் பள்ளத்தாக்கில், ஸ்பால்டிங் (Spalding), பாஸ்டன் (Boston), டாடர்ஷால் (Tattershall) ஆகியவிடங்களைச் சுற்றியிருந்த சதுப்பு நிலங்களை, பதினெட்டாம் நூற்றாண்டிலேயே வடிக்கத்தொடங்கினர். வடிக்கப்பட்ட நிலத்தில் இருந்த பாசி உலர உலர அதன் அடியில் இருந்த செழிப்புள்ள மண் தென்பட்டது. பதினெட்டாம், பத்தொன்பதாம் நூற்றாண்டுகளில் அச்செழிப்பான மண் தோண்டி எடுக்கப்பட்டு எருவாக நிலங்களுக்கு உபயோகிக்கப்பட்டது. அல்லது செழிப்பான மண் இருந்த இடத்திலேயே பயிர் செய்யப்பட்டது. தற்போது ஒரு காலத்தில் சதுப்பு நிலங்களாக இருந்த பிரதேசத்தில்தான் மிகச் செழிப்பான பூமியை இங்கிலாந்தில் காண்கிறோம்.

இயற்கையின் காரணமாகத் தோன்றிய தொல்லைகள் முழுமையும் இன்றும் நீக்கமுடியாமல் போனாலும், எண்பது மைல் நீளமும், பத்தில் இருந்து முப்பது மைல் அகலமும் கொண்ட நிலம், சதுப்பு நிலங்களை வடித்ததால் பயிர்செய்யக் கிடைத்தது. இந்நிலங்கள் கொஞ்சம் கொஞ்சமாக, பல நூற்றாண்டுக்காலமாக, இடையறாது உழைத்த எண்ணிறந்த குடியானவர்களால் அடையப்பெற்றதன்று. இயற்கையை வெற்றி காணுவதற்குக் காரணமாய் இருந்தது, மக்களின் கையில் இருந்த முதலாகும் (Capital). முதலை வைத்திருந்தோர் கூடித் திட்டமிட்டுப் பெரிய அளவில் செய்யப்பட்டதாகும். இவ்வேலையில் இறங்கியவர்கள் தங்கள் முதலை இழப்பதற்கும் தயாராகவிருந்தனர். அத்துடன் தான் போட்ட முதலுக்கு லாபம் பெற இருபது ஆண்டுகளுக்கு மேலும் காத்திருக்கத் தயாராய் இருந்தனர். சதுப்பு நிலத்தை வடித்தது பழைய கதையாகிவிட்டது. ஆனால், அது தற்காலத்தில்

பொருளாதார முறைகள் எப்படி இயங்குகின்றன என்பதை எடுத்துக் காட்டுகின்றது. அதனால்தான் இங்கிலாந்தின் சமுதாய வரலாற்றிலே அது முக்கிய இடத்தைப் பெறுகின்றது. [ஹெச். சி. டார்பி எழுதியுள்ள, 'ஹிஸ்டாரிகல் ஜியாகிரபி ஆஃப் இங்கிலண்டு' என்ற நூலில் 12ஆம் அத்தியாயம்; மேலும் டார்பி எழுதிய சதுப்பு நிலங்களை வடித்தல் என்பதைப்பற்றிய நூலும் (H. C. Darby, 'Historical Geography of England', Chap. XII, and his book on 'The Draining of the Fens', 1940); கிளாடிஸ் ஸ்காட் தாம்சன் எழுதிய, ஒரு பிரபுவின் குடும்ப விவகாரங்கள் என்ற நூல் (Gladys Scott Thomson, 'Life of a noble household').

ரஸ்ஸல் குடும்பத்தின் பொருளாதார வரலாற்றைப்பற்றி மேலும் சிறிது ஆராய்ந்துவிட்டு ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திற்குச் செல்வோம். இக்குடும்பத்தின் செல்வம் சாசர் காலத்தில் இருந்தே பெருகத் தொடங்கியது. அப்போது அக்குடும்பத்தினர் வேமவுத் (Weymouth) துறைமுகத்தில் இருந்து காஸ்கனியுடன் (Gascany) வியாபாரம் செய்துவந்தனர். முன்னூறு ஆண்டுக் காலத்திற்குப் பிறகு, மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தில் திரும்பவும் ரஸ்ஸல் குடும்பத்தினர் கடல் கடந்த வாணிபம் செய்யத் தொடங்கினர். இதற்குக் காரணமாய் இருந்தது, அக்குடும்பத்திற்கும் கிழக்கிந்தியக்கம்பெனியை நடத்திவந்த குடும்பம் ஒன்றிற்கும் இடையே நடந்த திருமண உறவாகும். கி.பி. 1641–ல் ரஸ்ஸல் குடும்பத்தின் சொத்துகளுக்கு அதிபதியான வில்லியம் பதினேழாம் நூற்றுண்டின் இறுதியில் உயிருடன் இருந்தார். அவரே முதன் முதலில் டியூக் (Duke) பட்டம் வகித்தவர். ஃபென்லாந்து வடிக்கப்பட்டதால் அடைந்த லாபத்தின் காரணமாக அவர் வயதுமுதிர்ந்த காலத்தில் செல்வநிலையில் இருந்தாலும், தன்மகன் வில்லியம் மதத்தின் காரணமாக கி.பி. 1683–ல் கொல்லப்பட்டதால் வருத்தத்துடன் வாழ்ந்துவந்தார். பன்னிரண்டாண்டுகளுக்குப் பிறகு தன் பேரனுக்கு எலிசபெத் என்பாரின் மகளை மணமுடித்து வைத்தார். எலிசபெத் கிழக்கிந்தியக் கம்பெனியின் முக்கிய அதிகாரியாகவிருந்த ஜோஷிய சைல்டு (Josiah Child) என்பாரின் பேர்த்தியாவார். அத்துடன் ஸ்டிரீதாமைச் (Streatham) சார்ந்த ஜான் ஹோலண்டு (John Howland) என்பாரின் மகளாவார். மாப்பிள்ளைக்கு அப்போது வயது பதினுன்கு; பெண்ணிற்கு வயது பதிமூன்று. திருமணம் ஆடம்பரமாக நடத்தப்பட்டது. பிஷப்பாக இருந்த பர்நெட் (Burnet) என்பார் திருமணத்தை நடத்திவைத்தார். விருந்து முடிந்ததும் குழப்பமும் கூச்சலும் அங்குக் காணப்பட்டது. காரணம், பெண்ணும் பிள்ளையும் காணவில்லை. விருந்து உண்டு விட்டு அவர்கள் இருவரும் விளையாடச் சென்றுவிட்டிருந்தனர். அப்படி அவர்கள் விளையாடியபோது பெண்ணின் உடையில் வைத்துத்

தைக்கப்பட்டிருந்த விலையுயர்ந்த சரிகை கிழிந்துவிட்டது. பெற்ருேர்கள் அதற்காகக் கண்டிப்பார்கள் என்று நினைத்து அவள் ஒரு வைக்கோற் புதரில் மறைந்துகொண்டாள். ஆனுல், மாப்பிள்ளை ஒன்றும் அறியா தவர்போல் மெதுவாக நடந்துவந்து மணவறையை அடைந்தார்.

மேற்குறிப்பிட்ட திருமணத்தின்மூலம் ரஸ்ஸல் குடும்பத்தினர் கிழக்கிந்தியக் கம்பெனியுடன் தொடர்புகொண்டனர். ஃபென்லாந்தை வடிக்கத் தங்கள் செல்வத்தைச் செலவிட்டதுபோல், கிழக்கிந்தியக் கம்பெனியின் உபயோகத்திற்காக ராதர்ஹைத் (Rotherhithe) என்ற பெயருள்ள துறைமுகத்தில் கப்பல் துறைகள் புதியதாகக் கட்டுவித்தனர். அத்துடன் நன்னம்பிக்கை முனையைச் சுற்றிச் செல்லத் தகுதிவாய்ந்த கப்பல்களையும் கட்டி கம்பெனிக்கு அளித்தனர். அப்படி அவர்கள் அளித்த கப்பல்களில் ஒன்று டாவிஸ்டாக் (Tavistock) என அழைக்கப்பட்டது. மற்ருென்று ஸ்டிரீதாம் (Streatham) என அழைக்கப்பட்டது. இக்கப்பல் கி.பி. 1700-ல் கட்டப்பட்டது. இக் கப்பல் இந்தியாவிற்குப் பல பயணங்கள் செய்தது. கி.பி. 1755-ல் இக்கப்பலில்தான் கிளைவ் (Clive) இந்தியாவிற்குத் திரும்பிவந்தார்.

பதினெட்டாம் நூற்ருண்டில் ரஸ்ஸல் குடும்பத்தைப் போன்ற பழைய குடும்பத்தினர் அரசாங்கத்தில் மிக்க பங்குடையவராய் இருந்தனர். பெரிய பதவிகளை அக் குடும்பத்தினர் வகித்தனர். அதே சமயம் அக்குடும்பங்கள் அப்பெரும் பதவிகளுக்குத் தங்கள் தொண்டால் தகுதியுடையவையாய் இருந்தன. அக்குடும்பங்கள் நாடு பல்வகை யிலும் முன்னேற பாடுபட்டன. அக்குடும்பத்தினர் விவசாயத்திலும், வியாபாரத்திலும் ஒரே அளவான அக்கறை காட்டினர். அவர்கள் வியாபாரிகளாகவும், வழக்கறிஞர்களாகவும் தொழில் புரிந்தனர். அதே சமயம் நாட்டைக்காக்கும் திறமையும் ஆர்வமும் உடைய போர் வீரராகவும், நாட்டுப்புறங்களில் வாழ்ந்த பிரபுக்களின் குணநலன்களை உடையவராகவும் இருந்தனர். இதற்கு மாருக ஃபிரான்சில் வாழ்ந்த பிரபுக்களின் குடும்பங்கள், மிக்க சலுகைகளும் உரிமைகளும் உடைய வையாய் இருந்தன. பிரபுக்களின் குடும்பங்கள் அரசாங்கத்திற்கு வரி கொடுக்கவில்லை. அத்துடன் சமுதாயத்தில் மற்ற வகுப்பினருடன் கலவாமல் தனித்து நின்றன. சமுதாயத்திற்கு வேண்டுவன செய்யாமல் தங்கள் நலனுக்குத் தேவைப்பட்டவைகளை மாத்திரம் செய்து கொண்டன.

எலிசபெத் அரசியின் மரணத்திற்குப்பின் வாழ்ந்துவந்த தலை முறையின் நிலையைக் காண்போம். ஸ்பெயினுக்குச் சொந்தமாக அமெரிக்காவில் இருந்த சுரங்கங்களில் கிடைத்த வெள்ளி ஐரோப்பா விற்கு அதிகமாகக் கொண்டுவரப்பட்டது. அதனுல் வெள்ளியின் மதிப்

புக் குறைந்து விலேவாசிகள் அதிகரித்தன. இதன் காரணமாக முதலாம் ஜேம்சும், முதலாம் சார்லசும் தங்களது வரும்படியைக்கொண்டு ஆட்சி நடத்தமுடியாமல் தவித்தனர். அரசியலிலும் மதவிஷயத்திலும் தாங்கள் கோரிய உரிமைகளே அளித்தால்தான் அரசனுக்கு அதிகமான வரியை வசூலிக்கச் சம்மதம் கொடுக்க பார்லிமென்ட் அங்கத்தினர்கள் தயாராகவிருந்தனர். பார்லிமென்ட் கோரிய அரசியல் உரிமைகளேயும், பார்லிமென்ட் பியூரிடன் மதத்தவருக்குக் கோரிய சலுகைகளேயும் அவ் விருவரசர்களும் கொடுக்கச் சம்மதிக்கவில்லே. விலேவாசி உயர்வு நிலக்கிழார்களேயும் வியாபாரிகளேயும் மிக்க லாபமடையச் செய்தது. இவ்வகுப்பினரே மதவிஷயத்திலும் அரசியலிலும் அரசரை எதிர்த்தவ ராவார். அவ்வகுப்பினரின் செல்வமும் அவர்களுடைய எதிர்ப்பும் உள்நாட்டுப்போர் தோன்றுவதற்கு வழி செய்தது.

அரசனின் பணத்தொல்லே அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கையை பாதித்தது. அரசன் ஒரு பொருளேத் தயாரிக்கவும், விற்கவும், வியாபாரிகளுக்கோ அல்லது கம்பெனிகளுக்கோ தனி உரிமை வழங்க அதிகாரம் பெற்றிருந்தான். ஆனல், அவ்வதிகாரத்தை நாட்டின் நலனுக்காக அரசன் பயன்படுத்தவில்லே. அதற்குமாருகத் தன் அதிகாரத்தைப் பலப்படுத்திக்கொள்ளவே அரசன் உபயோகித் தான். அப்படி அரசன் செய்தது நாட்டின் வியாபாரத்தைப் பாதிப்ப தாகவிருந்தது. அத்துடன் அரசனின் பெயருக்கும் இழுக்குத் தேடித் தந்தது.

ஆனல், ஏழைகளேப் பாதுகாக்க எலிசபெத் அரசி செய்த ஏற்பாட்டை, ஸ்டூவர்ட் வம்ச அரசர்கள் தொடர்ந்து நடத்திய தோடல்லாமல், அவ்வேற்பாடு சரிவர நடக்கவும், பெரும்பான்மை யோருக்குப் பயனளிக்கவும் செய்தது, அவர்களுக்குப் பெருமை தேடித் தந்தது. அந்த ஏற்பாட்டைப் பிரிவிகவுன்சில் கவனித்துவந்தது. ஸ்டிராஃபோர்டும் (Strafford), லாடும் (Laud) பிரிவிகவுன்சிலின் அங்கத்தினராகவிருந்தே பெயர் பெற்றனர். ஏழைகள் பாதுகாப்புச் சட்டத்தைப் பிரிவிகவுன்சிலும் வட்டார அதிகாரிகளும் திறம்பட அமல் நடத்தினர் என்று பேராசிரியர் ஒருவர் குறித்துள்ளார்.[1]

'இங்கிலாந்தில் பிரிவிகவுன்சில் ஏழைகளேப் பாதுகாப்பதில் மிகுந்த அக்கறை காட்டியது. அதற்கேற்ருற்போல் வட்டார அதிகாரிகள் பிரிவி கவுன்சிலின் கட்டளேகளுக்குக் கீழ்ப்படிந்து பணியாற்றிவந்தனர். எலிசபெத் அரசியின் ஆட்சிக் காலத்திலேயே, பிரிவிகவுன்சில், வட்டா ரங்களில் ஏழைகள் பாதுகாப்புச் சட்டம் நிறைவேற்றப்படுகிறதா என்று

[1] இ. எம். லியோனர்ட் அம்மையார் எழுதியுள்ள, 'ஏழைகள் பாதுகாப்பின் வரலாறு', பக்கம் 293–294.

கவனிக்கத் தொடங்கியது. கி.பி. 1629-ல் இருந்து கி.பி. 1640 வரை பிரிவிகவுன்சில் தொடர்ந்து ஒன்றன்பின் ஒன்றுகக் கட்டளைகளை வட்டாரங்களுக்கு அனுப்பி ஏழைகளைப் பாதுகாக்கப் பெரும்பாடுபட்டது. அதனுல் ஏழைக் குழந்தைகளும் அங்கஹீனர்களும் அக்கறையுடன் பாதுகாக்கப்பட்டனர். வட்டாரங்களில் அமைதிக் காவலர்கள் ஊறு ஏதும் இல்லாத ஏழைகளுக்கு வேலை தேடித்தரும்படி உத்தரவிட்டனர். வட்டாரங்களில் இருந்த திருந்தச் செய்யும் இடங்களில் (Houses of correction) அத்தகைய ஏழைகள் வேலை கொடுக்கப் பட்டனர். பியூரிடன்கள் அதிகமாக வாழ்ந்த கவுன்டிகளில் ஏழைகள் பாதுகாப்புச் சட்டம் மிக்க அக்கறையுடன் அமல் நடத்தப்பட்டது.'

பதினெட்டாம் நூற்ருண்டில் ஏழைகளைப் பாதுகாப்பதில் இருந்த குறைகளைப்பற்றிப் பின்வரும் அத்தியாயங்களில் காண்போம். பிரிவி கவுன்சிலின் அதிகாரம் குறைந்தது. அதனுல் வட்டார அதிகாரிகளை மத்திய அரசாங்கம் தன் கட்டளைகளை நிறைவேற்றச் செய்ய முடியவில்லை. ஏழைகளைப் பாதுகாப்பதில் அந்நூற்ருண்டில் காணப் பட்ட குறைகள் சில பிரிவிகவுன்சிலின் அதிகாரம் குறைந்ததால் ஏற்பட்டவையாகும். பார்லிமென்டின் அதிகாரம் அதிகரிப்பினும், மக்களின் அரசியல் உரிமை அதிகரிப்பினும், பிரிவிகவுன்சிலின் அதிகாரம் குறைந்தது, அக்காலத்தே தேவைப்பட்ட மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டை இல்லாமல் செய்துவிட்டது. ஏழைகள் பாதுகாப்பு முறை அரசரின் அதிகாரம் அதிகமாக இருந்த காலத்திலேயே வேரூன்றியிருந்ததால் மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடு குறைந்தபோதும் அது அழிந்துவிடாமல் தொடர்ந்து நடந்துவந்தது.

இங்கிலாந்தில் இருந்த வயதுவந்த ஏழைகளும் வேலை செய்யக் கூடிய ஏழைகளும், ஐரோப்பா கண்டத்தில் இருந்த மற்ற நாடுகளில் கவனிக்கப்படாமல் விடப்பட்டதுபோல், விடப்படவில்லை. இத்தாலியிலும், பதினுன்காம் லூயியின் (Louis XIV) ஆட்சிக்காலத்தில் ஃபிரான்சிலும் தெருக்களில் திரிந்துவந்த எண்ணிறந்த பிச்சைக் காரர்களை, இங்கிலாந்தில் பார்க்க முடியாததாய் இருந்தது. டியூடர், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் காலத்தில் இயற்றப்பட்ட ஏழைகளின் பாதுகாப்புச் சட்டங்கள், அப்படிப் பிச்சைக்காரர்கள் திரியாமல் செய்யவே இயற்றப்பட்டன. வேலை செய்யக்கூடியவர்களுக்கு வேலை கொடுத்தும், வேலை செய்ய முடியாதவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுத்தும், பிச்சைக்காரர்கள் தெருவில் திரிவதை இங்கிலாந்தில் தடுத்தனர்.[1] ஃபிரான்சில் தோன்றிய புரட்சியைப்போல் இங்கிலாந்தில்

[1] கி.பி. 1631-ல் லின் (Lynn) என்ற துறைமுகத்தின் மேயர், ஊறு ஏதும் இல்லாத பிச்சைக்காரர்களுக்கு வேலை கொடுக்கத் தேவைப்பட்ட பொருள்களை நகரில் வைத்திருப்பதாக அறிவித்தார். பிச்சைக்காரர்கள் தெருவில் உலவுவதைத் தடுப்பதற்காகவே அப்படிச் செய்யப்பட்டது.

எதுவும் ஏற்படாததற்கு அதுவும் ஒரு காரணமாகும். பதினேழாம் நூற்றாண்டிலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை இங்கிலாந்தில் தோன்றிய சச்சரவுகளின்போதும் இங்கிலாந்தில் மக்கள் ஒழுங்கு தவறாமல் நடந்துகொண்டதற்கு ஏழைகளைப் பாதுகாக்கச் செய்த ஏற்பாடு ஒரு காரணமாகவிருந்தது.

கி.பி. 1830-ல் ஸர் ராபர்ட் பீல் (Sir Robert Peel) என்பார் துவக்கிவைக்குமுன் இங்கிலாந்தில் சிறந்த போலீஸ் படை இருக்கவில்லை. அதனால் பல தீய விளைவுகள் தோன்றின. சிறந்த போலீஸ் படை இல்லாதிருப்பினும், மக்கள் கிளர்ச்சிகளை அடக்கியும், கொலை, களவு முதலியவற்றைக் கண்டுபிடித்தும் வந்தனர். சிறந்த போலீஸ் படை இல்லாமலேயே அப் பணிகளை மக்கள் செய்துவந்தது அவரது நேர்மையை எடுத்துக்காட்டுகின்றது. அத்துடன் ஏழைகளைப் பாதுகாப்பதில் குறைகள் இருந்தாலும், அப்பணி, சமுதாயத்தில் குற்றங்கள் செய்வதைத் தவிர்க்க உதவியது என்றும் கூறலாம்.

பிச்சைக்காரர்களின் உரிமையைப்பற்றி அதிக அக்கறை காட்டப்படவில்லை. அவர்களுக்கு உபகாரம் செய்த அதே சமயத்தில் அவர்கள் உரிமைகளைப்பற்றி அரசாங்கம் நினைத்துப் பார்த்ததில்லை. திருந்தச் செய்யும் வீடுகள் (House of Correction) என அழைக்கப்பட்ட இடங்களுக்கு வேலை கொடுக்க முடியாத பிச்சைக்காரர்கள் அனுப்பப்பட்டனர். குடிகாரர்கள் கட்டிப்போடப்பட்டனர். பாதுகாப்பாளரின் ஆட்சியில் (Commonwealth) பியூரிடன்கள், தங்கள் மதத்திற்கு உகந்த விதிகளின்படி மக்கள் வாழ்க்கை நடத்தவேண்டும் என்று கட்டுப்பாடு செய்தனர். ஆனால், அப்படியேதான் மற்ற மதத்தவரும் தங்கள் கை ஓங்கியிருந்தபோது செய்தனர் என்று கூறலாம்.

தற்காலத்தில் அரசாங்கம் சில செயல்களைக் குற்றங்கள் என்று கருதுகின்றது. அதேசமயம் குற்றங்கள் அல்லது பாவச்செயல்கள் என்று கருதப்படுவதை நீதிமன்றங்கள் ஏற்றுக்கொள்வதில்லை. அக்காலத்தில் இப்படி வேற்றுமைப்படுத்தப்படவில்லை. இடைக்காலக் கருத்துகள் அப்போதும் மக்களிடையே காணப்பட்டன. மத ஸ்தாபனத்தின் நீதிமன்றங்கள் பாவச்செயல்களுக்காக அப் பாவச்செயல் புரிந்தோரைத் தண்டித்துவந்தன. ஸ்காட்லாந்தில் பிரஸ்பிடீரியன் (Presbyterian) மதஸ்தாபனத்தைச் சார்ந்த நீதிமன்றங்கள் காமாந்தகாரர்களை, ரோமன் கத்தோலிக்க நீதிமன்றங்கள் செய்ததைவிட அதிகமாக, தங்கள் செயலுக்காக வருந்தச்செய்தன. லாட் (Laud) என்பார் பதவியில் இருந்தபோது இங்கிலாந்திலும் அப்படிச் செய்ய முயற்சி புரிந்தனர். மக்களின் உரிமைக்காகப் போராடிய கட்சியினரும் (Libertines) பியூரிடன்களும், பிஷப்புகளை நீதிபதிகளாகக் கொண்ட நீதிமன்றங்கள், பாவச்செயல்கள் புரிந்தோரை தண்டிப்பதை

எதிர்த்தனர். உரிமைக்காகப் போராடிய கட்சியினர், கற்பழித்தோரை வெள்ளை ஆடை உடுத்தி அனைவரும் பார்க்கக்கூடிய இடத்தில் நிற்க வைத்ததை எதிர்த்தனர். அதற்கு மாருக பியூரிடன்கள் அத்தகைய குற்றங்களைப் புரிந்தோர் தண்டிக்கப்படவேண்டும் என்று கருதினர். ஆனால், அத்தண்டனையைத் தாங்களே குற்றம்புரிந்தோர்க்கு அளிக்க வேண்டும் என்றும், தண்டிக்கும் அதிகாரம் பிஷப்புகளுக்குக் கொடுக்கக்கூடாது என்றும் கருதினர். இப்படிப் பலர் பலவிதக் கருத்துடையவராய் இருந்ததன் பயனுகக் குற்றம் புரிந்தோர் முதலில் பிஷப்புகளின் அதிகாரத்திலிருந்து தப்பித்துக்கொண்டனர்; பிறகு பியூரிடன்களின் கையிலிருந்தும் தப்பித்துக்கொண்டனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது கற்பழித்தல் போன்ற குற்றங்களைச் செய்தோர் தண்டனை ஏதும் இன்றித் தப்பித்துக்கொண்டனர்.

பியூரிடானியரின் ஆட்சியின்கீழ் பாவச்செயல்களைச் செய்தோரைத் தண்டிக்க மதஸ்தாபன நீதிமன்றங்கள் அதிகாரம் பெற்றிருக்கவில்லை. அத்தகைய செயல்கள் செய்தோர் சாதாரண நீதிமன்றங்களிலேயே விசாரிக்கப்பட்டுத் தண்டனை அடைந்தனர். கி.பி. 1650-ல் கற்பழிக்கும் குற்றத்திற்குச் சட்டத்தின்மூலம் மரண தண்டனை விதிக்கப்பட்டது. இரண்டு அல்லது மூன்று குற்றவாளிகளுக்கு மரண தண்டனை நிறைவேற்றப்பட்டது. அப்படி மரண தண்டனை நிறைவேற்றப்பட்டபின் பியூரிடன் மதத்தைச் சேர்ந்த ஜூரிகளும் மரண தண்டனை விதிக்க மறுத்தனர். அதனல் கற்பழித்தலுக்கு மரண தண்டனை விதிப்பது நின்றுவிட்டது. ஆனல், ஒருவர் மற்றவரைத் தன்னுடன் தனித்துப் போர்செய்ய அழைத்துப் போர்புரிவதை மக்கள் ஒடுக்க அரசாங்கத்திற்கு ஆதரவு கொடுத்தனர். அப்பழக்கத்தை ஒடுக்குவதில் அரசாங்கம் வெற்றியடைந்தது. எனினும், அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் அப் பழக்கம் அனுமதிக்கப்பட்டது. அரசாங்கம் போர்வீரர்களை லண்டன் நகர மக்களின் வீடுகளுக்கு அனுப்பி, சபாத் (Sabbath) நாள் சரிவர அனுசரிக்கப்படுகின்றதா என்று கண்காணித்ததும், போர்வீரர்களை அனுப்பி பார்லிமென்ட் விரதம் இருக்கவேண்டும் என்று குறிப்பிட்ட நாள்களில் மக்கள் இறைச்சியை உண்கின்றனரா என்று கண்காணித்ததும் மக்களுக்குக் கோபமூட்டின. அதைப்போலவே மேதினத்தைக் கொண்டாட நடப்பட்ட கம்பங்களை வெட்டி வீழ்த்தியதும், ஞாயிற்றுக் கிழமைகளில் மாலையில் பந்தயங்கள் நடத்துவதை நிறுத்தியதும் மக்களுக்குக் கோபமூட்டின. பாதுகாப்பாளரின் ஆட்சி முடிந்து Commonwealth அரசாட்சி நிறுவப்பட்ட பின்னும் ஞாயிற்றுக் கிழமைகளில் விளையாட்டுகள் நடத்தப்படுவது தடை செய்யப்பட்டது. கி.பி. 1660-ல் ஆங்கிலிகன் மதம் பியூரிடன் மதத்திற்குப் பதில் ஸ்தாபிக்கப்பட்டாலும், பியூரிடானியர் ஞாயிற்றுக் கிழமைகளில் விதித்த தடை நிலைத்து நின்றுவிட்டது.

மந்திரக்காரிகளுக்குக் கொடுமை இழைப்பது ஐரோப்பாவில் சாதாரணமாக நடந்துவந்தது. ஆனால், மற்ற நாடுகளேவிட இங்கிலாந்தில் அது குறைவாக இருந்தது. ஆனால், பதினேழாம் நூற்றுண்டின் முற்பகுதியில் மந்திரக்காரிகளுக்குக் கொடுமை இழைப்பது எப்போதும் இல்லாத அளவு தலேதூக்கி நின்றது. இதற்குக் காரணம், எல்லா வகுப்பினரும் மந்திரக்காரிகள் தீமை செய்யும் சக்தி வாய்ந்தவர் என்று நினைத்ததாகும். நன்கு கல்வி கற்றிருந்தவரும் அதை நம்பினர். பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியிலும், பதினெட்டாம் நூற்றுண்டின் முற்பகுதியிலும் அரசாங்கத்தில் வேலே பார்த்தோர் அதில் நம்பிக்கை இழக்கத் தொடங்கிய பின்னரே, மந்திரக்காரிகளே வேட்டையாடிக் கொல்வது நின்றது. முதலாம் ஜேம்ஸின் ஆட்சியின் முற்பாகத்திலும், நீடித்த பார்லிமென்ட் கூட்டப்பட்ட காலத்திலும் அனேக மந்திரக்காரிகள் சிரச்சேதம் செய்யப்பட்டனர். நீடித்த பார்லிமென்ட் கூடியிருந்தபோது 200 மந்திரக்காரிகள் சிரச்சேதம் செய்யப்பட்டனர். இதற்குக் காரணமாகவிருந்தவர் மாத்யூ ஹாப்கின்ஸ் (Matthew Hopkins) என்பாராவர். முதலாம் சார்லஸின் ஆட்சிக் காலத்திலும், அவருக்குப்பின் தோன்றிய ஜனநாயக ஆட்சியிலும், பாதுகாப்பாளரின் ஆட்சியிலும் மந்திரக்காரிகளுக்குக் கொடுமை விளேப்பது முற்றிலும் நின்றது.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்படுமுன் ஒருசிலரே கிருத்தவ மத அற்புதங்களில் நம்பிக்கையில்லாதிருந்தனர். ஆனால், ஆங்கிலிகன் மதத்தைச் சார்ந்த பாதிரியார்கள், பியூரிடன் மதத் துறவியர் ஆகியோரின் அற்புதச் சக்திகளில் ஆங்கிலேயர் நம்பிக்கையற்றிருந்தனர். பாதிரியார்களின் அற்புதச் சக்தியிலும், பியூரிடன் மதத் துறவியரின் அற்புதச் சக்தியிலும் மக்களிடையே காணப்பட்ட அவநம்பிக்கை, மாறுபட்ட மதத்தவரிடையே ஒரு சமநோக்குத் தோன்றுவதற்குக் காரணமாய் இருந்தது. எட்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில், மக்களிடையே பாதிரியார்கள்மேல் இருந்த வெறுப்பே இடைக்கால மத ஸ்தாபனம் அழிவதற்குக் காரணமாய் இருந்தது. எலிசபெத்தின் ஆட்சிக் காலத்தில் பாதிரியார்கள்மேல் இருந்த வெறுப்பு ஆங்கிலேயரை ஸ்பெயின் நாட்டவரை எதிர்ப்பதில் ஒற்றுமையடையச் செய்தது. ஆனால், எலிசபெத்தின் ஆட்சிக்கால மதஸ்தாபனத்தைச் சார்ந்த அடக்கமுள்ள பாதிரியார்களே மக்கள் வெறுக்கவில்லே. எனினும், முதலாம் சார்லஸின் ஆதரவைப் பெற்றுத் திரும்பவும் பாதிரியார்கள் அதிகாரத்திலும் அந்தஸ்திலும் அதிகரிக்கவே, மக்கள் பழையபடி பாதிரியார்களே வெறுக்கத் தலேப்பட்டனர். செல்வாக்குடைய பிரபுக்கள், பாதிரியார்கள் அரசனுடன் நெருங்கிப் பழகுவதையும், ஆலோசனேச் சபையில் அங்கத்தினராக இருப்பதையும் விரும்பவில்லே. லண்டன் நகர மக்கள் கூட்டமாகக் கூடி அரண்மனேயில் இருந்த பிஷப்புகளேக் கூச்சலிட்டுக்

கேலி செய்தனர். மக்களுக்குப் பாதிரியாரிடம் இருந்த வெறுப்பு, லாட் (Laud) ஏற்படுத்திய மதஸ்தாபனத்தை நீடித்த பார்லிமென்டை அழிக்கக் காரணமாய் இருந்தது.

பார்லிமென்டின் படைகள் வெற்றி அடைந்ததும், பியூரிடன் துறவிகளின் அதிகாரம் தலைதூக்கியது. அவர்கள் மக்களின் அன்றாட வாழ்க்கையில் தலையிட்டனர். நாடகக் கொட்டகைகளை மூடினர். வழக்கமாக நடந்துவந்த பந்தயங்களையும் நிறுத்திவிட்டனர். இப்படி அவர்கள் செய்ததுதான் அரசாட்சி திரும்பவும் ஸ்தாபிக்கப்படுவதற்குக் காரணமாய் இருந்தது. ஆனால், பாதிரியார்களின் அதிகாரத்தை வெறுத்தது திரும்பவும் புரட்சிக்குக் காரணமாய் இருந்தது. அப் புரட்சி கி.பி. 1688-ல் ஏற்பட்டது. பல தலைமுறைக் காலத்திற்கு மக்கள் பியூரிடன் மதத்தையும், பாதிரியார்களின் அதிகாரத்தையும் வெறுத்து வந்தனர்.

சமுதாயப் பொருளாதார நிலை கிராம்வெல் கொண்டுவந்த புரட்சிக்குக் காரணமாக இருக்கவில்லை. அதற்கு மாறாக அரசியல் கொள்கையும் மதக் கொள்கையும் கிராம்வெல்லின் புரட்சிக்குக் காரணமாகவிருந்தன. புரட்சிக்குக் காரணமாகவிருந்தோர், சமுதாய அமைப்பை மாற்றியமைக்கவோ அல்லது பொருளாதார நிலையில் சமத்துவத்தை ஏற்படுத்தவோ நினைக்கவில்லை. ஆனால், சமுதாய, பொருளாதார நிலையே, மக்களிடையே மாறுபட்ட அரசியல் கொள்கைகளுக்கும் மதக் கொள்கைகளுக்கும் காரணமாய் இருந்தன. உள் நாட்டுப் போர் நடந்தபோது பிரபுக்களும் உயர்ந்த வகுப்பினரும் அரசனுக்கு உதவியாக நின்றனர். இயோமென் வகுப்பினரும் நகர மாந்தரும் பார்லிமென்டின் அதிகாரத்தை ஆதரித்தனர். லண்டன் மாநகரம் பார்லிமென்டின் கட்சியைச் சேர்ந்ததாய் இருந்தது. இருப்பினும், ஒரு வகுப்பைச் சேர்ந்த அனைவரும் ஒரே கொள்கையுடையராய் இருக்கவில்லை.

கி.பி. 1640-ல் சமுதாயத்திலும் பொருளாதார நிலையிலும் காணப்பட்ட முன்னேற்றம், அவ்வாண்டில் தோன்றிய புரட்சிக்குக் காரணமாக இருக்கவில்லை. ஆனால், அரசியல், மதம் ஆகியவற்றின் அடிப்படையில் தோன்றிய இயக்கங்களுக்கு அம் முன்னேற்றம் தேவைப்பட்டது. பிம் (Pym), ஹாம்ப்டன் (Hampden) ஆகியோரும், மற்றப் பார்லிமென்ட் அங்கத்தினரின் தலைவர்களும் அரசனின் அதிகாரத்தைக் குறைக்க அரும்பாடு பட்டனர். அவர்கள், நூற்றுக்கணக்கான, தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களைக்கொண்ட சட்டசபை, அரசனுக்குப் பதிலாக நாட்டை ஆளும் பொறுப்பு உடையதாய் இருக்கவேண்டும் என்று கருதினர். அவர்களால் தாங்கள் எண்ணியதைச் சாதிக்க முடிந்தது.

அவரது வெற்றி நாட்டு மக்கள் பார்லிமென்டை அரசியலில் முன் பிருந்தே பயன்படுத்திவந்தனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றது. அத்துடன், பூர்ஷுவா (Bourgeoise) வகுப்பினரும், ஜென்டரி களும், இயோமென்களும் நாட்டில் செல்வாக்குடையவராய் இருந்தனர் என்பதையும் எடுத்துக்காட்டுகின்றது. இவ் வகுப்பினர், அரசருடன் அரசாங்கத்தில் பங்கு கொண்டிருந்தனர். நாட்டில் பாப்டிஸ்ட் (Baptist), காங்ரிகேஷனலிஸ்ட் (Congregationalist) என்று அழைக்கப்பட்டோரும், அவர்களைப் போன்ற மற்றக் கிருத்தவ வகுப் பினரும் மிக்க செல்வாக்கு உடையவராய் இருந்தனர். அவர்களுடைய செல்வாக்கிற்குக் காரணம், அவர்கள் பொருளாதார நிலையில் மற்றவரின் உதவியை எதிர்நோக்கி இல்லாதிருந்ததே ஆகும். மேலும், மக்கள் பைபிளைத் தாங்களே படித்து வந்ததாலும், அவர்கள் கற்பனையும் புத்திகூர்மையும் உடையவராய் இருந்தனர். தினப்பத்திரிகைகளும், வாரப்பத்திரிகைகளும் அந்நாளில் இருந்திருந்தால் மக்கள் பைபிளை மாத்திரம் படித்திருக்கமாட்டார்கள். அவர்கள் அப்படி அப்பத்திரிகை களைப் படித்திருந்தால் பியூரிடன் புரட்சியே ஏற்பட்டிராது. புரட்சி நடக்காதிருந்தால், ஜான் பன்யன் (John Bunyan), 'பில்கிரிம்ஸ் புராக்ரஸ்' (Pilgrim's Progress) என்ற நூலை எழுதியிருக்க முடியாது.

பியூரிடன் மதப் புரட்சி, பன்யன் என்பார் எழுதியுள்ள யாத்திரி கரின் பயணத்தை ஒத்திருந்தது எனலாம். 'கந்தல் உடை தரித்த மனிதர் ஒருவர், கையில் ஒரு புத்தகமும், முதுகிலே ஒரு சுமையும் தாங்கி, தன் இல்லம் முதுகு புறத்தே இருக்க ஓர் இடத்திலே நிற்பதைப் போல் கனவு கண்டேன். அம் மனிதர் தன் கரத்தே இருந்த் புத்தகத்தைத் திறந்து படிப்பதுபோல் தோன்றிற்று. படித்துக் கொண்டிருக்கும்போதே அவரது உடல் நடுங்கியது; கண்களில் நீர் வழிந்தோடியது. உள்ளத்திலே தோன்றிய குமுறலை அடக்கமுடியாமல் அம் மனிதர் வாய்விட்டழுதார். அப்படி அவர் கதறியபோது, நான் இப்போது என்ன செய்யவேண்டும் என்று தன்னைத் தானே கேட்டுக் கொண்டார்'. இவ்வாறு பன்யன் எழுதியுள்ளார்.

பன்யன் கனவிலே கண்ட மனிதர், பியூரிடன் மதத்தைச் சார்ந்த ஆங்கிலேயனையே சித்திரித்துக் காட்டுகின்றது. நேஸ்பி (Naseby) என்ற இடத்தில் நடந்த போரின்போது பன்யன் இளைஞராக இருந்தார். அக் காலத்திலேயே பியூரிடன் மதமானது வலிவுற்றிருந்தது. போரிலும், அரசியலிலும், இலக்கியத்திலும், சமுதாய வாழ்க்கையிலும் பியூரிடன் மதத்தின் வலிமை வெளிப்பட்டது. பன்யன் கனவிலே கண்ட மனிதரைப்போல் அனேகர் தோன்றினர்; ஒன்று கூடினர்; படையாகத் திரண்டனர். அப் படையானது ஆக்கவும் அழிக்கவும் பலமுடையதாய் இருந்தது. ஆலிவர் கிராம்வெல்லும் (Oliver Cromwell), ஜியார்ஜ் ஃபாக்ஸ் (George Fox), ஜான் வெஸ்லி (John

Wesley) என்பாரும் அக்காலத்தே நிலவிய பியூரிடன் மத உணர்ச்சியினால் உந்தப்பட்டு அரிய சாதனைகளைச் செய்து முடித்தனர்.

மதத்திலே ஆர்வமும் பற்றும் பியூரிடன்களிடையேயும், உருண்டைத் தலையர்கள் (Roundheads) என்று அழைக்கப்பட்டோரிடையேயும்மட்டுமே காணப்பட்டன என்று நினைப்பது தவறானதாகும். அரசனின் கட்சியைச் சேர்ந்த பல குடும்பத்தினர், பியூரிடன்களைப் போலவே மதப்பற்றுடையவராய் இருந்தனர் என்பதை வெர்னி குடும்பத்தினரின் (Verney family) வாழ்க்கைக் குறிப்புகளும், அக் காலத்திய மற்ற ஏடுகளும் எடுத்துக் காட்டுகின்றன. எளிய வாழ்க்கையை நடத்திவந்த அலிஸ் தார்ன்டன் அம்மையாரைப்போல் (Alice Thornton) ஜென்ட்ரி, இயோமென் ஆகிய வகுப்புகளைச் சேர்ந்த பலர், இங்கிலாந்தின் மதஸ்தாபனம் ஐரோப்பாவிலேயே சிறந்தது என்று கருதினர். இங்கிலாந்தின் வடக்குப் பாகத்தில் இருந்தோரும், மேற்குப் பாகத்தில் இருந்தோரும் முக்கியமாக அக் கருத்தையுடையவராய் இருந்தனர். அலிஸ் தார்ன்டன் அம்மையாரின் குடும்பம் வாழ்ந்த வகையிலிருந்து பியூரிடன் மதத்தைச் சார்ந்தோர், அல்லாதவரும் எத்தகைய சமயப்பற்று உடையவராய் இருந்தனர் என்பது விளங்கும். அவ்வம்மையாரின் வாழ்க்கைக் குறிப்புகளை எழுதியவர், அவ்வம்மையாரின் வீட்டிலே, காலையில் ஆறு மணிக்கும், பகல் இரண்டு மணிக்கும், இரவு ஒன்பது மணிக்கும், மணியோசை கேட்டவுடன் வீட்டில் இருந்த அனைவரும் பிரார்த்தனைக் கூடத்திற்குச் சென்று பிரார்த்தனை செய்தனர் என்று குறித்துள்ளார். (வாலெஸ் நாட்டஸ்டீன் என்பார் எழுதியுள்ள, ‘ இங்கிலாந்து மக்கள் ’ என்ற நூலில் பக்கம் 186.)

உள்நாட்டுப் போரின் காலத்தில் பல குடும்பங்கள் இங்கிலாந்தின் மத ஸ்தாபனத்திற்காகவும் பிரார்த்தனைப் புத்தகத்திற்காகவும் அப்போரில் ஈடுபட்டுப் பல துன்பங்களுக்குள்ளாயின. அப்படி அவர்கள் துன்புற்றதன் காரணமாக அவர்கள் மேலும் இங்கிலாந்தின் மத ஸ்தாபனத்தை விரும்பத் தலைப்பட்டனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது பல குடும்பங்கள் இங்கிலாந்தின் மத ஸ்தாபனத்திற்கு மிக்க ஈடுபாடுடையனவாகக் காணப்பட்டன. இத்தகைய ஈடுபாட்டை லாடு (Laud) என்பார் பதவியில் இருந்த காலத்தில் புதுப்பித்துக் கொடுத்தார். அவரது காலந்தொட்டுப் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை மக்களிடையே மத ஸ்தாபனத்திடம் ஈடுபாடு இருந்துவந்தது. தனிமனிதரும் குடும்பத்தினரும் பயபக்தியுடையவராகவும், பைபிளைப் படிப்பதில் கருத்துள்ளவராகவும் இருந்துவந்தது, மக்கள் மத ஸ்தாபனத்திடம் கொண்டிருந்த ஈடுபாட்டை எடுத்துக்காட்டுகின்றது.

பன்யன் எழுதிய நூலில் பிராடஸ்டென்ட் மதத்தைப்பற்றிய செய்திகள் மட்டும் இருக்கவில்லை. அந் நூலிலே மக்கள் இசைத்த

பாடல்களும், நாட்டுப்புறக் காட்சிகளும், அன்புடனும் நகைச் சுவையுடனும் மக்கள் பேசிய பேச்சுகளும் இடம் பெறுகின்றன. இசாக் வால்டன் (Izaak Walton) என்பார் ஆங்லெர் (Angler) என்ற நூலில் சித்திரித்திருக்கும் இங்கிலாந்தையே பன்யனின் நூலிலும் காண் கிறோம். பன்யன் சித்திரித்துக் காட்டும் இங்கிலாந்து ஷேக்ஸ்பியரின் காலத்து இங்கிலாந்தைப் போலவே காட்சியளிக்கின்றது. எனினும், பன்யனின் காலத்தே மக்கள் உள்ளத்தில் சமயத்தைப்பற்றிய போராட்டம் நடந்துவந்தது, அவரது நூலிலிருந்து வெளிப்படு கின்றது. இருப்பினும், மக்களின் தன்மை மாறவில்லை என்று கூறலாம். ஆட்டோலிகஸ் (Autolycus) நடைபாதையில் தன் பொருள்களை அடுக்கிவைத்து யாத்திரிகர்களுக்குக் காண்பித்ததும், ஃபால்ஸ்டாஃப் (Falstaff) என்பார் பர்டோல்ப் (Bardolph) என் பாரைத் தன்னைவிட்டுப் பிரிந்து சென்று பின் சத்திரத்தில் தன்னைத் திரும்பவும் பார்க்குமாறு பணித்ததும் மக்கள் தங்கள் வாழ்க்கை முறையை மாற்றியமைத்துக்கொள்ளாமல் அப்படியே இருந்தனர் என் பதை விளக்குகின்றது.

பன்யனின் நூலில் தோன்றும் யாத்திரிகர்கள் மிட்லாண்டு (Midland) என்று அழைக்கப்பட்ட இங்கிலாந்தின் மத்தியப் பிரதேசத்தின் கிழக்குப் பாகத்தின் வழியே தங்கள் யாத்திரையை நடத்துகின்றனர். இப் பிரதேசத்தினூடே அவர்கள் பெருஞ்சாலைகள் வழியாகவும் குறுகிய சாலைகளின் வழியாகவும் செல்லுகின்றனர். இப் பிரதேசத்தில் பன்யன் இளைஞனாக இருந்தபோது நன்கு அறிந்திருந் தார். யாத்திரிகர்கள் சதுப்பு நிலங்களைக் கடந்துசென்றமை, கள்வர் களால் அவர்கள் வழிமறிக்கப்பட்டமை, மற்றும் அவர்களுக்கு நேர்ந்த துன்பங்கள் அனைத்தும் உண்மையானவைகளே. பதினேழாம் நூற்றாண்டில் எவர் பிரயாணம் செய்திருந்தாலும் அவர் மேற் கண்டவற்றைக் கண்டும், மேற்கூறிய துன்பங்களுக்கு உள்ளாகியும் இருந்திருப்பார். பன்யனின் நூலில் காணப்படும் விசித்திர மிருகங் களும், பெரிய தோற்றத்தையுடைய மனிதர்களும் உண்மையில் வாழ்ந்ததாக எடுத்துக்கொள்ள முடியாது. ஆனால், அவை பன்யனின் கற்பனையில் தோன்றியவை அல்ல. அக் காலத்தே மக்களிடையே உலவிவந்த கதைப்பாட்டுகள், பழங்கதைகள் ஆகியவற்றிலிருந்து எடுத்தாண்டவைகளே. உதாரணமாக, 'சர் பெவிஸ் ஆஃப் சௌதாம்ப்டன்' (Sir Bevis of Southampton) என்ற நூலி லிருந்து அவற்றை பன்யன் எடுத்தாண்டார் என்று கூறலாம். தற் காலத்தே தினச் செய்தித்தாள்கள் மக்களுக்கு அன்றாடச் செய்திகளைத் திரட்டித்தருவதுபோல் அக் காலத்தில் இருக்கவில்லை. கதைப்பாட்டு களையும் செய்திகளையும் ஒருவர் சொல்ல மற்றவர்கள் கேட்டுக் கொண்டனர்.

அக் காலத்தில் மக்கள் இயற்கையுடன் ஒன்றி வாழ்ந்தனர். அத்துடன் மற்றவர்களுடன் நெருங்கி வாழாமல் தாங்கள் உண்டு, தங்கள் தொழில் உண்டு என்று வாழ்ந்துவந்தனர். மேலும், மற்றவர் தூண்டுதல் இன்றித் தாங்களாகவே இறைவனை நினைந்து வாழ்ந்து வந்தனர்.

'மனிதர்களும் மலைகளும் ஒன்றுடன் ஒன்று சேரும்போது அரிய செயல்கள் நடைபெறுகின்றன; அத்தகைய அரிய செயல்கள் மக்கள் தெருக்களிலே நடமாடும்போது நிகழ்வதில்லை' என்று பிளேக் (Blake) என்பார் கூறியுள்ளார்.

மனிதன் இயற்கையோடு ஒன்றி வாழ்ந்தால் அவனால் அரிய சாதனைகளைச் செய்ய முடியும் என்பதையே மேற்கண்ட வரிகள் எடுத்துக் காட்டுகின்றன. ஒர்ட்ஸ்ஒர்த் (Wordsworth) என்பார் இயற்கையுடன் இயைந்து வாழ்ந்ததன் பயனாக ஒரு சிறந்த கவியாகத் திகழ்ந்தார். ஃபென்லாந்து (Fenland) என்றழைக்கப்பட்ட சதுப்பு நிலப் பிரதேசத்திலும், கேம்பிரிட்ஜ்ஷயரிலும் வாழ்ந்த மக்கள், பகலவன் தோன்றுவதையும், மறைவதையும், மேகக்கூட்டங்கள் வான வெளியிலே தவழ்ந்து செல்வதையும் தனிமையிலே நின்று கண்டு களித்தனர் என்று கூறலாம். ஸ்குவீர் வகுப்பைச் சார்ந்த கிராம் வெல்லும் (Cromwell), அவரைச் சார்ந்த அயர்ன்சைட்ஸ் (Ironsides) என்று அழைக்கப்பட்ட இயோமென் வகுப்பினரும் மேற்கண்டவாறு இயற்கையுடன் ஒன்றி வாழ்ந்தவர் என்று கூறலாம். கிழக்கு ஆங்கிலியா பிரதேசத்தின் பரந்த வெளிகளில் வாழ்ந்த மக்கள் இயற்கையின் எழிலிலே இறைவனின் அருளை உணர்ந்தவராக இருந்தனர் என்று கூறலாம். அதைப்போலவே பன்யன் இளைஞராக, பெட்ஃபார்டுஷயரில் (Bedfordshire) இருந்த காடுகளிலும், சதுப்பு நிலங்களிலும், புல்வெளிகளிலும் உலவிவந்தபோது, இயற்கையோடு ஒன்றி, இறைவனின் அருளை உணர்ந்தவராக இருந்திருக்க வேண்டும் என்று கூறலாம்.

ஷேக்ஸ்பியரின் காலத்தே ஆடுகளை மேய்த்துவந்தோரும், இசாக் வால்டன் (Izaak Walton) எழுதிய நூலில் தோன்றும், ஆற்றங்கரை களிலே தூண்டில்முள்ளைக்கொண்டு மீன்பிடித்த மக்களும், பன்யன், கிராம்வெல் ஆகியோரைப்போல் அன்றி மன அமைதியுடன் வாழ்ந்து வந்தனர். பன்யனும் கிராம்வெல்லும் சொர்க்கலோக, நரகலோக வாழ்க்கையைபற்றி எண்ணியவராய் மன அமைதியற்று இருந்தனர். துறவியராக இருந்தாலும், பாவச்செயல்களைப் புரிந்தோராக இருந் தாலும், எவ்விதத் துன்பங்களும் அற்ற மீனவனாக இருந்தாலும், தன்னைத் தானே வருத்திக்கொள்ளும் தீவிர சமயக் கருத்துகளைக்

கொண்டவனாக இருந்தாலும், எவராய் இருப்பினும், அனைவரும் அக் கால நிலைக்கும் இயற்கை அமைப்பின் சக்திக்கும் உட்பட்டோராக இருந்தனர். அக் காலத்தில் அவர்கள் இனிய தூய வார்த்தைகளைக் கொண்ட ஆங்கில மொழியைப் பேசியும் எழுதியும் வந்தனர். பைபிளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தோர் அந்த நடையைக் கொண்டுதான் மொழிபெயர்த்தனர். அந் நடையைத் திரும்பவும் வழக்கிற்குக் கொண்டு வரமுடியாத நிலை தற்போதுள்ளது. அக் காலத்தில் சாதாரண மக்கள் இசைத்த பாடல்களை இசாக் வால்டன் (Izaak Walton) ஓர் உரை யாடல்மூலம் எடுத்துக்காட்டுகின்றார்.

பிஸ்கடார் (என்று ஒருவர்) : ஒரு வேண்டுகோள் விடுக்கின்றார். நான் சில நாள்களுக்குமுன் இப் புல்வெளியின் வழியே சென்றுகொண் டிருந்தபோது உங்கள் மகள் ஒரு பாடல் இசைப்பதைக் கேட்டேன். அப் பாடலை நான் திரும்பக் கேட்க ஆவலாய் இருப்பதால், உங்கள் மகளைத் திரும்பவும் அப் பாடலை இசைக்கச்செய்ய வேண்டுகிறேன்.

ஓர் இடைச்சி : அது என்ன பாடல் என்று தெரிவிப்பீர்களா? 'இடையனே வருக, உன் ஆட்டு மந்தையை ஒழுங்குபடுத்துக' என்ற பாடலா, 'உச்சிவேளையில் டல்சினா இளைப்பாறியது போல்' என்ற பாடலா, 'பில்லிடா என்னை அவமதித்தாள்' என்ற பாடலா, அல்லது 'ஜானி ஆம்ஸ்டிராங்' என்று துவங்கும் பாடலா என்று இயம்புங்கள்.

பிஸ்கடார் : இல்லை, அவற்றில் ஒன்றுகூட இல்லை. உங்கள் மகள் முதலடிகளைப் பாட, நீங்கள் பின்னடிகளைப் பாடிய பாடலைக் குறிக் கின்றேன்.

இடைச்சி : மௌடுலின் இங்கே வருக. வந்திருப்போர் கேட்க அப் பாடலின் முன்பகுதியை உள்ள மகிழ்வுடன் இசைக்க. முன் பகுதியை நீ பாடி முடித்ததும் நான் பின்பகுதியைப் பாடுகின்றேன்.

இதை கேட்டவுடன் மௌடுலின், 'வருக, வந்து என்னுடன் என் அன்புத்துணையாக இருக்க' என்ற பாடலைப் பாடுகின்றாள்.

அப் பாட்டு முடிந்ததும், 'இப் பாடல் மிக்க விருப்பமான பாடல்; நல்ல குணம் படைத்த மௌடுலினால் இனிமையாக உணர்ந்து பாடப் பட்டது. மே மாதம் முழுவதும் எலிசபெத் அரசியார், தன்னை ஓர் இடைச்சியாக நினைத்துக்கொண்டு இப் பாடலைப் பாடியதன் காரணத்தை நான் இப்போது உணருகிறேன்' என்று வெனடார் (Venator) என்பார் கூறுகின்றார்.

காமென்வெல்த் (Commonwealth) என்று அழைக்கப்பட்ட பியூரிடானியரின் ஆட்சிக் காலத்தில், நாட்டுப்புற மக்கள் தங்களுக்குப்

பிடித்த பாடல்களைப் பாடி மகிழ்ந்து வந்தனர். நகரங்களில் பியூரிடானியர் தீவிரக் கட்டுப்பாடுடையவராகவும், தீவிர நோக்கமுடைய வராகவும் வாழ்ந்ததைப்போல் அன்றி நாட்டுப்புறங்களில் வாழ்ந்த மக்களில் அனேகர் அமைதியான எளிய வாழ்க்கையை வாழ்ந்து வந்தனர்.

கி.பி. 1653ஆம் ஆண்டு ஜூன் மாதம் டோரதி ஆஸ்போர்ன் (Dorothy Osborne) என்ற பெயருடைய அழகிய மங்கை, தன் காதலனுக்குக் கிராமப் பொதுப்பணி நடைபெறும் திறந்த வெளியில் தான் கண்டதையும் கேட்டதையும் விளக்கி எழுதியுள்ளதைக் கீழே குறிப்போம் :

'நான் எப்படிப் பொழுது போக்குகின்றேன் என்று கேட்டிருந் தீர்கள். பகலவனின் சூடு தெரியும் பகற்பொழுதிலே, படிப்பதிலோ அல்லது ஏதாவதொரு வேலை செய்வதிலோ என் பொழுதைக் கழிக் கின்றேன். மாலை மயங்கும் வேளையிலே, ஆறு அல்லது ஏழு மணி அளவில், வீட்டிற்கு அருகிலேயே உள்ள பொதுவிடத்திற்குச் செல்வேன். அங்கே பல இளம்பெண்கள் தங்கள் ஆடுகளுடனும் பசுக்களுடனும் அமர்ந்து கதைப்பாட்டுகளைப் பாடிக்கொண்டிருப்பர். உங்கள் வாழ்க்கை இன்பமானதாக இருக்கின்றது என்று கூறினால் அது ஒன்றே அவர்களை இன்பத்தில் ஆழ்த்துகின்றது. பேசிக்கொண்டிருக்கும் போது பசுக்கள் தானியங்களை உண்ண நெருங்குவதைக் கண்டு விட்டால், எல்லோருமாக எழுந்து ஒரே ஓட்டமாக ஓடிவிடுவர்' இவ்வாறு டோரதி ஆஸ்போர்ன் எழுதினாள்.

ஆண்டு முழுவதையும் இளம்பெண்கள் ஓர் இடத்தில் அமர்ந்து கதைப் பாட்டுகளைப் பாடி மகிழ்ந்துகொண்டிருக்க முடியாது. எலிசபெத் அரசியும் மே மாதம் ஒன்றில்தான் தன்னை ஓர் இடைச்சி என்று கருதிக்கொண்டாள். மேற்கண்ட இளம்பெண்களைக் கொண்ட இனிய கிராமங்களில்கூடக் கொடுமையும் வறுமையும் காணப்பட்டன. கவிஞர்கள் தீட்டியுள்ள, இயற்கையோடு இயைந்த, இனிய எளிய வாழ்க்கையை உண்மையிலேயே நாட்டுப்புற மக்கள் வாழ்ந்தனர் எனக் கூறலாம்.

ரவுண்டுஹெட்டுகள்[1] (Roundheads) என்றும் கவலியர்கள் (Cavaliers) என்றும் அழைக்கப்பட்டோர் பைபிளைப் படித்ததாலும், நாட்டுப்புறங்களில் வாழ்ந்துவந்ததாலும் மட்டுமே, அவர்கள் அந்த

[1] பார்லிமென்டின் கட்சிக்காரர்கள் தலைமயிரை ஒட்டக் கத்தரித்துக்கொண் டிருந்ததால் உருண்டைத் தலையர் (Roundheads) எனப் பரிகாசமாக அழைக்கப் பட்டனர்.

நிலையில் இருக்கவில்லை. பன்யனைப் பொறுத்தவரை அவர் பைபிளைப் படித்ததாலும், நாட்டுப்புறங்களில் வாழ்ந்ததாலும் அவருடைய நூலிலே காணப்படும் கருத்துகளைக் கொண்டவராய் இருந்தார் எனக் கூறலாம். மில்டன் (Milton), மார்வெல் (Marvell), ஹெர்ரிக் (Herrick) ஆகியோரின் காலத்தில் கல்வியில் சிறந்தோர் பாடல்கள் எழுதுவதில் ஊக்கம் காட்டினர். எளிய, இனிய பாடல்கள் எழுதப் பட்டு, இசை அமைக்கப்பட்டு எல்லா வகுப்பைச் சார்ந்த மக்களாலும் பாடப்பட்டு வந்தன. கல்வியில் சிறந்து விளங்கிய குடும்பங்களில் உயர்ந்த நடையும் உயர்ந்த கருத்துகளும் கொண்ட பாடல்கள் கையெழுத்துப் பிரதியாக, ஒருவர் குடும்பத்திலிருந்து மற்றவர் குடும் பத்திற்குக் கற்றுக் களிக்குமாறு அனுப்பப்பட்டு வந்தன. அப்படி அனுப்பப்பட்ட பாடலை அனைவரும் ஏற்றுக்கொள்வாரேயானால் அப் பாடல் அச்சிடப்பட்டு வெளியிடப்படும். அச்சிடப்பாடமல் விடப்பட்ட பாடல்கள் நாளாவட்டத்தில் மறைந்துவிடுவதும் உண்டு. மில்டன் எழுதிய கூமஸ் (Comus) என்ற பெயருடைய பாடல் லாஸ் (Lawes) என்பவரால், பிரிட்ஜ்வாட்டர் பிரபுவின் (Lord Bridgewater) கலைக் கூடத்தில் நாடகமாக நடிக்கப்பட இசை அமைக்கப்பெற்றது (1634). இது நிகழ்ந்தபோது ஆங்கிலேயரின் குடும்பப் பண்பாடு உச்சநிலையை அடைந்தது என்று கூறலாம். அக் காலத்தில் மக்களில் அனேகர் கிரேக்க-ரோமானிய இலக்கியங்களையும், கிருத்து மதத்தைச் சார்ந்த இலக்கியங்களையும் நன்கு கற்றுத் தேர்ந்திருந்தனர் எனக் கூறலாம்.

சமயத்திலும் அரசியலிலும் மக்களிடையே இருந்த கருத்து வேறு பாட்டைப் புத்தகங்களில் வெளியிட்டனர். அப் புத்தகங்கள் நன்கு கற்றறிந்தோரால் எழுதப்பட்டன. அதனல் அவை தரத்தில் உயர்ந்த வையாக இருந்தன. அத்துடன் எளிதில் சாதாரண மனிதர்களால் புரிந்துகொள்ள முடியாதவையாய் இருந்தன. எனினும், அப் புத்தகங் களைப் பலரும் ஆவலுடன் படித்தனர். கொடிய அரசனைக் கொல்லுவது கொலையாகாது என்று விளக்கிய, ‘கில்லிங் நோ மர்டர்’ (Killing no Murder) என்ற நூலை ஜனநாயக கட்சியைச் (Republican) சார்ந்த ஒருவர் எழுதினர். அப் புத்தகத்தில் அவர் தனது கூற்றிற்குச் சாதக மாக, கிரேக்க-ரோமானிய இலக்கியங்களிலும் பைபிளிலும் கூறப்பட் டிருப்பதை எடுத்துக் காட்டினர். ஜனநாயகக் கட்சியைச் சார்ந்த அவர், முதலாம் சார்லஸ் கொல்லப்பட்டது ஒரு கொடிய செயல் அன்று என்று எடுத்துக்காட்டவே அந்த நூலை வெளியிட்டார். கவலியர்கள் (Cavaliers) என்று அழைக்கப்பட்ட அரசனின் கட்சியைச் சார்ந்தோர் அப்புத்தகத்தைத் திரும்பவும் வெளியிட்டனர். கிராம்வெல்லைக் கொலை செய்யத் தூண்டவே அவர்கள் திரும்பவும் அப்புத்தகத்தை வெளியிட் டனர். பியூரிடானியரின் ஆட்சிக் காலத்திலும், சாதாரண மக்கள், கிரேக்க-ரோமானிய இலக்கியங்களில் கொடிய அரசனைக் கொலை செய்

வதைப் பற்றிக் கூறியுள்ளதை ஏற்றுக்கொண்டனர். அதேபோல் யூத நீதிபதிகளும் தீர்க்கதரிசிகளும் கூறிச்சென்றவைகளிலும் நம்பிக்கை வைத்திருந்தனர்.

சமுதாயத்தில் உயர்ந்த வகுப்பையும் மத்திய வகுப்பையும் சார்ந்த பலர் படித்துவந்தனர். அப்படிப் படித்துவந்தவர்களை நகரத்திலும் நாட்டுப்புறத்திலும் காணமுடிந்தது. படிக்கத் தெரிந்தவர் ஒவ்வொரு வரும், மாணுக்கர்களைப்போல் கவனமாக, சிரமப்பட்டு நூல்களைப் படிக்கவேண்டியிருந்தது. செய்யுள்களையும் நாடகங்களையும் தவிர மற்ற எந்த வகையான நூலும் எளிதில் படித்துப் புரிந்துகொள்ளக்கூடிய தாக இருக்கவில்லை. சாதாரண மனிதர்களுக்காக எழுதப்பட்டிருந்த கதைப்பாட்டுகளையும், 'கிராண்டு சிரஸ்' (Grand Cyrus) என்ற பெயர் கொண்ட, வீரம், காதல் முதலியன நிறைந்த, அளவில் பெரிய கற்பனைக் கதைப்புத்தகங்களையும் தவிர, கதைப்புத்தகங்கள் அக் காலத் தில் இருக்கவில்லை. கிராண்டு சிரஸ் போன்ற கற்பனைக் கதைகள் தற்காலத்தவருக்குச் சுவையுள்ளனவாக இல்லாவிட்டாலும், அக் காலத் தில் டோரதி ஆஸ்போர்ன் போன்றவர்கள் அவைகளை விரும்பிப் படித்தனர்.

பேராசிரியர் நாடஸ்டீன் (Notestein) என்பார், யார்க்ஷயரைச் (Yorkshire) சார்ந்த ஆடம் ஆர் (Adam Eyre) என்பாரின் நாட் குறிப்புகளைத் தற்காலத்தில் கண்டெடுத்துள்ளார். ஆடம் ஆர், இயோமென் வகுப்பைச் சார்ந்தவர். அவர் பார்லிமென்டின் படையில் பணிபுரிந்து, கி.பி. 1647-ல் டேல்ஸ் (Dales) என்ற பிரதேசத்தில் இருந்த தன் பண்ணைக்குத் திரும்பியிருந்தார். அவர் தன் வகுப்பைச் சார்ந்தவர் பலரைக் காட்டிலும் அதிகமான நூல்களைப் படித்தார்; அத்துடன் பலவற்றைப்பற்றியும் மற்றவர்களைவிட அதிகமாகச் சிந்தித்தார் என்பது உண்மை. அவர் படித்தவற்றைக் கொண்டும் அவர் சிந்தித்தவற்றைக் கொண்டும், அக்காலத்தில் மக்கள் எவற்றைப் படித்தனர், எவற்றைப்பற்றிச் சிந்தித்தனர் என்பதை ஒருவாறு அறியக் கூடும். அரசியலிலும் சமயப் போராட்டங்களிலும் இயோமென் வகுப்பைச் சார்ந்தவர் தாங்களாகவே எந்தக் கட்சியில் தாம் சேர வேண்டும் என்று எண்ணித் துணியும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்பதை ஆடம் ஆர் கற்றவைகளிலிருந்தும் சிந்தித்துப்பார்த்தவை களினின்றும் அறியக்கூடும்.

"ஆடம் ஒரு தச்சனைக்கொண்டு புத்தகங்களை ஒழுங்காக அடுக்கி வைக்க அடுக்குகளைச் செய்து வைத்திருந்தார். அவ்வடுக்குகளில் தனக்குச் சொந்தமான புத்தகங்களை அடுக்கி வைத்தார். அவரது நண்பர்கள் அவ்வடுக்குகளில் இருந்த புத்தகங்களை அடிக்கடி வாங்கிச் சென்று படித்துவந்தனர். ஆடம் பெரிய நகரங்களுக்குச் சென்று

வரும்போதெல்லாம் ஏதாவதொரு புத்தகத்துடனே வீடு திரும்புவார். சில சமயங்களில் அடுக்கடுக்காகப் புத்தகங்களைத் தனக்கு அனுப்பி வைக்கச் செய்வார். அப்படிச் சேகரித்த புத்தகங்கள் அனைத்தையும் அவர் கவனமாகப் படித்து முடிப்பார். அவரது நாட்குறிப்பிலே, 'இன்று பகற்பொழுதை அனேகமாகப் படிப்பதில் செலவிட்டேன்,' என்று அவர் பல நாள்களில் எழுதிவைத்திருப்பதைக் காணலாம். 'ஸ்டேட் ஆஃப் யூரோப்' (State of Europe) என்ற நூலின் பொருள் அட்டவணையைத் தயார் செய்ய முற்பட்டார் அவர். அதேபோல் 'எ டிஸ்கோர்ஸ் ஆஃப் தி கவுன்சில் ஆஃப் பாசெல்' (A Discourse of the Council of Basel) என்ற நூலைப் படித்துமுடித்து அதைப்பற்றித் தன் கருத்தைக் குறித்துவைத்தார்.' பாசெல் என்ற இடத்தில் கூடிய கூட்டத்தினரின் செயலிலும், மனிதனின் எல்லாச் செயல்களிலும் தோன்றும் நேர்மையற்ற தன்மை வெளிப்படுகின்றது என்று அவர் குறித்துள்ளார். அவரது குறிப்பிலிருந்து வரலாறு மனிதனின் நேர்மையற்ற தன்மையை எடுத்துக்காட்டுகின்றது என்ற அவரது எண்ணம் புலனாகின்றது. ஆடம், லில்லி (Lilly) என்பாரின் தீர்க்க தரிசனங்களைப் படித்திருந்தார். வால்டர் ராலே (Walter Raleigh) எழுதிய 'உலக வரலாற்றை'யும் (History of the World) அவர் படித்திருந்தார். ராலேயின் நூல் அந்நூற்றுண்டில் அதிகமாக விற்பனை ஆயிற்று. ஏராஸ்மஸ் எழுதிய 'மடமையின் பாராட்டு' (Praise of Folly) என்ற நூலையும், ஜேம்ஸ் ஹோவெல் என்பாரின் 'டென்ட்ரோலாஜியா' (Dendrologia) என்ற நூலையும் அவர் ஆழ்ந்து படித்திருந்தார். அவரது நூலகத்தில் டால்டன் எழுதிய, 'கன்ட்ரி ஜஸ்டிஸ்' (Country Justice) என்ற நூலும் இடம்பெற்றிருந்தது. அந் நூல் வட்டாரங்களில் இருந்த அமைதிகாவலர்கள் ஆகியோரின் கடமைகளைப்பற்றி விளக்கிக் கூறியது.

ஆடம் படித்துமுடித்த புத்தகங்களில் அனேகம் மதத்தைப்பற்றிய புத்தகங்களே. உதாரணமாக, பிரஸ்பிடெரி (Presbytery) என்ற நியாயம் வழங்கும் சபையை ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தை விளக்கும் நூல், பெயர் பெற்ற பிரசாரகர்களின் பிரசாரங்கள் ஆவன. அவர் படித்து முடித்த சமய நூல்களின் எண்ணிக்கை வியக்கத்தக்கதாய் இருக்கின்றது. அவரது நாட்குறிப்பில் ஒரு நாள், 'இன்று நான் நாள் முழுவதும் வீட்டில் ஓய்வு எடுத்துக்கொண்டேன். என் மனக்கண் முன்னே நான் அறிந்திருந்த பல நூல்களின் கருத்துகள் தோன்றி என் உள்ளத்திலே பல எண்ணங்களை எழுப்பின,' என்று குறித்துள்ளார். கற்றவைகளை எண்ணிச் சிந்தித்துப் பார்ப்பது அறிவு வளர்ச்சியின் ஆரம்பமாகக் கொள்ளலாம். சமய நூல்களை ஆடம் அதிகமாகப் படித்ததால் அவர் சமயத்திலே மிக்க பற்றுடையவர் என்று கொள்ளுவதற்கில்லை. அவர் வாழ்ந்த காலத்திலே சமயத்தைப்பற்றி

அதிகமாகப் பேசப்பட்டது, எழுதப்பட்டது. அதனால் அவரும் அதிக மாகச் சமய நூல்களைப் படித்துவந்தார். தற்கால தின செய்தித் தாள்களில் வேலைநிறுத்தங்களைப் பற்றியும் விளையாட்டுப் போட்டிகளைப் பற்றியும் அதிகமாகச் செய்திகள் காணப்படுவதுபோல், ஆடம் வாழ்ந்த காலத்தில் செய்திக் கடிதங்களும் (News letters) சிறு புத்தகங்களும் (Pamphlets)[1] சமயத்தைப் பற்றிய செய்திகளை அதிக அளவில் கொண்டிருந்தன. வெஸ்ட் ரைடிங் (West Riding) பிரதேசத்தில் உள்ள கிராமங்களில் நிகழ்ந்த சச்சரவுகளுக்குச் சமயம் காரணமாக இருந்தது. அதேபோல் வெஸ்ட்மின்ஸ்டரில் அரசியல்வாதிகளுக்கு இடையே நிகழ்ந்த சச்சரவுகளும் சமயத்தின் அடிப்படையில் தோன்றியவை ஆகும். [W. நாடஸ்டீன் என்பார் எழுதிய, 'ஆங்கிலேய மக்கள்' என்ற நூல், பக்கங்கள் 250–251 ; (W. Notestein, 'English Folk,' pp. 250–251)]

கிராம்வெல்லின் காலத்தே வாழ்ந்துவந்த இயோமென்கள் ஆடமைப் போன்று கற்றறிந்தவராக இருந்தனர். பிரபுக்களின் பண்ணை வீடுகளில், கிரேக்க-ரோமானிய இலக்கியங்கள், அவரது நூல்நிலையங் களின் அடுக்குகளிலே, பிரசாரப் புத்தகங்கள், சிறுபுத்தகங்கள் ஆகிய வற்றுடன் கலந்து காணப்பட்டன. அவரது நூல்நிலையங்களில் காணப்பட்ட புத்தகங்களில் அனேகம் செய்யுள்களாகவும், கிரேக்க-ரோமானிய இலக்கியங்களாகவுமிருந்தன. இயோமென், ஸ்குவீர், வியாபாரிகள் ஆகிய வகுப்பைச் சேர்ந்தோரில் அனேகர் சிறிது நேரத் தையே படிப்பதில் செலவழித்தனர். இருப்பினும், பலர் பெருமளவு படித்தவராக இருந்தனர் ; அதனால் கருத்து வேற்றுமை அவரிடையே தோன்றியது எனலாம். உள்நாட்டுப் போர், இக் கருத்து வேற்றுமை யின் காரணமாகத் தோன்றியதே என்று கூறலாம். கருத்துகள், மக்க ளிடையே, கையெழுத்துப்பிரதிகள் மூலமாகவும் அச்சடிக்கப்பட்ட சிறு புத்தகங்கள் மூலமாகவும் பரவின என்று கூறலாம். அத்துடன் பிரசார கர்களின் பிரசாரங்கள் மூலமும், ஒருவருக்கொருவர் பேசிக்கொள் வதன் மூலமும் கருத்துகள் மக்களிடையே பரவின எனக் கூறலாம்.

சார்லஸுக்கும் கிராம்வெல்லிற்கும் இடையே நிகழ்ந்த உள் நாட்டுப் போர், ரோஜாப்பூ அடையாளப் போரினின்றும் மாறு பட்டது. இரண்டு உயர்ந்த பிரபுக்களின் குடும்பங்கள் அரசாட்சியை

[1] கி.பி. 1640-க்கும் 1660-க்கும் இடையே சிறு புத்தகங்கள் பல வெளியிடப் பட்டன. அச்சடிக்கப்பட்ட தினச்செய்தித்தாள்கள் மிகச்சிலவாகவிருந்தன. செய்திக் கடிதங்கள் கைப்பட எழுதப்பட்டு, லண்டனிலிருந்து மற்றப் பகுதிகளில் வாழ்ந்து வந்த சந்தாதாரர்களுக்கு அனுப்பிவைக்கப்பட்டன. அச் சந்தாதாரர்கள் செய்திக் கடிதங்களைத் தங்களுக்கு அண்டையில் வாழ்ந்தோருக்குப் படிக்கக் கொடுத் துதவினர். அந்நூற்றுண்டு முடியும்வரை இந்த விதமாகத்தான் செய்திகள் நாடு முழுவதும் பரவின.

அடைவதற்காக நிகழ்த்திய போர், ரோஜாப்பூ அடையாளப் போராகும். அப்போர் நிகழ்ந்தபோது மக்களில்பெரும்பாலோர் வெறுப்புக் கொண்டு, அப் போரினின்றும் விலகி நின்று கவனித்தனர். முக்கியமாக நகரங் களில் வாழ்ந்தோர் அப் போரில் பங்கு கொள்ளாமல் விலகி நின்றனர். ஆனால், கி.பி. 1642-ல் நகரத்தோரும், நாட்டுப்புறங்களில் வாழ்ந்தோரும் போருக்குத் திரண்டெழுந்தனர். ஒரு சமயம் அப் போர், லண்டன் நக ரத்திலும் அதையொட்டிய பிரதேசங்களிலும் இருந்த மக்கள், வடக்கு, மேற்குப் பகுதிகளில் வாழ்ந்த நாட்டுப்புற மக்களுடன் நிகழ்த்திய போராகத் தோற்றமளித்தது. எனினும், நகரத்தவருக்கும் நாட்டுப் புறங்களில் வாழ்ந்த மக்களுக்கும் இடையே நடந்த போர் என்று உள்நாட்டுப் போரைக் கூறுவதற்கில்லை. அத்துடன் ஏழைகளுக்கும் செல்வந்தர்களுக்கும் இடையே நிகழ்ந்த போர் என்றும் உள்நாட்டுப் போரைக் கருதுவதற்கில்லை. அவற்றிற்கு மாறாக, மத ஸ்தாபனத்தைப் பற்றியும் அரசியலைப்பற்றியும் உலவிவந்த மாறுபட்ட கருத்து களிடையே நிகழ்ந்த போர் எனக் கூறலாம்.

மக்கள் சுயநலத்தைக் கருதி எந்தக் கட்சியிலும் சேரவில்லை. இரு கட்சிகளும் மக்களைத் தங்கள் கட்சியில் சேருமாறு கட்டாயப்படுத்தவு மில்லை. மக்கள் தாங்களாகவே தங்கள் அரசியல், சமயக் கருத்து களுக்கு ஏற்ற கட்சியில் சேர்ந்தனர். மக்களில் அனேகர் சமுதாயத்தில் தாங்கள் இருந்த நிலையிலும், பொருளாதார நிலையிலும் மற்றவர் தங்களைக் கட்டாயப்படுத்தித் தாங்கள் விரும்பாத கட்சியில் சேருமாறு செய்யப்படும் நிலையில் இல்லாதிருந்தனர். நாட்டுப்புறங்களில்கூட மக்கள் தாங்கள் விரும்பிய கட்சியில் சேர உரிமையுடையராய் இருந் தனர். பண்ணைமுறை ஆட்சிக்காலத்தில் இருந்ததுபோல் பிரபுவிற்குப் பயந்தோ அல்லது அடங்கியோ அவர்கள் வாழவில்லை. அத்துடன் அக் காலத்தில் மிகப் பெரிய அளவிற்கு நிலத்தைச் சொந்தமாக வைத்திருந்தோரும் இருக்கவில்லை. அப்படிப்பட்டவர்கள் பிற்காலத்தி லேயே காணப்பட்டனர். உள்நாட்டுப் போர் நடைபெற்ற காலத்தில் ஸ்குவீர் வகுப்பைச் சார்ந்தவர்களும் இயோமென்களும் அரசியலில் மற்றவர்களுக்குக் கட்டுப்பட்டு இராமல், தாங்கள் விரும்பிய அரசியல் கொள்கையையோ அல்லது கட்சியையோ ஆதரிக்கும் உரிமையுடைய ராய் இருந்தனர். ஆனால், சுமார் இருநூறு ஆண்டுக் காலத்திற்குப் பிறகு பெரிய பண்ணைகளைச் சேர்ந்த குடியானவர்கள், தாங்கள் பயிர் செய்துவந்த நிலங்களின் உரிமையாளருடன் வாக்குச் சாவடிக்குச் சென்று, தங்கள் நிலத்தின் உரிமையாளர் ஆதரித்த விக் (Whig) அல்லது டோரி (Tory) கட்சியாளருக்குத் தங்கள் வாக்கைப் பதிவு செய்துவிட்டு வந்தனர். ஆனால், கி.பி. 1642-ல் சிறு நிலக்கிழார் களாகிய இயோமென்கள் பெரிய நிலப்பரப்பைச் சொந்தமாகக் கொண்ட ஸ்குவீர் வகுப்பினரைப் படைக்கலம் கொண்டு எதிர்த்தனர்.

நகரங்களில் வாழ்ந்தோரும் மற்றவர்களுக்குக் கட்டுப்பட்டிராமல் சுதந்திர மனிதர்களாய் வாழ்ந்துவந்தனர். நகர மாந்தர் தங்கள் நகரத்திற்காகச் சேவை செய்வதைக் கடமையாக ஏற்றுக்கொள்ள வில்லை. அவர்கள் நாடு முழுவதிலும் ஆதரவாளர்களைக் கொண்ட கட்சிகளில் தாங்கள் சேருவதையே தங்கள் அரசியல் நோக்கமாகக் கொண்டிருந்தனர். அதேபோல் தங்களுக்குப் பிடித்த சமயத்தை ஏற்றுக்கொண்டு அதற்காகச் சேவை புரிவதையும் நோக்கமாகக் கொண் டிருந்தனர். நகரங்களில், தலைமைத் தொழிலாளிகளும் அவரிடம் தொழில் பயின்று வந்தோரும் இருந்தனர். அவர்கள் தங்களது கொள்கைகளில் பூரண நம்பிக்கையுடையராய் இருந்தனர். அதனால் பார்லிமென்டில் நடந்த விவாதங்களில் அவர்கள் அக்கறை காட்டினர்.

உள்நாட்டுப் போர் தொடங்கியவுடன், பெரும்பான்மைக் கட்சியைச் சேர்ந்தோரால், நகரங்களில் வாழ்ந்துவந்த சிறுபான்மைக் கட்சியைச் சேர்ந்தோரைத் தங்களுக்கு அடங்கி நடக்கும்படி செய்ய முடிந்தது. ஆனால், நாட்டுப்புறங்களில் பெரும்பான்மைக் கட்சியினைச் சார்ந்தோர் சிறுபான்மைக் கட்சியினரை எளிதில் அடக்க முடியவில்லை. உருண்டைத் தலையர்கள் (Roundheads) என்று அழைக்கப்பட்டோரால், லண்டன் நகரத்தில் வாழ்ந்துவந்த அரசனின் கட்சியைச் சேர்ந்த கவாலியர் (Cavalier) என்பாரை உடனடியாக அடக்க முடிந்தது; துறைமுகங் களிலும், மற்றப் பொருள்களைத் தயாரித்துவந்த நகரங்களிலும் வாழ்ந்து வந்த கவாலியர்களையும் உருண்டைத் தலையர்களால் அடக்கமுடிந்தது. ஆனால், இங்கிலாந்தின் பல ஷயர்களில் வாழந்துவந்த உருண்டைத் தலையர்களுக்கும் கவாலியர்களுக்கும் இடையே பல ஆண்டுக் காலத் திற்கு விட்டுவிட்டுத் தீவிரமான போர்கள் நிகழ்ந்தன. சிற்சில சமயங் களில் இரு தரப்பினரையும் சார்ந்த முக்கியப் படைகள் மாவட்டங்களில் நிகழ்ந்த சிறிய போர்களிலும் பங்கு கொண்டன.

உள்நாட்டுப் போர் தொடங்கி முதல் ஒன்று அல்லது இரண்டு ஆண்டுக் காலத்திற்கு மாவட்டங்களில் நிகழ்ந்த சிறிய போர்கள் மனக் கசப்பை ஏற்படுத்தக்கூடியனவாக இருக்கவில்லை. காரணம் என்ன வென்றால், இரு கட்சியைச் சேர்ந்தவர்களும் நண்பர்களாகவும் அண்டை வீட்டவராகவும் போர் தொடங்கும்வரை வாழ்ந்துவந்ததேயாகும். ஆனால், சில மாவட்டங்களில் நிகழ்ந்த போரில் ஒரு கட்சியினர் மற்றக் கட்சியினருக்குக் கொடுமை இழைத்தனர். எங்கெங்கே ஒன்றி லிருந்து மற்றொன்று மாறுபட்ட சமுதாய அமைப்புகள் ஒன்றை ஒன்று அடுத்து இருந்தனவோ, அங்கெல்லாம் நடந்த சிறிய போர்களில் மிக்க கொடுமை இழைக்கப்பட்டது. உதாரணமாக, லங்காஷயரில் வாழ்ந்து வந்த ஸ்குவீர்களில் அனேகர் ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்தவராகவும், மறைந்துபோன பண்ணைமுறை ஆட்சியை நினைவு

படுத்துவோராகவும் ,இருந்தனர். இந்த ஸ்குவீர்கள் வாழ்ந்துவந்த இடத்திற்கு அருகில் இருந்த நகரங்களில் கம்பளி, பருத்தி, லினன் தொழிற்சாலைகள் இருந்தன. அந் நகரங்களில் வாழ்ந்த மக்கள் அனேக மாகப் பியூரிடன்களாக இருந்தனர். இப் பியூரிடன்களும், ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்த ஸ்குவீர்களும் ஒருவரை ஒருவர் நன்கு புரிந்துகொள்ளாமல் தங்களுக்குள்ளே பகைமை உணர்ச்சியை வளர்த்துவந்தனர்.

பல கவுன்டிகளில் அரசனை ஆதரித்தோரில் பலர் ஆங்கிலிகன் மதத்தைச் சேர்ந்தவராக இருந்தனர்; அதாவது, பிராடஸ்டென்ட் மதத்தவராக இருந்தனர். அவர்கள் லாடு (Laud) என்பாரின் மதக் கொள்கைகளை வெறுத்தவர்களாக இருந்தனர். அப்படிப்பட்டவர்களில் சர் எட்மண்டு வெர்னி (Sir Edmund Verney) என்பார் ஒருவராவார். அவர் அரசனின் சின்னம் கொண்ட கொடியைத் தாங்கிச் செல்வோராகப் பணியாற்றிவந்தார். அரசனுக்காகப் போரில் பங்கு கொண்டு எட்ஜ்ஹில் (Edgehill) என்ற இடத்தில் நடந்த போரில் உயிரிழந்தார். அப்படி அவர் அரசனுக்காகத் தன் உயிரைத் தியாகம் செய்தாலும், 'பிஷப்புகளின் அந்தஸ்தை நிலைநாட்டவே நான் இப்போரில் பங்கு கொண்டாலும் எனக்கு பிஷப்புகளிடம் பயபக்தி இல்லை' என்று கூறிச் சென்றார்.

சமுதாயத்திலும் பொருளாதார நிலையிலும் கடந்த நூற்றுண்டுக் காலமாக ஏற்பட்டுவந்த மாறுதல்களால் பாதிக்கப்படாத வட்டாரங் களில் வாழ்ந்த மக்கள் அரசாட்சியை ஆதரித்தனர். தலைநகருக்குத் தொலைவில் இருந்த வியாபாரஸ்தலங்களிலும் நாட்டுப்புறப் பிரதேசங் களிலும் மக்கள் அரசனையும் அரசனின் மதஸ்தாபனத்தையும் ஆதரித் தனர். சிறிது காலத்திற்குமுன் எங்கெல்லாம் பொருளாதார நிலையில் மாறுதல்கள் தோன்றியிருந்தனவோ அங்கெல்லாம் மக்கள் அனேகமா கப் பார்லிமென்டின் கட்சியை ஆதரிப்பவராகவும், பியூரிடன் மதத் தின்மேல் அபிமானமுடையவராகவும் இருந்தனர். லண்டன் போன்ற நகரங்களில் எலிசபெத் அரசியின் காலத்தில் தோன்றிய வியாபார ஸ்தாபனங்கள் பொருளாதார நிலையில் பெருத்த மாறுதலை ஏற்படுத்தி யிருந்தன. அப்படிப்பட்ட இடங்களில் இருந்த மக்கள் பார்லிமென்டின் கட்சியையும் பியூரிடன் மதத்தையும் ஆதரித்தனர். அரசனின் கப்பல் கட்டும் துறையில் இருந்தோர்கூடப் பார்லிமென்டின் கட்சியையும் பியூரிடன் மதத்தையும் ஆதரிப்பவராக இருந்தனர். டான்டன் (Taunton) நகரம், பர்மிங்ஹாம் (Birmingham) மாவட்டம் ஆகிய வற்றைப் போன்ற பொருள்களை உற்பத்தி செய்துவந்த பிரதேசங் களிலும், பினைன்ஸ் (Penines) மலையின் இரு சரிவிலும் ஆடை உற்பத்தி செய்யப்பட்டுவந்த இரு பள்ளத்தாக்குகளிலும் வாழ்ந்த

மக்கள் பார்லிமென்டின் கட்சியை ஆதரிப்பவராகவும், பியூரிடன் மதத்தில் பற்றுள்ளவராகவும் இருந்தனர். லண்டன், அல்லது மற்றைய வியாபாரம் அல்லது தொழில்கள் நடந்துவந்த பிரதேசங்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த ஸ்குவீர்கள்கூட அரசியலிலும் சமயத்திலும் உருண்டைத் தலையர்கள் என்று அழைக்கப்பட்டோரின் கட்சியின் கொள்கையை உடையவராக இருந்தனர். லண்டனை உள்ளிட்ட கென்ட் (Kent) பகுதியிலும், சர்ரே (Surrey), எஸ்ஸெக்ஸ் (Essex) பகுதியிலும் அரசன் கட்சியைச் சேர்ந்தோர் உடனே ஒடுக்கப் பட்டனர். அப்போதிருந்து அப் பிரதேசங்களில் அரசனின் கட்சியைச் சேர்ந்தோர் தலைதூக்க முடியாமற்போயிற்று. கிழக்கு ஆங்கிலியா (East Anglia) பிரதேசத்தில் இருந்த கவுன்டிகளிலும் அந் நிலை ஏற்பட்டது. கிழக்கு ஆங்கிலியாவில் இருந்த கவுன்டிகள் 'கீழைக் கழகம்' (Eastern Association) என்று அழைக்கப்பட்ட கழகம் ஒன்றின் மூலமாக இணைந்திருந்தன. அக் கழகம் ஆலிவர் கிராம் வெல்லின் (Oliver Cromwell) ஆதிக்கத்தின் கீழ் இருந்துவந்தது. இப் பிரதேசத்திலிருந்துதான் முன்பு வட அமெரிக்காவில் தோன்றிய 'நியூ இங்கிலாந்து' (New England) என்ற பிரதேசத்திற்குப் பியூரிடன் மதத்தைச் சேர்ந்தோர் சென்றனர். இப் பிரதேசத்தி லிருந்துதான் முதன் முதலில் 'அயர்ன்சைட்ஸ்' (Ironsides) என்று அழைக்கப்பட்டோர் தோன்றினர். பைபிளைத் தாமாகவே படித்து வந்த இயோமென் வகுப்பினரிலிருந்தே அயர்ன்சைட்ஸ் எனப் பட்டோர் தோன்றினர்.

கிராம்வெல் ஒரு நல்ல குடும்பத்தில் தோன்றியவராவார். காமன்ஸ் சபையில் முக்கிய அங்கத்தினர் பலருக்கு உறவினராகவும் இருந்தார். ஹன்டிங்டன் (Huntingdon) அருகே ஒரு சிறு நிலக்கிழாராக அவர் வாழ்ந்துவந்தார். தனக்குச் சொந்தமான அந்நிலத்தை கி.பி. 1631ஆம் ஆண்டுவரை தாமே பயிர்செய்துவந்தார். கி.பி. 1631-ல் தனக்குச் சொந்தமான நிலங்களை விற்றுவிட்டு ஸெயின்ட் இவஸ் (St. Ives) அருகே ஆற்றின் கரையோரம் இருந்த செழிப்பான மேய்ச்சல் நிலங் களைக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டார். அவர் தன் தந்தைக்குப் பிறகு தான் பெற்ற நிலங்களை விற்றுவிட்டதிலிருந்து, அந்தஸ்திற்காக நிலம் வைத்திருக்கவேண்டும் எண்ணமுடையவரல்லர் என்பது விளங்கு கின்றது. நிலத்தை வரும்படிக்காகவே வைத்திருக்க வேண்டும் என்ற எண்ணமுடையவராய் இருந்தார். அவர் கடுமையாக உழைத்து நிலத் தைப் பயிர்செய்யும் உழவனாகவும், அதே சமயத்தில் வியாபாரியாகவும் அவர் இருந்துவந்தார். சாதாரண மக்களுடன் சரிசமமாகப் பழகினார். வட்டாரத்தில் நிலம்படைத்த நிலக்கிழாராக வாழ்ந்த அவர் தன் வேலை யுண்டு தானுண்டு என்று இருந்துவிடவில்லை. அதற்கு மாறாக, வட்டாரங்களில் நிகழ்ந்த பூசல்களில் சாதாரண மக்களுக்கு ஆதரவாக

இருந்துவந்தார். கிராம்வெல்லைப் போன்று விவசாயமும் வாணிபமும் நடத்திவந்தோர் அனேகமாகப் பியூரிடன்களாகவும், பார்லிமென்டின் கட்சியைச் சேர்ந்த உருண்டைத் தலையர்களாகவும் இருந்தனர் எனக் கூறலாம். இதற்கு மாருக, மேற்குப் பிரதேசங்களில் வாழ்ந்துவந்த ஸ்குவீர்கள் பழமையை விரும்புபவர்களாகவும், பண்ணைமுறை ஆட்சிக் காலக் கொள்கைகளில் தொடர்ந்து நம்பிக்கையுடையவராகவும் இருந்து வந்தனர். அதனுல் அவர்களில் அனேகர் அரசனின் கட்சியான கவாலியர் கட்சியில் சேர்ந்தவராக இருந்தனர். பெட்ஃபோர்டு (Bedford), மான்செஸ்டர் (Manchester) ஆகிய நகரங்களில் எர்ல் (Earl) பதவி வகித்துவந்த இருபெரும் பிரபுக்களும் பரந்த நிலப்பரப்பிற்கு அதிபதிகளாக இருந்தனர். பியூரிடன் மதத்தினராக இருந்த அவ்விருவரும் தங்கள் சொத்தைக்கொண்டு முதலைப் (capital) பெருக்கும் நோக்கத்துடன் வாணிபத்திலும் ஈடுபட்டிருந்தனர். உயர் குடும்பத்தைச் சேர்ந்த பியூரிடன்களும், சாதாரண குடும்பத்தைச் சேர்ந்த பியூரிடன்களும் வியாபாரம் செய்வதை வாழ்க்கையின் நோக்கமாகக் கொண்டனர். அவர்கள் புதிய முயற்சிகளில் ஈடுபட்டும், கடுமையாக உழைத்தும் வந்தனர். இதற்கு மாருக, கவாலியர்கள் இயற்கையின் அழகை இரசித்துக்கொண்டே, உழைத்துப் பொருள் சேர்க்கும் கட்டாயமற்றவராய் வாழ்ந்துவந்தனர்.

உள்நாட்டுப் போரானது சமுதாயத்திலே இருந்துவந்த வகுப்புகளுக்கிடையே நிகழ்ந்த போர் எனக் கூறுவதற்கில்லை. அரசியலிலும் சமயத்திலும் மாறுபட்ட கருத்துகளைக் கொண்ட இரு கட்சிகளுக்கிடையே நிகழ்ந்த போராகும். எனினும், உருண்டைத் தலையர்களின் ஆட்சிக் காலத்தே (Roundhead Commonwealth ; கி.பி. 1649—1660), ஒரு வகுப்பானது எதிர்ப்புத் தெரிவித்தது. ஜென்ட்ரி வகுப்பினர் உருண்டைத் தலையரின் கொள்கைகளையும் தலைவர்களையும் வெறுத்தனர். இதற்கிடையில், எந்தப் பதவியில் இருப்பவராயினும், எத்துணை செல்வந்தராயினும் அனைவரும் ஒருவருக்கொருவர் சமம் என்ற கொள்கை அரசியலில் தலைதூக்க ஆரம்பித்தது. எனினும், சமுதாயத்திலே இருந்துவந்த வகுப்பு வேறுபாடுகளை அழிக்க எதுவும் செய்யப்படவில்லை. புதுமுறைப் படையிலே (New Model Army) கொள்கைகளை உருவாக்கிவந்தோர், வயதுவந்த அனைவருக்கும் ஓட்டுரிமை வழங்கவேண்டும் என்றுமட்டுமே அறைகூவினர். நாட்டின் சொத்தை அனைவருக்கும் சமமாகப் பங்கிட்டுக் கொடுக்கவேண்டும் என்று அவர்கள் கூறவில்லை. புதுமுறைப் படையிலே சிறுபான்மையோராக இருந்த டிக்கர்ஸ் (Diggers) எனப்பட்டோர், வின்ஸ்டான்லி (Winstanley) என்பாரின் தலைமையின்கீழ், ' இங்கிலாந்திலிருந்த நிலங்கள் அனைத்தும் ஆங்கிலேயர் அனைவருக்கும் சொந்தமாக இருந்தது. அப்படி இருந்ததை மாற்றி ஸ்குவீர் வகுப்பினர் நிலங்களைத்

தங்களனவாக்கிக்கொண்டனர் ' என அறைகூவினர். ஆனால், இச் சிறு பான்மையோர் விரைவில் படையின் தலைவர்களால் ஒடுக்கப்பட்டனர். சமுதாய அமைப்பிலே மாற்றத்தை ஏற்படுத்தாவிடில் அரசியலில் ஏற் பட்ட மாற்றம் நிலைக்காது என்று டிக்கர்ஸ் என்பார் கூறியது, பிற்காலத் தில் அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது உண்மையானதாகப் பட்டது.

அரசியலில் சமத்துவம் தேவை என்ற கொள்கை, புதுமுறைப் படையினரிடையே இருந்த தீவிரவாதிகளிடமே காணப்பட்டது. பொதுமக்களிடையே அரசியலில் சமத்துவம் வேண்டும் என்ற எண்ணம் இருக்கவில்லை. பெருவாரியான மக்களுக்கு ஓட்டுரிமை வழங்கப்பெற்று ஒரு பொதுத்தேர்தல் நடத்தப்பட்டிருந்தால், கவாலியர் ஆட்சி உடனேயே நிறுவப்பட்டிருந்திருக்கும்.

பெரிய பண்ணைகள் சிறுசிறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு மக் களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்படாவிட்டாலும், கவாலியர்களுக்குச் சொந்தமாயிருந்த நிலங்கள் ஓரளவு உருண்டைத் தலையர்களின் கைக்கு மாறிற்று. அப்படிக் கைமாறிய நிலங்கள் முக்கியமாக மத ஸ்தாபனத்திற்கும் அரசனுக்கும் சொந்தமாகவிருந்த நிலங்களே என்று கூறலாம். புரட்சி அரசாங்கம் (Revolutionary Government) நடைபெறுவதற்காகவே அப்படிச் செய்யவேண்டியிருந்தது. மத ஸ்தாபனத்திற்கும் அரசனுக்கும் சொந்தமாகவிருந்த நிலங்களை விற்றது, ஒரு நூற்றாண்டு காலத்திற்குமுன் டியூடர் வம்சத்தினரின் தேவைக்காக மடங்களின் நிலங்களை விற்றதை ஒத்திருந்தது. மத ஸ்தாபனத்திற்கும் அரசனுக்கும் சொந்தமாகவிருந்த நிலங்களை வாங்கி யவர்களில் அனேகர் ஜனநாயகக் கட்சியின் தீவிரவாதிகளாவர். ஆனால், இப்படிக் கைமாறிய நிலங்கள், அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட போது மதஸ்தாபனத்திற்கும் அரசனுக்கும் திரும்பிச் சென்றன. இதன் காரணமாகப் புதியதொரு நிலக்கிழார்களைக் கொண்ட உயர்ந்த வகுப்பு தோன்ற வழியற்றுப்போயிற்று. நிலங்களை வாங்கிய போர்வீரர்களும் வணிகர்களும் அந்நிலங்கள் இருந்த இடத்தில் குடியேறி பழைய நிலக் கிழார்களான ஜென்டரி வகுப்பினரைப்போல வாழத் தாங்கள் நிலத்தை வைத்திருந்த பத்து ஆண்டுக் காலத்தில் முயலவில்லை. அவர்கள் நிலங்களை அப்போது விற்கப்பட்ட விலைக்கு வாங்கி, பிற்காலத்தில் அதிக விலைக்கு விற்கலாம் என்ற எண்ணத்துடனே வாங்கினர்களே அன்றி, அந் நிலங்களில் தங்கள் குடும்ப வாழ்க்கையை நடத்தலாம் என்று எண்ணவில்லை.

பொதுவாகக் கூறுவோமேயானால் பெருமளவில் நிலங்கள் ஒருவர் கையிலிருந்து மற்றவர்க்கு மாறவில்லை. கவுன்டிகளில் அதிகாரம்

செலுத்திவந்த கவாலியர் கட்சியைச் சேர்ந்த ஸ்குவீர் வகுப்பினர் தங்கள் அதிகாரத்தை இழந்தனர். அதுமட்டுமல்லாமல் அக் கட்சியைச் சேர்ந்தவராக இருந்ததற்காகப் பெருந்தொகையை அபராத மாகக் செலுத்தவேண்டியிருந்தது. அபராதத் தொகையைக் காட்டில் இருந்த மரங்களை வெட்டி விற்குவது, அல்லது கடன் வாங்கியாவது, அல்லது செலவைச் சிக்கனப்படுத்தியாவது, அல்லது நண்பர்களின் உதவி கொண்டாவது கட்டினர்.[1]

ஸ்குவீர் வகுப்பைச் சேர்ந்தவர்கள் தங்கள் நிலங்களை விற்பதற்குப் பதிலாக எத்தகைய இடையூறுகளையும் ஏற்றுக்கொள்ளத் தயாராகவிருந் தனர். சிறிது காலத்திற்கு முன்பே நடத்தப்பட்ட ஆராய்ச்சியின் பயனாக, பதினேழாம் நூற்றாண்டிலே, மத்தியப் பிரதேசத்தில் (Mid-lands) இருந்த கவுன்டிகளில், காமன்வெல்த் (Commonwealth) ஆட்சியின்போது, குறைந்த அளவு நிலமே, தனிப்பட்டோர் கைகளி லிருந்து அபராதம் அல்லது தண்டனையின் காரணமாகக் கைமாறியது என்று தெரியவருகின்றது. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது சிறிய பண்ணைகளைப் பலர் விற்றுவிட்டனர். அதற்குக் காரணமாக இருந்தது, அக் காலப் பொருளாதார நிலையே அன்றி, அரசியல் காரண மன்று. ஆனால், பார்லிமென்ட் விதித்த அபராதங்களின் காரணமாகச் சிறிய பண்ணைகளை வைத்திருந்தோர் பிற்காலத்தில் அப் பண்ணைகளை விற்க நேர்ந்தது எனக் கூறுவதற்கு இடமுண்டு.

இரண்டாம் சார்லசின் காலத்தில் விக் (Whig) என்று அழைக்கப் பட்ட கட்சியினர், காமன்வெல்த்தின் ஆட்சிக் காலத்தில் புதியவராக உருவான நிலக்கிழார்களாவார் என்று கூறுவதற்கில்லை. பழமை தோய்ந்த ஸ்குவீர் வகுப்பினர் பலவிதத் துன்பங்களுக்கு ஆளாக்கப் பட்டது உண்மையே. ஆனால், பழைய ஸ்குவீர் வகுப்பானது அழிக்கப் பட்டது என்பது உண்மையானதன்று. ஜான் எவ்லின் (John Evelyn) என்பார், கி.பி. 1654ஆம் ஆண்டில் மத்திய பிரதேசங்களில் இருந்த

[1] முதலாம் சார்லசின் உண்மையான ஆதாரவாளர்களில் ஒருவரும், சௌதாம்ப்டனை ஆட்சிசெய்துவந்த எர்லுமான பிரபுவானவர், உள்நாட்டுப் போரில் அரசனின் பக்கம் இருந்து போரில் பங்கு கொண்டதற்காக 6,466 பவுன்கள் அபராதம் விதிக்கப்பட்டார். அந்த அபராதத் தொகை அவரது சொத்தின் மதிப்பில் பத்தில் ஒரு பாகமாகக் கருதப்பட்டது. அவர் அந்த அபராதத்தைச் செலுத்திவிட்டு நாட்டுப்புறத்தில் இருந்த தன் பண்ணை வீட்டிற்குச் சென்று சில காலம் இருந்து விட்டுத் திரும்பினர். அவர் அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது நாட்டுப் புறத்திலிருந்து திரும்பினர். அப்படி அவர் திரும்பியபோது ஒரு பெருஞ் செல்வந்த ராகத் திரும்பிவந்தார். இதிலிருந்து, எந்த ஒரு வகுப்பினரும் அழிக்கப்படவில்லை என்பதும், அபராதம் விதிப்பதன் மூலம் ஒருவருடைய சொத்து மற்றொருவருக்கு மாற்றப்படவில்லை என்பதும் புலனாகும். மிஸ். ஸ்காட் தாம்சன் எழுதிய, ‘ புளூம்ஸ் பரியைச் சார்ந்த ரஸ்ஸல் குடும்பம்,’ (Miss. Scot Thomson, ‘The Russels in Bloomsbury’), அத்தியாயம் 2.

தன் நண்பர்களின் வீடுகளுக்கு உல்லாசப் பயணம் செய்தார். நாட்டிங் ஹாம் ஷயரிலிருந்து (Nottinham shire) தொடங்கி கேம்பிரிட்ஜ், ஆட்லி எண்டு (Audley End) வரை அவர் பயணம் செய்தார். அப்படி அவர் பயணம் செய்தபோது பல பிரபுக்களின் இருப்பிடங்களைக் கண்ணுற்ருர். பிரபுக்களின் பண்ணைகள் சீர்குலைந்திருந்ததாகவோ, அல்லது அப் பண்ணைகளில் பிரபுக்கள் தங்கியிருக்கவில்லை என்ருே அவர் குறிப்பிடவில்லை. பண்ணைகள் ஒருவர் கையிலிருந்து மற்ருெருவர் கைக்கு மாறியிருந்ததாகவும் அவர் குறிப்பிடவில்லை.

அரசாட்சி அழிக்கப்பட்ட காலத்தில் ஸ்குவீர் வகுப்பினரைவிட முதல் வகுப்பினரான பிரபுக்கள் தங்கள் செல்வாக்கை இழந்து மதிப்பற்றவராக இருந்துவந்தனர். துறவிகளும் போர்வீரர்களும் ஆட்சி செலுத்திய காலத்தில் (Rule of the Saints and Soldiers) பிரபுக்கள் தங்கள் செல்வாக்கை முற்றிலும் இழந்தவராய் இருந்தனர். டோரதி ஆஃபோர்ன் தன் உறவினர் ஒருவர் எர்ல் பதவி வகித்துவந்த பிரபு ஒருவரின் மகளை மணந்துகொண்டதைப்பற்றிப் பின்வருமாறு குறித்துள்ளார்: ‘அக் காலத்திலே ஏர்ல் பதவியில் இருந்தவரின் மகளை மணந்துகொள்வதால் எவ்வித உயர்வும் இருக்கவில்லை. எனது உறவினர் எர்ல் பதவியில் இருந்தோரின் மகளை மணந்துகொண்டது அவரது அறியாமையைக் காட்டுகின்றது.’ ஆனுல், அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் ஏர்ல் பதவி வகித்தோர் முன்போலவே பெருமையுடன் நடத்தப்பட்டனர். அதனுல் அனேகர் அவர்தம் மகளை மணந்து கொள்ள விருப்பமுள்ளவராய் இருந்தனர்.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டாலும், பார்லிமென்டின் ஆட்சிக் காலத்தே செய்யப்பட்டவை பல நிலைத்து நின்றன. லண்டன் மாநகரம் தன்னுடைய செல்வாக்கில் உயர்ந்திருந்தது, நிலைத்தது. அதேபோல் வியாபாரிகள் அரசியலில் தங்களுக்கென ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டதும் நிலைத்துநின்றது. இத்துடன் ஆங்கிலேயப் பொதுச் சட்டம் (English Common Law) தலைதூக்கி நின்றதும் நிலைத்தது.

டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தே அரசனின் அதிகாரத்தைப் பலப்படுத்துவதற்காகவும், அக் காலத் தேவையைப் பூர்த்திசெய்வதற்காகவும் நாட்டில் பல பாகங்களில் நீதிமன்றங்கள் உண்டாக்கப்பட்டன. அந் நீதிமன்றங்கள் ஆங்கிலேயப் பொதுச் சட்டத்திற்கு மாறுபட்ட பல சட்டங்களையும் முறைகளையும் கையாண்டுவந்தன. முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் ஆகியோரை எதிர்த்த பார்லிமென்டுகள் ஆங்கிலேயப் பொதுச் சட்டமே நாடு முழுவதிலும் அமல் நடத்தப்படவேண்டும் என்று கூறிவந்தன. அதற்குக் காரணமாக இருந்தவர் எட்வர்ட் கோக் (Edward Coke) என்பவர் ஆவார்.

கி.பி. 1641-ல் பார்லிமென்ட், ஆங்கிலேயப் பொதுச் சட்டம் எங்கும் அமல் நடத்தப்பட வழிசெய்தது. ஸ்டார் சேம்பர் (Star Chamber) நீதிமன்றம், மத ஸ்தாபனத்தைச் சார்ந்த ஹைகமிஷன் நீதிமன்றம் (Court of High Commission), வேல்ஸ் நாட்டில் நீதி வழங்கிவந்த கவுன்சில் ஆஃப் வேல்ஸ் (Council of Wales), வடக்குப் பாகத்தில் நீதி வழங்கிவந்த கவுன்சில் ஆஃப் தி நார்த் (Council of the North) ஆகிய நீதிமன்றங்கள் அவ்வாண்டில் அழிக்கப்பட்டன. கடல் வாணிபத்தைச் சார்ந்த வழக்குகளைத் தீர்த்துவைக்கும் நீதிமன்றம் (Admiralty Court) ஏற்கெனவே ஆங்கிலேயப் பொதுச் சட்டத்தை அமல் நடத்தச் செய்யப்பட்டிருந்தது. அதன் விளைவாக இங்கிலாந்தின் வாணிபச் சட்டம் நன்முறையில் உருவாகியது.

ஆங்கிலேயப் பொதுச் சட்டம் நாடு முழுவதும் அமல் நடத்தச் செய்யப்பட்டதால், இங்கிலாந்தின் நீதி வழங்கும் துறை ஒன்றுக்கொன்று மாறுபட்ட நீதிமன்றங்களை உடையதாக விளங்காமல் ஒரேவகையான நீதிமன்றங்களை உடையதாக விளங்கியது. எனினும், சான்சலர் (Chancellor) என்ற அதிகாரியைக் கொண்ட நீதிமன்றம் தனித்து நின்றது. ஆனால், அந்நீதிமன்றமும் அரசனின் அதிகாரத்தை வலுப்படுத்துவதற்காக உபயோகிக்கப்படவில்லை. அந் நீதிமன்றமும் நீதிபதிகள் தேவையான சட்டங்களை இயற்றும் நீதிமன்றங்களில் ஒன்றாகவே திகழ்ந்தது. அப்படி இயற்றப்பட்ட சட்டங்கள் ஆங்கிலேயப் பொதுச் சட்டத்தின் அடிப்படைக் கொள்கையைத் தழுவியனவாகவே இருந்தன.

இங்கிலாந்தின் பொதுச் சட்டம் நாடு முழுவதிலும் அமல் நடத்தப் பட்டவுடன், குற்றவாளிகளைக் கொடுமைப்படுத்துதல், மற்ற ஐரோப்பிய நாடுகளில் அகற்றப்படுமுன் இங்கிலாந்தில் அகற்றப்பட்டது. அரசியல் கைதிகள் விசாரணைக்குக் கொண்டுவரு முன்னர் கொடுமைகளுக்குள்ளாக்காமல் நல்லபடி நடத்தப்படுவதற்கு வழி பிறந்தது. அரசனின் அதிகாரத்தைக் காத்துவந்த நீதிமன்றங்கள் அழிக்கப்படவும், பொதுச் சட்டம் நாடு முழுவதிலும் ஏற்கப்படவும் சட்டத்திற்கு மக்களும் அரசனும் உட்பட்டவர் என்ற கொள்கை நிலைத்தது. சட்டமானது அரசனால் மாற்றி அமைக்கக்கூடியது அன்று என்ற கருத்தும், சட்டத்தை மாற்றி அமைக்க பார்லிமென்ட் ஒன்றே அதிகாரம் வாய்ந்தது என்ற கருத்தும் வேரூன்றியது. ஆனால், அரசாங்க அதிகாரிகள் சட்டத்திற்கு உட்பட்டு நடக்கவேண்டும் என்ற கருத்தை, காமன்வெல்த் (Commonwealth) ஆட்சிக் காலத்திலும், கிராம்வெல்லின் பாதுகாப்பாளரின் ஆட்சிக் காலத்திலும் (Protectorate) அதிகாரிகள் ஏற்றுக்கொள்ளாமல் நடந்துகொண்டனர். சட்டத்திற்கு அரசாங்க அதிகாரிகளும், மக்களும், அனைவரும் அடங்கியவர்கள்

என்ற கருத்து அரசாட்சி நிறுவப்பட்டபோது ஒத்துக்கொள்ளப்பட்டது. இரண்டாம் ஜேம்ஸ் மன்னனை எதிர்த்துக் கி.பி. 1688-ல் நடந்த புரட்சி, சட்டத்திற்கு அரசனும் உட்பட்டவன் என்ற கருத்தை நிலைநிறுத்தவே ஏற்பட்டது. மற்ற 'ஐரோப்பிய நாடுகளில் அதிகாரிகளும் அரசனும் சட்டத்திற்கு உட்பட்டவர்கள் என்ற இடைக்காலம் முதல் இருந்துவந்த கருத்து நிராகரிக்கப்பட்டது. ஆனால், இங்கிலாந்தில் அரசனும் அதிகாரிகளும் சட்டத்திற்கு உட்பட்டவர்கள் என்ற கருத்து நிலை பெற்றதன் காரணமாக ஆங்கிலேயரின் தனியுரிமைகள் காப்பாற்றப் பட்டன. ஆங்கிலேயரின் சமுதாய அடிப்படையே மாறியது எனக் கூறலாம்.

காமென்வெல்த் ஆட்சிக் காலத்திலும் பாதுகாப்பாளர் ஆட்சிக் காலத்திலும் அரசியல் சட்டமானது மதிப்பற்றுச் சீர்குலைந்திருந்தது. உள்நாட்டுப் போரின் இறுதியில் ஏற்பட்ட புரட்சியே அதற்கு காரண மாகும். எனினும், ஆங்கிலேயப் பொதுச் சட்டம் வலுப்பெற்றிருந்தது. அத்துடன் வழக்கறிஞர்களும் மிக்க செல்வாக்குடையராய் இருந்தனர். அக் காலத்தே சட்டமானது திருத்தி அமைக்கப்படவேண்டும் என்று மக்கள் கோரினர். ஆனால், வழக்கறிஞர்களின் செல்வாக்கும் பொதுச் சட்டத்தின் பலமும் அவ்வேலை நடைபெறவொட்டாமல் தடுத்து நிறுத்தின. கிராம்வெல் சட்டத்தைத் திருத்தி அமைக்க எடுத்துக் கொண்ட முயற்சியும் வீணாயிற்று. அவரது முயற்சி வீணானதற்கு அவருடன் அனேக வழக்கறிஞர்கள் இருந்தது ஒரு காரணமாக இருந்தது. கிராம்வெல்லும் சர்வாதிகாரியைப்போல் முற்றிலும் நடந்துகொள்ளவில்லை. ஒரு பக்கம் போர்வீரர்களும் மற்றொரு பக்கம் வழக்கறிஞர்களும் அவருக்கு ஆதரவு அளித்தனர். ஆனால், அதே சமயம் அவர்கள் அவர் தன்னிச்சைப்படி நடக்கவொட்டாமல் பார்த்துக் கொண்டனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது (restoration) கிராம்வெல்லுடன் இருந்த படையானது கலைக்கப்பட்டது. படை கலைக்கப்பட்டதால் வழக்கறிஞர்களின் செல்வாக்கு முன்னைவிட அதிகரித்தது.

கி.பி. 1640-க்கும் 1660-க்கும் இடையே இருந்த காலத்தில், ஒருசில பண்ணை வீடுகளே கட்டப்பட்டிருக்கக்கூடும் என்று கூறலாம். உள் நாட்டுப் போர் தொடங்குவதற்குமுன் மக்கள் அமைதியான வாழ்க்கை வாழ்ந்துவந்தனர். அத்துடன் அக் காலத்தில் ஜென்ட்ரி வகுப்பினர் செல்வநிலையில் இருந்தனர். எலிசபெத் அரசியின் காலத்தில் தொடங்கிய அழகிய இல்லங்கள் கட்டும் வேலையை அவர்கள் தொடர்ந்து செய்துவந்தனர். இதன் காரணமாக நாட்டின் பல பாகங்களில் விசாலமாவுதும் அழகியவுமான பல வீடுகள் கட்டப்பெற்றிருந்தன.

ஆனால், புதியனவாகக் கட்டப்பெற்றிருந்த வீடுகளில் சில மாற்றங்கள் காணப்பட்டன. சாக்சானியர் (Saxons) காலம்தொட்டு, எலிசபெத் அரசியின் காலம்வரை ஒவ்வொரு வீட்டிலும் விசாலமான கூடம் அவசியமானதென்று கருதப்பட்டுவந்தது. உள்நாட்டுப் போர் நிகழ்வதற்குமுன் கட்டப்பெற்ற வீடுகளில் விசாலமான கூடம் இடம் பெறவில்லை. உண்ணும் அறையும், வரவேற்கும் அறையும் ஒரு மாடி அடுக்கு உயரமுள்ளவையாகக் கட்டப்பெற்றன. கூடத்திற்குப்பதிலாக மற்றத் தேவைகளுக்கு ஏற்றவாறு பல அறைகள் கட்டப்பெற்றன. பழங்காலத்தில் பண்ணைவீட்டின் நடுவிலே இருந்த திறந்தவெளி முற்றம் அளவில் குறைந்தது; அல்லது இல்லாமலே போயிற்று. அப்படி முற்றம் இருக்குமேயானால், அது வீட்டின் நடுவில் இல்லாமல் வீட்டின் பின்புறம் அமைக்கப்பெற்றது.

கிரேக்க, ரோமானியர் காலத்தே இருந்ததுபோல் வீடுகளின் வெளிப்புறம், சுவரிலே புதைந்திருந்த தூண்களையும், கூரையின் அருகே வேலைப்பாட்டையும் கொண்டிருந்தன. வீட்டின் உட்புறத்தே மெத்தைப் படிக்கட்டுகள் விசாலமானவையாக அமைக்கப்பெற்றன. உட்புறத்தே காணப்பட்ட மெலிந்த குட்டையான தூண்கள் (baluster) மிக்க வேலைப்பாடுடையவையாய் இருந்தன. உட்புறச் சுவர்கள் முதலாம் ஜேம்ஸ், முதலாம் சார்லஸ் ஆகியோரின் காலத்தே வழக்கத்திற்கு வந்த சித்திர வேலைப்பாடுகளைக் கொண்டிருந்தன. அத்தகைய சித்திர வேலைப்பாடு, திரைச்சீலைகளைத் தொங்கவிட்டு அறைகளை அழகு செய்யும் பழக்கத்தைக் குறைத்துவந்தது. இருப்பினும், அழகிய திரைச்சீலைகள் தொடர்ந்து தயாரிக்கப்பட்டுவந்தன. அவைகளுக்கு மிக்க மதிப்பும் தொடர்ந்து இருந்துவந்தது. சட்டமிடப்பட்ட படங்களை அறைகளில் தொங்கவிடுவது ஒரு சாதாரணப் பழக்கமாய் இருந்தது. சலவைக் கற்களில் சிலைகளைச் செய்து அவைகளையும் அறையின் அலங்காரப் பொருள்களாக வைத்தனர். கலை ஆர்வம் படைத்த முதலாம் சார்லசும், அருண்டேல் என்ற இடத்தில் ஏர்ல் பதவி வகித்துவந்தவரும் (Earl of Arundel) அறைகளைப் படங்களைக்கொண்டும் சிலைகளைக்கொண்டும் அழகு செய்வதற்கு வழிகாட்டிகளாக இருந்தனர். ரூபன்ஸ் (Rubens), வான் டைக் (Van Dyck) முதலிய டச்சு சித்திரக்காரர்கள் ஆங்கிலேயரின் வீடுகளில் தேவைப்பட்ட படங்களை வரைந்து கொடுத்தனர்.

வீட்டின் கூரைகளின் உட்புறம் சுதையைக்கொண்டு மிகவும் அழகு செய்யப்பட்டிருந்தது. வீட்டின் உட்புறத் தரையில் புல்லால் வேயப்பெற்ற பாய்கள் முற்காலத்தில் விரிக்கப்பட்டிருந்தன. அவை இக் காலத்தில் நீக்கப்பட்டுக் கம்பளியாலான விரிப்புகள் உபயோகத்திற்கு வந்தன. அத்துடன் நன்ருகப் பின்னப்பட்ட கோரைப்பாய்

களும் உட்புறத் தரைகளை மறைப்பதற்கு உபயோகப்படுத்தப்பட்டன. புல்லால் வேயப்பெற்ற பாய்கள் நீக்கப்பட்டதால் தெள்ளுப்பூச்சிகளின் தொல்லை நீங்கியது. அத் தெள்ளுப்பூச்சிகளே பிளேக் (Plague) எனப்பட்ட வியாதி பரவுவதற்குக் காரணமாகவிருந்தன. தெள்ளுப் பூச்சிகள் குடியிருக்கும் இடத்தில் இல்லாமற் செய்துவிடவே பிளேக் எனப்பட்ட வியாதி பரவவொட்டாமல் தடுக்கப்பட்டது. இங்கிலாந்தி லேயே சிறந்த கம்பளி விரிப்புகள் அப்போது தயாரிக்கப்பட்டுவந்தன. அத்துடன் துருக்கியிலிருந்தும் பாரசீகத்திலிருந்தும் கம்பளி விரிப்புகள் இறக்குமதி செய்யப்பட்டன. கி.பி. 1645-ல் கிளேடன் (Claydon) என்ற இடத்தில் வாழ்ந்துவந்த வெர்னி (Verney) குடும்பத் தினர் உணவு உண்ணும் அறையிலும் வரவேற்கும் அறையிலும் தோலால் ஆன விரிப்புகளை உபயோகித்தனர். அத்துடன் பச்சை நிற வெல்வெட் (velvet) துணியைக் கொண்டு அழகு செய்யப்பட்டிருந்த நாற்காலிகளையும், மெருகு கொடுக்கப்பட்டு ஆணிகளைப் பொருத்திச் செய்யப்பட்டிருந்த பின்புறம் சாய்ந்துகொள்ள வசதியற்ற நாற்காலி களையும் உபயோகித்துவந்தனர். வீடுகளில் அனேகமாகச் சாய்ந்து கொள்ள வசதியற்ற நாற்காலிகளையே (stools) உபயோகித்து வந்தனர். சாய்ந்துகொள்ள வசதியுள்ள நாற்காலிகளை வயது முதிர்ந் தோரும் உயர்குடியைச் சார்ந்தோரும் மட்டுமே உபயோகித்து வந்தனர். முதலாம் சார்லஸ், கிராம்வெல் ஆகியோரின் காலத்திற்கு முற்பட்ட காலத்தில் திடமற்ற, நான்கு சாய்வான கால்களைக்கொண்ட மேசைகள் உபயோகத்தில் இருந்தன. ஆனால், மேற்குறிப்பிட்டவர் களின் காலத்தில் அழகாகக் கடைந்தெடுத்த நான்கு செங்குத்தான கால்களைக்கொண்ட திடமான மேசைகள் உபயோகத்திற்கு வந்தன. வேலைப்பாடு நிறைந்த கட்டில்களும், சமையற்கட்டில் தேவைப்பட்ட பொருள்களை வைக்கும் அலமாரிகளும் அவர்கள் காலத்தில் உபயோகப் படுத்தப்பட்டன. அம் மரச்சாமான்கள் ஓக் (Oak) மரத்தினால் செய்யப் பட்டு மெருகு கொடுக்கப்பட்டிருந்தன. காலத்தினால் கருமை நிறம் அடைந்துவிட்ட அம் மரச்சாமான்களை இன்றும் பல இடங்களில் காணலாம்.

முதலாம் சார்லஸ், கிராம்வெல் ஆகியோரின் காலத்திலும் இங்கிலாந்து பூங்காக்களுக்குப் பெயர்பெற்று விளங்கியது. பேகன் (Bacon) என்பார், ‘கடவுள் முதன் முதலில் பூங்காக்களையே உண்டாக் கினார்’ என்று கூறிச் சென்றுள்ளார். அத்துடன், ‘பூங்காக்கள் இல்லாத அரண்மனையும் வீடும் பொலிவற்றவையாக விளங்கும்’ என்றும் கூறிச் சென்றுள்ளார். எலிசபெத் அரசியின் ஆட்சியின் பிற் பகுதியிலும், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சியின் முற்பகுதியிலும் பூங்காக்கள் பல இடங்களில் நிறுவப்பட்டன. அதுவரை பூங்காக்களில் காய்கறிச் செடிகளே வளர்க்கப்பட்டுவந்தன. (அமெரிக்காக் கண்டத்தி

லிருந்து கொணரப்பெற்ற உருளைக்கிழங்கு செடியும் அப் பூங்காக்களில் இடம்பெற்றிருந்தது.) மலர்த்தோட்டம், காய்கறித் தோட்டம் ஆகிய வற்றைத் தவிரப் பழத்தோட்டங்களும் இருந்தன. அப் பழத்தோட்டங் களில் பசுமை நிறைந்த நடைபாதைகள் இருந்தன. மேலும், அத் தோட்டங்களில் கொடிப்பந்தர்களும் இருந்தன. ஹனிசக்கிள் (Honeysuckle) என்றழைக்கப்பட்ட மலர்க்கொடிகள் சூரிய வெளிச் சத்தில் பூத்துக் குலுங்கின. ஆனால், அம் மலர்க் கொடிகளாலான பந்தர்கள் சூரிய ஒளி நிலத்தில் படாதவாறு தடுத்தன. அத்தகைய கொடிப்பந்தர் நிறைந்த பூங்காவில் பீட்ரைஸ் (Beatrice) என்ற பெயருடைய அம்மையார் உலவி மகிழ்ந்தனர் என்று இலக்கியத்தில் காண்கின்றோம். மலர்த்தோட்டங்கள் சதுரமாகவோ அல்லது நீண்ட சதுர வடிவிலோ அமைக்கப்பெற்றிருந்தன. அப் பூங்காக்களில் விரிவான நடைபாதைகள் இருந்தன. பாக்ஸ் (Box), லேவெண்டர் (Lavender) ஆகிய செடிகள் நடைபாதைகளின் இருமருங்கிலும் வேலிகளாகவும் வளர்க்கப்பட்டிருந்தன. அச் செடிகள் பலவித உருவங் களைத் தோற்றுவிக்குமாறு நன்கு கத்தரித்துவிடப்பெற்றன.

முதலாம் சார்லஸ், கிராம்வெல் ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் புதிய செடிகளும் மரங்களும் இங்கிலாந்தில் வளர்க்கப்பெற்றன. அவை களில், கிரவுன் இம்பீரியல் (Crown Imperial), டூலிப் (Tulip), லாபர்னம் (Laburnum), நாஸ்டர்டியம் (Nasturtium), எவெர் லாஸ்டிங் (Everlasting), லவ்-இன்-எ-மிஸ்ட் (Love-in-a-mist), ஹானஸ்டி (Honesty), டுலிப் மரம் (Tulip tree), ரெட் மேபிள் (Red Maple) ஆகியவை சிலவாகும். இக் காலத்தில் தோட்டங்கள் அமைப் பதும் பூங்காக்கள் அமைப்பதும் மக்களின் வேலைகளில் ஒன்றாக இருந்தது. நெதர்லாந்தை விட்டு இங்கிலாந்திற்கு வந்து நார்விக் (Norwich), லண்டன் ஆகிய நகரங்களில் குடியேறிய ஹியூக்நாட் (Huguenot) என அழைக்கப்பட்ட பிராடஸ்டென்டுகள், தோட்டங்கள், பூங்காக்கள் அமைப்பதை ஓர் அளவிற்கு ஆங்கிலேயருக்குக் கற்றுக் கொடுத்தனர் எனக் கூறலாம். ஸ்பிடால்பீல்ட்ஸ் (Spitalfields) எனப் பெயர்பெற்ற பிரதேசத்தில் குடியேறிய ஹியூக்நாட்டுகளே இங்கிலாந் தின் தோட்டக்கலைக் குழுக்களை முதன் முதலில் தோற்றுவித்தவராவர். முதலாம் சார்லசின் ஆட்சிக் காலத்தில் வெளிவந்த 'பராடிசஸ்' (Paradisus) போன்ற ஆங்கில நூல்கள் மலர்ச்செடிகளின் வனப்பை எடுத்துக் காட்டின. அதன் விளைவாகப் பூங்காக்களை ஆங்கிலேயர் அமைப்பதில் முனைந்தனர். (எலியனர் ரோட் என்பார் எழுதியுள்ள, 'தோட்டத்தின் கதை' என்ற நூல், 1932).

மேற்கண்ட பூச்செடிகள் இன்றும் இங்கிலாந்தில் காணப்படு கின்றன. ஆனால், பழங்காலத்தில் ஆங்கிலேயர் வளர்த்துவந்த

மூலிகைகள் இன்று அந்த அளவிற்குக் காணப்படவில்லை. அக்காலத்தில் மூலிகைகள் மருந்திற்கும் சமைப்பதற்கும் பெரிதும் உபயோகிக்கப் பட்டுவந்தன. மூலிகைகளையும் மலர்ச்செடிகளையும் கொண்ட தோட்டங் களில் பல குறுக்கும் நெடுக்குமாகவிருந்த நடைபாதைகளும், வட்ட வடிவமாக அமைக்கப்பெற்ற பாத்திகளும் இருந்தன. ஆண்டிரூ மார்வெல் (Andrew Marvell) என்பார் கிராம்வெல்லின் செயலாளர் களில் ஒருவராக இருந்தார். அவர் உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்தில் நாட்டின் இயற்கைக் காட்சியைப் பின்வருமாறு அழகுபட விளக்கியுள்ளார்:

'நீரோடையின் கரையில் அல்லது பழமரம் ஒன்றின் அடியில் உடலை விட்டுவிட்டு என் ஆத்மா மரக்கிளைகளுக்குச் சென்று, அங்கே பறவைபோல் அமர்ந்து பாட்டிசைக்கின்றது. தனது வெள்ளிய இறக்கைகளைக் கோதிக்கொடுக்கின்றது. வெகுதூரம் பறந்து செல்லு முன் தனது இறகுகளை அசைப்பதன்மூலம் பல வர்ணஜாலங்களை எழுப்புகின்றது.'

'இந்த வட்ட வடிவமான பாத்தியை, மலர்ச்செடிகளைக் கொண்டும் மூலிகைகளைக் கொண்டும் தோட்டக்காரன் எவ்வளவு அழகாக அமைத் துள்ளான். அவ் வட்ட வடிவமான மணங்கமழும் பாத்தியைப் பகல வன் வானவீதியில் இருந்தே கடக்கின்றான். தேனைச் சேகரிக்கும் தேனீக்கள், தேனை உண்ணும்போதே காலத்தையும் நம்மையும் கணக்கிடுவதுபோல் தோற்றமளிக்கின்றன. இப்படித் தேனீக்கள் மொய்க்கும் மலர்களும் மூலிகைகளும் நிறைந்த தோட்டத்தில் செல விடப்பட்ட நேரம் இனிமையாகக் கழிக்கப்பட்டதாகும்.'

வெர்னி குடும்பத்தினரின் குறிப்புகள், அக் காலத்திய குடும்ப வாழ்க்கையை நன்கு எடுத்துக்காட்டுகின்றன. கிளேடன் (Claydon), பக்ஸ் (Bucks) ஆகிய இடங்களில் இருந்த அக் குடும்பத்தினரின் வீடுகள், பியூரிடன் மதத்தைச் சேர்ந்தோரின் வாழ்க்கையையும், அரசனை ஆதரித்தோரான கவாலியர்களின் வாழ்க்கையையும் எடுத்துக் காட்டுவனவாக விளங்கிவந்தன. உள்நாட்டுப் போர் நிகழ்ந்தபோது, சர் எட்மண்ட் வெர்னி (Sir Edmund Verney) என்பாரும், அவரது மகனை ரால்ஃபும் (Ralph) ஒருவர் ஒரு கட்சியிலும், மற்றவர் இன்னொரு கட்சியிலும் இருந்து போர்புரிந்தனர். அப்படி அவர்கள் ஒருவருக்கொருவர் எதிரான கட்சியில் இருந்தபோதிலும், ஒருவர் மற்றவர்மேல் கொண்டிருந்த அன்பில் குறையாதவராகவும், குடும்பச் சொத்தைக் காப்பதில் ஒரே மனத்தினராகவும் இருந்தனர்.

முதலாம் சார்லசின் ஆட்சிக் காலத்தில், கிளேடன் என்ற இடத்தில் இருந்த வெர்னி குடும்பத்தினரின் வீட்டில் நிகழ்ந்தவைகளை நோக்குங்

கால், அக்காலத்தே சாதாரணமாக வீடுகளில் என்ன நிகழ்ந்தன என்பதை ஒருவாறு அறியக்கூடும். வெர்னி குடும்பத்தினரின் வீட்டில் நிகழ்ந்தவைகளைக் கொண்டு, ஒவ்வொரு குடும்பத்தினரும் தமது சொத்துகளை எப்படிக் காப்பாற்றிவந்தனர் என்பதும் விளங்கும். அத்துடன் ஒவ்வொரு வீட்டிலும் ஏதாவதொரு கைத்தொழில் நடந்து வந்தது என்பதும், அத் தொழிலில் குடும்பத்தில் இருந்த ஆடவரும் பெண்டிரும், அவ் வீட்டில் பணிபுரிந்துவந்த ஆண், பெண் ஆகிய பணியாள்களும் முக்கியப் பாகத்தை ஏற்று நடத்திவந்தனர் என்பதும் தெரியவரும்.

வெர்னி குடும்ப வரலாற்றை எழுதியவர் பின்வருமாறு எழுதியுள்ளார் :

'மற்றவர் உதவியின்றி அப் பெரிய வீட்டிற்கு வேண்டியவை அனைத்தையும் அவ் வீட்டில் வாழ்ந்தோரே சேகரித்தோ அல்லது தயாரித்தோ கொண்டனர்.'

'வீட்டில் வாழ்ந்துவந்தோர் தேவையான மதுவையும் ரொட்டியையும் தயாரித்துக்கொண்டர். ஆடு மாடுகளை வளர்த்துக் கொழுக்க வைத்துத் தேவையான இறைச்சியைக் கொண்டனர். அதேபோல் புரு, கோழி முதலியவற்றையும் வீட்டிலேயே வளர்த்துவந்தனர். வீட்டிலேயே குதிரைகளுக்கு லாடம் அடிக்கப்பட்டது. வீட்டில் மரச்சாமான்கள் செய்யத் தேவைப்பட்ட மரம் அறுத்து எடுத்துக்கொள்ளப்பட்டது. வீட்டின் இரும்புப் பட்டறையில் பலவித கருவிகள் செய்யப்பட்டன; பழைய கருவிகள் செப்பனிடப்பட்டன. சுருங்கச் சொல்லின், அப் பெரிய வீட்டில், மாவரைக்கும் இயந்திரம், பிராணிகளை இறைச்சிக்காகக் கொல்லுமிடம், கருமான் பட்டறை, தச்சன் பட்டறை, வர்ணம் தீட்டுவோரின் அறை, மது தயாரிக்கப்படும் இடம், சிறியவும் பெரியவுமான மரத்திம்மைகளைக் கொண்ட இடம், மரத்திம்மைகளைப் பலகைகளாக அறுக்கத் தேவைப்பட்ட குழி, அடுப்பெரிக்கத் தேவைப்பட்ட விறகு, மற்றும் பலவிதப் பொருள்களைப் போட்டுவைப்பதற்காகத் தனித்து நின்ற சிறிய வீடு ஆகியவை இருந்தன. குதிரைச் சவாரி செய்யக் கற்றுக்கொள்ள வேண்டிய இடமும் அங்கே இருந்தது. அத்துடன் அவ் வீட்டில் வாழ்ந்தோரின் துணிகளை அழுக்கு நீக்கித் தரும் சலவை நிலையமும் அங்கே இருந்தது. மேலும், பால் பண்ணையும் இருந்தது. அப் பால்பண்ணையில் வெண்ணெயைக் கடைந்தெடுக்கும் கருவி குதிரையைக் கொண்டு இயக்கப்பட்டது. ஆடு, மாடு, மற்றும் பன்றி ஆகிய பிராணிகளுக்குக் கொட்டில்களும் அவ்வீட்டில் இருந்தன. இவைமட்டுமல்லாமல் ஆப்பிள் பழங்களையும் பலவகைக் கிழங்குகளையும் சேர்த்துவைக்க ஓர் அறையும் அவ்வீட்டில் இருந்தது. மேற்கண்டவற்றிலிருந்து, அவ் வீட்டிற்குத் தேவைப்

பட்டவை அனைத்தும் அவ் வீட்டிலேயே கிடைத்தது என்பதை அறிந்துகொள்ளலாம்.'

மேலே குறிப்பிட்டவைகள் மாத்திரமன்றிப் புருக்கூடுகளும், மீன் பண்ணைகளும், காட்டுக்கோழி போன்ற பறவைகளைப் பிடிக்க வலையால் மூடப்பெற்ற குட்டைகளும் வீடுகளில் இருந்துவந்தன. மழைக் காலத்தில், வானத்திலே பறந்துசெல்லும் பறவைகளைப் பழக்கிப் வைத்திருந்த கழுகுகளைக்கொண்டு வேட்டையாடினர் மக்கள். நீண்ட துப்பாக்கியைக்கொண்டும் மிருகங்களைச் சுட்டு வீழ்த்தினர். இப்படி வேட்டையாடிக் கிடைத்த இறைச்சி மழைக்காலங்களில் பெரிதும் விரும்பப்பட்டது. ஏனென்றால், மழைக்காலத்தில், சாதாரணமாக இலையுதிர் காலத்தில் பிராணிகளைக் கொன்று அவைகளின் இறைச்சியை உப்பிலிட்டுப் பதப்படுத்திவைத்த இறைச்சியே மக்களுக்கு உணவாக இருந்தது. உப்பிலிடப்பட்ட இறைச்சியை மழைக்காலத்தில் உண்டதால், அக் காலத்தில் அனேகமாக மக்கள் தோல்வியாதியால் பீடிக்கப்பட்டனர். இத்தகைய வியாதி செல்வந்தர் வீட்டிலும் எளியவர் வீட்டிலும் சாதாரணமாகக் காணப்பட்டது. மழைக்காலத்தில் இங்கிலாந்தில் காய்கறிகள் கிடைப்பது அரிதாய் இருந்ததால், உப்பிலிடப்பட்ட இறைச்சியைமட்டும் சமைத்துப் புசிக்கவேண்டி யிருந்தது. முதலாம் சார்லஸ், கிராம்வெல் ஆகியோரின் காலத்தில்தான், உருளைக்கிழங்கும் மற்றக் காய்களும் சமைக்கப்படாமல், பச்சடிபோன்று செய்து புசிக்கும் பழக்கம் மக்களிடையே தோன்றிக்கொண்டிருந்தது.

'மகளிர் நூல் நூற்கவும் தையல் வேலை செய்யவும் கற்றிருக்க வேண்டியிருந்தது. ஏழை உறவு மகளிர் செல்வந்தர்களின் இல்லங் களில் வசித்துவந்தனர். அவர்கள் வீட்டின் தலைவிக்கு, நூல் நூற்கும் வேலையிலும் தையல் வேலையிலும் துணைபுரிந்தனர். வெர்னி குடும்பத் தினரின் உறவினரான ஐந்து அல்லது ஆறு பெண்டிர் எழுதிய கடிதங்கள் கிடைக்கப்பெற்றுள்ளன. அவைகளிலிருந்து, அப் பெண்டிரும் தலைவியைப்போலவே நல்ல குடும்பத்தில் பிறந்தவராகவும், நல்ல முறையில் வளர்க்கப்பட்டவராகவும், நன்கு கல்வி பயின்றவராக வும் இருந்தனர் என்பது தெரியவருகின்றது. அப்பெண்டிர் தலைவியால் பரிவுடன் நடத்தப்பட்டனர் என்பதும் விளங்குகின்றது.'

கிளேடன் என்ற இடத்தில் இருந்த வெர்னி குடும்பத்தினரின் வீட்டில் பெண்டிர் பலவிதத் தொழில்களில் ஈடுபட்டிருந்தனர். கம்பளி யையும் சணலையும் கொண்டு நூல் நூற்றனர். ஆடைகளைத் தைப்பதும், ஆடைகளில் பூவேலை செய்வதும் அவரது தொழில்களில் ஒன்றாக இருந்தது. பெண்டிர் அறுசுவை உண்டியைத் தயாரித்தனர். உணவுப் பொருள்களை மழைக்காலத்தின் தேவைக்காகப் பக்குவப்படுத்துதலும்

அவரது தொழிலாகவிருந்தது. மேலும், பழங்களைக் கொண்டு சாற்றைப் பிழிந்து மது தயாரித்தல், மூலிகைகளைக் கொண்டு மருந்து தயாரித்தல் ஆகியவைகளும் அவரது தொழில்களாக இருந்தன. பழங்களிலிருந்து பெற்ற பழரசம், உலர்ந்த கொட்டையற்ற திராட்சைப்பழம் (Currant), கௌஸ்லிப் (Cowslip) எனப்பட்ட மஞ்சள் நிற மலர்களையுடைய செடி, மற்றும் எல்டர் (Elder) எனப்பட்ட மரத்தின் பூ முதலியவற்றைக் கொண்டு மதுவையும் பெண்டிர் தயாரித்துவந்தனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்படுவதற்குமுன் பழரசமும் மதுவுமே மக்களால் அதிகமாகப் பருகப்பட்டுவந்தன. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோதுதான், டீயும் காப்பியும் குடிக்கும் பழக்கம் மெதுவாக மக்களிடையே தோன்றலாயிற்று.

வெர்னி சீமாட்டியின் குழந்தைகளில் பத்து பேர் பெரியவர்களாக வளர்ந்தனர். குடும்பத்தவர் அனைவரும் ஒருவருக்கொருவர் அன்புடையராய் இருந்தனர். ஒவ்வொருவரும் வாளாவிராமல் ஏதாவதொரு தொழிலில் ஈடுபட்டிருந்தனர். அவர்கள் வீட்டிலிருந்து வெளியே சென்று தங்கித் தொழிலில் ஈடுபட்டிருந்தவர்களுக்கு நீண்ட கடிதங்கள் எழுதினர். ஒரு குறிப்பிட்ட ஆண்டில் அத்தகைய கடிதங்கள் நானூறு எழுதப்பட்டன என்பது அக் குடும்பத்தினரின் கடிதங்களிலிருந்து விளங்குகின்றது. சர் எட்மண்டும் அவரது மக்களும், அரசனின் காரியமாகவும், பார்லிமென்டின் காரியமாகவும், சொந்தக் காரியமாகவும் அடிக்கடி வீட்டிலிருந்து பயணம் சென்றுவந்தனர். அப்படிப் பயணம் செய்ய நேரிட்டபோதெல்லாம் குதிரைச் சவாரி செய்தே சேருமிடத்தை அடைந்தனர். அக்காலச் சாலைகள் திடமானவையாக இருக்கவில்லை. கி.பி. 1639-ல் சர் எட்மண்டு அரசருடன், பெர்விக் (Berwick) நகரத்திலிருந்து 260 மைல்களுக்கப்பால் இருந்த லண்டன் நகரைக் குதிரைச் சவாரி செய்து நான்கு நாள்களில் கடந்தார். அக் காலத்தில் கோச்சு வண்டி, பலமற்றவராலும் குதிரைச் சவாரி செய்ய முடியாத பெண்டிராலும் மட்டுமே உபயோகிக்கப்பட்டுவந்தது. அக் கோச்சு வண்டிகள் வில்கள் (springs) பொருத்தப்பட்டவையாக இருக்கவில்லை. குளிர் காற்று, மழை ஆகியவற்றிலிருந்து அவ்வண்டிகளில் பிரயாணம் செய்தோரைக் காப்பாற்றத் தோலால் ஆன திரைச்சீலைகள் பொருத்தப்பட்டிருந்தன. கோச்சு வண்டிகள் மிக மெதுவாகவே ஓடின.

காமென்வெல்த் ஆட்சிக் காலத்தில் வாடகை வண்டிகள் உலவத் தொடங்கின. ஆனால், வாடகைப் பணம் அதிகமாக இருந்தது. அவ் வண்டிகளும் மெதுவாகவே ஓட்டப்பெற்றன. கி.பி. 1658-ல் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு, வழியில் நின்று நின்று போகும் கோச்சு வண்டிகள் இங்கிலாந்தின் சாலைகளில் ஓடின. உதாரணமாக, ஜியார்ஜ் இன் (George Inn), ஆல்டர்ஸ்கேட் (Aldersgate), லண்டன்

(London) முதலிய இடங்களிலிருந்து அவை பல இடங்களுக்குச் சென்றன. சாலிஸ்பரி (Salisbury) நகரத்திற்கு இரண்டு நாள்களில் அடைய 20 ஷில்லிங், எக்சீடர் (Exeter) நகரத்திற்கு நான்கு நாள் களில் அடைய 40 ஷில்லிங், பிளிமத் (Plymouth) நகரத்திற்குச் செல்ல 50 ஷில்லிங், டர்ஹாம் (Derham) நகரத்திற்குச் செல்ல 55 ஷில்லிங் வாடகை கொடுக்கவேண்டி யிருந்தது. ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் வேக்ஃபீல்டிற்கு (Wakefield) செல்லக் கோச்சு வண்டிகள் இருந்தன. அவ்வூருக்கு நான்கு நாள்களில் செல்ல 40 ஷில்லிங் வாடகை வாங்கப்பட்டது.

கிளேடன் நகரத்தில் இருந்த வெர்னி குடும்பத்தினரின் வீட்டில் பலவிதக் காரியங்களுக்காகத் தேவைப்பட்ட பலதரப்பட்ட குதிரைகளை வளர்த்துக் காப்பாற்றுவது ஒரு முக்கியத் தொழிலாக விளங்கியது. இங்கிலாந்தில் கிளேடன் நகரம் இருந்த பகுதியில் ஏர் அடிக்கவும் வண்டி இழுக்கவும் சிறிது சிறிதாக எருதுகளுக்குப் பதிலாகக் குதிரைகள் உபயோகத்திற்கு வந்துகொண்டிருந்தன. சர் எட்மண்டு வெர்னி யிடம் இருந்த வண்டி இழுக்கும் குதிரைகள் குறிப்பிட்ட காலங்களில் தவறாது ஃபென்லாந்தில் (Fenland) அவருக்குச் சொந்தமான பண்ணைக்கு அனுப்பப்பட்டுவந்தன. அக் குறிப்பிட்ட காலங்களில் அங்கே 'குதிரைகளை அனுப்புவதால் அவை கொழுத்துத் திரும்ப முடிந்தது. ஃபென்லாந்து சதுப்பு நிலப் பிரதேசமாகையால் குதிரை களைக் குறைந்த செலவில் அங்கே நன்கு வளர்க்க முடிந்தது.

முதலாம் சார்லசின் காலத்தில் வாழ்ந்த வெர்னி குடும்பத்தினரின் கடிதங்களை ஆறாம் ஹென்றியின் காலத்தில் வாழ்ந்துவந்த பாஸ்டன் குடும்பத்தின் கடிதங்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், ஒருவகையில் ஒற்றுமை இருப்பது விளங்கும். ஆனால், அதேசமயம் வேறுபாடுகள் இருப்பதும் விளங்கும். வெர்னி குடும்பக் கடிதங்களிலிருந்து, மக்கள் அக் காலத்தில் ஒழுக்கத்தில் உயர்ந்தவராக இருந்தனர் என்றும், முன்னேரைவிட அன்புடையவராக இருந்தனர் என்றும், குடும்பத்தின ரிடையே இருந்த தொடர்பும், குடும்பத்தினர் அண்டை அயலாரிடம் கொண்டிருந்த தொடர்பும் காலத்திற்கும் சந்தர்ப்பத்திற்கும் ஏற்றவாறு சரிசெய்துகொள்ளக்கூடியதாக இருந்தது என்பதும் விளங்கும். பல தலைமுறைக் காலமாக நாட்டுப்புறங்களில் நிலவிவந்த அமைதியான நிலையும் மற்றும் பல மாறுதல்களும், வாழ்வில் கண்டிப்புக் குறையவும் நியாய உணர்ச்சி அதிகரிக்கவும் வழிசெய்திருந்தன. முதலாம் சார்லசின் அவையில் சர் டோபி மாத்யூ (Sir Tobie Matthew) என்ற பெயருடையார் ஒருவர் இருந்துவந்தார். அவர் தமது நாட்டைப் பற்றியும் அயல் நாடுகளைப்பற்றியும் நன்கு அறிந்தவராகவிருந்தார். அவர் கத்தோலிக்க மதத்தைச் சார்ந்தவராக இருந்தமையால்,

பிராடஸ்டென்டு மதமும், பியூரிடன் மதமும் பெருமளவில் பரவி யிருந்த தன் நாடான இங்கிலாந்தைப்பற்றி மிகைபடக் கூருது உண்மையான நிலையையே எடுத்துக்கூறும் வகையினராகவிருந்தார். அவர் தமது கடிதங்களின் முன்னுரையில் ஆங்கிலேயர் ஒருவரே நல்ல குணம் (Good nature) படைத்தவராக இருக்கின்றனர் என்று குறிப்பிட்டுள்ளார். ஆங்கிலேயர் ஒருவரே பகைமையை மறந்து வஞ்சம் தீர்க்கும் நோக்கத்தைக் கைவிடக்கூடியவராக இருக்கின்றனர் என்றும் கூறியுள்ளார். ஆனல், இந் நற்பண்பு உள்நாட்டுப் போர் மூண்டபோது சோதனைக்குள்ளாகியது. உள்நாட்டுப் போர் தன் நோக்கத்திலும் பரப்பிலும், ரோஜாப்பூ அடையாளப் போரைவிட விரிந் திருந்தது. ஆனல், சுயநலத்திற்காகவும் செல்வத்தினுல் அடையும் பயனுக்காகவும், மக்கள் சிறிதே உள்நாட்டுப் போரில் பங்குகொண் டனர் எனக் கூறலாம்.

# 9. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் இங்கிலாந்தின் நிலை

**இரண்டாம் சார்லஸ், 1660–1685. இரண்டாம் ஜேம்ஸ், 1685–1688. (கி.பி. 1688–89-ல் நடந்த புரட்சி.) மூன்றும் வில்லியம், 1689–1702.**

கி.பி. 1660-ல் ராணுவத்தின் சர்வாதிகார ஆட்சி அழிக்கப்பட்டு, அரசியலின் உறுப்புகளான, அரசன், பார்லிமெண்ட், சட்டம் ஆகியவை திரும்பவும் நிலைநிறுத்தப்பெற்றன. சமயத்தைச் சார்ந்த வரையில் பிஷப்புகள் திரும்பவும் நியமிக்கப்பட்டனர் ; அத்துடன் பிரார்த்தனைப் புத்தகமும் திரும்பவும் உபயோகத்திற்கு வந்தது. மேலும் அரசாங்கத்தின் சமயக் கொள்கை ஆங்கிலிகன் மதத்தைச் சார்ந்ததாகவிருந்தது. சமுதாயத்தில் பிரபுக்களும், அவருக்கு அடுத்த கீழ் வகுப்பினரான ஜென்ட்ரிகளும் திரும்பவும் செல்வாக்குள்ளவராக ஆயினர். அரசியல் கொள்கைகளை அவர்களே உருவாக்கித் தரும் நிலையில் இருந்தனர். பழங்காலந் தொட்டு பிரபுக்களிடம் ஆங்கிலேயருக்கு இருந்த மதிப்பும், பற்றும் திரும்பவும் தலைதூக்கின. உள்நாட்டுப் போருக்குமுன் தனக்கிருந்த அதிகாரம் முழுவதையும், அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் அரசன் அடையவில்லை. ஆனுல், பிரபுக்களும் சீமாட்டிகளும் உள்நாட்டுப் போருக்கு முன் தங்களுக்கிருந்த செல்வாக்கு முழுவதையும் திரும்ப அடைந்தனர். ஆங்கிலேயர் சாதாரணமாக அந்தஸ்திற்கு எப்போதுமே மதிப்புக் கொடுப்பவராய் இருந்தனர்.

பிரபுக்கள் அனேகமாக அரசனின் கட்சியான கவாலியர் கட்சியைச் சேர்ந்தவராய் இருந்ததால், காமன்வெல்த் ஆட்சிக் காலத்தில் தங்கள் செல்வாக்கு முழுவதையும் இழந்தனர். காமன்வெல்த் ஆட்சிக் காலத்தில் குடியாட்சிக் கொள்கைகள் நிலவிவந்ததும், ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்ட ராணுவம் பிரபுக்களின் பலம் ஒடுக்கப்பட வேண்டும் என்று நினைத்ததும், பிரபுக்கள் தங்கள் செல்வாக்கை இழப்பதற்குக் காரணங்களாய் இருந்தன. பிரபுக்கள் தங்கள் செல்வாக்கை மட்டுமே இழந்தனர். அவர்கள் தொடர்ந்து சமுதாயத்தில் ஒரு

வகுப்பினராக இருந்துவந்தனர். பிரபுக்கள் தங்கள் சொத்துகளை இழந்துவிடவில்லை. அபராதங்கள் கொடுக்க நேர்ந்தாலும், அது அவரது செல்வத்தைச் சிறிதளவே பாதித்தது. காமென்வெல்த் ஆட்சிக் காலத்தில், நகரங்களிலும் நாட்டுப்புறங்களிலும் பிரபுக்கள் தாங்கள் வகித்துவந்த பதவிகளையும் செல்வாக்கையும் இழந்தனர். அவரது பதவி, அந்தஸ்து ஆகியவை போர்வீரர்கள், அரசியல்வாதிகள் ஆகியோரின் கைக்கு மாறின. பதவி, அந்தஸ்து ஆகியவற்றைக் காமென்வெல்த் ஆட்சியின் காலத்தே அடைந்த அரசியல்வாதிகளில் ஆல்கெர்னுன் சிட்னி (Algernon Sidney), ஆஷ்லி கூப்பர் (Ashley Cooper), ஆகியோர் இருவராவர். அவ்விருவரும் உயர்ந்த குடும்பத்தைச் சேர்ந்தவராயிருந்தனர். ஆனால், கர்னல் பிரைடு (Colonel Pride), கர்னல் பிர்ச் (Colonel Birch) ஆகிய இருவரும் கிராம்வெல்லைப் போலவே படைத்தலைவராக இருந்ததால், அதிகாரமும் செல்வாக்கும் அடைந்திருந்தனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின், கிராம்வெல்லின் கட்சியினரான உருண்டைத் தலையர்களில் (Round heads) பலர் தங்கள் செல்வாக்கை இழக்க நேரிட்டது. அவர்களில் பலர் நாட்டைவிட்டே ஓடிவிட்டனர். எனினும், மான்க் (Monk), ஆஷ்லி கூப்பர் (Ashley Cooper), கர்னல் பிர்ச் (Colonel Birch), ஆண்டுரூ மார்வெல் (Andrew Marvell) ஆகியோர் அரசாங்கத்திலும் பார்லிமென்டிலும் தாங்கள் வகித்துவந்த பதவியைத் தொடர்ந்து வகித்துவந்தனர். முதலாம் சார்லஸ் அரசனைக் கொல்லக் காரணமாய் இருந்தவர் மட்டுமே கொல்லப்பட்டனர். ஏனைய உருண்டைத் தலையர்கள் துன்புறுத்தப்படவில்லை. ஆனால், கன்வென்டிகல் (Conventicle) என அழைக்கப்பட்ட பியூரிடன் மதத்தினர் வழிபடும் இடத்திற்குத் தொடர்ந்து போய்க்கொண்டிருந்த உருண்டைத் தலையர் துன்பத்திற்குள்ளாயினர்.

இரண்டாம் சார்லசின் ஆட்சிக்காலம் முழுவதும், அரசாங்கத்தால் அங்கீகரிக்கப்பட்ட மதத்தை ஏற்றுக்கொள்ளாத நான்-கன்ஃபர்மிஸ்ட் (Nonconformist) என அழைக்கப்பட்டோர் கடுந்துன்பத்திற்கு உள்ளாக்கப்பட்டனர். கிளாரெண்டன் (Clarendon) என்பார் பார்லிமென்டை இயற்ற வைத்த சட்டங்களின்படி நான்-கன்ஃபர்மிஸ்டுகள் கடுந்துன்பத்திற்கு உள்ளாக்கப்படவேண்டியவர்களாக விருந்தனர். அப்படித் துன்புறுத்தப்பட்டவரில் அனேகர், நகரவாசிகளாகவும், நடுத்தர வகுப்பையும் அதற்குக் கீழ்ப்பட்ட வகுப்புகளையும் சேர்ந்தவராயும் இருந்தனர். அவர்களில் அனேகர் செல்வம் படைத்த வியாபாரிகளாகவும், கைத்தொழில் செய்வோராகவும் இருந்தனர். இத்தகையோர் மதத்தின் காரணமாகத் துன்புறுத்தப்பட்டது வியாபாரத்தைப் பெரிதும் பாதித்தது என்று அரசியல்வாதிகள் அறைகூவிவந்தனர். மதத்தின் காரணமாகத் துன்புறுத்தப்பட்டவர்களில் ஒரு சிலரே நிலம்படைத்த ஜென்ட்ரி

வகுப்பைச் சார்ந்தவராய் இருந்தனர். ஆனால், உருண்டைத் தலையரின் மதக்கொள்கை ஓரளவு ஸ்குவீர் வகுப்பினரைப் பாதித்து விக் (Whig) எனப்பட்ட கட்சி தோன்றுவதற்கு வழி செய்தது. விக் கட்சியினர் அரசாங்கத்தால் நிராகரிக்கப்பட்ட பியூரிடன் மதக்கொள்கையை அப்படியே ஏற்றுக்கொள்ளவில்லை; உலகியலுக்கு அப்பாற்பட்ட பியூரிடன் மதக்கொள்கைகளை விட்டுவிட்டனர். விக் கட்சியினரிடையே ஷாஃப்டஸ்பரி (Shaftesbury) குடும்பத்தினரைப்போல் மதக்கொள்கைகளைச் சந்தேகித்தவர்களையும், வார்டன் (Wharton) குடும்பத்தைப் போல் மதக்கொள்கைகளை இழித்துப் பேசியவர்களையும் காணமுடிந்தது. இப்படி மதக்கொள்கைகளில் பூரண நம்பிக்கையற்றவர்களும், மதக்கொள்கைகளை இழிவாகப் பேசியவர்களும் டோரி (Tory) கட்சியினரிடையேயும் காணப்பட்டனர். அப்படிப்பட்டவர் அரசனுக்கு ஆதரவாக விருந்த கவாலியர்களிடையேயும் காணப்பட்டனர். இப்படியிருப்பினும், விக் கட்சியைச் சேர்ந்தவர்கள் பலர் கிருத்தவ மதத்தில் நல்ல ஈடுபாடுடையவராக விருந்தனர். ஆனால், அவர்கள் அரசாங்க அங்கீகாரம் பெற்ற ஆங்கிலிகன் மதத்தில் ஈடுபாடுடையவராக இருக்கவில்லை. எனினும், ரஸ்ஸல் (Russel) குடும்பத்தினரைப் போன்ற விக் குடும்பங்கள் பயபக்தியுடன் ஆங்கிலிகன் மத வழிபாட்டில் கலந்து கொண்டனர். ஆனால், தங்கள் வீட்டில் பியூரிடன் மத குருமார்களைக் குடும்ப குருவாகவும் தங்கள் மக்களின் ஆசானாகவும் வைத்திருந்தனர். பியூரிடன் மதத்திற்கும் பிராடஸ்டென்ட் மதத்திற்கும் இடையே இருந்த வேறுபாடுகள் இவை இவை எனக் கூறமுடியாததாய் இருந்தன.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் பண்ணை வைத்திருந்தோரில், கன்வென்டிகல் என அழைக்கப்பட்ட பியூரிடன் மத வழிபாடு நடக்கும் இடத்திற்குச் சென்று அதற்காகத் துன்புறுத்தப்பட்டோர் ஒரு சிலரே இருந்தனர். ஆங்கிலிகன் மதம் எலிசபெத் அரசியின் காலம், லாட் (Laud) பதவியில் இருந்த காலம் ஆகிய காலங்களில் இருந்ததை விட அதிகமாக உயர்ந்த வகுப்பினரின் மதமாக ஆகிவந்தது. நாட்டுப் புறங்களில் வாழ்ந்துவந்த உயர்ந்த குடும்பத்தினரில் சிலர், முக்கியமாக லங்காஷயரிலும் (Lancashire), நார்தம்பர்லாந்திலும் (Northumberland) கத்தோலிக்க மதத்தினராக விருந்தனர். அக் கத்தோலிக்கர்களுக்கு வட்டார அரசியலிலும், அரசாங்கத்திலும் பங்கு ஏதும் சட்டப்படி இருக்கவில்லை. ஆனால், அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் பட்டமேற்ற ஸ்டுவர்ட் அரசர்கள் சட்டங்களை மீறி சமயம் நேர்ந்த போது அக் கத்தோலிக்கர்களுக்கு அரசியலில் பங்கு அளித்துவந்தனர். மேற்குறிப்பிட்ட கத்தோலிக்கர்களைத் தவிர, உயர்ந்த வகுப்பைச் சேர்ந்த மற்றவர் அனைவரும் ஆங்கிலிகன் மத வழிபாட்டில் பங்கு கொண்டதன் காரணமாகத் தங்களுக்குள்ளே ஒருவித ஒற்றுமை உணர்ச்சியுடையவராக விருந்தனர். கிருத்தவ ஆலயங்களில் தனியான

ஓர் இடம் வட்டாரப் பிரபுவின் குடும்பத்திற்காக ஒதுக்கப்பட்டிருந்தது. வட்டாரக் கிருத்தவ ஆலயங்களை அவ்வவ் வட்டாரங்களில் இருந்த பிரபுக்களின் குடும்பங்கள் ஆதரித்துவந்தன. வட்டாரக் கிருத்தவ ஆலயங்களில் வழிபாட்டிற்காகக் கூடிய மற்ற அனைவரும் பிரபுக்களின் குடும்பங்களால் ஆதரவு அளிக்கப்பட்டோராக விருந்தனர். அவர்கள் பிரபுக்களின் குடும்பத்தைச் சேர்ந்தோர், அவ் வட்டாரத்தைச் சேர்ந்த குடியானவர்கள், தொழிலாளிகள் ஆகியோராகவிருந்தனர். அடிசன் (Addison) சர் ரோகர் டி கவர்லி (Sir Roger de Coverley) என்பாரைப்பற்றி எழுதிய நூலில் வட்டாரங்களில் இருந்த கிருத்தவ ஆலயங்கள் எப்படி வட்டாரப் பிரபுக்களால் ஆதரிக்கப்பட்டுவந்தன என்பதையும் அவர்கள் ஏற்படுத்திய ஒழுங்குமுறைகளைப்பற்றியும் எடுத்துக் காட்டியுள்ளார்.

'என்னுடைய நண்பர் சர் ரோகர் பயபக்தியுடைய கிருத்தவராவார். தனக்குப் பிடித்த பைபிளில் இருந்து எடுக்கப்பட்ட வாக்கியங்களை ஆலயத்தின் உட்புறத்தில் எழுதச் செய்து அழகு செய்தார். பிரசார மேடையை அழகு செய்வதற்காக அழகிய துணி ஒன்றை வாங்கி அளித்திருந்தார். அத்துடன் கிருத்தவரின் புனிதச் சின்னமான சிலுவை வைக்கப்பெற்றிருந்த மேசையைச் சுற்றிப் பாதுகாப்பாக வேலி ஒன்றையும் தன் செலவில் போடச் செய்தார். அவர் தன்னுடைய பண்ணை வீட்டிற்கு வந்து சேர்ந்தபோது, வட்டார மக்கள் வழிபாட்டிற்குத் தவருமல் வருவதில்லை என்பதைக் கண்டுகொண்டார். வழிபாட்டில் கலந்துகொள்வதற்காக ஒவ்வொருவருக்கும் மண்டி இட்டு உட்கார ஒருவகைக் கம்பளமும், பிரார்த்தனைப் புத்தகமும் அளித்தார். அத்துடன் புனிதப் பாடல்களை வட்டாரம் முழுவதும் சுற்றி இசையுடன் பாடுவதற்காக ஒரு பாடகனையும் நியமித்தார். அப் பாடகனைக் கொண்டு, வழிபாட்டின்போது புனிதப் பாடல்களை இசையுடன் பாட மக்களுக்குக் கற்றுக்கொடுக்கச் செய்தார். வழிபாட்டிற்கு வந்த அனைவரும் சர் ரோகரின் பண்ணையாள்களாக இருந்ததால், அவர்களை வழிபாடு நடக்கையில் ஒழுங்குடன் நடந்துகொள்ளச் செய்ய முடிந்தது. வழிபாடு நடக்கையில் எவரும் தூங்கிவிடாமல் அவர் பார்த்துக் கொண்டார். தப்பித் தவறி தானே குறுகிய காலத்திற்குத் தூங்கி விட்டால் தான் விழித்துக் கொண்டவுடனே எழுந்து நின்று மற்றவர் எவராவது துயில்கின்றனரா என்று பார்ப்பார். அப்படி எவராவது துயின்றுகொண்டிருந்தால் தானே அவரிடம் சென்று அவரை எழுப்பி விடுவார். அல்லது எவரையாவது அனுப்பி அவரது துயிலைக் கலைக்கச் செய்வார்.'

ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக்கொள்ளாதவர்கள் தங்களிச்சை போல் வழிபட தங்களுக்கு உரிமையுண்டு என்று கூறிக்கொண்டனர்.

அத்துடன் கிருத்தவ ஆலயமும், அதில் வழிபாடு நடத்திய பாதிரியாரும் பிரபுவின் உடைமையல்ல; அதற்கு மாருகத் தங்களின் உடைமை என்றும் கூறிக்கொண்டனர். வெஸ்லியன் இயக்கம் (Wesleyan movement) தொடங்கும் வரை ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக் கொள்ளாதவரின் கூட்டங்கள் நகரங்களிலும், வியாபார ஸ்தலங்களிலும், கைத்தொழில்கள் நடைபெற்றுவந்த வட்டாரங்களிலும் மட்டுமே நடத்தப்பெற்றன. ஆயினும், பல கிராமங்களில் குவேகர் (Quaker), பாப்டிஸ்ட் (Baptist) எனப்பட்ட கிருத்தவ மதப் பிரிவுகளைச் சேர்ந்த குடும்பங்கள் இருந்துவந்தன. ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக் கொள்ளாதோர் பலர் ஜான் பன்யான் (John Bunyan) என்பாரைப் போன்று கைத்தொழிலாளிகளாக விருந்தனர். அத்துடன் அவர்கள் ஏழ்மை நிலையில் இருந்தவராகவிருந்தனர். இதற்கு மாருக, லண்டன், பிரிஸ்டல் (Bristol) போன்ற நகரங்களில் மிக்க செல்வந்தராகவிருந்த வியாபாரிகள் ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக் கொள்ளாதவராகவிருந் தனர். அவர்கள் தங்கள் செல்வத்தைக் கொண்டு தங்களை மதத்தின் காரணமாகத் துன்புறுத்தி வந்த ஸ்குவீர் வகுப்பினரை அப்படிச் செய்யாதிருக்கத் தடுக்கக் கூடியவராகவிருந்தனர். உண்மையில் செல்வம் படைத்த வியாபாரிகள் பல சமயம் ஸ்குவீர் வகுப்பினரைத் தங்கள் உரிமைகளை இழக்கும்படி செய்தனர். பணமுடையால் அவதி யுற்று வந்த ஸ்குவீர் வகுப்பினருக்கு, செல்வம் படைத்த வியாபாரிகள், நிலத்தை அடைமானமாக வைத்துக்கொண்டு கடன் கொடுத்தனர். அப்படியே கடன் கொடுத்து அவர்களது நிலத்தைத் தங்களதாக்கிக் கொண்டனர். நிலத்தைத் தங்களதாக்கிக் கொண்டதனுல் மதத்தின் காரணமாகத் துன்புறுத்தப்படுவதிலிருந்து தாம் தப்பினர். ஆனுல், அத்தகைய வியாபாரிகளின் பிள்ளைகள், ஸ்குவீராகவோ அல்லது பாதிரியாராகவோ மாறினர். அப்படி அவர்கள் மாறியபின் அவர்களின் சந்ததியைச் சேர்ந்தோர் வியாபாரத்தில் ஈடுபட்டோரை இழிவாகப் பேசுவர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது மதத்தின் அடிப் படையில் சமுதாயத்தில் தோன்றிய பிரிவுகள் விக்டோரியா அரசியின் காலம் வரை அப்படியே இருந்துவந்தன.

மேல் வகுப்பினர் அனேகமாக ஒரே மதத்தைச் சார்ந்தவராக விருப்பினும், அவர்கள் இரண்டு அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவராக விருந்தனர்; ஒன்று விக் கட்சி; மற்ருென்று டோரி கட்சி. டோரிகள் எண்ணிக்கையில் மிகுந்தவராக விருந்தனர். அவர்கள் ஆங்கிலிகன் மதம் ஒன்றே இங்கிலாந்தின் மதமாக இருக்கவேண்டும் என்ற கொள்கையுடையவராய் இருந்தனர். அதனுல் 'நாட்டில் எவரும் ஆங்கிலிகன் மதத்தை ஏற்காதவராக இருக்கக் கூடாது என்ற எண்ணமுடையராய் இருந்தனர். ஆனுல், விக் கட்சியைச் சேர்ந்த பிரபுக்களும், மற்ற மேல் வகுப்பினரும், ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக்

கொள்ளாதவர் துன்புறுத்தப்படக்கூடாது என்ற கொள்கையை உடையராய் இருந்தனர். பல பிரிவுகளைக் கொண்ட பிராடஸ்டென்ட் மதத்தவராவது துன்புறுத்தலுக்கு உட்படுத்தப்படக்கூடாது என்று அவர்கள் எண்ணம் கொண்டிருந்தனர். விக் கட்சியைச் சேர்ந்த பிரபுக் களும் மற்ற மேல் வகுப்பினரும் வியாபாரமும் கைத்தொழில்களும் ஓங்கியிருந்த பிரதேசங்களில் வாழ்ந்துவந்த பியூரிடன் மதத்தைச் சேர்ந்தவருடன் தொடர்பு கொண்டிருந்தனர். அவ் வட்டாரங்களில் இருந்த பியூரிடானியர் நகரசபை தேர்தலிலும், பார்லிமென்ட் உறுப்பினர் தேர்தலிலும் தங்களின் ஆதரவு பெற்றவரே தேர்ந்தெடுக்கப் படும்படி செய்யும் நிலையில் இருந்தனர். அதனால் விக் கட்சியைச் சேர்ந்த பிரபுக்களும், மற்ற மேல் வகுப்பினரும் மேற் குறிப்பிட்ட வட்டாரங்களில் வாழ்ந்துவந்த பியூரிடானியருடன் தாங்கள் கொண் டிருந்த தொடர்பால் அரசியலில் பலம் பெற்றிருந்தனர்.

டோரி கட்சியினர், அவர்கள் காலத்திற்குமுன் இருந்துவந்த கவாலியர்களைப் போலவே, பழங்காலந் தொட்டு நாட்டுப்புறங்களில் இருந்துவந்த பழக்க வழக்கங்களில் நம்பிக்கையுடையராகவிருந்தனர். ஆனால், விக் கட்சியினர், தங்களின் முன்னோர்களான உருண்டைத் தலையர்களைப் போலவே, தாங்கள் நிலத்தைப் படைத்தவராகவிருந்தும், வியாபாரிகளுடன் தொடர்புடையவராகவும், வியாபாரத்தில் விருப்ப முள்ளவராகவும் இருந்தனர். நாளடைவில் விக் கட்சியினரின் கொள்கை நாட்டில் தோன்றிவந்த பொருளாதார மாறுதல்களுக்கு இயைந்ததாகவிருந்தது. நிலம் படைத்தோர் வியாபாரத்தில் அக்கறை யுடையவராகவிருந்ததால், வியாபாரத்தில் கிடைத்த லாபத்தைக் கொண்டு பயிர்த்தொழிலிலும், கைத்தொழிலிலும் ஒரு புரட்சியை ஏற்படுத்தும் நிலையில் இருந்தனர்.

கிராம்வெல்லின் ஆட்சிக் காலத்தில் ஆங்கிலேயர் மத விவகாரங் களில் மிகவும் அக்கறை காட்டிவந்தனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் மக்கள் அப்படி இருக்கவில்லை. பியூரிடானியர் அரசியல் பதவியில் இருந்து வீழ்த்தப்பட்டதற்கு மதம் ஒன்று மட்டும் காரணமாகவிருக்கவில்லை. ஹூடிப்ராஸ் (Hudibras) என அழைக்கப் பட்ட நூல், ஆங்கிலிகன் மதத்தைச் சிறப்பிப்பதற்காக எழுதப்பட்ட நூல் அன்று; அதற்கு மாறாக, பியூரிடன் மதத்தை ஏளனப்படுத்தவே எழுதப்பட்டதாகும். மக்கள் பியூரிடன் மதத்திற்குப் பதிலாக ஆங்கிலிகன் மதம் நாட்டின் மதமாக்கப்படுவதை விரும்பினர். இதற்குக் கர்ரணம் பியூரிடன் மதமானது சாதாரண நடவடிக்கைகளிலும் மிகுந்த கட்டுப்பாட்டை மக்களிடம் எதிர்பார்த்தது. பியூரிடானியர் மக்களை உண்ணும் உணவுடன் மதப்பற்றையும் கலந்து உண்ணும்படி செய்துவிட்டனர் எனக் கூறலாம். அதனால் மக்கள் பியூரிடன்

மதத்தில் பற்றுள்ளவராக வளர்வர் என்று பியூரிடானியர் எண்ணினர். ஆனால், அப்படிச் செய்தது பியூரிடன் மதத்தினிடம், மக்களுக்கு மனக் கசப்பை உண்டாக்கிவிட்டது.

கி.பி. 1660-க்குப் பிறகு பியூரிடன் மதத்தைச் சேர்ந்தவர், ஒரு தலைமுறைக் காலத்திற்கு மிகவும் துன்புறுத்தப்பட்டனர். ஆனால், அவர்கள் அனேகமாக அரசியல், சமுதாய காரணங்களுக்காகத் துன்புறுத்தப்பட்டனர் எனக் கூறலாம். உருண்டைத் தலையர்களின் கட்சி திரும்பவும் தலை தூக்காமல் இருப்பதற்காகவும், ஆங்கிலிகன் மதத்தவரும், கவாலியர் கட்சியினரும் அடைந்த துன்பத்திற்கு பழிவாங்கவுமே, 'கிளாரன்டன் சட்டங்கள்' (Clarendon Code) இயற்றப்பட்டன. மதத்தின் காரணம் ஒன்றிற்காக எவரும் துன்புறுத் தப்படவில்லை. ஆங்கிலிகன் மதக் கொள்கைகளை எதிர்த்தோர் எவரும் தேடிப்பிடித்துத் துன்புறுத்தப்படவில்லை. பண்ணைகளில் வாழ்ந்து வந்தோர் அண்டை நகரங்களில் வாழ்ந்துவந்த பிரஸ்பிடீரியன்களை வெறுத்து வந்தனர். அவர்களின் வெறுப்பிற்கு பிரஸ்பிடீரியன்களின் மதம் காரணமாகவிருக்கவில்லை. பிரஸ்பிடீரியன்கள் உயர்ந்தவர்களைப் போல் பேசியதும், எதெற்கெடுத்தாலும் பைபிளில் இருந்து எடுத்துக் காட்டுவதும், தேர்தல்களில் விக் கட்சியினருக்கு வோட்டளித்ததும் பிரஸ்பிடீரியன்கள்பால் இருந்த வெறுப்பிற்குக் காரணமாக விருந்தன.

கி.பி. 1677-ல் ஆங்கிலிகன் மதக் கோட்பாடுகளை நம்ப மறுத் ததற்காக ஒருவர் கைது செய்யப்பட உத்திரவிடுவது நின்றது. அத்துடன் மதஸ்தாபனத்தால் குற்றம் சாட்டப்பட்டோர் மரண தண்டனை விதிக்கப்பட்டு வந்ததும் சட்டப்படி நிறுத்தப்பட்டது. ஷேக்ஸ்பியரின் காலத்தில் யூனிடேரியன்கள் (Unitarians) என அழைக்கப்பட்டோர் மதக் கோட்பாட்டை எதிர்த்ததற்காகக் கொல்லப்பட்டபின் இங்கிலாந்தில் எவரும் மதக்கோட்பாட்டை எதிர்த்ததற்காகக் கொல்லப்படவில்லை. பியூரிடன் மதம் இங்கிலாந்தில் தலைதூக்கி இருந்தபோதும், பியூரிடன் மதக்கோட்பாடுகள் திட்டவட்டமாக விளக்கப்படவில்லை. கிராம்வெல்லின் ஆட்சிக் காலத்தில் புதிய புதிய மதக் கோட்பாடுகள் தோன்றலாயின. அத்துடன் அப்புதிய கோட்பாடுகளின் அடிப்படையில் புதிய பிரிவுகளும் மதத்தில் தோன்றின. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபோது இங்கிலாந்தில் நூற்றுக்கணக்கான பிரிவுகள் கிருத்தவ மதத்தில் இருந்தன என்று கூறலாம். மதத்தில் பிரிவுகள் அனேகம் இருந்ததால், எது தவறான கோட்பாடு என்று நிர்ணயித்து அக் கோட்பாட்டில் நம்பிக்கையுடையவரை துன்புறுத்துதல் முடியாததாய்ப் போய்விட்டது. ஆனால், ஸ்காட்லாந்தில், இங்கிலாந்தில் இருந்ததுபோல் அத்தனை பிரிவுகள் கிருத்தவ மதத்தில் இல்லை. ஸ்காட்லாந்தில் சாதாரண மக்களும் மதக்கோட்பாடுகளில் தீவிர நம்பிக்கையுடையராய் இருந்தனர்.



TO THE READER.

This Figure, that thou here feeft put,
It was for gentle Shakefpeare cut;
Wherein the Grauer had a ftrife
with Nature, to out-doo the life;
O,could he but haue drawne his wit
As well in braffe, as he hath hit
Hisface; the Print would then furpaffe
All, that was euer writ in braffe.
But, fince he cannot, Reader, looke,
Not on his Picture, but his Booke.

B.I.

11. வில்லியம் ஷேக்ஸ்பியர். 1623-ல் வெளியான அவரது நாடகங்களின் பதிப்பு ஒன்றின் தலைப்புப் பக்கத்தில் அச்சிடப்பட்ட அவரது படம். மார்ட்டின் ட்ரோயிஷட் என்பவரால் செதுக்கப்பட்டது. (நேஷனல் போர்ட்ரெயிட் காலரி)



*Copyright Country Life Ltd*

**12.** சஸ்ஸக்ஸில் பெட்வொர்த் மாளிகையில் உள்ள, கிரின்லிங் கிப்பன்ஸால் (1689-க்கும் அதன் பின்னரும்) செதுக்கப்பட்ட அறை.






**14.** தாமஸ் நியூகோமன் கண்டுபிடித்த நீராவி இயந்திரம். ஒரு சுரங்கத்திலிருந்து நீரை வெளியேற்றுவதற்காக 1712-ல் முதன் முதலில் இது உபயோகிக்கப்பட்டது. (சௌத் கென்சிங்டனில் சயன்ஸ் மியூசியத்தில் உள்ள ஹென்ரி பிரைட்டனால் செதுக்கப்பட்ட ஒரு சித்திரத்திலிருந்து எடுக்கப்பட்டது)

அதனால் கி.பி. 1697-ல் பைபிளின் அத்தாட்சியை மறுத்த பதினெட்டு வயது இளைஞன் ஒருவனைத் தூக்கிலிட்டனர். இங்கிலாந்திலோ, உள் நாட்டுப் போருக்குப் பிறகு கடவுள் இல்லை என்று வாதம் செய்தாலும், எவரும் அதற்காக உயிரிழக்கவோ அல்லது உரிமையை இழக்கவோ செய்யப்படவில்லை. நூறுண்டு காலத்திற்குமுன் யூனிடேரியன் (Unitarian) மதக்கோட்பாடுகளில் நம்பிக்கை வைத்திருந்தோர் உயிருடன் சுட்டெரிக்கப்பட்டனர். ஆனால், பதினேழாம் நூற்றுண்டு முடிவடைவதற்குள் பிரஸ்பிடீரியன் மதத்தைச் சேர்ந்த பலர், யூனிடேரியன் மதக் கோட்பாடுகளில் நம்பிக்கையுடையராய் இருந்தனர். அப்படி நம்பிக்கை வைத்திருந்தோரில் பலர் பலவித தொழிலில் ஈடுபட்டோராகவும், செல்வந்தராகவும் இருந்தனர். அதேபோல் பல அரசியல் வாதிகளும் ஆங்கிலிகன் மதக் கோட்பாடுகளில் பூரண நம்பிக்கையற்றோராகவும், சில மதக் கோட்பாடுகளை ஏளனமாகப் பேசுவோராகவும் இருந்தனர். இரண்டாம் சார்லஸ் மன்னனும், தன்னை மறந்து மகிழ்ச்சியுடன் இருந்த வேளைகளில் சில கோட்பாடுகளைப்பற்றி ஏளனமாகப் பேசியதுண்டு.

இங்கிலாந்தில் சோதனைகளை நடத்தி விஞ்ஞான அறிவை வளர்ப்பது தீவிரமாக எல்லா பாகங்களுக்கும் பரவிவந்தது. காமென்வெல்த் ஆட்சிக் காலத்தில் பெயர்பெற்ற விஞ்ஞானிகள் சர்வ கலாசாலைகளிலும் லண்டன் நகரத்திலும் இருந்தனர். அவரது விஞ்ஞான ஆராய்ச்சிகள் அரசாட்சி திரும்பவும் நிறுவப்பெற்றபின் அரச அவையில் இருந்தோரால் பாராட்டப் பெற்றுவந்தது. இரண்டாம் சார்லஸ், அவருடைய மாமன் மகனை ரூபர்ட் இளவரசர் (Prince Rupert) ஆகியோரின் ஆதரவுடனேயே ராயல் சொசைடி (Royal Society) எனப் பெயர் பெற்ற கழகம் ஒன்று அமைக்கப்பெற்றது.

விவசாயம், தொழில், கலம் செலுத்துதல், மருத்துவம், பொறியியல் ஆகிய துறைகளில் விஞ்ஞான அறிவைப் பயன்படுத்துவது, நன்மை பயக்கும் என்ற உண்மையை உலகியல் அறிவில் சிறந்திருந்த ஆங்கிலேயர்கள் அறிந்தனர். பலவிதப் பொருள்கள் தயாரிக்கும் முறையில் விஞ்ஞான அறிவை ஆங்கிலேயர் பயன்படுத்தியது நூறு ஆண்டுக் காலம் ஆன பிறகு தொழிற் புரட்சி வலுப்பெற்று இயங்குவதற்குக் காரணமாகவிருந்தது. இரண்டாம் சார்லசின் ஆட்சிக் காலத்திலேயே மனிதரின் அன்றுட வாழ்க்கைத் தேவைகளும் விஞ்ஞான முறைப்படி ஆராயப்பட்டது. முக்கியமாகக் கற்றோர், எதையும் விஞ்ஞான முறைப்படி ஆராயத் தொடங்கினர். ராபர்ட் பாயில் (Robert Boyle), ஐசக் நியூடன் (Isac Newton) ஆகியோரும், ராயல் சொசைடி எனப்பட்ட கழகம் ஏற்பட்டபோது அங்கத்தினராக இருந்தோரும் மதத்தில் மிக்க பற்றுடையராக இருந்தோர் ஆவர்.

அவர்கள் ஹாப்ஸ் (Hobbes) என்பாரின் கொள்கைகளை ஏற்க மறுத்தனர். ஆனால், அவர்கள் உலக முழுவதற்கும் பொதுவான சட்டங்கள் உண்டு என்ற கொள்கையை ஆங்கிலேயரிடையே பரப்பினர். அத்துடன் உண்மையைக் காண்பதற்காக விஞ்ஞான முறைப்படி ஆராய்வதையும் மக்களுக்கு எடுத்துக் காட்டினர். அப்படி ஆராய்ந்து கிடைத்த உண்மைகள், பைபிளில் சொல்லப்பட்டிருந்தவைக்கு மாருக இருக்காது என அவர்கள் எண்ணிவந்தனர். நியூடன் தன் வாழ்நாள் முடியும் வரை அத்தகைய எண்ணமுடையவராகவே இருந்தார். ஆனால், அவர் வெளியிட்ட பூமியின் காந்த சக்தியைப்பற்றிய உண்மை கிருத்தவ வேதாந்தத்திற்கு தொடர்புடையதாக இருக்கவில்லை. விஞ்ஞான முறைப்படி ஆராய்ச்சி செய்தல் மக்கள் மதத்தில் வைத்திருந்த நம்பிக்கையை ஓரளவு பாதித்தது எனக் கூறலாம். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் மக்களிடையே காணப்பட்ட அறிவு வளர்ச்சி, கி.பி. 1688-ல் நிகழ்ந்த பெரும் புரட்சிக்குப் பிறகு மக்கள் அவரவருக்குத் தோன்றிய வண்ணம் மதக் கொள்கைகளுக்கு விளக்கம் தருவதற்கு வழி செய்தது எனக் கூறலாம்.

இரண்டாம் சார்லசின் ஆட்சிக்காலத் தொடக்கத்தில், ராயல் சொசைடியின் வரலாற்றையும், அதன் குறிக்கோள்களையும் ஸ்பிராட் (Sprat) என்பார் வெளியிட்டார். ஸ்பிராட், அவ் வரலாற்றை வெளியிட்ட சிறிது காலத்திற்குள் ரோசெஸ்டர் (Rochester) நகரின் பிஷப்பாக நியமிக்கப்பட்டார். அவர் பல துறைகளிலும் கற்றவராகவும், தன் கொள்கைகள் தவருனது எனத் தெரிந்தால் மாற்றி அமைத்துக் கொள்பவராகவும் இருந்தார். அவர் தான் வாழ்ந்த காலத்து மக்கள் கல்வியறிவுடையராய் இருந்தனர் என்றும், உண்மையை அறிந்து கொள்வதில் விருப்பமுடையராய் இருந்தனர் என்றும் பெருமைப் படுத்திக் கூறியுள்ளார். ராயல் சொசைடியின் அங்கத்தினராக இருந்தோர் மக்களின் அறிவுத் திறனை வளர்க்கப் பாடுபட்டனர் என்றும் மக்கள் கண்மூடித்தனமாகக் கொண்டிருந்த கொள்கைகளை விட்டுவிடச் செய்யவும் மிகவும் பாடுபட்டனர் எனவும் குறித்துள்ளார். கடவுள், ஆன்மா ஆகிய இரண்டை மட்டும் விட்டுவிட்டு மற்ற எல்லாவற்றைப் பற்றியும் அவர்கள் ஆராய்ந்தனர் என்றும் குறித்துள்ளார். அத்தகைய ஆராய்ச்சிகளின் விளைவாக மூடநம்பிக்கைகளுக்கு இடமிருக்கவில்லை. செய்யுளுக்கு இருந்த முதலிடம் உரைநடைக்குக் கிடைத்தது. கிருத்தவ மதமும் முன்னிருந்தபடியே இருக்குமா என எண்ணத் தோன்றியது.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் தெளிவாக உரைநடையில் எழுதிய எழுத்தாளர்களில் ஸ்பிராட்டும் ஒருவராவார். ஆனால், அவர் ராயல் சொசைடியைப்பற்றி எழுதிய நூலில் புதியது ஒன்றும் இருக்க

வில்லை. அவரது நூல் அக்கால மன நிலையை எடுத்துக்காட்டுகின்றது. அவருக்குச் சிறிது காலத்திற்குமுன் எழுதிய லாக் (Locke), நியூடன் (Newton) ஆகியோரைப்போல், ஸ்பிராட்டும் கிருத்துவின் அற்புதச் செயல்களில் நம்பிக்கையுடையராய் இருந்தார். ஆனால், கிருத்து நிகழ்த்திய அற்புதச் செயல்களைத் தவிர வேறு அற்புதங்களுக்கு அக்கால மனநிலை இடமளிக்கவில்லை. இயற்கையின் விதிப்படி உலகில் நிகழ்ச்சிகள் தோன்றுகின்றன என ஸ்பிராட் விளக்கினர். அக்கால மக்கள் ஷேக்ஸ்பியர் தமது நூல்களில் குறிப்பிட்ட தேவதைகள் இருப்ப தாக நம்பவில்லை என்று குறிப்பிட்டுள்ளார் அவர். உதாரணமாக, அரசன் ஓபிரானும் (Oberon) அவரது தேவதைக் குழாமும் நம்பத் தகுந்தவர்கள் அல்லர் என்று எடுத்துக் காட்டியுள்ளார். புரட்சி நடந்த காலத்தில் ஆங்கிலேயர் போப் நிகழ்த்தியதாகக் கூறப்பட்ட அற்புதச் செயல்களில் நம்பிக்கை கொள்ளாததற்குக் காரணம் அவர்களுக்கு அற்புதச் செயல்களில் நம்பிக்கை இல்லாததேயாகும். பிளேக் (Plague) போன்ற கடும் வியாதி, தீப்பிடித்துக்கொள்ளல், வெள்ளம் ஆகியவை கடவுள், மனிதர் இழைத்த கொடுமைகளுக்குத் தண்டனையாக ஏற்படுத் தியவை என்று எண்ணவேண்டா என்று ஸ்பிராட் தன் நூலில் குறிக் கின்றர். விஞ்ஞானத்தைக் கொண்டு புதியனவற்றைக் கண்டுபிடித்து மக்களின் வாழ்க்கையைச் சிறக்கச் செய்வதே விஞ்ஞானிகளின் நோக்க மாக இருக்கவேண்டும் என்று முடிவாக ஸ்பிராட் கூறியுள்ளார்.

மேற்கண்டவற்றில் இருந்து, மக்கள் பாதிரியார்களின் வாழ்த்து கள் மட்டும் தங்கள் வாழ்க்கையைச் சிறப்படையச் செய்யும் என்று நினைக்கவில்லை என்பது புலனகும். பதினெட்டாம் நூற்ருண்டு முடிவுறும் காலத்தில் மந்திரக்காரிகளைப்பற்றி மாறுபட்ட கருத்துடைய ராய் இருந்தனர். நீதிபதிகள் மந்திரக்காரிகளைப்பற்றிய கதைகளைத் தீர ஆராய்ந்து பார்க்கத் தொடங்கினர். அதன் விளைவாக அக் கதை களில் பெரும்பான்மையானவை கட்டுக்கதைகள் என விட்டுவிட நினைத்தனர். ஆனல், சாதாரண மக்கள் மந்திரக்காரிகள் உண்டு என்றும் அவர்கள் எதையும் செய்ய சக்தி வாய்ந்தவர் என்றும் முன் போலவே நம்பிவந்தனர். ஆனல், உயர்ந்த வகுப்பினரான ஜென்ட்ரிகள் மந்திரக்காரிகளைப் பற்றிய கதைகளில் அக்காலத்தில் நம்பிக்கையற்றவ ராக இருந்தனர். அத்துடன் மந்திரக்காரிகள் எனக் குற்றம் சாட்டப் பட்டோர் தண்டனையில் இருந்து தப்பிக்க இரண்டு முறைகள் உதவின. இங்கிலாந்தின் பொதுச் சட்டப்படி எவரும் துன்புறுத்தப்பட்டு குற்றத்தை ஒப்புக்கொள்ள செய்யக்கூடாது; அத்துடன் விசாரணை நடத்துவதிலும், தீர்ப்பு அளிப்பதிலும் ஜூரிகளுக்கு எவ்வளவு அதிகாரம் இருந்ததோ அவ்வளவு அதிகாரம் நீதிபதிகளுக்கும் இருந்தது. பத்தொன்பதாம் நூற்ருண்டுவரை, நாட்டுப்புறங்களில் சாதாரண மக்கள் மந்திரக்காரிகள் என சந்தேகிக்கப்பட்டவர்களை

எரிக்கவொட்டாமலும், நீரில் மூழ்கடிக்கப்படாமலும் ஜென்ட்ரி வகுப்பினர் தடுத்துவந்தனர். சாதாரண மக்களின் விருப்பத்திற்கு எதிராக கி.பி. 1736-ல் மந்திரக்காரி என நிச்சயிக்கப்பட்டோர் கொல்லப்படவேண்டும் என்று இருந்துவந்த சட்டத்தைப் பார்லிமென்ட் ரத்துச் செய்தது.

மந்திரக்காரிகளைப்பற்றி இருந்துவந்த நம்பிக்கை, கற்றோர் மனத்தில் முதலில் மாறிக்கொண்டே வந்தது. அத்தகைய மாற்றத்தை சர் ஜான் ரேஸ்பி (Sir John Reresby), யார்க் (York) நகரின், கி.பி. 1687-ல் எழுதிவைத்துள்ள விசாரணையைப் பற்றிய குறிப்பில் இருந்து அறிந்துகொள்ளலாம்.

'ஏழைப் பெண்ணொருத்தி மந்திரக்காரி என்று குற்றம் சாட்டப் பட்டாள். மந்திரத்தில் நம்பிக்கையுடையோர் அவள் மந்திரக்காரி என நிரூபிக்கப் போதுமான அத்தாட்சி இருந்ததாகக் கருதினர். அவள் மந்திர சக்தியால் ஒரு சிறுவனை, தன்னைப் பார்த்தபோது வலிப்பு தோன்றித் துன்புறச் செய்தாள் என்பதுதான் அவள்மேல் சாற்றப்பட்ட குற்றமாகும். ஆனால், அப்படித் துன்புறுத்தப்பட்டதாகச் சொல்லப் பட்ட சிறுவனின் உடலில் வலிப்பு தோன்றியதன் காரணமாக உருவ அமைப்பில் எவ்வித மாறுதலும் இருக்கவில்லை. அத்துடன் வலிப்பு தோன்றியபோது அவன் வாயில் நுரை தள்ளவில்லை. மேலும் வலிப்பு சிறிது சிறிதாகக் குறையாமல் திடீர் என்று நின்றுவிட்டது. இவைகளை மனத்தில் கொண்ட நீதிபதி மந்திரக்காரி எனக் குற்றம் சாட்டப் பட்டவளை விடுவித்தார்.'

'இருந்தாலும் மற்றவர்கள் அம் மந்திரக்காரியைப்பற்றி என்ன நினைத்தார்கள் எனக் கூறவேண்டும். ஒரு சிறைச்சாலைக் காவலாளி அம் மந்திரக்காரி விசாரிக்கப்பட்ட அன்று இரவு சிறைச்சாலையை காத்துக்கொண்டிருந்தான். மணி பதினொன்று இருக்கும்போது ஒரு பலத்த ஒலி கேட்டு முற்றத்திற்கு வந்தான். அங்கே ஒரு கட்டுக் காகிதம் கதவின் அடியில் இருந்து வெளிவரக் கண்டான். நிலவின் ஒளியில் அக் கட்டுக் காகிதம் ஒரு குரங்காக முதலில் மாறியது. பிறகு வான் கோழியாக மாறியது. அத்துடன் அவை அவன் அருகில் அங்கும் இங்குமாக உலாவின. இதைக் கண்ணுற்ற சிறைக் காவலாளி மற்றவனை அழைத்தான். அவனும் ஒரு கட்டுக் காகிதம் மேலும் கீழுமாக குதிப் பதையும் மெதுவாக கதவின் அடியில் நுழைந்து மறைந்ததையும் கண்ணுற்றான். இப்படியாக அவர்கள் சொல்லக் கேட்டதைக் குறித் துள்ளேன்.'

மேலே கண்டவற்றில் இருந்து சர் ஜான் ரேஸ்பி, நீதிபதி ஆகியோர் கற்றறிந்தவராகவிருந்ததால், மந்திரக்காரியைப் பற்றிய

குற்றச்சாட்டில் நம்பிக்கையற்றவராக விருந்தனர். அதற்கு மாருக ஜுரிகளும், சிறைக்காவலாளிகளும் கல்வி அறிவில்லாதவராக விருந்ததால், மந்திரக்காரியைப் பற்றிய புகாரை நம்பிவிட்டனர்.

இரண்டாம் சார்லசும் அவரது சபையோரும் விஞ்ஞானம் வளர்வதற்குத் தங்கள் ஆதரவைக் காட்டினர். அதுமட்டுமன்றி பியூரிடன்களின் மதவெறியால் சீர்குலேந்திருந்த நாடகக் கலேக்கும் அவர்கள் ஆதரவு கொடுத்துப் புத்துயிர்பெறச் செய்தனர். ஆனல், நாடகக் கலே புத்துயிர் பெற அவர்கள் கையாண்ட முறைதான் அவ்வளவு சிறந்ததாக விருக்கவில்லே.

புத்துயிர் பெற்ற நாடகக் கலே ஷேக்ஸ்பியர் காலத்தில் இருந்ததில் இருந்து பலவிதத்திலும் மாறுபட்டிருந்தது. நாடகம் நடைபெற்ற விடம் கூரைவேயப்பட்டு மூடப்பெற்றது. நாடக மேடை மெழுகுவர்த்தி களேக் கொண்டு பிரகாசிக்கச் செய்யப்பட்டது. நடிகரின் மேல் ஒளி விழும் வண்ணம் மேடையின் அடிப்புறத்தில் விளக்குகள் பொருத்தப் பெற்றிருந்தன. காட்சி முடிந்ததைக் குறிக்க மேலிருந்து கீழே விழும்படி திரையும் அமைக்கப்பெற்றிருந்தது. மேடையின்மீது இயற்கைக் காட்சியைப் பிரதிபலிக்கும் திரைச்சீலே விடப்பட்டிருந்தது. உள்நாட்டுப் போர் நடப்பதற்குமுன் பெண் பாத்திரங்களேச் சிறுவர் ஏற்று நடித்துவந்தனர். ஆனல், இப்போது பெண்களே பெண் வேடம் தாங்கி நடித்தனர். மக்கள் நாடகத்தைப் பார்ப்பதற்கும், பெண் வேடதாரிகளேப் பார்ப்பதற்கும் வந்தனர். நெல் குவின் (Nell (Gwynne) என்பார் நடிப்புக் கலேயில் தேர்ந்தவராக இல்லாவிடினும், அவரது உடற்கட்டிற்காகவும் அழகிற்காகவும் அவரை ஒரு சிறந்த நடிகையாகக் கருதினர். இவ்விதமாக அரசாட்சி திரும்பவும் நிறுவப் பட்டபின் நாடகக் கலே ஷேக்ஸ்பியரின் காலத்திலிருந்து மாறுபட் ருந்தது.

பல ஆண்டுக் காலமாக, டுரூரி சாலேயில் (Drury Lane) இருந்த ராயல் தியேட்டர் (Theatre Royal) என அழைக்கப்பட்ட நாடகக் கொட்டகை ஒன்றே லண்டன் நகரில் இருந்துவந்தது. சிற்சிலவாண்டு களில் இதைத் தவிர ஒன்று அல்லது இரண்டு நாடகக் கொட்டகைகள் இருந்தன. மாகாணங்களில் கொட்டகைகள் இருக்கவில்லே. ஊர் ஊராகத் திரிந்து நாடகங்கள் நடத்திவந்த குழுக்கள் சிறந்தவையாக இருக்கவில்லே. அவைகளின் எண்ணிக்கையும் மிகச் சிலவாக விருந்தது. ஆங்கிலேயர் அக்காலத்தில் நடிப்பதைவிட இசையைச் சிறந்ததாகத் கருதினர். பர்செல் (Purcell) வாழ்ந்த காலத்தில் இசைக்கே முதலிடம் கொடுக்கப்பட்டது. நாடகக் கலே லண்டன் நகரம் ஒன்றில்தான் சிறப்புற்றிருந்தது. அங்கும் சாதாரண மக்கள் நாடகக்

கலையிலும் நாடகத்திலும் விருப்பமுள்ளவராக இருக்கவில்லை. நகரில் வாழ்ந்துவந்த நாகரிகமானவர்களும் சபையினருமே அவற்றைப் பெரிதும் விரும்பி வந்தனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் சிறிது காலத்திற்கு அரச அவையினர், நாகரிகமானவர்கள் ஆகியோரின் கீழ்த்தரமான எண்ணங்களுக்கேற்ற நாடகங்களே நடத்தப்பட்டு வந்தன.

அரசாங்க அலுவலகங்கள் இருந்த ஒயிட் ஹாலிலும் (Whitehall) வெஸ்ட்மின்ஸ்டரிலும் (Westminster) கடின சித்தமும் நல்லொழுக் கத்தில் நம்பிக்கையில்லாதோறும் இருந்து வந்தனர் எனக் கூறலாம். இரண்டாம் சார்லசின் அவையில் முதன்முதலில் பதவியில் இருந்த விக், டோரி ஆகிய கட்சிகளின் தலைவர்கள் நல்லொழுக்கம் உடையோ ரெல்லாம் அப்படி நடிப்பவர்கள் என்ற எண்ணமுடையவராய் இருந்தனர்.

> ‘ஒரு மதக் கொள்கைகளை ஒருவர் ஏற்றுக்கொள்ளச் செய்ய வேண்டுமானல் அவருக்கு வருடத்திற்கு இருநூறு பவுன் வருமானம் வர வழிசெய்தால் போதும். உண்மையானது என்று ஏற்றுக்கொள்ளப்பட்டதை உண்மையானதன்று என்று வாதிக்கச் செய்வதற்கு மேலும் இருநூறு பவுன் கொடுத்தால் அப்படிச் செய்யச் செய்துவிடலாம்.’
>
> [ஹூடிப்ராஸ் என்ற நூல் (Hudibras)]

இருப்பினும், இரண்டு ஆயிரம் பியூரிடன் பாதிரியார்கள் தங்கள் மதத்தைவிட்டு ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக்கொள்ள மனமில்லாததால் தாங்கள் வகித்து வந்த பதவியை விட்டுவிட்டனர் (1662). அவர்களுக்கு இருபது ஆண்டுக் காலத்திற்குமுன் ஆங்கிலிகன் மதப் பாதிரியார்கள் பியூரிடன் மதத்தை ஏற்க மனமில்லாமல் தங்கள் பதவியைவிட்டு விலகிக்கொண்டனர். டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் அடிக்கடி நிகழ்ந்த மதமாற்றத்திற்கு ஏற்றவாறு தங்களது மதத்தை மாற்றிக்கொள்ளாத கத்தோலிக்க, பிராடஸ்டென்ட் பாதிரியார்களின் எண்ணிக்கையில் பத்து மடங்கு பியூரிடன், ஆங்கிலிகன் பாதிரியார்கள் இக்காலத்தில் மதமாற்றத்திற்கு உடன்படாது தங்கள் பதவியை இழந்தனர். இதிலிருந்து மக்கள் போலிகளாக இருக்கவில்லை என்றும், தங்கள் மதத்தில் நம்பிக்கையுடையவராய் இருந்தனர் என்றும் தெரிகின்றது. அவையினரும் அரசியல்வாதிகளுமே போலிகளாக விருந்தனர் எனக் கூறலாம். இதற்குப் பல காரணங்கள் இருந்தன. அரசனும், பிரபுக்களில் இளவயதினராகவிருந்தோரும், தங்கள் படிப்பைவிட்டும், வீட்டைவிட்டும் புரட்சிக் காலத்தில் ஓடவேண்டி யிருந்தது ஒரு காரணமாகும். அவர்கள் அக்காலத்தில் வறுமை

நிலையில் இருந்ததும் மற்றொரு காரணமாகும். மதத்தின்பேரில் அவருக்கிழைத்த தீங்குகளும் காரணமாகவிருந்தன எனக் கூறலாம். அத்துடன் இழந்த பதவியைத் திரும்பப்பெற அவர்கள் உடன்படிக்கைகளைச் செய்துகொண்டு பிறகு அவற்றை மாற்றிக்கொண்டு இருந்ததும் அவர்களை ஒரு மதத்திலும் பூரண நம்பிக்கை இல்லாதவராகச் செய்திருந்தது. இப்படிப் பலவிதக் காரணங்களால் அரசனும், அவனைச் சார்ந்த அவையினரும் நல்லொழுக்கத்தில் நம்பிக்கையற்றவராகவும், எந்த மதத்திலும் பூரண நம்பிக்கையற்றவராகவும் இருந்தனர்.

அவையினரிடையேயும் அரசியல்வாதிகளிடையேயும் இருந்த அவநம்பிக்கை, அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் எழுதப்பட்ட நாடகங்களில் பிரதிபலித்தது. அதற்குக் காரணம் என்னவென்றால், நாடகாசிரியர்கள் அவையினரின் ஆதரவை எதிர்நோக்கி நின்றிருந்ததாகும். அப்படி எழுதப்பட்ட நாடகங்களில் வீசெர்லி (Wycherley) என்பார் எழுதிய 'நாட்டுப்புற மனைவி' (Country Wife) என்ற நாடகம் பெரிதும் பாராட்டப்பெற்றது. அந் நாடகத்தின் தலைவன் பேடி வேடம் தாங்கிப் பெண்களின் இருப்பிடத்திற்குள் அனுமதி பெற்றுப் பெண்களின் கற்பை அழிக்கிறான். இந் நாடகம் எழுதப்பட்ட காலத்திற்கு முன்னும் பின்னும் அத்தகைய நாடகங்களை ஆங்கிலேயர் விரும்பிப் பாராட்டியதில்லை.

இது இப்படி இருப்பினும், அழிந்துவிடும் நிலையில் இருந்த நாடகக் கலை புத்துயிர்பெறச் செய்யப்பட்டுவிட்டது. ஷேக்ஸ்பியர், பென் ஜான்சன் (Ben Johnson) ஆகியோரின் நாடகங்கள் திரும்பவும் நடத்தப்பெற்றன. கவித்திறன் படைத்த டிரெய்டனின் (Dryden) நாடகங்களும் நடத்தப்பெற்றன. அத்துடன் பர்செல்லின் (Parcell) பாக்களும் இசையும் நாடகத்தைச் சிறக்கச் செய்தன. ஒரு தலைமுறைக் காலம் முடிவதற்குள் வீசெர்லியின் நாடகங்களுக்கு ஆதரவில்லாமல் போயிற்று. வீசெர்லியின் நாடகங்களுக்குப் பதிலாக காங்கிரீவ் (Congreve), ஃபார்குகார் (Farquhar) ஆகியோரின் நகைச்சுவை நாடகங்கள் இடம்பெற்றன. வீசெர்லி, காங்கிரீவ், ஃபார்குவார் ஆகியோர் அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட (Restoration) காலத்து நாடகாசிரியர்கள் என்று பொதுவாகக் கருதப்படுகின்றனர். ஆனால், காங்கிரீவும் ஃபார்குவாரும் கி.பி. 1688-ல் நடந்த புரட்சிக்கால நாடகாசிரியர்கள் என்று குறிப்பதே சரியானதாகும். ஏனென்றால், அவர்கள் இருவரும் மூன்றாம் வில்லியம், ஆன் அரசி ஆகியோரின் ஆட்சிக் காலத்தேதான் தங்கள் நாடகங்களை எழுதி வெளியிட்டனர்.

வீசெர்லி எழுதிய நாடகங்களுக்குக் குறுகிய கால அளவிற்கே ஆதரவு இருந்தது என்று கூறலாம். ஆனால், அக் குறுகிய காலத்திற்குள்

வீசெர்லியின் நாடகங்கள், நாடகக் கலைக்குப் பெரும் தீங்கிழைத்து விட்டன. பல தெய்வ பக்தி உடைய குடும்பங்களும், நல்லொழுக்கம் நிறைந்த குடும்பங்களும், பியூரிடன்களைப்போல் நாடகங்களை வெறுக்கத் தொடங்கினர். பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதிக் காலம் வரை அத்தகைய குடும்பத்தைச் சார்ந்த இளையோர் நாடகங்கள் பார்க்க அனுமதிக்கப்படவில்லை. பொதுவாக நேரத்தை வீணுக்க எண்ணுதவர் நாடகங்கள் பார்ப்பதை விரும்பவில்லை. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் கீழ்த்தரமான நாடகங்கள் எழுதப்பட்டும் நடிக்கப்பட்டும் வந்தமை, சிரத்தையுடன் வாழ்ந்துவந்தோரை நாடகங் களைப் பார்க்க விருப்பமில்லாதவராகச் செய்துவிட்டது. இத்தகைய நிலை இங்கிலாந்தில் மட்டுமே இருந்தது என்று குறிப்பிடவேண்டும். இங்கிலாந்தில் வீசெர்லியின் நாடகங்களுக்கு மதிப்பு இருந்தபோது, ஃபிரான்சில் மோலியர் (Moliere), கொர்னேலி (Corneille), ராசீன் (Racine) ஆகியோரின் நாடகங்களுக்கு மதிப்புக் கிடைத்தது. ஃபிரான்சில் நாடகங்கள் கீழ்த்தரமானவையாக இருக்கவில்லை. அத்துடன் நாடகங்கள் கருத்தைத் தூண்டுபவையாக இருந்தன. அதனுல் அக்காலமுதற்கொண்டு ஃபிரெஞ்சுக்காரர்கள் நாடகங்கள் பார்ப்பதை ஒரு முக்கியச் செயலாகக் கொண்டனர். அது ஆங்கி லேயர்கள் எலிசபெத் அரசியின் காலத்தில் நாடகங்கள் பார்ப்பது நாகரிகத்தை வளர்க்க உதவும் என்று எண்ணமுடையவராய் இருந்ததை ஒத்திருந்தது.

நியூடன், 'பிரின்சிபியா' (Principia) என்ற தன் நூலை வெளியிட்ட தும், மில்டன் (Milton) 'பாரடைஸ் லாஸ்ட்' (Paradise Lost) என்ற நூலை வெளியிட்டதும், டிரைடன் (Dryden) 'அப்சலாம் அண்டு அசிடோபெல்' (Absalom and Achitophel) என்ற நூலை எழுதியதும், பர்செல், (Purcell) இசை வழங்கியதும், ரென் (Wren) அழகிய கிருத்தவாலயங்கள் கட்டுவித்ததும், எவ்லினும் (Evelyn) பெப்பியும் (Pepy) அன்ருட வாழ்க்கையில் அவர்கள் கண்ட புதுமை களைக் குறித்து வைத்ததுமான காலம் இங்கிலாந்து அறிவிலும், நாகரிகத்திலும் சிறந்து விளங்கிய காலங்களில் ஒன்ருகும். பல துறையிலும் ஆங்கிலேயர் சிறந்து விளங்குவதற்குக் காரணமாய் இருந்தவைகளில் ஒன்று, இங்கிலாந்திலிருந்த அச்சகங்களாகும். இருப்பினும், வெளியிடப்பட்டவைகளில் சிறிதளவே அச்சடிக்கப்பட்டன என்பதைக் குறிப்பிடவேண்டும்.

அச்சகத்தார் எதையும் அக்காலத்தில் அச்சடித்துவிடமுடியாது. புத்தகமோ, சிறு புத்தகங்களோ, மற்ற எந்த அச்சடிக்கப்பட்ட தாள்களோ, எவையும் அதிகாரிகளின் உத்தரவின்றி அச்சடிக்கப்பட மாட்டா. மதத்தின் எதிரிகளும், அரசாங்கத்தின் எதிரிகளும் அவர்

களின் கருத்துகளை ரகசியமாகவே அச்சடித்து வெளியிடவேண்டி யிருந்தது ; லண்டன் நகரில் அப்படி நடந்துவந்தது. அதைக் கண்டு பிடிக்க ரோகர் லெஸ்டிரேஞ் (Roger Lestrange) என்பார் பல ஆள்களை வைத்திருந்தார். அவர்களால் கண்டுபிடிக்கப்பட்டவர்கள் கொடிய தண்டனைகளுக்குள்ளாக்கப்பட்டனர்.

அச்சிடப்படுவதைக் கண்காணிக்கும் அதிகாரிகள் பழங்காலத் திருந்ததுபோல் தங்கள் அதிகாரத்தை அரசனிடம் இருந்து பெறவில்லை. பார்லிமென்ட் ஒரு சட்டத்தின் மூலம் அச்சிடப்படுபவை அதிகாரிகளின் உத்தரவின்மேல்தான் அச்சிடப்படவேண்டும் என்று கட்டளையிட்டது. கி.பி. 1663-ல் முதன்முதலில் கவாலியர்களைக்கொண்ட பார்லிமென்ட், அச்சிடுவதற்கு அதிகாரிகளின் உத்தரவைப் பெறவேண்டும் என்று கட்டளையிட்டது. உருண்டைத் தலையரின் கருத்துகளும், பியூரி டன் மதக் கருத்துகளும் அச்சிடப்பட்டுப் பரவாமல் இருக்கவே அந்தச் சட்டம் இயற்றப்பட்டது. இச் சட்டம் திரும்பத் திரும்ப இயற்றப் பட்டு வந்தது. காமன்ஸ் சபையில் விக் கட்சியினர் பெருவாரியாக இருந்த காலங்களிலும், பார்லிமென்ட் கூட்டப்படாமல் இருந்த காலங்களிலும் (1679-1685) மட்டுமே அச் சட்டம் திரும்ப இயற்றப் படவில்லை. இரண்டாம் ஜேம்சின் காலத்தில் திரும்பவும் இயற்றப்பட்ட அச் சட்டம் கி.பி. 1688ஆம் ஆண்டு நிகழ்ந்த பெரும் புரட்சிக்குப் பிறகு காலம் கடந்ததாகச் செய்யப்பட்டது. கி.பி. 1696ஆம் ஆண்டிற்குப் பிறகு அதிகாரிகளின் உத்தரவில்லாமலேயே எதையும் அச்சடித்து வெளியிட ஆங்கிலேயர் உரிமையுள்ளவர்களாகவிருந்தனர். அச்சடித்த பிறகு, அதில் எவரைப் பற்றியாவது இழிவாக எழுதப்பட்டிருந்தால், அல்லது அரசாங்கத்தை எதிர்த்துக் கிளர்ச்சியைத் தூண்டிவிடும்படி எழுதப்பட்டிருந்தால், ஜூரிகளின் முன்னிலையில் வெளியிட்டவர் குற்றம் சாட்டப்படலாம். மில்டன் இறந்த ஒரு தலைமுறைக் காலத்திற்குப் பிறகு அவரது கனவான, அதிகாரிகளின் உத்தரவு பெறுமல் வெளியிடும் உரிமையை, ஆங்கிலேயர் பெற்றனர்.

அச்சிட்டு வெளியிடுவதற்கு அதிகாரிகளின் அனுமதி தேவையாய் இருந்த காலத்திலும், இலக்கியம், விஞ்ஞானம் சம்பந்தமான நூல் களைத் தடையின்றி வெளியிட முடிந்தது. அரசியல்வாதிகளே தடை யின்றி எதையும் வெளியிட முடியாத நிலையில் இருந்தனர். நூல்களை வெளியிடுவதற்கு அனுமதி கொடுத்தோர்[1] மதக் கோட்பாட்டிற்கு

[1] கி.பி. 1663-ல் அதிகாரிகள் உத்தரவில்லாமல் எந்த நூலையும் வெளியிட முடியாது என்று சட்டம் செய்யப்பட்டது. அரசியலைப்பற்றிய நூல்களுக்கு உள் துறைச் செயலாளரின் (Secretary of State) அனுமதி தேவைப்பட்டது. லார்ட் சான்சலரின் (Lord Chancellor) அனுமதி, சட்டப் படிப்புப் புத்தகங் களை வெளியிடத் தேவைப்பட்டது. போர், போர்வீரர் ஆகியோரைப்பற்றிய நூல்கள்

முரண்ணனவற்றை மட்டும் வெளியிட அனுமதி கொடுக்க மறுத்தனர். பேரடைஸ் லாஸ்ட் (Paradise Lost), பில்கிரிம்ஸ் பிராக்ரஸ் (Pilgrim's Progress) ஆகிய நூல்களை வெளியிடுவதற்கு அவர்கள் அனுமதி அளித்தனர். கி.பி. 1686-ல் ராயல் சொசைட்டியின் (Royal Society) தலைவராய் இருந்த சாமிவேல் பெபீஸ் (Samuel Pepys) அளித்த அனுமதிப் பத்திரத்தை, நியூடனின் நூலான பிரின்சிபியாவில் (Principia) காணலாம்.

மேற்கண்ட நூல்களுக்கு அனுமதி தரப்பட்டிருந்தாலும் வெளியான நூல்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கவில்லை. அச்சிட அனுமதி பெறவேண்டும் என்று இயற்றப்பட்ட சட்டத்தினுல் அச்சிடும் வேலையில் தலைமைத் தொழிலாளிகளாய் இருந்தோரின் எண்ணிக்கை இருபதாகக் குறைக்கப்பட்டது. தலைமைத் தொழிலாளிகளாய் இருந்தோர் நடத்திவந்த அச்சுக்கூடங்களின் எண்ணிக்கையும் குறைக்கப்பட்டது. இரண்டு சர்வகலாசாலைகளிலும் இருந்த தலைமைத் தொழிலாளிகளைத் தவிர மற்றத் தலைமைத் தொழிலாளர்கள் லண்டன் நகரிலேயே இருந்தனர். இதனுல் நாட்டின் மற்றப் பாகங்களில் அறிவு வளர்ச்சிக்குப் போதுமான வாய்ப்பு இல்லாமல் போய்விட்டது. ஆனுல், அடுத்த நூற்றுண்டில், அச்சிடுவதற்கு அனுமதி தேவையுள்ளதாகச் செய்யப்பட்டபோது மாகாணங்களில் அச்சிடும் தொழில் பரவியது. ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் இரண்டு சர்வகலாசாலைகளில் இருந்தும் லண்டனில் இருந்தும் மட்டுமே எல்லா நூல்களும் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டன. ஆரஞ்சு பிரதேசத்தைச் சார்ந்த வில்லியம் (William of Orange) மேற்கில் இருந்த எக்சீடர் (Exeter) நகரத்தைப் பிடித்துக்கொண்டபோது அவரது அறிக்கையை அச்சிட்டு வெளியிட அச்சுவேலை செய்பவர் ஒருவரும் அங்கிருக்கவில்லை.

அச்சிடப்படுவதைத் தணிக்கை செய்வது இரண்டாம் சார்லசின் ஆட்சிக்காலத்தில் ஒரு சில ஆண்டுக்காலத்திற்கு நிறுத்திவைக்கப்பட்டிருந்தது. அக்காலத்தைத் தவிர மற்ற ஆண்டுக்காலத்தில் தினச் செய்தித்தாள்கள் இங்கிலாந்தில் வெளியிடப்படவில்லை என்று கூறலாம். கெசெட் (Gazette) எனப்பட்ட அரசாங்க வெளியீடு ஒன்றுமட்டுமே அக்காலத்தில் வெளிவந்துகொண்டிருந்தது. ஆனுல், செய்திக் கடிதங்கள் (News letters) லண்டனில் இருந்து எழுதப்பட்டு நாட்டின் பல பாகங்களுக்கும் அனுப்பப்பட்டது. இந்த முறையிலேதான் விக், டோரி ஆகிய கட்சிகள் தோற்றுவிக்கப்பட்டன. ஒவ்வொரு கட்சியைச்

---

ஏர்ல் மார்ஷலின் (Earl Marshall) உத்தரவின்றி வெளியிட முடியாது. மற்ற எல்லாவற்றையும்பற்றிய நூல்களைக் கான்டர்பரியில் இருந்த ஆர்ச் பிஷப் (Archbishop of Canterbury), லண்டன் நகரில் இருந்த பிஷப் (Bishop of London) ஆகியோரின் அனுமதியின் பேரில்தான் வெளியிட முடியும்.

சேர்ந்தவர்களும் இம்முறைப்படிதான் தங்களுக்குள் தொடர்பு கொண் டிருந்தனர். பந்தயங்கள், இலக்கியக் குறிப்புகள், மற்ற எல்லாச் செய்தி களும் அம்முறைப்படியே பரவின. செய்திக் கடிதங்களின் எண்ணிக்கை பெருகப் பெருக லண்டனில் அக் கடிதங்களை எழுத நியமிக்கப்பட்டிருந்தோரின் எண்ணிக்கையும் பெருகிவந்தது. இதி லிருந்துதான் பிற்காலத்தில் பத்திரிகையாளர்களும், செய்தித் தாள்களைப் பிரசுரிப்போரும் தோன்றினர்.

தனிப்பட்டோர் தங்கள் இல்லங்களில் நூல்களைச் சேர்த்துச் சிறு நூல்நிலையங்களை வைத்திருப்பது சாதாரணமாகிக்கொண்டுவந்தது. உயர்ந்த குடும்பத்தினரான சாமுவேல் பெப்பீஸ், காட்டன் (Cotton) ஆகியோரின் இல்லங்களில் எண்ணிறந்த நூல்கள் சேர்த்து வைக்கப் பட்டிருந்தன. இயோமென்களின் சிறிய பண்ணைவீடுகளில் அவரது சக்திக்கேற்றவாறு நூல்கள் சேர்த்து வைக்கப்பட்டிருந்தன. உயர்ந்த குடும்பத்தினர் பண்ணைவீடுகளில் எண்ணிறந்த நூல்களைச் சேர்த்து வைப்பது பெருமைக்குரியதாக எண்ணப்பட்டு வந்தது. ஹானேவர் வம்சத்தினரின் காலத்திலே தனிப்பட்டோர் நூல்நிலையங்களைத் தங்கள் இல்லங்களில் வைத்திருப்பது பெருகியது.

கேம்பிரிட்ஜ், ஆக்ஸ்ஃபோர்டு ஆகியவிடங்ளில் மட்டுமே பொது நூல் நிலையங்கள் இருந்தன. செல்வந்தராக இல்லாதவர் வெளிவந்த நூல்களைக் கற்றுணரும் வசதியற்றவராய் மற்றவிடங்களில் வாழ்ந்து வந்தனர். ஃபீல்ட்ஸ் (Fields) என்னுமிடத்தில் செயின்ட் மார்டின் ஆலயத்தில் ரெக்டார் (Rector) பதவி வகித்துவந்த டெனிசன் (Tenison) என்பார் கி.பி. 1684-ல் லண்டன் நகரில் ஒரு பொது நூல் நிலையத்தை ஏற்படுத்தினர். அவர் பிற்காலத்தில் கான்டர்பரி ஆலயத் தின் ஆர்ச்பிஷப்பாகப் பணியாற்றினர்.

எவ்லின் (Evelyn) என்பார் தன் நாட்குறிப்புப் புத்தகத்தில் பின்வருமாறு குறித்துள்ளார் :

'செயின்ட் மார்டின் ஆலயத்தில் ஒரு பொது நூலகத்தை ஏற்படுத்துவதற்காக டாக்டர் டெனிசன் என்னுடைய உதவியையும் சர் கிறிஸ்டோபர் ரென் (Sir Christopher Wren) என்பாரின் உதவியையும் நாடி எழுதினர். எந்தவிடத்தில் அதை அமைப்பது என்றும் அதன் அமைப்பைப்பற்றியும் எழுதுமாறு கேட்டிருந்தார். அங்கே முப்பது அல்லது நாற்பது இளவயதினரான பாதிரியார்கள் இருந்தனர் என்றும், அவர்கள் பிரபுக்களின் பிள்ளைகளுக்குப் பாது காப்பாளராகவோ அல்லது ஆசிரியராகவோ இருந்துவந்தனர் என்றும், அவர்கள் அடிக்கடி மது விற்கப்படும் இடத்திற்கோ அல்லது காப்பிக் கடைக்கோ போய்வந்தனர் என்றும், அதற்காக அவர்களைத் தான்

கண்டித்ததாகவும், அதற்கு அவர்கள், நூல்கள் இருக்குமானால் எங்கள் நேரத்தை அவைகளைப் படிப்பதில் செலவிடுவோம் என்று கூறியதாகவும் அவர் எழுதியிருந்தார். இதன் காரணமாகவே டெனிசன் ஒரு பொது நூலகத்தை ஏற்படுத்த எண்ணினார். லண்டனைப் போன்ற பெரிய நகரத்தில் ஒரு பொது நூலகம் இல்லாதது வருந்தத்தக்கதே.'

டெனிசன் செயின்ட் மார்டின் ஆலயத்தில் இருந்த திறந்தவெளியில் ஒரு பெரிய கட்டடத்தைக் கட்டுவித்தார். அதன் மாடியில் ஒரு பொது நூலகத்தை ஏற்படுத்தினார். கீழே ஏழைகள் தொழில் பயிலும் இடமொன்றை அமைத்தார். [ஸ்ட்ரிபி என்பார் எழுதிய 'ஸ்டோஸ் லண்டன்' என்ற நூல்; (Strype's "Stow's London", 1720, Ch. VI, p. 68).]

டெனிசன் நூல் நிலையம் ஏற்படுத்தியதற்குப் பத்து ஆண்டுகளுக்கு முன், கேம்பிரிட்ஜில், டிரினிடி (Trinity) கல்லூரியில், மாஸ்டர் (Master) பதவியில் இருந்த ஐசாக் பாரோ (Isaac Barrow) என்ற பெயருடைய டெனிசனின் நண்பரொருவர், ரென்னைக் கொண்டு கல்லூரிக்குச் சிறந்த நூலகம் ஒன்றைக் கட்டுவித்திருந்தார். கிரின்லிங் கிப்பன்ஸ் (Grinling Gibbons) என்பார் புத்தகங்கள் வைக்கப் பட்டிருந்த மர அடுக்குகளில் சிற்பங்களைச் செதுக்கி அழகு செய்தார். அரிய, கிடைக்கப்பெறாத புத்தகங்கள் அதிகக் கவனத்துடன் பார்த்துக் கொள்ளப்பட்டன. அத்துடன் அவைகளை வைப்பதற்கு மிகவும் அழகான அடுக்குகள் வைக்கப்பெற்றிருந்தன.

நகரங்களுக்கு அப்பால் தொலைவில் இருந்த கிராமங்களில் வாழ்ந்து வந்தவரினும், நகரங்களில் வாழ்ந்துவந்தவரினும், குறிப்பிடத்தக்க அளவு, எழுதவும் படிக்கவும் கற்றிருந்தனர்; கணக்கு வைத்து வந்தனர். வியாபாரம், வதந்தி, அன்பு முதலியவை இடம்பெற்ற கடிதங்களை ஒருவருக்கொருவர் எழுதிக்கொண்டனர். நாட்குறிப்பு எழுதுவது பழக்கத்தில் இருந்தது. நாட்குறிப்புப் புத்தகத்தில் சாதாரணமாகவும் சுருக்கெழுத்திலும் எழுதினர். இருப்பினும், அதிகம் கற்காதவர் குறைந்த அளவே, வெளிவந்த புத்தகங்களைப் படித்து வந்தனர். அதனால் கிருத்தவ ஆலயங்களில் பிரார்த்தனையின்போது பாதிரியார் தம் உரையில் மதக்கோட்பாட்டைப் பற்றியும் அரசியல் கொள்கைகளைப்பற்றியும் தாராளமாக எடுத்துரைப்பார். ஆங்கிலிகன் மதம் திரும்பவும் நிறுவப்பெற்றபின் நாட்டுப்புறங்களில் இருந்த பாதிரியார்கள் ஏசு கிருத்துவைப் பற்றிப் பேசியதைவிட அதிகமாக முதலாம் சார்லஸ் செய்த தியாகத்தைப்பற்றிப் பேசினர். அரசியலைப் பற்றி தீவிரமாக அவர்கள் தங்கள் பிரசாரத்தின்போது பேசினர் எனக் கூறலாம். அதேசமயம் மதத்தைப்பற்றியும் அவர்கள் விளக்கி வந்தனர் எனக் கூறலாம். முக்கியமாக லண்டனிலும், மற்றச் சிலவிடங்களிலும்,

ஆங்கிலிகன் மதத்தைச் சேர்ந்த சிறுபான்மையான பாதிரியார்கள், நன்கு கற்றவராகவும், மனிதத்தன்மையுடையவராகவும், பேச்சுத்திறன் உடையவராகவும் இருந்துவந்தனர். அவரது பிரசாரங்கள் ஆங்கிலிகன் மதத்தின் பெருமையை யாவரும் உணரும்படி செய்தன. அவர்கள் ஆங்கிலிகன் மதத்திற்குப் பெருமை தேடித்தந்தனர். அப்படிப் பட்டோரில், டெனிசன், ஸ்டில்லிங்ஃப்ளீட் (Stillingfleet), ஐசாக் பாரோ ஆகியோர் சிலராவர். டில்லாட்சன் (Tillotson) என்பார் அத்தகையோரில் முதன்மையானவர் எனக் கூறலாம்.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட பின்பும், புகழ்பெற்ற புரட்சிக்குப் (Glorious Revolution) பின்னும் மதஸ்தாபனம் அறிவு வளர்ச்சிக்குப் பெரும் தொண்டு செய்தது. ஒவ்வொரு மதத்தைச் சேர்ந்தவரும் அவரவர் வாதத்திற்கு எடுத்துக்காட்டாகப் பழங் காலத்தில் நடைமுறையில் வழங்கிவந்ததை எடுத்துக்காட்டினர். இப்படிப் பழமையை எடுத்துக்காட்டாகச் சுட்டிக்காட்டும் பழக்கம் பழங்கால வரலாற்றை ஆராயத் தூண்டியது. அதன் விளைவாக ஆராய்ச்சியாளர்கள் இங்கிலாந்தின் இடைக்கால வரலாற்றை நன்கு கற்றவர்களாக இருந்தனர். இங்கிலாந்தில், முதன் முதலில் இடைக்கால வரலாற்றைக் கற்றுத் தேர்ந்தவர்கள் இக்காலத்திலேதான் வாழ்ந்தனர் எனக் கூறலாம். பாதிரியார்களும் பாதிரியார் அல்லாத மற்றக் கற்றறிந் தோரும் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டனர். மோனஸ்டிகான் (Monasticon) என்ற நூலின் ஆசிரியரான சர் வில்லியம் டக்டேல் (Sri William Dugdale), ஆக்ஸ்ஃபோர்டைச் சார்ந்த ஆன்டனி உட் (Antony Wood), ஹியர்ன் (Hearne), ஜெரிமி கோலியர் (Jeremy Collier), நிகல்சன் (Nicholson), மதச்சீர்திருத்த இயக்கத்தைப்பற்றி முதன் முதலில் முறைப்படி எழுதிய வரலாற்று அறிஞர் பர்னெட் (Barnet), 'ஆங்கிலியா சேக்ரா' (Anglia Sacra) என்ற நூலின் ஆசிரியர் வார்டன் (Wharton), ஃபோடேரா (Fodera) என்ற நூலை எழுதிய ரைமர் (Rymer) என்பார், 'கன்சிலியா' (Concilia) என்ற நூலை எழுதிய வேக் (Wake), வில்கின்ஸ் (Wilkins) ஆகியோரும், அக்காலத்தில் மதத் திலும் அரசியலிலும் இருந்துவந்த கருத்துவேறுபாடுகளினால், அவற்றைப்பற்றி தீர ஆராயத் தொடங்கினர். அதன் விளைவாகவே அவர்கள் மேற்குறிப்பிட்ட தத்தம் நூல்களை எழுதி வெளியிட்டனர். மேலும் அவர்கள் இடைக்காலத்திய நூல்களை வெளியிட்டனர். அத்துடன் ஆங்கிலோ-சாக்ஸன் காலத்தையும், இடைக்காலத்தையும் சார்ந்த பழமை வாய்ந்த பொருள்களைப்பற்றி கி.பி. 1660ஆம் ஆண்டிற்கும், கி.பி. 1730ஆம் ஆண்டிற்கும் இடையே, ஆராய்ந்து வெளியிட்டனர். அவர்கள் அப்படி வெளியிட்டவை தரத்திலும், அளவிலும் ஆச்சரியப்படும் அளவிற்கு உயர்ந்தவைகளாக விருந்தன. இவர்கள் வாழ்ந்த காலத்திற்குப் பிறகு ஆங்கிலேயர் இடைக்கால

வரலாற்றில் முன்போல் ஊக்கம் காட்டவில்லை. இவர்கள் வாழ்ந்த காலத்தை அடுத்து வோல்டெரின் (Voltaire) காலம் தொடங்கியது எனக் கூறலாம். அவரது காலத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தைப்பற்றி அறிந்திராமல், பொதுவாக எல்லாக் காலங்களையும்பற்றி அறிந்திருத்தல் அறிஞர்களிடம் எதிர்பார்க்கப்பட்டது. வோல்டெரின் காலத்திற்குப் பிறகு மறுபடியும், பழமையில் ஊக்கங்காட்டுவது இயற்கையாகப் பட்டது. அக்காலத்திலேதான் ஐவான்ஹோ (Ivanhoe) என்ற பெயருடைய நவீனம் வெளிவந்தது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இடைக்காலத்திலும், பிற்பகுதியிலும், மெயிட்லன்டு (Maitland) என்ற பெயரால் அழைக்கப்பட்ட இருவரும், ஸ்டப்ஸ் (Stubbs) என்பாரும், மற்றும் பல அறிஞர்களும், இடைக்கால வாழ்க்கை, இடைக்காலக் கருத்துகள் ஆகியவற்றில் ஊக்கங் காட்டினர். இவ்வாசிரியர்கள், ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் இடைக்காலத்தைப்பற்றித் தெளிவாகவும் விரிவாகவும் எழுதப்பட்ட நூல்களை அடிப்படையாகக் கொண்டு தம் நூல்களை எழுதி முடித்தனர். ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில், இங்கிலாந்தின் மதமான ஆங்கிலிகன் மதமே ரோமன் கத்தோலிக்க மதம், ஜினீவாவில் தோன்றிய கால்வினிஸம், ஆகிய மதங்களைவிடச் சிறந்தது என எடுத்துக்காட்டப் பல நூல்கள் எழுதப்பட்டன. மேலும் இரண்டாம் ஜேம்ஸைத் தொடர்ந்து அரச ுகைக் கருதிய நான்ஜூரர் (Nonjuror) என அழைக்கப்பட்ட பாதிரியார்களின் போக்கைச் சரியானது என எடுத்துக்காட்டவோ, அல்லது அவரல்லாத மற்றவர்கள் மூன்ரும் வில்லியத்தின் அரசாளும் உரிமையை ஏற்றுக்கொண்டது சரியானது என்று எடுத்துச் சொல்லவோ பல நூல்கள் அக்காலத்தில் எழுதப்பட்டிருந்தன. [பேராசிரியர் டேவிட் டக்லஸ் என்பார் எழுதியுள்ள 'ஆங்கிலேய அறிஞர்கள்', என்ற நூலைப் பார்க்கவும் (See 'English Scholars' Prof. David Douglas, 1929)].

கேம்பிரிட்ஜில், டிரினிடி கல்லூரியின் தலைவராகவும் (Master), வேதாந்தப் பாடத்தைக் கற்பித்த பேராசிரியராகவும் இருந்த ரிச்சர்ட் பென்ட்லி (Richard Bentley) என்பார் கிரேக்க ரோமானிய இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவராகவிருந்தார். அக்காலத்திலும், பிற்காலத்திலும் கிரேக்க ரோமானிய இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்திருந்த ஆங்கிலேயர்களில் அவரே தலைசிறந்தவராக விளங்கினர். கி.பி. 1699-ல் அவரது பலாரிஸ் (Phalaris) என்று பெயரிடப்பட்ட நூல் வெளிவந்தது. கிரேக்க ரோமானிய இலக்கியப் படிப்பில் ஒரு புதிய காலத்தை அந் நூல் துவக்கி வைத்தது. அது ஒரு பன்னிரண்டு ஆண்டுகளுக்குமுன், நியூடனின் பிரின்சிபியா (Principia) என்ற நூல் பௌதிகப் படிப்பில் ஒரு புதிய காலத்தைத் துவக்கியதை ஒத்திருந்தது. பலாரிஸ் வெளிவந்தபின் அதில் கண்ட கருத்துகளுக்குப் பலர் எதிர்ப்பு

தெரிவித்து அறிக்கைகள் வெளியிட்டனர். அவ்வறிக்கைகளுக்கு பென்ட்லி பதில் அறிக்கைகள் வெளியிட்டார். இவை அனைத்தும் லத்தீன் மொழியில் இல்லாமல் ஆங்கில மொழியில் வெளியிடப்பட்டன. ஆங்கில மொழியில் அவ்வறிக்கைகள் வெளியிடப்பட்டதால், பலர் கிரேக்க ரோமானிய இலக்கியங்களைப்பற்றி நிலவிவந்த கருத்து வேறுபாடுகளை அறிய முடிந்தது. அறிக்கைகளை ஆங்கிலத்தில் வெளியிட்டாலும், கிரேக்க ரோமானிய இலக்கியங்களின் குறிப்புகளைத் தொடர்ந்து லத்தீன் மொழியிலேயே வெளியிட்டு வந்தார். நியூடனும் தன் நூலான பிரின்சிபியாவை லத்தீன் மொழியிலேதான் வெளியிட்டிருந்தார். அறிவிற்சிறந்த நூல்களும் விஞ்ஞான நூல்களும் எல்லா நாட்டினரும் புரிந்துகொள்ளும் மொழியில் எழுதப்படவேண்டும் என்ற கொள்கையின்படி, பென்ட்லியும் நியூடனும் லத்தீன் மொழியில் வெளியிட்டிருந்தனர்.

இதற்கிடையில் குவேகர் (Quaker) என அழைக்கப்பட்டோர், மற்றக் கிருத்தவ மதங்களைவிட அதிகமான ஆதரவு மக்களிடம் பெற்று வந்தனர். கிராம்வெல்லின் ஆட்சிக்காலத்தில் மற்ற மதத்தைச் சார்ந்த பாதிரியார்களைப்பற்றிப் பேச உரிமை இருந்தபோது, ஜியார்ஜ் ஃபாக்ஸ் (George Fox) என்பவரால் தோற்றுவிக்கப்பட்ட குவேகர் மதம் வளர்ந்து வேரூன்றியது. ஆனால், குவேக்கர்கள் நடந்துகொண்ட விதமும், அவர்கள் பேசியதும், மதத்தைப்பற்றிப் பேசப் பேச்சுரிமை இருந்த காலத்திலேயே அவர்களுக்கு இழிவைத் தேடித்தந்தது. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக் கொள்ளாதவர் துன்புறுத்தப்பட்டபோது, கிளாரென்டன் சட்டங்களின் படி குவேக்கர்களும் துன்புறுத்தப்பட்டனர். மற்ற மதங்களைச் சார்ந் தோரைவிட குவேக்கர்கள் அதிகமாக அவதியுற்றனர் எனக் கூறலாம். குவேக்கர்கள் அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்ற மதத்தை ஏற்க மறுத் தனர் ; சடங்குகளை நிராகரித்தனர் ; பாதிரியார்கள் தேவையில்லை என்ற கொள்கை யுடையவராய் இருந்தனர் ; குறிப்பிட்ட கோட்பாடுகள் ஏதும் இல்லாதவராகவும் இருந்தனர். இத்தகையோர் அவர்கள் தோன்றிய காலத்திற்கு ஓர் அரை நூற்றாண்டிற்குமுன் தோன்றியிருந்தால், அவர்கள் சுட்டெரிக்கப்பட்டிருப்பர். இக்காலத்தில் அவர்கள் கசையடிகளுக்கும் சிறைவாசத்திற்கும் உள்ளாக்கப்பட்டனர். அவர்கள் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட தண்டனையைப் பணிவுடனும் பொறுமையுடனும் தாங்கிக்கொண்டது, அவரது மதம் பலராலும் விரும்பப்படுவதற்குக் காரணமாகவிருந்தது. பலர் குவேக்கர் மதத்தைத் தம் மதமாக ஏற்றுக்கொண்டனர்.

குவேக்கர்கள் பணிவுள்ளவராக இருந்தாலும் அவர்கள் சற்றே பிடிவாதமுள்ளவர்களாகத் தோன்றினர். அது அக்காலத்தில் பதவி

வகித்து வந்தோரின் வெறுப்பை அவர்களுக்குத் தேடித்தந்தது. நீதி மன்றங்களில் அவர்களை விசாரணைக்காகக் கொண்டுசென்றபோது நீதிமன்றத்துள்ளும் தொப்பி அணிந்தே அவர்கள் இருந்தனர். உயர்ந்த வகுப்பினர் மற்றவர்களைத் தங்களுக்குச் சமமானவர் என்று நினைக்காமல் நடந்துகொண்டதையும், அக்காலத்தில் உயர்ந்த குடும்பத்தினரையும், உயர்ந்த பதவியில் இருந்தோரையும் கடவுளை வணங்குவதைப்போல் மக்கள் வணங்கிவந்ததையும் குவேக்கர்கள் வெறுத்தனர். ஆனால், தம்முடைய கருத்துகளை அவர்கள் வெளியிட்ட முறை சிற்சில சமயங்களில் முட்டாள்தனமானதாகவிருந்தது.

ஃபாக்ஸ் (கி.பி. 1691-ல் அவர் இறந்தார்) பிரசாரம் செய்த காலத்தில் அவரது பிரசாரம் சாதாரண மக்களிடையே ஓர் எழுச்சியை ஏற்படுத்தியது எனக் கூறலாம். ஆயிரக்கணக்கான சாதாரண மக்கள் அவரது மதத்தை ஏற்றுக்கொண்டனர். மூன்ரும் வில்லியம், ஆன் அரசி (Anne) ஆகியோரின் ஆட்சிக் காலத்தில் எண்ணிக்கையில் இங்கிலாந்தின் முக்கிய மதங்களில் ஒன்ருகத் திகழ்ந்தது குவேக்கர் மதம். பதினெட்டாம் நூற்ருண்டில் குவேக்கர்கள் பிரசாரம் செய்து தங்கள் மதத்தைப் பரப்புவதை நிறுத்திக்கொண்டனர். அவர்கள் தாங்கள் மேற்கொண்ட கொள்கைகளின்படி தாம் வாழ்வதையே குறிக் கோளாகக் கொண்டு மற்றவர் மிகவும் மதிக்கத்தக்கவாறு வாழத் தலைப் பட்டனர். அவர்கள் பிரசாரம் செய்வதை விட்டுவிட்டாலும், ஒவ்வொரு குடும்பத்தினரும் அவரவர் பிள்ளை பெண்டுகளுக்குத் தாம் மேற் கொண்டு வாழ்ந்துவந்த கொள்கைகளையும் முறையையும் கற்பித்து அம்முறையிலே வாழ வழி வகுத்து வந்தனர்.

ஒவ்வொருவரும் கிருத்தவ மதக் கோட்பாடுகளில் தீவிரப் பற்றுடையராக இருப்பதைவிடக் கிருத்து போதித்த நற்பண்புகள் உடையராய் இருத்தல் வேண்டும் என்பதே ஃபாக்ஸ் எடுத்துரைத்த வற்றின் சாரமாகும். குவேக்கர்களைத் தவிர மற்றக் கிருத்தவ மதங்கள் எதுவும் அத்தகைய வழியில் மக்கள் வாழவேண்டும் என்று வற்புறுத்த வில்லை. குவேக்கர்கள், வியாபாரத்திலும் குடும்ப வாழ்க்கையிலும், அத்தகைய நற்பண்புகள் உடையராய் வாழ்ந்து தமக்குச் சிறப்புத் தேடிக்கொண்டனர். இங்கிலாந்து அத்தகையோரைத் தோற்றுவித்து வளரச் செய்ததற்குப் பெருமை கொள்ளலாம். பியூரிடன் மதம் மிகத் தீவிரமான கொள்கைகளை உடையதாய் இங்கிலாந்தில் தோற்ற மளித்தது. பியூரிடன் மதமானது நாட்டின் மதமாக ஏற்றுக்கொள்ளப் படாமல் ஒதுக்கப்பட்டபோது அம் மதத்தின் தீவிரம் குறைந்து குவேக்கர் மதம் உருவாக வழி பிறந்தது. குவேக்கர் மதம் பியூரிடன் மதத்தின் வழிவந்த ஒரு சிறந்த மதமாகும்.

யார்க்ஷயரில், வெஸ்ட் ரைடிங் (West Riding) என்ற பிரதேசத்தில் திரிபெர்க் (Thryberg) என்ற ஊரைச் சார்ந்த சர் ஜான் ரேஸ்பி (Sir John Reresby) என்ற பெயருடைய பிரபு ஒருவரின் சுய சரிதை கவாலியர் கட்சியைச் சேர்ந்த, பெரிய பண்ணையைச் சொத்தாகக் கொண்ட பிரபுக்களின் நிலை எவ்வாறு மாறிக்கொண்டே வந்தது என்பதை எடுத்துக் காட்டுகின்றது. நேஸ்பி (Naseby) என்றவிடத்தில் நடந்த போருக்கு ஓர் ஆண்டிற்குப் பிறகு கி.பி. 1646-ல் சர் ஜானின் தந்தை இறந்தார். அவர் இறந்தபோது அவர் பண்ணையின் பேரில் 1,200 பவுன்கள் கடன் வாங்கியிருந்தார். கடன் வாங்க நேர்ந்ததற்குக் காரணம் அவர் பயிர்த் தொழிலில் கவனம் செலுத்தாதது அன்று; அதற்கு மாருகப் போரில் தான் ஈடுபட்டதன் காரணத்தாலே அவர் அவ்வளவு கடன் வாங்க நேர்ந்தது. உருண்டைத் தலையர்கள், அவர் இறப்பதற்கு இரண்டு ஆண்டுகளுக்குமுன், அவரைச் சிறைப்படுத்தியிருந்தனர். ஆனல், அவரது இல்லத்திலேயே அவரைச் சிறைவாசத்தைப்போல் அவர்கள் இருக்கச் செய்திருந்தனர். பார்க் (Park) என்றவிடத்தில் அவருக்குச் சொந்தமான காட்டில் இருந்த மரங்கள் அனைத்தையும் வெட்டி விற்று, தனக்கு விதிக்கப்பட்ட அபராதத்தை அவர் செலுத்தினர். ரேஸ்பியின் மகன் சர் ஜான் (Sir John) தன் தந்தை இறந்தபோது பன்னிரண்டு வயதினராக இருந்தார். அவர் தன் தாயின் சொற்படி கவனமாக நடந்து நிலேயைச் சீர்செய்ய முயன்று வந்தார். அடுத்த இருபது ஆண்டுக் காலம் முடிவடைவதற்குள் சிறிது சிறிதாகக் குடும்பத்தின் கடன்களை அவர் தீர்த்துவிட்டார். அதனல் கி.பி. 1668-ல் அவர் தனது பண்ணை சிறந்து விளங்க, பல காரியங்களைத் தொடங்க முடிந்தது.

அவர் தன் பண்ணை வீட்டின் வெளிப்புறச் சுவர்களை ஒழுங்கான கற்களைக் கொண்டு ஒழுங்கான தோற்றமளிக்குமாறு செய்வித்தார். வீட்டில் இருந்த அறைகள் பலவற்றின் சுவர்களை, புதியதாக மர வேலைப்பாடு உள்ளனவாகச் செய்வித்தார். பயிர் செய்யத் தகுந்த நிலங்கள் சிலவற்றை மான்கள் வாழ்ந்துவந்த பூங்காவுடன் இணைத்து அப் பூங்காவை விரிவடையச் செய்தார். அப் பூங்காவைச் சுற்றிலும் கற்களைக் கொண்டு சுவர்கள் எழுப்பி வேலியமைத்தார். தன் குடும்பம் சீர்குலைந்து இருந்த காலத்தில் குடும்பத்திற்குச் சொந்தமாயிருந்த காட்டில் இருந்த மரங்களை வெட்டி விற்க நேர்ந்தது. அதை ஈடு செய்ய ஆஷ் (Ash), சைகாமோர் (Sycamore) என்ற பெயருள்ள மரங்களை அக் காட்டில் வளர்க்கச் செய்தார். உயர்ந்த ரக மரங்களைவிட இம் மரங்கள் அப் பாகத்தில் நன்கு வளர்ந்ததே அம் மரங்களை அவர் வளர்க்கச் செய்ததற்குக் காரணமாகும். பூந்தோட்டத்தில் ஒரு நீர் ஊற்றை உண்டாக்கி அத் தோட்டம் அழகுபெறச் செய்தார். அதே போல் கோடைக்கால விடுதியில் குகையைப் போன்ற அறை ஒன்றை

ஏற்படுத்தினர். வெளியில் இருந்து தண்ணீர் ஈயத்தால் ஆன குழாய்கள் மூலம் கொண்டுவரப்பட்டது. தோட்டத்தின் மதிற்சுவர் களின் உயரம் அதிகமாக்கப்பட்டது. இவை அனைத்தையும் ஒரே சமயத்தில் உண்டாக்காமல் விட்டு விட்டு, ஒன்றன்பின் ஒன்ருக வெவ்வேறு ஆண்டுகளில் செய்து முடித்தார். புகழ் பெற்ற புரட்சி (1688) நிகழ்வதற்குமுன் அவர் பண்ணை வீட்டில் இருந்த கிருத்தவ ஆலயத்தை அழகுபடுத்துவதில் முனைந்திருந்தார். அதே சமயம் சாளரங்களையும் அழகுள்ளவையாக்க முயன்றுகொண்டிருந்தார். ஆலயத்தின் மாடத்தில் ஒரு புதிய மணியையும் பொருத்துவதில் அவர் ஈடுபட்டிருந்தார்.

சர் ஜான் கல்லாதவராக இருக்கவில்லை. லத்தீன் மொழியில் ஓரளவு திறமை உடையவராக விருந்தார். அதே சமயம் கிரேக்க மொழியை ஓரளவு பேசத் தெரிந்தவராகவும் இருந்தார். இத்தாலிய மொழியைச் சரளமாகப் பேசும் வன்மையுடையவராய் இருந்தார். அத்துடன் ஃபிரெஞ்சு மொழியைப் ஃபிரெஞ்சுக்காரர்களைப் போலவே பேசும் சக்தியுடையவராய் இருந்தார். அவர் இளைஞராக இருந்தபோது இத்தாலியில் இருந்த பதூ (Padua) சர்வகலாசாலையிலும், வெனீஸ் (Venice) நகரிலும் சிலகாலம் தங்கி, இசையும் கணிதமும் கற்றிருந்தார். அவர் தமது நாட்டில் அமைதிக் காவலராகப் பணியாற்றிவந்தார். அவரது பண்ணையைச் சார்ந்த கிருத்தவாலயத்தின் பாதிரியார் ஓர் ஆண்டிற்கு 40 பவுன்கள் சம்பாதித்தார். அவ் வரும்படி, கிராமங்களில் பணியாற்றிவந்த பல பாதிரியார்களின் வருமபடியைவிட அதிக மானதாக இருந்தது. பார்லிமென்டில் சர் ஜான், ஆல்டுபரோவின் (Aldborough) பிரதிநிதியாகவிருந்தார். அந்தத் தொகுதியில் ஒன்பதுபேர்தான் ஓட்டுரிமையுள்ளவராக இருந்தனர். சர் ஜான் டோரி கட்சியைச் சார்ந்த மிதவாதியாக விளங்கினர். காமன்ஸ் சபையின் அங்கத்தினராகவும், அவையினரில் ஒருவராகவும், அரசாங் கத்தில் ஊதியம் பெற்ற அதிகாரியாகவும், அவர் வெவ்வேறு சமயங்களில் இருந்துவந்தார். அவர் எந்தப் பதவி வகித்தாலும், நாட்டுப்புறத்தில் பண்ணை வீட்டில் வாழும் பிரபுவின் குடும்பத்தைச் சேர்ந்தவராகவே வாழ்க்கை நடத்திவந்தார்.

சர் ஜானைப் போன்ற பெரிய பண்ணையை வைத்திருந்தோர் அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் நிலைமையைச் சமாளிக்க முடிந்தது. அதற்கு மாருகச் சிறு நிலக்கிழார்களான ஸ்குவீர் வகுப்பினர் பதினேழாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் தங்கள் சொத்தை வைத்துக் கொண்டு வாழமுடியாமல் தங்கள் நிலையில் தாழ்ந்துவந்தனர். ஸ்குவீர் வகுப்பினர் தங்கள் நிலத்தில் இருந்து கிடைத்த வருமபடியைக் கொண்டே வாழ்க்கை நடத்தி வந்தனர். அவர்கள் அனேகமாக வேறு

விதத்தில் வரும்படி இல்லாதவராக இருந்தனர். அத்துடன் அவர்கள் அதிகம் படிக்காதவராகவிருந்தனர். மேலும் தான் வாழ்ந்து வந்த வட்டாரத்திற்காப்பால் என்ன நடந்தது, எப்படி இருந்தது என்று அறியாதவராகவிருந்தனர். பொருளாதார நிலை அவர்களுக்குப் பாதகமானதாக மாறிக்கொண்டு வந்தது. புது முறைகளின்படி தங்களது நிலத்தை வளமுள்ளதாகச் செய்யத் தேவைப்பட்ட முதல் அவர்களிடம் இருக்கவில்லை. உள்நாட்டுப் போரின் காலத்தில் ஸ்குவீர் வகுப்பினர் அடைந்த நஷ்டம் அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட பின்னும் பல ஆண்டுக் காலத்திற்கு ஈடுசெய்ய முடியாததாய் இருந்தது. அத்துடன் பெரிய பண்ணைகளின் சொந்தக்காரர்களும், வழக்கறிஞர்களாகவிருந்து பெரும் செல்வத்தைத் தம்மிடம் கொண்டோரும், அரசியல் அல்லது வாணிபம் ஆகியவற்றில் பெருஞ் செல்வம் ஈட்டியோரும், தங்கள் செல்வத்தைக் கொண்டு நிலங்களை வாங்கத் தயாராகவிருந்தனர். மேலும், நிலம் படைத்திருந்தும் வறுமையில் உழன்றுவந்த ஸ்குவீர் வகுப்பினரின் நிலங்களை அதிக விலை கொடுத்து வாங்கிக்கொள்ள முன்வந்தனர். பெட்ஃபோர்டில் (Bedford) டியூக் (Duke) பதவியில் இருந்தோர், அம்முறையிலேயே ஏகருக்குமேல் ஏகர் நிலமாக வாங்கியும், பண்ணைக்குமேல் பண்ணையாக வாங்கியும், பெட்ஃபோர்டுஷயர் முழுமைக்கும் அவர்களே உரியவர் என்ற நிலைக்கு உயர்ந்தனர்.

இவ்விதமாகச் சிறுநிலக்கிழார்கள் மறையத் தலைப்பட்டது இரண்டாம் சார்லஸின் ஆட்சிக் காலத்தில் தொடங்கியது எனக் கூறலாம். அம் மாறுதல் மூன்றும் ஜார்ஜின் ஆட்சிக் காலத்தில் முற்றுப்பெற்றது. கி.பி. 1668-ல் நிகழ்ந்த புகழ்பெற்ற புரட்சிக்குப்பின் டோரி கட்சியினர் முதலாளிகளிடமும், விக் கட்சியைச் சார்ந்த பிரபுக்களிடமும் கொண்டிருந்த வெறுப்பிற்கு, முதல் வைத்திருந்தோர், சிறுநிலக் கிழார்கள் மறைவதற்குக் காரணமாகவிருந்ததேயாகும். ஸ்குவீர் வகுப்பைச் சேர்ந்தோர் எப்போதும் டோரி கட்சியைச் சேர்ந்தவராக விருந்தனர். அவர்கள் தங்கள்மேல் விதிக்கப்பட்ட நில வரியை வெறுத்தனர்; மூன்றும் வில்லியமும், மார்ல்பரோ பிரபுவும் (Marlborough) நடத்திவந்த போர்ச் செலவிற்காகவே நிலவரி தங்களிடம் இருந்து வசூலிக்கப்பட்டது என்று எண்ணினர். அத்துடன் தாங்கள் செலுத்திய வரிப்பணம், உயர்ந்த குடியில் பிறக்காத, படைவீரர்களைத் திரட்டிக் கொடுத்தோரின் கைக்குச் சென்றதையும் அவர்கள் வெறுத்தனர். அத்துடன் அரசாங்கம், ஆங்கிலிகன் மதத்தை ஏற்றுக் கொள்ளாத டிஸ்ஸென்டர் (Dissenter) என அழைக்கப்பட்டோரிடமிருந்தும், லண்டன் வாசிகளிடமிருந்தும், டச்சுக்காரர்களிடமிருந்தும் போரை நடத்துவதற்காகக் கடன் வாங்கியிருந்தது. அந்தக் கடனுக்காகவும் வரிப் பணம் செலவு செய்யப்பட்டது. இவை யாவற்றையும்

ஸ்குவீர் வகுப்பினர் வெறுத்தனர். தற்காலத்தில் விதிக்கப்படும் வருவாய் வரி (Income Tax), ஒருவர் இறந்தபின் அவரது வாரிசுகள் கொடுக்கும் வரி (Death Duties) ஆகியவை நிழக்கிழார்களைத் தற்காலத்தில் பாதிப்பதைப்போல், அக்காலத்தில் நிலவரி நிழக்கிழார்களைப் பாதிக்காவிட்டாலும், சிறுநிலக்கிழார்கள் நிலவரியை ஒரு பளுவாகவே கருதினர்.

போரும் வரிச்சுமையும் சிறுநிலக்கிழார்கள் மறைவதைத் துரிதப்படுத்தின எனக் கூறலாம். ஆனால், சிறு பண்ணைகள் மறைந்து, பெரும் பண்ணைகள் தோன்றியது பொருளாதார நிலையில் இயற்கையாகவே தோன்றிய மாறுதலாகும். இவ்வாறு பெரும் பண்ணைகள் தோன்றியமை தற்காலத்தில் சிறிய அளவில் வியாபாரம் நடத்திவந்த ஸ்தாபனங்கள் மறைந்து பெருமளவில் வியாபாரம் நடத்தும் ஸ்தாபனங்கள் தோன்றுவதை ஒத்திருந்தது. பயிர்த் தொழிலைக் கொண்டு நாட்டின் செல்வத்தைப் பெருக்க வழியிருக்கிறது என உணர்ந்தபோது, சமுதாயத்தில் அந்நாள்வரை பயிர்த்தொழில் நடைபெற்றுவந்த முறையை மாற்றி அமைக்கத் துணிவது இயற்கையே. பெருநிலக்கிழாரிடம் இருந்த முதலும், அவர்கள் அதைப் பயிர்த்தொழிலில் ஊக்கத்துடன் பயன்படுத்த எண்ணியிருந்ததும் பயிர்த்தொழிலில் ஒரு புரட்சியைத் தோற்றுவிக்க உதவியாயிருந்தது. பதினெட்டாம் நூற்றுண்டில் பெருநிலக்கிழார்கள் தங்கள் நிலங்களுக்கெல்லாம் வேலியமைத்து, புதுமுறைகளைப் பயிர்த்தொழிலில் கையாளத் தொடங்கினர். இதன் விளைவாக இங்கிலாந்தின் விளைச்சல் பெரிதும் அதிகரிக்கப்பட்டது.

இரண்டாம் சார்லஸின் ஆட்சிக் காலத்திலும்கூடப் பயிர்த் தொழிலில் புது முறைகளைச் சோதனை செய்துவந்தனர் எனக் கூற வேண்டும். பயிர்த்தொழிலைப்பற்றி நூல்களை வெளியிட்டு வந்தோர் புதுமுறையை விவசாயத்தில் புகுத்த வேண்டும் என்று வற்புறுத்தி வந்தனர். முற்போக்கு மனப்பான்மையுடைய சில நிலக்கிழார்களும் குடியானவர்களும் புதுமுறைகளைக் கையாண்டு வந்தனர். பதினெட்டாம் நூற்றுண்டில் அவர்கள் கையாண்டுவந்ததை மற்றவர்களும் ஏற்றுக் கொண்டு அம்முறைப்படி பயிர்த் தொழிலை நடத்தத் தொடங்கினர். விஞ்ஞான முறைப்படி ஒரு பயிருக்குப்பின் வேறொரு பயிரைப் பயிர் செய்தல், மழைக்காலத்தில் கால்நடைகளுக்குப் போதுமான உணவளித்தல், கிழங்கு வகைகளைப் பயிரிடல், புண்ணுக்கு செய்தல், தானியங்களைக் காற்று புகாதவாறு பாதுகாத்தல், தண்ணீரைத் தேக்கிவைத்தல் ஆகியவைகளே விவசாயத்தில் புதியதாகக் கொண்டுவரப்பட்டவை. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட காலத்தில் மேற்கண்டவை அனைத்தும் மக்களுக்குத் தெரிந்திருந்தது. ஆனால், அவைகளை விவசாயத்தில்

எல்லோரும் புகுத்தவில்லை. அதற்கு, நிலங்கள் வேலியிடப்படாமல் இருந்தது ஒரு காரணமாகும். நிலத்தில் பெரும் பகுதி தாழ்ந்த நிலையில் இருந்த ஸ்குவீர்களுக்கும் இயோமென்களுக்கும் சொந்தமா யிருந்தது. அவர்களிடம் புதுமுறைகளைக் கையாளப் போதிய முதலோ, அல்லது புதுமுறைகளைப்பற்றிய அறிவோ இல்லாமல் இருந்ததும் மற்றொரு காரணமாகும். உள்நாட்டுப் போர் முடிந்தவுடன் பெருநிலக் கிழார்களும் போதிய முதல் இல்லாமலும், புதுமுறைகளைக் கையாள மனமில்லாமலும் இருந்தனர். டர்னிப் டவுன்ஷெண்டு (Turnip Townshend), நார்ஃபோக்கைச் சார்ந்த கோக் (Coke of Norfolk) ஆர்தர் யங் என்பார் (Arthur Young) ஆகியோரின் காலத்தில் பெருநிலக்கிழார்கள் வைத்திருந்த முதலும், புதுமுறைகளைக் கையாள அவர்கள் காட்டிய ஊக்கமும், உள்நாட்டுப் போர் முடிந்த உடனே பெருநிலக்கிழாரிடை இருக்கவில்லை.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட பின் குத்தகைப் பணம் அதிகரிக்கத் தொடங்கியது. இருப்பினும், நிலக்கிழார்கள் அதிகமாகக் கிடைத்த வரும்படியை நிலத்தை மேலும் வளமுள்ளதாக்கப் பயன் படுத்தவில்லை. அத்துடன் ஊக்கமுள்ள குடியானவர்களை ஊக்கிவைக்க முன்வரவில்லை.

> 'நிலத்தைச் சரிவர பயிர் செய்யாத குடியானவன் நிலத்தைப் பெற்றான்; நிலத்தில் புதுமுறைகளைப் புகுத்தி பயிர் செய்ய நினைத்த குடியானவன் தன் நிலத்தை இழந்துவிட்டு மற்றோர் இடத்திற்குச் செல்ல வேண்டியிருந்தது.'

இப்படியாக அக்காலத்தில் பெர்க்ஷயரில் பேச்சு நிலவிவந்தது. நம் நாட்டு நிலக்கிழார்கள் பயிர்த் தொழிலில் சிறந்த முறைகள் ஏதும் அறியாதவராகவே வளர்ந்துவிட்டனர் என்று பெப்பீஸ் எழுதிச் சென்றார். புது முறைகளைப் புகுத்திக் காட்டுவோர் பலர் இல்லாமை யாலும், போதிய முதல் இல்லாமையாலும் பயிர்த்தொழிலில் மாறுதல்கள் பிற்காலத்திலேயே ஏற்பட்டன.

இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்காலத்தில் மேற் குறிப்பிட்ட காரணங்களால், பயிர்த்தொழில் முன்பிருந்தது போலவே இருந்து வந்தது. பயிர் நிலங்கள் வேலியிடப்பட்டு ஒதுக்கப்படாமல், எல்லோரும் சேர்ந்து திறந்த வெளி நிலங்களைப் பயிர் செய்து, விளைச்சலைப் பகிர்ந்து கொண்டனர். ஆனால், பெரிய பண்ணைகள் உண்டாக்கப்படுதலும், நிலங்களுக்கு வேலியமைக்கப்படுதலும், புதிய முறைகளைப் பயிர்த் தொழிலில் புகுத்தலும், ஏற்கெனவே நடைமுறைக்கு வந்துகொண் டிருந்தன.

விளைச்சலை அதிகரித்தலும், தானியங்களை ஏற்றுமதி செய்வதை அதிகரித்தலும் அரசாங்கத்தின் கொள்கையாய் இருந்தன. அயர்லாந்தில் இருந்து கால்நடைகளை இறக்குமதி செய்வதையும், வெளிநாடுகளில் இருந்து தானியங்களை இறக்குமதி செய்வதையும் சட்டங்களை இயற்றி பார்லிமென்ட் கட்டுப்படுத்தியது. அதே சமயம் தானியங்களை ஏற்றுமதி செய்த குடியானவர்களுக்குப் பணம் தாராளமாக, வெகுமதியாகக் கொடுக்கப்பட்டது. இக் கொள்கையை அரசாங்கம் இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்காலத்தில் இருந்து ஆன் அரசியின் (Queen Anne) ஆட்சிக்காலம் வரை கையாண்டுவந்தது. குடியானவர்களின் மீது இருந்த வரிச்சுமையை ஓரளவு குறைப்பதற்காகவும் அரசாங்கம் அக் கொள்கையைக் கையாண்டுவந்தது. அதனால் அக் கொள்கைகளைத் தாழ்ந்த நிலையில் இருந்த ஸ்குவீர் வகுப்பினரும், நிலத்தைச் சொந்தமாகக் கொண்ட இயோமென்களும் பெரிதும் வரவேற்றனர். ஆனல், அக் கொள்கை நாட்டில் இருந்தோரின் நலனைப் பாதித்தது. ஏன் என்ருல் உள்நாட்டுத் தேவைக்கு வேண்டிய விளைபொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. அரசாங்கத்தின் கொள்கை ஸ்குவீர், இயோமென் வகுப்பினருக்கு நன்மை செய்தது. அதைவிட, விற்பனைக்காக விளைச்சலைப் பெருக்கப் புதுமுறைகளைக் கையாளத் தயாராக இருந்தவர்களுக்கும் முதல் வைத்திருந்தவர்களுக்கும் மிக்க நன்மை பயந்தது. அவர்கள் சிறிய பண்ணைகளை வாங்கித் தங்கள் பண்ணைகளைப் பெருக்கிக் கொண்டேபோயினர்.[1]

விளைபொருள்கள் உற்பத்தியைப் பெருக்குவதற்கும் ஏற்றுமதியை அதிகரிப்பதற்கும் அரசாங்கம் கையாண்ட கொள்கை, ஹனேவர் வம்சத்தினரின் ஆட்சிக்காலம் வரை முழுப் பலனைத் தரவில்லை. எனினும், பிந்திய ஸ்டூவர்ட் அரசர்களின் ஆட்சிக்காலத்தில் அக் கொள்கையை அரசாங்கம் மேற்கொண்டது குறிப்பிடத்தக்கதோர் செய

[1] கி.பி. 1675-ல் ஃபால்மவுத் (Falmouth) என்றவிடத்தில் இருந்து எழுதப்பட்ட கடிதத்தில் இருந்து, ஒரு குவார்டர் (Quarter) அளவுள்ள கோதுமை ஏற்றுமதி செய்தால், 5 ஷில்லிங் வெகுமானம் கொடுக்கப்பட்டது எந்த அளவில் மக்களைப் பாதித்தது என்பதை அறிந்துகொள்ளலாம்.

கானரி தீவுகள் (Canaries), ஹாலந்து முதலிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதற்காக, இப் பாகத்தில் கோதுமை அதிக அளவில் வாங்கப்படுகிறது. இருபது காலன் அளவுள்ள கோதுமையின் விலை, அதனல், முன்பிருந்ததைவிட மூன்று ஷில்லிங் அதிகமாக விற்கப்படுகிறது. நாட்கள் செல்லச்செல்ல விலை மேலும் அதிகரிக்கும். ஏற்றுமதி செய்யப்படும் இடத்தில் ஒரு குவார்டர் அளவுள்ள கோதுமைக்கு வியாபாரி 5 ஷில்லிங் வெகுமானம் பெறுகிருர். அதனல் அவர் அதிகமாகக் கோதுமையை வாங்கி ஏற்றுமதி செய்யும் இடத்திற்கு எடுத்துச் செல்லத் தூண்டப்படுகிருர். பார்லிமென்ட் இயற்றிய சட்டத்தால் குடியானவர்கள் பயன் அடைந்தார்கள். ஆனல், உள்நாட்டு மக்களுக்கும், உள்நாட்டில் வியாபாரம் செய்து வந்த வியாபாரிகளுக்கும் அது பாதகம் விளைவித்தது. [அரசாங்க அதிகாரிகளின் கடிதங்கள் (State Papers, Dom. 1675, p. 403).]

லாகும். ஏனென்றால், மற்ற ஐரோப்பிய நாடுகள் ஏற்றுமதியைத் தூண்டுவதற்காக வியாபாரிகளுக்கு வெகுமானம் கொடுத்துதவவில்லை. இங்கிலாந்தில் மட்டுமே அப்படிச் செய்யப்பட்டுவந்தது. உள்நாட்டுப் போரின் காரணமாக, பார்லிமெண்ட், அரசனிடமிருந்து நாட்டின் பொருளாதாரக் கொள்கையை உருவாக்கும் உரிமையைப் பறித்துக் கொண்டுவிட்டது. இதுவே இங்கிலாந்தில் மட்டும் வியாபாரிகள் ஏற்றுமதியை அதிகரிக்கச் செய்ய அரசாங்கத்தால் வெகுமானம் கொடுக்கப்பட்டதற்குக் காரணமாக விருந்தது. காமன்ஸ் சபை பெற்றிருந்த பொருளாதாரக் கொள்கையை உருவாக்கும் உரிமை அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் ஊர்ஜிதம் செய்யப்பட்டது. புகழ்பெற்ற புரட்சி நிகழ்ந்தபோது அவ்வுரிமை மேலும் அதிகரிக்கப் பட்டது. காமன்ஸ் சபையில் பத்தில் ஒன்பது பங்கு அங்கத்தினர் நிலக்கிழார்களாகவிருந்தனர். அதனால் காமன்ஸ் சபை, நிலக்கிழார் களின் நலனில் கண்ணும் கருத்துமாயிருந்தது. ஒவ்வொரு தொகுதி யில் இருந்த வாக்காளர்களும், அத் தொகுதியில் இருந்த பெருநிலக் கிழாரையே, பார்லிமெண்டின் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுத்தனர். தங்களுக்குள் ஒருவரை அவர்கள் சாதாரணமாகத் தேர்ந்தெடுத்ததில்லை. அவர்கள் ஜென்ட்ரி வகுப்பைச் சேர்ந்த ஒருவரைத் தேர்ந்தெடுத்ததால், அவர்கள் தொகுதியின் நலன் பார்லிமெண்டில் கவனித்துக்கொள்ளப் பட்டது. அதே சமயம் திறமையும் அந்தஸ்தும் உடையவரைப் பார்லி மெண்டிற்கு அங்கத்தினராக அனுப்பிவைத்ததால் காமன்ஸ் சபையின் அதிகாரம் அதிகரிக்க வழி பிறந்தது. ஆல்டுபரோ தொகுதியினர், சர் ஜான் ரேஸ்பியைத் தேர்ந்தெடுக்காமல், சிறிய அளவில் வியாபாரம் செய்துவந்த, தங்களில் ஒருவரான வியாபாரியை அங்கத்தினராகத் தேர்ந்தெடுத்து, பார்லிமெண்டிற்கு அனுப்பிவைத்திருந்தால், அத்தகைய வரை, அரசனும், பிரபுக்களும், மந்திரிகளும் மதித்திருக்கமாட்டார்கள். லண்டனும், மற்றும் சில பெரிய நகரங்களும், வியாபாரத்தில் பொருள் திரட்டி மிக்க செல்வந்தராகவிருந்தவரைத் தங்கள் அங்கத்தினராகத் தேர்ந்தெடுத்துப் பார்லிமெண்டிற்கு அனுப்பிவைத்தன. அவ்வங்கத் தினர் செல்வமும் செல்வாக்குமுடையராகவிருந்ததால், அவர்கள் கூறிய தற்கு அரசனும், பிரபுக்களும், மந்திரிகளும் செவிசாய்த்தனர்.

நாளுக்கு நாள், மேலும் மேலும், காமன்ஸ் சபை நிலக்கிழார்களை அங்கத்தினராகக்கொண்ட சபையாக மாறிக்கொண்டு வந்தது. அதனால் நிலக்கிழார்கள் தங்கள் நலனை மட்டுமே கவனித்துக்கொண்டார்கள் என்று கூறுவதற்கில்லை. வியாபாரமும் தொழில்களும் வளர ஏதும் செய்யப்படவில்லை என்றும் கூறுவதற்கில்லை. காமன்ஸ் சபையில் அங்கத்தினராகவிருந்த 500 அங்கத்தினரில், 400-க்குமேல் நகரங்களின் பிரதிநிதிகளாக விருந்தனர். அதனால் பிரதிநிதிகள் நிலக்கிழார்களாக விருப்பினும், அவர்கள் வியாபாரமும் தொழில்களும் வளரத் தேவை

யானவைகளை எடுத்துக் கூறி செய்யப்பட வேண்டியவற்றை வற்புறுத்தும் நிலையில் இருந்தனர். அத்துடன், பிரபுக்கள் சபை காமன்ஸ் சபை ஆகிய இரண்டிலும் அங்கத்தினராகவிருந்த நிலக்கிழார்களில் பெரும்பாலானோர், முக்கியமாக மிக்க செல்வம் படைத்தோர், தொழில், வியாபாரம் ஆகியவற்றில் மிகுந்த அக்கறையுள்ளவராகவிருந்தனர். பயிர்த் தொழில் வளர்வதற்கு நடவடிக்கைகள் எடுத்துக்கொண்ட அதே சமயத்தில் பார்லிமெண்ட் ஆடை உற்பத்தித் தொழில் வளர்வதற்கும் நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டதில் ஆச்சரியமேதுமில்லை. பார்லிமெண்ட் அயல் நாட்டு ஆடைகளை இறக்குமதி செய்வதைத் தடை செய்தது. கச்சாக் கம்பளி ஏற்றுமதி செய்வதையும் பார்லிமெண்ட் தடை செய்தது; ஆங்கிலேய ஆடை வியாபாரிகளின் நலனுக்காக, அயர்லாந்து ஆடை வியாபாரிகளின் வியாபாரத்தைக் குலைத்தது; அத்துடன் இறந்தவர்களுக்கு இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட ஆடை ஒன்றே அணிவிக்கப்படவேண்டும் என்றும் கட்டளையிட்டது.

நீடித்த பார்லிமெண்ட் (Long Parliament) கி.பி. 1651-ல் கப்பல் போக்குவரத்துச் சட்டத்தை (Navigation Act) இயற்றியது. இங்கிலாந்தின் பொருள் வியாபாரம் ஆங்கிலேயரின் கையிலேயே இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடனேதான் அச் சட்டம் இயற்றப்பட்டது. அச் சட்டத்தினால் டச்சுக்காரர்கள் இங்கிலாந்தின் பொருள்களை எடுத்துச் சென்று வியாபாரம் செய்வது தடுக்கப்பட்டது. இச் சட்டம் இயற்றப்பட்டபோது லண்டனில் வாழ்ந்துவந்த வியாபாரிகள் அரசாங்கத்தின் கொள்கையை உருவாக்கிக்கொண்டிருந்தனர். அவர்கள் டச்சுக்காரரின் போட்டியைத் தகர்த்தெறிவதற்காகவே பார்லிமெண்டைக் கப்பல் போக்குவரத்துச் சட்டத்தை இயற்றச் செய்தனர். அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட பின்னும் கப்பல் போக்குவரத்துச் சட்டத்தில் எவ்வித மாறுதலும் செய்யப்படவில்லை. அவையினரும் பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் கப்பல் போக்குவரத்துச் சட்டங்களைப் பற்றி ஒரே மனத்தினராகவிருந்தனர். அவர்கள் இங்கிலாந்து, அதன் குடியேற்ற நாடுகள் ஆகியவற்றின் வியாபாரம் ஆங்கிலேயரின் கலங்களைக் கொண்டே நடத்தப்படவேண்டும் என்ற எண்ணமுடையராய் இருந்தனர். அவையினரும் பார்லிமெண்ட் அங்கத்தினர்களும் டச்சுக்காரரை வெறுத்தனர்.

இரண்டாம் சார்லஸின் அவையில் இருந்த அரச குடும்பத்தினரும், அமைச்சர்களும், பார்லிமெண்டில் அரசியல் கொள்கைகளை எடுத்துப் பேசியோரும், வெளிநாட்டு வியாபாரத்தை நடத்திவந்த, நகரங்களில் வாழ்ந்துவந்த, பெருஞ்செல்வம் படைத்த வியாபாரிகளிடம் தொடர்புடையவராகவிருந்தனர். நாட்டில் முக்கியமானவர்கள் என்று கருதப்பட்டோர் இந்தியா, ஆஃப்ரிக்கா, அமெரிக்கா ஆகிய நாடுகளுடன்

வியாபாரம் நடத்திவந்த கூட்டு வர்த்தகக் கம்பெனிகளில் பங்குடையவராகவிருந்தனர். இரண்டாம் சார்லஸின் தம்பியான ஜேம்ஸ், சார்லஸுக்கு அடுத்துப் பட்டமேற்கவிருந்தார். அவர் ஆஃப்ரிக்காவுடன் வியாபாரம் நடத்திவந்த ராயல் ஆஃப்ரிகன் கம்பெனியின் (Royal African Company) கவர்னராகவும் (Governor), கிழக்கிந்தியக் கம்பெனியின் பங்குதாரராகவும் இருந்தார். இளவரசர் ரூபர்டிற்குப் (Prince Rupert) பிறகு அவர் ஹட்சன்ஸ் பே கம்பெனியின் (Hudson's Bay Company) கவர்னராகவும் இருந்தார். ஜேம்ஸிற்குப் பிறகு மார்ல்பரோ (Marlborough) பிரபு அக் கம்பெனியின் கவர்னராக இருந்தார்.

இங்ஙனம் இங்கிலாந்தில் இருந்த முக்கிய மனிதர்கள், வியாபாரிகளுடன் தொடர்புடையவராகவிருந்தனர். அத்துடன் வியாபாரத்திலும் அக்கறையுடையவராகவிருந்தனர். இவர்களே அரசாங்கத்தின் கொள்கைகளை உருவாக்கிக் கொடுத்தவர்கள். இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்காலத்தில் ஹாலண்டுடன் நடந்த போரும், மூன்றும் வில்லியம், ஆன் அரசி ஆகியோரின் ஆட்சிக்காலத்தில் ஃபிரான்சுடன் நடந்த போரும், வியாபார நிமித்தமாகவும், குடியேற்ற நாடுகள் நிமித்தமாகவும் நடத்தப்பட்ட போர்கள் எனக் கூறலாம். அப் போர்களினால் இங்கிலாந்து பயனடையும் என்றும், அப் போர்கள் அவசியம் என்றும், அவையினரும், பார்லிமென்ட் அங்கத்தினரும், நகரத்தில் வாழ்ந்து வந்த பெரும் வியாபாரிகளும் ஒருமனமாக நம்பினர்.

போர்களை வெறுத்து அமைதியை விரும்பும் மனப்பான்மையும், இங்கிலாந்து ஒன்றே தாம் வியாபாரம் நடத்தும் இடமாகவும் எண்ணி வந்த சிறு வருவாயைக் கொண்ட நிலக்கிழார்கள் டோரி கட்சியின் தேர்தல் பிரசாரங்களில் தங்கள் கருத்துகளை வெளியிட்டனர். ஆனால், அவரது பிரசாரங்கள், அரசாங்கத்தின் கொள்கைகளை உருவாக்கி வந்தோரை எவ்விதத்திலும் தம் கொள்கைகளை விட்டுவிடச் செய்ய வில்லை. வியாபாரத்திற்காகவும், குடியேற்ற நாடுகளுக்காகவும், ஒன்றன்பின் ஒன்றாக, முதலில் டச்சுக்காரரை எதிர்த்தும் பிறகு ஃபிரெஞ்சுக்காரரை எதிர்த்தும் இங்கிலாந்து நிகழ்த்திய போர்கள் அமெரிக்காவில் மேலும் சில பகுதிகளை இங்கிலாந்திற்குக் கொடுத்தது ; அத்துடன் இங்கிலாந்தின் வாணிபத்தை ஐரோப்பிய நாடுகளுக்கும், உலகின் மற்றப் பாகங்களுக்கும் பரவ வழிசெய்தன. இப் போர்கள் நிலவரியில் இருந்து கிடைத்த தொகையைக் கொண்டே நிகழ்த்தப் பட்டன. அதனால் இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்காலம் தொட்டு ஆன் அரசியின் ஆட்சிக்காலம்வரை அரசாங்கம் விவசாயம் ஒன்றை மட்டும் வளர முயற்சிகள் எடுத்துக்கொண்டது எனக் கூறுவது தவறானது என்பது விளங்கும். அக்காலத்தில் வியாபாரம் வளரவும் ஆவன செய்யப்பட்டன என்பதை மேலே கண்டவை எடுத்துக்காட்டும்.

நிலங்களுக்கெல்லாம் வேலியமைக்கப்படு முன்னும், தொழிற்புரட்சி ஏற்படுமுன்னும் இங்கிலாந்தின் நாட்டுப்புற வாழ்க்கை நிலையை இரண்டுவிதமாக எடுத்துக்காட்டியுள்ளனர். கிராமங்களில் சுதந்திர மாகக் குடியானவர்கள் வாழ்க்கை நடத்திவந்தனர் என்றும், அவர்கள் தங்கள் நிலத்தைப் பயிரிட்டுவந்தனர் என்றும் கூறப்பட்டுள்ளது. நாட்டுப்புறங்களில் நிலவிவந்த அமைதியான நிலையை அவர்கள் மனமார அனுபவித்துவந்தனர் என்றும் கூறப்பட்டுள்ளது. அவர்கள் கடைகளில் இருந்துகொண்டு அறுவடையை வீட்டிற்குக் கொண்டு வருவதைப்பற்றிய பாட்டுகளைப் பாடி ஓய்வு நேரங்களைக் கழித்தனர் என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது. இங்கிலாந்தின் கிராமங்களிலும் நகரங்களிலும் கைத்தொழிலாளிகளும் இருந்தனர் என்றும், அவர்கள் இயந்திரங்களுக்குப் பதிலாகப் பல கருவிகளைக்கொண்டும் தம் கைகளைக் கொண்டும் பலவிதப் பொருள்களைச் செய்தனர் என்றும் கூறப்படுகிறது. தாமே பொருள்களை அவர்கள் செய்ததால், அத் தொழிலில் அவர்கள் இன்பம் கண்டனர் என்றும், தற்காலத்தில் காணப்படும் பலவிதமான பொழுதுபோக்குகள், பொருள்களை எல்லாம் இயந்திரங்களே செய்ய, அதைக் கவனித்துக்கொள்ளும் அலுப்பு தீர்வதற்காக உண்டாக்கப் பட்டிருப்பினும், அவை தொழிலாளி தானே ஒருபொருளைச் செய்த போது அடைந்த இன்பத்திற்கு ஈடான இன்பம் தருவதில்லை என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.

இந்தக் காட்சிக்கு மாறுக மற்றொரு காட்சியும் நமக்குக் கிடைத்தி ருக்கிறது. இயந்திரம் உபயோகத்திற்கு வருமுன் தொழிலாளிகள் அதிகச் சிரமப்பட்டு உடல் வலி எடுத்துக்கொள்ளுமாறு உழைத்தனர் என்றும், ஒரு நாளுக்குப் பதின்மூன்று அல்லது அதற்கு மேற்பட்ட மணியளவு உழைத்தனர் என்றும் அறிகிறோம். சிறுவயதினர் ஆரம்பப் பள்ளிகளுக்குச் செல்லாமல் உழைத்தனர் என்றும் கூறப்பட்டுள்ளது. மக்கள் பிணிகளால் துயருற்றனர் என்றும், அதிக வயது ஆகுமுன்பே இறந்துவிட்டனர் என்றும், மருத்துவ விடுதிகள் இருக்கவில்லை என்றும் அறிவிக்கப்பட்டுள்ளன. தற்காலத்தில் அவசியம் என்று எண்ணப் படும் சுகாதார நிலையும் வசதிகளும் அப்போது இருக்கவில்லை. எடுத்துச்சொல்ல முடியாத கொடுமை குற்றவாளிகளுக்கும், கடன் காரர், பெண்கள், குழந்தைகள், ஏழைகள் முதலியோருக்கும் இழைக்கப் பட்டது என்றும் சொல்லப்படுகிறது. அத்துடன் தற்போது (1939) இருக்கும் ஜனத்தொகையில் ஏழில் ஒரு பங்கு, இங்கிலாந்திலும் வேல்ஸிலும் குறைவான வசதிகளுடன் வாழ்ந்துவந்தனர் என்றும் அறிகிறோம்.

இப்படி நமக்குக் கிடைக்கும் ஒன்றிற்கு ஒன்று முரணான காட்சி களும் உண்மை நிலையை எடுத்துக்காட்டுவனவே. எந்தக் காட்சியில்

பெருமளவு உண்மையுள்ளது என்று எடுத்துக் கூறுவது இயலாத தொன்றுகும். இரண்டு காட்சிகளும் மாறுபட்ட மனப்பான்மையையும் வெவ்வேறு கோண காட்சியையும் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. இந்நிலையில் தமது வாழ்க்கை நிலையைப்பற்றி நமது முன்னேர்கள் என்ன நினைத்தனர் என்பதை நாம் அறியமுடியாத நிலையில் இருக்கிறேம். புள்ளி விவரங்களைக் கொண்டு முடிந்ததை அறியலாம் என்றுல் அவ் விவரங்கள் நமக்குக் கிடைக்கக்கூடியனவாக இல்லை.

புகழ்பெற்ற புரட்சி நிகழவிருந்த காலத்தில் கிரெகரி கிங் (Gregory King) என்பார், ஒவ்வொரு வகுப்பிலும் எத்தனை பேர் இருந்தனர் என்பதை ஒவ்வொருவரிடமிருந்தும் வசூலிக்கப்பட்ட வரி முதலியவைகளைக் கொண்டு கணக்கிட்டுள்ளார். அவர் போட்டிருக்கும் கணக்குச் சரியானதென்று கூறமுடியாது. எனினும், அவரது கணக்குப் படி நிலங்கள் வேலியமைக்கப்பட்டு ஒதுக்கப்படுமுன்னும், தொழிற் புரட்சி ஏற்படுமுன்னும், குடியானவர்கள், இயோமென்கள் ஆகியோரின் எண்ணிக்கை குறைவாகவும், கூலிக்கு வேலைசெய்த பயிர்த்தொழி லாளிகளின் எண்ணிக்கை மிகுதியாகவும் இருந்தது.

கிங், பெரும்பான்மையோரைக் கொண்ட இரண்டு வகுப்புகளைக் குறித்துள்ளார். அவ் வகுப்பினர் குடிசையில் வாழ்ந்துவந்த பரம ஏழைகள், மற்றும் தொழிலாளிகள். குடிசையில் வாழ்ந்துவந்தோர் கூலிக்கு வேலை செய்யாமலேயே தம் வாழ்க்கையை நடத்திவந்தனர். ஆனுல், அவர்களால் அப்படி வாழ்க்கை நடத்துவது கடினமாக விருந்தது. அவர்கள் கிராமத்தினருக்குச் சொந்தமான பொது நிலங் களுக்கு அப்பால் தம் குடிசைகளை அமைத்துக்கொண்டு வாழ்ந்து வந்தனர். குடிசைக்கருகில் இருந்த நிலத்தைப் பயிர் செய்தனர். அவர்கள் ஏழைகளாய் இருப்பினும், கிங் ஊகித்ததைவிட அவர்கள் இன்பமான வாழ்க்கையை நடத்திவந்திருக்கலாம். இவ் வகுப்பினரைப் போலவே எண்ணிக்கையில் பெரும்பான்மையோராக இருந்தோர் கூலிக்கு வேலை செய்த தொழிலாளிகளாவர். தொழிலாளிகளாக இருந்தாலும், கிராமப் பொது நிலத்தில் அவர்களுக்குச் சில உரிமைகள் இருந்தன. அதேபோல் அவர்களில் பெரும்பான்மையோர் சிறிய தோட்டமோ அல்லது நிலமோ வைத்திருந்தனர். கைத்தொழிலாளி கள்கூடச் சிறிய தோட்டமும் நிலமும் உடையவராய் இருந்தனர். அத் தோட்டத்திலும் நிலத்திலும் தங்கள் வேலையில் இருந்து ஒய்வு கிடைத்த நேரங்களில் அவர்கள் வேலைசெய்தனர். முக்கியமாகக் கம்பளி ஆடையை நெய்துவந்தோர், ஒய்வு நேரத்தில் அப்படி வேலைசெய்தனர். ஹாலிஃபாக்சை (Holifax) அடுத்து இருந்த மலைச்சாரலில் கம்பளி ஆடை நெய்துவந்தோர் ஒவ்வொருவரும் ஒன்று அல்லது இரண்டு பசுக்களை நாற்புறமும் சுவர்களால் சூழப்பெற்ற தம் நிலத்தில் வைத்

திருந்தனர். அந்த நிலத்திலேயே அவர்களது குடிசையும் அமைக்கப் பட்டிருந்தது.

இவர்களைத் தவிர பெருவாரியான மக்கள் நிலத்தில் எவ்வித உரிமைகளும் அற்றவராகவிருந்தனர். அவர்கள் பயிர்த்தொழில் அல்லது கைத்தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தனர். இவர்கள் தம் தொழிலில் கிடைத்த கூலியைக்கொண்டே தமது வாழ்க்கையை நடத்தி வந்தனர்.

ஒவ்வொரு கவுன்டியில் இருந்த அமைதிக் காவலர்களும், பயிர்த் தொழிலாளிகளும், கைத்தொழிலாளிகளும் எவ்வளவு கூலி வாங்க வேண்டும் என்பதை நிர்ணயிக்கும் கடமையுடையவராய் இருந்தனர். அவர்கள் சில சமயங்களில் சில பொருள்களின் விலையையும் நிர்ணயித்த னர். ஆனால், அவர்கள் ஒரு தொழிலாளி அதிகபட்சம் கூலி எவ்வளவு கேட்கலாம் என்று குறிப்பிட்டனர். அதேபோல் ஒரு பொருளை அதிக பட்சம் எவ்வளவு விலைக்கு விற்கலாம் என்றும் குறிப்பிட்டனர். அதனால் ஒவ்வொரு கவுன்டியிலும் ஒவ்வோர் இடத்திலும் அதே கூலி யும் விலையும் காண முடியவில்லை. ஒரு ஷயருக்கும் மற்றொரு ஷயருக் கும் அதேபோல் கூலியிலும் பொருள்களின் விலையிலும் வித்தியாசம் இருந்தது. அதுமட்டுமல்லாமல் அமைதிக் காவலர்கள் குறிப்பிட்ட கூலியையும் விலையையும் அனேகமாக மக்கள் மீறிவந்தனர்.[1]

தொழிலாளிகள் ஒன்றுசேர்ந்து தங்கள் கூலியை அதிகரித்துக் கொள்வதற்காக வேலைநிறுத்தம் செய்தனர் என்று பேசப்படாமையால், வேலைநிறுத்தம் செய்வது சாதாரணமானதொன்றாக இருக்கவில்லை என்று நினைக்கலாம். இரண்டாம் சார்லஸின் ஆட்சிக் காலத்தைவிட

[1] ஒரு பண்ணையில் கொடுக்கப்பட்ட கூலிக்கும் மற்றொரு பண்ணையில் கொடுக்கப்பட்ட கூலிக்கும் வித்தியாசம் இருந்தது. கி.பி. 1701-ல் யார்க்ஷயரில் இருந்த ஸ்குவீர் ஒருவர் பின்வருமாறு குறித்துள்ளார் : ‘ பார்ன்ஸ்லி (Barnsley), வோர்ட்லி (Wortley) ஆகியவிடங்களின் அருகில் பயிர்த் தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட கூலி ஓர் ஆண்டிற்கு மூன்று பவுன்களுக்கும் அதிகமாய் இருக் கிறது. சர் ஜியாஃப்ரே (Sir Geoffrey) தன்னுடைய பணியாளுக்கு வருடத்திற்கு 3 பவுன்களும், 14 ஷில்லிங்கும் கொடுக்கிறார். தன்னுடைய பெய்லிஃபிற்கு (Bailiff) 4 பவுன்கள் கொடுக்கிறார். அதனால் எங்களிடம் வேலை செய்வோரும் அதிகம் கேட்கின்றனர். வோர்ட்லி அருகில் வாழும் குடியானவர்கள் விடியற்காலை 3 மணிக்கு எழுந்து கால்நடைகளை ஓட்டிக்கொண்டு வேலைக்குப் போகிறார்கள். ஆனால், எங்கள் வீட்டில் வேலை செய்பவர்களோ ஏழு மணிக்கு எழுந்திருக்கிறார்கள். இதைவிட வார்ன் (Warne) இருபது பவுன்கள் கேட்பது மனக்கசப்பை உண்டாக்கு கின்றது. குறிப்பிட்ட கூலியைக் கொடுத்து, தங்க இடமும் உணவும் கொடுத்தால் போதும் என்று நான் நினைக்கிறேன். இவ்வாண்டில் கோதுமையின் விலை ஒரு குவார்டர் அளவு 34 ஷில்லிங்காகக் குறைந்துவிட்டது. அதேபோல் மற்றத் தானியங்களின் விலைகளும் குறைந்துவிட்டன. வெஸ்ட் ரைடிங் (West Riding) பிரதேசத்தில் ஒரு கோழியின் விலை இரண்டு பென்சாகக் குறைந்துள்ளது.’

மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் அதிகமாக வேலைநிறுத்தங்கள் நடைபெற்றதாக அறிகிறோம்.

எலிசபெத் அரசியின் ஆட்சிக்காலத்தில் இயற்றப்பட்ட தொழிலாளிகளின் சட்டம் (Statute of Artificers) அமலில் இருந்துவந்தது. அதன்படி ஒரு தொழிலாளி தான் மேற்கொண்ட வேலையை முடித்துக் கொடுக்காமல் விட்டுச் சென்றால் அவன் தண்டனைக்குரியவனாகிறான். அதேபோல் அமைதிக் காவலர்கள் நிர்ணயித்த கூலிக்குமேல் வாங்கினாலும் கொடுத்தாலும் அப்படிச் செய்தோர் தண்டனைக்குள்ளாவார்கள். ஆனால், தொழிலாளிக்கும் முதலாளிக்கும் நிர்ணயிக்கப்பட்ட கூலியை விட அதிகம் கொடுப்பது நன்மை பயப்பதாய் இருந்தால், அப்படிச் செய்யப்பட்டது. தொழிலாளிகள் ஒன்றுசேர்ந்து தொழிலாளர் சங்கங்களை அமைப்பது மிகக் குறைவாய் இருப்பினும், தனித்தனியே தொழிலாளிகள் முதலாளிகளிடம் பேசித் தங்கள் கூலியை உயர்த்திக் கொண்டனர்.

தற்கால நிலையைக் கொண்டு நோக்கின், விலைகள் குறைவாய் இருந்த காலங்களில் தொழிலாளிகளுக்குக் கொடுக்கப்பட்ட கூலி குறைவாகவே இருந்ததெனத் தெரிகிறது. எனினும், அக் கூலி மற்ற ஐரோப்பிய நாடுகளில் தொழிலாளருக்குக் கொடுக்கப்பட்டு வந்ததை விட அதிகமாகவிருந்தது. ஆங்கிலேயர்கள் எக்காலத்திலும் சிக்கனமாக வாழ்ந்ததில்லை. அவர்கள் சிறப்பான வாழ்வு வாழ்வதையே விரும்பினர். டிஃபோ (Defoe) என்பார் முதலாளி என்ற வகையில் இருந்து கீழ்வருமாறு ஆங்கிலேய தொழிலாளிகளைப்பற்றிக் கூறியுள்ளார் :

'ஆங்கிலேயர் பயிர்த்தொழில் செய்வதில் சிறந்தவராக இருக்கவில்லை. மற்ற நாட்டுத் தொழிலாளிகளைவிட ஆங்கிலேயத் தொழிலாளிகள் மூன்று மடங்கு அதிகமான உணவையும், முக்கியமாக மதுவையும் உட்கொண்டனர்.'

ஆங்கிலேயரின் முக்கிய உணவு ரொட்டியாகும். அத்துடன் அவர்கள் பீர் எனப்பட்ட மது, இறைச்சி ஆகியவற்றையும் சாதாரணமாக உட்கொண்டனர். அவரது பகல் உணவில் பெரும்பகுதி இறைச்சியாக இருந்தது. காய்கறிகளும் பழங்களும் சிறிதே அவர்கள் உண்டனர். உயர் வகுப்பினரும், இடை வகுப்பினரும் காலையில் ஏல் (ale) எனப்பட்ட மதுவையும், சிறிதளவு ரொட்டியையும் சிற்றுண்டியாகக் கொண்டனர். அதை அடுத்து நடுப்பகலில் அவர்கள் உணவு உண்டனர். நடுப்பகல் உணவு பலவிதமான மீன், இறைச்சி ஆகியவற்றை உடையதாயும், போதுமான அளவுள்ளதாகவும் இருந்தது. கிரெகரி கிங் (Gregory King) ஏழைகள் எடுத்துக்

| குடும்பங்களின் எண்ணிக்கை | வகுப்பு, பட்டம் முதலியன | ஒவ்வொரு குடும்பத்தினரின் எண்ணிக்கை | மொத்த எண்ணிக்கை | ஒரு குடும்பத்தின் வருட வருமானம் |
|---|---|---|---|---|
| | | | | பவுன்கள் |
| 160 | பாதிரியார் அல்லாத உயர்ந்த பிரபுக்கள் | 40 | 6,400 | 3200 |
| 26 | பாதிரியாராகவிருந்த உயர்ந்த பிரபுக்கள் | 20 | 520 | 1300 |
| 800 | பேரான் (Baron) எனப்பட்ட பிரபுக்கள் | 16 | 12,800 | 880 |
| 600 | நைட் (Knight) பட்டம் பெற்ருேர் | 13 | 7,800 | 650 |
| 3000 | எஸ்குவீர் (Esquire) எனப்பட்டோர் | 10 | 30,000 | 450 |
| 12,000 | ஜென்டில்மென் (Gentlemen) எனப்பட்டோர் | 8 | 96,000 | 280 |
| 5,000 | பெரிய பதவியில் இருந்தோர் | 8 | 40,000 | 240 |
| 5,000 | சிறிய பதவிகளை வகித்தோர் | 6 | 30,000 | 120 |
| 2,000 | கடல் வாணிபம், உள்நாட்டு வியாபாரம் பெருமளவில் செய்துவந்தோர் | 8 | 16,000 | 400 |
| 8,000 | கடல் வாணிபம், உள்நாட்டு வாணிபம் சிறிய அளவில் நடத்தி வந்தோர் | 6 | 48,000 | 198 |
| 10,000 | நீதிமன்றங்களில் பணியாற்றியோர் | 7 | 70,000 | 154 |
| 2,000 | உயர்ந்த வகுப்பைச் சார்ந்த பாதிரியார்கள் | 6 | 12,000 | 72 |
| 8,000 | தாழ்ந்த வகுப்பைச் சார்ந்த பாதிரியார்கள் | 5 | 40,000 | 50 |
| 40,000 | சற்றே உயர்ந்த நிலையில் இருந்த நிலக்கிழார்கள் | 7 | 280,000 | 91 |
| 120,000 | சற்றே தாழ்ந்த நிலையில் இருந்த நிலக்கிழார்கள் | 5½ | 660,000 | 55 |

| | | | | |
|---|---|---|---|---|
| 150,000 | குடியானவர்கள் | 5 | 750,000 | 42-10ஷி |
| 15,000 | விஞ்ஞானம் அல்லது மற்றக் கலைகளைப் போதித்தோர் | 5 | 75,000 | 60 |
| 50,000 | கடைக்காரர்களும் வியாபாரிகளும் | $4\frac{1}{2}$ | 225,000 | 45 |
| 60,000 | கைத்தொழிலாளிகள் | 4 | 240,000 | 38 |
| 5,000 | கடற்படை அதிகாரிகள் | 4 | 20,000 | 80 |
| 4,000 | படை அதிகாரிகள் | 4 | 16,000 | 60 |
| 50,000 | சாதாரண மாலுமிகள் | 3 | 150,000 | 20 |
| 364,000 | தொழிலாளிகளும் வேலைக்காரரும் | $3\frac{1}{2}$ | 1,275,000 | 15 |
| 400,000 | குடிசை வாழ்ந்தோரும் பரம ஏழைகளும் | $3\frac{1}{4}$ | 1,300,000 | 6-10 ஷி |
| 35,000 | சாதாரண போர் வீரர் | 2 | 70,000 | 14 |
| | ஊர் ஊராகத் திரிந்துவந்தோர், பிச்சைக்காரர், திருடர் முதலானோர் | | 30,000 | |
| | | மொத்தம் | 5,500,520 | |

சார்லஸ் டெவெனட் என்பவரின் நூலில் இந்த அட்டவணை உள்ளது. (**Printed in Charles Davenant's Works (1771), Vol. II, p. 184, with further figures.**)

கொண்ட உணவைப்பற்றிக் கூறுங்கால், ஏழைகளின் எண்ணிக்கையில் பாதிப்பேர் தினமும் இறைச்சியை உண்டனர் என்றும், மற்றப் பாதிப் பேரில் பெரும்பான்மையோர் குறைந்தது வாரத்திற்கு இரு முறையாவது இறைச்சியை உண்டனர் என்றும் குறித்துள்ளார். மற்றவர் கொடுத்த நன்கொடையைக் கொண்டு வாழ்க்கை நடத்திவந்த எண்ணிறந்தவர் வாரத்திற்கு ஒரு முறைக்குமேல் இறைச்சியை உண்ணவில்லை என்றும் அவர் குறித்துள்ளார்.

கி.பி. 1801-ல் முதன்முதலில் ஜனத்தொகைக் கணக்கு எடுக்கப் பட்டது. அந்த ஆண்டிற்குமுன் இங்கிலாந்தின் ஜனத்தொகை எவ்வளவாகவிருந்தது, ஒவ்வொரு வகுப்பிலும் எத்தனை பேர் இருந் தனர் என்பவற்றைத் திட்டவட்டமாகக் கூறுவதற்குப் போதிய ஆதாரம் இல்லை. எனினும், கிரெகரி கிங், மக்களிடம் இருந்து வசூலிக் கப்பட்ட வரியைக் கொண்டு, புகழ்பெற்ற புரட்சி நடைபெற்றபோது இருந்த ஜனத்தொகையைப் பற்றியும், சமுதாயத்தில் இருந்த வகுப் பினரைப் பற்றியும் எடுத்துள்ள குறிப்புகளைக் கொண்டு, ஜனத்தொகை யைப் பற்றியும், பல வகுப்பினரைப் பற்றியும் ஒருவாறு நாம் அறிந்து கொள்ளலாம். அவரது குறிப்புகள் சமுதாய அமைப்பையே ஒருவாறு எடுத்துக் காட்டுகின்றன எனக் கூறலாம். அதனால் அவர் குறித்து வைத்துள்ளவற்றைச் சிறிது ஆராய்ந்து பார்க்கலாம். ஆனால், அவர் குறித்து வைத்தவை முற்றிலும் சரியானதல்ல என்பதை மனத்தில் கொள்ளவேண்டும்.

இந்த அட்டவணையை ஆராயுமுன் சிலவற்றை நாம் மனத்தில் கொள்ளவேண்டும். மூன்றாவது பிரிவில் குறிக்கப்பட்டிருக்கும் எண் ஒரு வீட்டில் எத்தனை பேர்கள் இருந்தனர் என்பதைக் காட்டுகின்றது. அந்த எண், அவ் வீட்டில் இருந்த வேலையாள்களையும் குழந்தைகளையும் அடங்கியதாய் இருக்கின்றது. அட்டவணையில் ஏழைகளின் குடும் பத்தில் எண்ணிக்கை குறைவாகக் காட்டப்பெற்றிருந்தாலும், எல்லா வகுப்பைச் சார்ந்த குடும்பங்களிலும் சராசரி குழந்தைகளின் எண்ணிக்கை சமமாகவே இருந்தது எனக் கொள்ளலாம். குடும்பங் களின் எண்ணிக்கையும் வருமானமும் சராசரியாகக் கொள்ளவேண்டும். ஒவ்வொரு வகுப்பிலும் சிலர் தமது குடும்பத்தில் கொடுத்துள்ளதைவிட அதிகமான நபர்களையும் அதிகமான வருமானத்தையும் உடையவராக விருக்கலாம். அதேபோல் ஒவ்வொரு வகுப்பிலும் சிலர் தமது குடும் பத்தில் கொடுத்துள்ளதைவிடக் குறைவான நபர்களையும் வருமானத் தையும் உடையவராகவிருக்கலாம். நிலக்கிழார்கள் எனக் குறிக்கப் பட்டுள்ளோரில், நிலத்தைச் சொந்தமாக வைத்திருந்தோரும் குறித்த காலத்திற்குக் குத்தகைக்கு எடுத்துக்கொண்டு பயிர் செய்துவந்தோரும், ஆயுள்காலம்வரை மற்றவரின். நிலத்தைக் குத்தகைக்கு எடுத்துக்

கொண்டு பயிர் செய்து வந்தோரும் அடங்கியிருந்தனர். தொழிலாளி களும், குடிசையில் வாழ்ந்த பரம ஏழைகளும்கூடச் சில நிலங்களில் உரிமையுள்ளவராக விருந்தனர்.

கிரெகரி கிங், ஒரு மில்லியனுக்கு மேலான பரம ஏழைகள் நன் கொடையைப் பெற்று வாழ்ந்துவந்தனர் என்று குறித்துள்ளார். அவர் களின் எண்ணிக்கை நாட்டின் ஜனத்தொகையில் சுமார் ஐந்தில் ஒரு பங்காகவிருந்தது. அவர்கள் எப்போதாவது நன்கொடை கொடுக்கப் பட்டு வந்தனர். வட்டாரத்தில் வாழ்ந்தோரிடமிருந்து நன்கொடை கொடுப்பதற்காக வசூலிக்கப்பட்ட தொகையில் இருந்து அவர்களுக்கு நன்கொடை கொடுக்கப்பட்டது. அப்படி ஏழைகளுக்கு உதவி செய்வதற்காக நாடு முழுவதிலும் வசூலிக்கப்பட்ட தொகை சுமார் 800,000 பவுன்களாக இருந்தது. ஆன் அரசியின் ஆட்சிக்காலத்தில் அத் தொகை ஒரு மில்லியனைத் தொட்டது. நன்கொடை பெற்று வாழ்வதை இழிவாக அவர்கள் கருதினுர்கள் இல்லை. அத்துடன் நன்கொடையாகக் கொடுக்கப்பட்ட தொகை சிறியதாக இருக்கவில்லை. மனைவியையும் மூன்று குழந்தைகளையும் காப்பாற்றும் பொறுப்புள்ள தொழிலாளி, தனக்காக எவ்வளவு செலவு செய்துகொள்வானே அதைப்போல் மூன்று மடங்காக இருந்தது நன்கொடை கொடுக்கப் பட்ட தொகை என்று கி.பி. 1698-ல் ரிச்சர்ட் டன்னிங் (Richard Dunning) குறித்துள்ளார். அத்துடன் நன்கொடை பெற்றுவந்தோர் வேலை செய்ய மறுத்தனர் என்றும், உயர்ந்த ரக பீர் என்ற மதுவையே குடித்தனர் என்றும், நல்ல கோதுமை மாவைக் கொண்டு செய்த ரொட்டியையே உண்டுவந்தனர் என்றும் அவர் குறித்துள்ளார். டன்னிங் கூறியுள்ளவை முழுவதும் உண்மையானதாக எடுத்துக் கொள்வதற்கில்லை. ஆனுல், நன்கொடை பெற்றுவந்தோர், டன்னிங் குறிப்பிட்டுள்ளவாறே வாழ்ந்துவந்தனர் என்று, ஏழைகளுக்குக் கொடுக்கப்படும் நன்கொடைப் பணத்திற்காக வரி கொடுத்தோர் குறை கூறினர். முதலாளிகளும் அவ்வாறே குறை கூறினர்.

ஏழைகளுக்கு நன்கொடை கொடுக்கப்பட்டுவந்ததில் குறைகள் எக்காலத்திலும் இருந்துவந்திருக்கின்றன. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்ட பின்னும், பதினெட்டாம் நூற்ருண்டிலும் நன்கொடை கொடுக்கவேண்டியிருந்ததை ஒட்டி இருந்த சட்டம் விநோதமானதாக விருந்தது. அச் சட்டம் இரண்டாம் சார்லஸின் காலத்தில், கவாலியர் பார்லிமென்டால் இயற்றப்பட்டது (Act of Settlement). அச் சட்டத்தின்படி ஒருவர் தன் சொந்த வட்டாரத்தில் அல்லாமல், வேறு ஒரு வட்டாரத்தில் குடியேற முயற்சித்தால் அவ் வட்டாரத்தில் இருந்து தன் சொந்த வட்டாரத்திற்கு அவர் துரத்தப்படுவார். இப்படிச் செய்யப் பட்டதற்கு ஒரு காரணமும் இருந்தது. குடியேறியவர் சிறிது

காலத்திற்குப் பிறகு நன்கொடையைப் பெற்று வாழும் ஏழையாக மாறி விட்டால் அவ் வட்டாரத்தில் இருந்தோர் அதற்காக அதிகப்படியான வரியைச் செலுத்த நேரிடும் என்ற எண்ணமேயாகும். இங்கிலாந்தின் ஜனத்தொகையில் பத்தில் ஒன்பது பங்கு தன் வட்டாரத்தைத் தவிர மற்ற வட்டாரங்களில் இருந்து துரத்தப்படக்கூடியவர்களாகவிருந்தனர். சிறுநிலக்கிழார்களாக விருந்தோரைத் தவிர மற்றவர்கள் தமது வட்டாரத்திற்குத் துரத்தப்பட்டனர். நல்ல நடத்தை உடையவராகவிருப்பினும், தொழில் செய்து நல்ல வருமானம் உடையவராகவிருப்பினும், சிறுநிலக்கிழாராக இராவிடில் அவர்கள் துரத்தப்பட்டனர். வருங் காலத்தில் தாம் செலுத்திவந்த வரி உயர்ந்துவிடும் என்ற எண்ணமே அப்படிப்பட்டவர்களையும் வட்டாரத்தைவிட்டு வெளியேறச் செய்யக் காரணமாகவிருந்தது. அச் சட்டத்தினால் ஒரு வட்டாரத்தைச் சேர்ந்த தொழிலாளிகள் மற்றொரு வட்டாரத்திற்குச் சென்று குடியேறுவது தடைசெய்யப்பட்டது. அப்படி இருந்தும் பல ஆண்டுகளுக்குப் பிறகு ஆடம் ஸ்மித் (Adam Smith) அச் சட்டத்தில் இருந்த குறைகளைத் தீவிரமாகத் தாக்கும்வரை ஒன்றும் செய்யப்படவில்லை. அச் சட்டம் எந்த அளவிற்கு அமல் நடத்தப்பட்டுவந்தது என்று கூறுவதற்கில்லை. ஆடம் ஸ்மித் அச் சட்டத்தின் குறைகளை மிகைப்படுத்திக் கூறியுள்ளார் என்று கூறலாம். எனினும், அவர் சுட்டிக்காட்டியுள்ளது உண்மை யிலேயே ஒரு பெருங்குறை என்பதை மறுக்கமுடியாது. ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில், வட்டாரத்தில் இருந்த ஏழைகளுக்கு உதவி செய்யும் எண்ணத்துடன் இயற்றப்பட்ட சட்டத்தில் அப்படிப் பட்ட குறை இருந்தது. எப்படியானாலும், ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் ஏழைகளுக்கு உதவி செய்வதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட முயற்சி வீண்போகவில்லை.

அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் வேட்டையாடுவதைப்பற்றி பார்லிமென்ட் இயற்றிய சட்டங்கள், காமன்ஸ் சபையில் ஸ்குவீர் வகுப்பினருக்கிருந்த செல்வாக்கை எடுத்துக்காட்டுகின்றன. நார்மன் (Norman) வம்சத்தினரின் ஆட்சிக்காலத்திலும், பிளான்டாஜெனட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்திலும் அரசன் ஒருவனுக்கே வேட்டை யாடும் உரிமை இருக்குமாறு செய்யப்பட்டது. அப்படிச் செய்யப்படா விட்டால், அரசன் வேட்டையாடுவதற்குப் போதுமான மான்கள் இரா என்றே, மற்றவர்களுக்கு வேட்டையாடும் உரிமை இல்லாமல் செய்யப்பட்டது. ஆனால், அரசாட்சி திரும்பவும் நிறுவப் பட்டபின், ஸ்குவீர் வகுப்பினர் போதுமான கௌதாரிகளை (Partridges) வேட்டையாடுவதற்காக, இயோமென் வகுப்பினரும், மற்ற குடி யானவர்களும் கௌதாரிகளை வேட்டையாடும் உரிமைகள் இல்லாமல் செய்யப்பட்டனர். அரசியல் விவகாரங்களைவிட கௌதாரிகளை வேட்டை யாடுவது, அண்டை வீட்டார்களை ஒருவருக்கொருவர் விரோத

மனப்பான்மையுடையவராகச் செய்தது. வேட்டை நிலங்களில் இருந்து தப்பி வேட்டையாடப்படும் மிருகங்களும், பறவைகளும் இயோமென் வகுப்பினரின் நிலங்களுக்குச் சென்றாலும், அவர்கள் அவைகளை வேட்டையாடுவது ஸ்குவீர் வகுப்பினரால் விரும்பப்படவில்லை. அதனால் கி.பி. 1671-ல் கவாலியர் பார்லிமென்ட், வருடத்திற்கு நூறு பவுன்கள் வருமானம் இல்லாத நிலக்கிழார்கள் தங்கள் நிலத்திற்குள் வந்த மிருகத்தையோ அல்லது பறவைகளையோ வேட்டையாடக் கூடாது எனச் சட்டம் இயற்றியது. வருடத்திற்கு நூறு பவுன்கள் வருமானம் இல்லாதவர் பெருவாரியாக இருந்தனர் அக்காலத்தில். அதனால் பெருவாரியான மக்கள் வேட்டையாடி விருப்பமான உணவைச் சாப்பிட முடியாமல் செய்யப்பட்டனர். நூறு பவுன்கள் வருமானம் உடைய இயோமென்கள் அண்டையில் வாழ்ந்துவந்த ஸ்குவீர் வகுப்பினரால் சந்தேகத்துடன் பார்க்கப்பட்டனர். நல்ல குணம் படைத்த சர் ரோகர் டி கவர்லி (Sir Roger de Coverley), நூறு பவுன் வருமானமுள்ள இயோமென்கள் தம் நிலத்திற்கு வந்த கௌதாரிகளைக் கொல்லாமல் விட்டுவிடுவாரேயானால், அவர்கள் அண்டையில் இருந்த ஸ்குவீர் வகுப்பினரால் நன்கு நடத்தப்படுவர் என்று கூறியுள்ளார்.

உயர்ந்த வகுப்பினர் வேட்டையாடும் உரிமையைத் தமக்கே வைத்துக்கொண்டது, பல தீங்குகளை விளைவிப்பதாய் இருந்தது. சிறிய துப்பாக்கி உபயோகத்திற்கு வந்தபின் உயர்ந்த வகுப்பினர், மற்ற வகுப்பினருக்கு வேட்டையாடும் உரிமை அளிக்கப்படக்கூடாது என்று மேலும் விரும்பினர். ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில், வேட்டைப் பறவைகளைக் கொண்டு சிறிய பறவைகளை வேட்டையாடும் முறை மறைந்து, பறவைகளைச் சுட்டு வீழ்த்தும் முறை பழக்கத்திற்கு வந்தது. சுட்டு வீழ்த்துவது சுலபமாகவிருந்ததால், அதிகமான பறவைகள் வேட்டையாடப்பட்டன. அதனால் வருங்காலத்தில் வேட்டையாடுவதற்குப் பறவைகள் இருக்குமா என்ற ஐயம் தோன்றியது. இரண்டாம் சார்லஸின் ஆட்சிக்காலத்தில் பறந்துகொண்டிருக்கும் பறவைகளைச் சுட்டு வீழ்த்த முயற்சித்து வந்தனர். பறந்து கொண்டிருக்கும்போதே பறவைகளைச் சுட்டு வீழ்த்துவது கடினமான காரியமாகக் கருதப்பட்டது. குதிரைச் சவாரி செய்துகொண்டே பறக்கும் பறவைகளைச் சுட்டு வீழ்த்துவது அதைவிட கடினமான காரியமாகக் கருதப்பட்டது. எனினும், பறவைகள் மரக்கிளைகளில் உட்கார்ந்திருந்தபோது, ஒலி செய்யாமல் பின்சென்று பிடிப்பதோ அல்லது சுட்டு வீழ்த்துவதோ உயர்ந்த வகுப்பினரிடையே வழக்கமாய் இருந்துவந்தது.

வலையை வீசித் தரையில் உட்கார்ந்திருந்த பறவைகளைப் பிடிப்பது விரும்பப்பட்டது. இப்படிப் பிடிப்பதில் நாய்களையும் உபயோகித்தனர்.

நாய்களைக் கொண்டு பறவைகள் உட்கார்ந்திருக்கும் இடங்களை அறிந்து கொண்டனர். சர் ரோகர் தமது இளவயதில், ஒரு சமயம் நாற்பது கௌதாரிகளைப் பிடித்தார் எனக் கூறப்படுகிறது. அவர் வலையைக் கொண்டுதான் பிடித்து இருக்கவேண்டும் என்று கூறலாம். குளம், குட்டைகளின் ஓரத்தில் எப்பொருளையாவது வைத்து அங்கே நூற்றுக் கணக்கான காட்டுப் பறவைகளை வரும்படி செய்து அவைகளைப் பிடிப்பது ஒரு பொழுதுபோக்காகவும் வழக்கமாகவும் இருந்தது. பண்ணைகளில் இருந்த குளங்களிலும் அவ்வகையில் பறவைகளைப் பிடித்தனர். மரங்களில் ஒருவித பசையைத் தடவி, பறவைகளைப் பிடித்தலும், வலையில் தின்பண்டங்களை வைத்து பறவைகளைக் கூட்டமாக வரச்செய்து அவைகளைப் பிடிப்பதும் பிரபுக்களின் பொழுது போக்குகளில் சிலவாக அக்காலத்திலும் இருந்துவந்தன. சிறிய துப்பாக்கியை உபயோகிப்பது அதிகரித்துக்கொண்டே வந்தது. அத்துடன் குறிப்பிட்ட பறவை இனங்களை மட்டும் அத் துப்பாக்கியைக் கொண்டு வேட்டையாடுவதும் பழக்கத்தில் வந்துகொண்டிருந்தது. அப்படி வேட்டையாடப்படக்கூடிய பறவைகளில் கருங்கோழியும், காட்டுக்கோழியும் (grouse) சட்டத்தினால் சேர்க்கப்பட்டன. ஏற்கெனவே, குறிப்பிட்ட காலங்களில் தவிர மற்றக் காலங்களில் சில புதர்ச் செடிகளையும் கொடிகளையும் எரிக்கக் கூடாது என்று அறிவிக்கப் பட்டிருந்தது. அச் சட்டத்தை இடையன் எவனாவது மீறினால், அவன் கசையடி கொடுக்கப்படுவான். அடிசன் (Addison) தமது நூலில், டோரி கட்சியைச் சேர்ந்த ஸ்குவீர் ஒருவர் வேட்டையாடுவதைப் பற்றி இயற்றப்பட்ட சட்டங்களே புரட்சிக்குப்பின் (1649) இயற்றப்பட்ட சட்டங்களில் சிறந்தவை என்று எழுதியுள்ளார்.[1]

பிந்திய ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் நரிகளை வேட்டையாடுவது தற்கால முறையையொட்டியதாக மாறிக்கொண்டு வந்தது. டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் பதுங்கியிருக்கும் நரிகளை, புதர் முதலியவைகளை நீக்கிப் பிடித்தலும், துரத்திப் பிடித்தலும், வலைவைத்துப் பிடித்தலும், பயிரைப் பாழ்செய்ததற்காகக் குடியானவர்கள் அவற்றைக் கொன்றுபோடுதலும் வழக்கமாய் இருந்துவந்தது. மான் ஒன்றையே, துரத்தி வேட்டையாடக்கூடிய மிருகம் என்று அக்காலத்தில் கருதிவந்தனர். உள்நாட்டுப் போரின் போது மான்கள் இருந்த காடுகளிலும் போர்வீரன் புகுந்து அங்கிருந்த மான்கள் பலவற்றைக் கொன்றுவிட்டதால், அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் நரிகளைத் துரத்தி வேட்டையாடுவதைப் பல வட்டாரங் களில் மேற்கொண்டனர். ஒவ்வொரு வட்டாரத்திலும், வட்டார மக்கள் வேட்டையாடும் நாய்களை வளர்த்துவரவில்லை. ஆனால், பிரபுக்கள்

[1] இரண்டாம் சார்லஸின் காலத்தில் இயற்றப்பட்டவை.

தமக்கென்று வேட்டை நாய்களை வைத்திருந்தனர். அத்துடன் அவர்கள் அண்டையில் வாழ்ந்தோரையும் அவ்வாறு செய்யுமாறு தூண்டிவந்தனர். தங்கள் வேட்டைநாய்களைக் கொண்டு தங்களுக்குச் சொந்தமான காட்டில் நரிகளையும் கலைமான்களையும் வேட்டையாடி வந்தனர். ஆனால், வெகுதூரம் மான்களையும் நரிகளையும் துரத்திச் சென்றும் மற்றவர் நிலங்களைக் கடந்துசென்றும் வேட்டையாட முற்பட்டுவந்தனர்.

சில வட்டாரங்களில் நரியை அதன் பொந்திலிருந்து வெளிவரச் செய்து பிடிப்பதை நிறுத்திவிட்டனர். அதற்குப் பதில் நரியைத் திறந்த வெளியில் ஓடவிட்டு வேட்டையாடினர். இந்தவிதமாகப் பத்து அல்லது இருபது மைல்கள்கூடத் துரத்திக்கொண்டு ஓடினர். ஆனால், லங்காஷயரிலும் (Lancashire) மற்றும் சிலவிடங்களிலும் நரியை அதன் வளைக்குள் புகுந்துகொள்ளுமாறு துரத்தி அதன் பிறகு அதைப் பிடித்தனர். அப்படி வளைக்குள் நரி போகவில்லையானால், அதை விட்டு விட்டனர். தற்காலத்தில் காணப்படும் களைப்பு இல்லாமல் எத்துணை தூரம் வேண்டுமானாலும் துரத்திக்கொண்டு ஓடும் வேட்டைநாய்களைப் போல் அக்காலத்தில் நாய்கள் இராமலிருந்திருக்கலாம்.[1]

மான் வேட்டையாடுவது, மற்ற மிருகங்களை வேட்டையாடுவதை விடச் சிறந்ததாக எண்ணப்பட்டது. பழங்காலத்தில் மான் வேட்டை எப்படி நடத்தப்பட்டதோ அதேமுறையில் அப்போதும் நடத்தப்பட்டு வந்தது. ஆனால், மான் வேட்டையாடுவது குறைந்துகொண்டே வந்தது. பயிர் செய்வதற்கு அதிகமான நிலம் வேண்டியிருந்ததால், காடுகள் அளவில் குறைந்துகொண்டேவந்தன. ஒவ்வொரு பண்ணை வீட்டிலும் மான்கள் வாழ்வதற்கென்று வேலியிடப்பெற்றிருந்த விடத்தின் அளவும் குறைந்துகொண்டேவந்தது.

மான்களையும் நரிகளையும் வேட்டையாடுவதைக்காட்டிலும் முயல்களை வேட்டையாடுவது எல்லோராலும் விரும்பப்பட்டது. வேட்டை நாய்களை நன்றாகத் துரத்தும்படி ஏவுவார்கள்; பிரபுக்கள் குதிரைமேல் இருந்துகொண்டே வேட்டையாடுவர். வேட்டையாடுவதில் பழக்கப்

[1] தாமஸ் டில்டெஸ்லி (Thomas Tyldesley) என்பார் தமது நாட்குறிப்புப் புத்தகத்தில் பின்வருமாறு குறித்துள்ளார்: ‘நரி வேட்டையாடுவதற்காக, சல்லாம் (Sullom) என்ற விடத்திற்கு அதிகாலையில் சென்றேன். அங்கே டால்டன் (Dalton), ஃபிராஸ்ட் (Frost) என்பாரைக் கண்டேன். அவர்கள் இருவரும் இரண்டு நரிகளைத் துரத்திச்சென்று வளைகளுக்குள் புகச்செய்ய முயன்று கொண்டிருந்தனர். ஆனால், அவை ஒன்றுகூட வளைக்குள் போகவில்லை. [நாட்டஸ்டீன் என்பார் எழுதிய ‘ஆங்கிலேயர்கள்’ என்ற நூல் (Notestein English Folk, p. 172).] புளூம் (Bloome) என்பார் எழுதிய ‘பிரபுக்களின் பொழுதுபோக்கு’ (Gentleman's Recreation) என்ற நூலில் நரி வேட்டையைப் பற்றி சொல்லப்பட்டிருப்பதையும் பார்க்கவும்.

பட்ட வேட்டைக்காரர்கள் கழியுடன் முன்செல்ல அவர்பின் அவ் வட்டாரத்தில் இருந்த சாதாரண மனிதர் பின்னே ஓடி வேட்டையில் கலந்துகொள்வர். முயல் வேட்டையாடுவது கிராமத்திலே நடக்கும் பந்தயங்களை ஒத்திருந்தது. பிரபுக்கள் முயல்களை வேட்டையாடுவதில் முக்கிய பாகத்தை ஏற்றாலும், சாதாரண மக்களும் அதில் கலந்து கொண்டது குறிப்பிடத்தக்கதாகும்.

மான், நரி, முயல் ஆகியவற்றை வேட்டையாடுவதைத் தவிர வேறு சிலவகையான பந்தயங்களிலும் ஆட்டங்களிலும் மக்கள் ஈடுபட்டனர். மல்யுத்தம் மக்களிடையே விரும்பப்பட்டதொரு போட்டியாகவிருந்தது. நாட்டின் பல பாகங்களினின்றும் மல்யுத்தம் ஒரேமாதிரியாக நடத்தப் படவில்லை. மல்யுத்தத்தின் விதிகளும் முறைகளும் ஓர் இடத்திலிருந்து மற்றோரிடம் வேறுபட்டன. கால்பந்து ஆட்டமும் வழக்கில் இருந்தது. ஆனால், அக்கால கால்பந்து விளையாட்டுகள் முரட்டுத்தனமானவையாய் இருந்தன. சிலவற்றை விட்டெறிதலும் ஒரு விளையாட்டாக இருந்தது. அவ் விளையாட்டில் வட்டாரத்தில் இருந்த ஆண்கள் அனைவரும் பங்கு கொண்டனர். அவ் விளையாட்டு ஆண்களிடையே நடந்த பூசலை ஒத்திருந்தது. கழியைக்கொண்டு சண்டைபோடுதல், குத்துச் சண்டை, வாள்வீச்சு, எருது அல்லது கரடி ஆகியவற்றுடன் சண்டை யிடுதல் ஆகியவற்றை ஆங்கிலேயர் மிகவும் ரசித்தனர். அக்காலத்தில், ஒருவர் அத்தகைய சண்டைகளில் புண்பட்டு வருந்துவதை வெறுக்கும் மனப்பான்மையற்றவராக இருந்தனர் ஆங்கிலேயர். தூக்கிலிடு வதையும், கசையடி கொடுப்பதையும் மகிழ்ச்சிப் பொங்க அவர்கள் கவனித்தனர். கோழிச்சண்டையை மக்கள் அனைவரும் விரும்பினர். கோழிச்சண்டையில் எந்தக் கோழி வெற்றிபெறும் என்று எல்லா வகுப்பினரும் பந்தயம் கட்டுவது வழக்கமாய் இருந்தது. குதிரைப் பந்தயத்தில் பணம் கட்டுவதைவிடக் கோழிச்சண்டையில் அதிகமான மக்கள் பணம் கட்டினர். குதிரைப் பந்தயம் மற்ற விளையாட்டுகளை விட முக்கிய இடத்தைப் பெற்றுவந்தது. இரண்டாம் சார்லஸ் நியூ மார்கெட் (New market) என்றவிடத்தில் நடத்தப்பட்ட குதிரைப் பந்தயத்திற்குத் தன் ஆதரவைக் காட்டினார். பார்பாரி கரையோரப் பிரதேசத்தில் (Barbary coast) இருந்தும், அரபு நாடுகளில் இருந்தும் நல்ல குதிரைகள் இறக்குமதி செய்யப்பட்டு வந்தமை குதிரைப் பந்தயம் மேலும் மேலும் முக்கியத்துவம் பெறுவதற்கு வழிசெய்தது.

பிந்திய ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக்காலத்தில் கனிப் பொருள்கள் கலந்த நீர் ஊற்றுகள் இருந்தவிடத்திற்குச் சென்று நீராடுவதை ஒரு நாகரிகச் செயலாகவும், உடல்நலத்திற்கு உகந்த தாகவும் மக்கள் கருதினர். ரோமானியர் ஆட்சிக்காலத்திற்குப் பிறகு பதினேழாம் நூற்றாண்டில் மறுபடியும் பாத் (Bath) என்றவிடத்தில்

இருந்த சுடுநீர் ஊற்றுகள் உயர்ந்த வகுப்பினரின் கவனத்தை ஈர்த்தன. ஆனால், அப்போது, தற்போது காணப்படும் பூ நாஷ் (Beau Nash), ஜேன் ஆஸ்டின் (Jane Austen) எனப் பெயருள்ள நகரங்கள் அங்கு உண்டாகியிருக்கவில்லை. பாக்ஸ்டன் (Buxton), ஹாரோகேட் (Harrogate) என்ற பெயருடைய நகரங்களுக்கு வடக்குப் பாகத்தில் வாழ்ந்துவந்த ஜென்ட்ரிகள் தம் குடும்பத்துடன் போய்த் தங்கிவந்தனர். ஆனால், அவையினரும், லண்டன் நகரவாசிகளும், டன்பிரிட்ஜ் வெல்ஸ் (Tunbridge wells) என்றவிடத்தில் அமைக்கப் பெற்றிருந்த குடிசைகளுக்குச் சென்று தங்கிவருவது குறிப்பிடத்தக்க தொன்றாகும். அங்கே அடிக்கடி எண்ணிறந்த அவையினரும், லண்டன் வாசிகளும் சென்று கிராமச் சூழ்நிலையில் பொழுதைக் கழிப்பதுபோல் கழித்து வீடுதிரும்பினர். கி.பி. 1685-ல் அரச அவையினர், தாம் அங்குத் தங்கியிருக்கும்போது பிரார்த்தனைகளை நடத்துவதற்காக ஒரு கிருத்தவ ஆலயத்தை உள்நாட்டுப் போரில் உயிரிழந்த முதலாம் சார்லஸின் நினைவில் கட்டுவித்தனர்.

ஆங்கிலேயர் அக்காலத்தில் கடற்கரைக்குச் சென்று நல்ல காற்றை நுகரும் எண்ணமுடையவராய் இருக்கவில்லை. மருத்துவர்கள் அப்போது கடற்காற்று உடலுக்கு நன்மை பயக்கக்கூடியது என்று கண்டுபிடித்திருக்கவில்லை. எவரும் அதனால் கடலில் நீராட விருப்ப முள்ளவராய் இருக்கவில்லை. அத்துடன் எவரும் கடற்கரையிலே அமர்ந்து கடல் அலைகள், அதன் பரப்பு, நிறம் ஆகியவற்றைக் கற்பனைக் கண்கொண்டு நோக்கிப் பாடல்கள் புனைய முற்படவில்லை. கடலை ஆங்கிலேயர் தம் பொதுச் சொத்தாகவும், வாணிபத்திற்கு உதவும் சாலைகளாகவும், கயல்களை வாரி வழங்கும் பெட்டகமாகவும், அதேசமயம் போர்க்களமாகவும் எண்ணினர். எவரும் கடற்கரையில் அமர்ந்து நல்ல காற்றை சுவாசிப்பதும், மலையின் குளிர்ந்த காற்றை உட்கொள்வதும் ஆன்மாவிற்கு இதமளிக்கும் என்று எண்ணவில்லை. அதனால் அவர்கள் கடற்கரைக்கோ அல்லது மலைக்கோ சென்று பொழுதைப்போக்க முற்படவில்லை.

ஸ்டூவர்ட் வம்சத்தினர் ஆட்சி செலுத்திய நூற்றாண்டில் அடிக்கடி, வரி வசூலிப்பதற்காக ஒவ்வொருவருடைய சொத்து, செல்வம் ஆகிய வற்றைப்பற்றி கணக்கெடுக்கப்பட்டன. அக் கணக்குகள், எந்தெந்த கவுன்டி எனப்பட்ட பிரிவுகள் மிக்க செல்வம் படைத்தனவாக இருந்தன என்பதை எடுத்துக்காட்டுகின்றன. கவுன்டிகள் யாவற்றிலும் மிடில் ஸெக்ஸ் மிக்க செல்வம் படைத்ததாக விருந்தது. அதற்குக் காரணம் மிடில்ஸெக்ஸ் (Middlesex) லண்டனில் பெரும்பகுதியை அதனுள் கொண்டிருந்ததாகும். கம்பர்லாந்து (Cumberland) மற்றக் கவுன்டி களைவிட ஏழ்மை நிலையில் இருந்தது. கி.பி. 1636-ல், செல்வ நிலையில்

பதினெட்டாவதாக இருந்த சர்ரே (Surrey) லண்டன் நகரம் விரிவடைந்ததன் காரணமாக கி.பி. 1693-ல் இரண்டாவது நகரமாக உயர்ந்தது. அதற்கடுத்து பெர்க்ஸ் (Berks) கவுன்டியும், தேம்ஸ் (Thames) நதியின் வடக்கே இருந்த, பயிர்த்தொழிலில் சிறந்து விளங்கிய, ஹெர்ட்ஸ் (Herts), பெட்ஸ் (Beds), பக்ஸ் (Bucks), ஆக்ஸ் ஃபோர்டு ஷயர், நார்த்தான்ட்ஸ் (Northants) ஆகியவையும் நின்றன. இப்பகுதிகள் பெரிய நகரங்கள் எவற்றையும் உடையவையாய் இருக்க வில்லை. அத்துடன் இப்பகுதிகள் தொழில்களுக்குப் பேர்போனவை யாகவும் இருக்கவில்லை. மேலும் இப்பகுதிகளில் நிலக்கரிச் சுரங்கங்களும் இருக்கவில்லை. தவிரவும் திறந்த வெளி முறைப்படி பயிர்த்தொழிலும் நடத்தப்பட்டுவந்தது இப் பகுதிகளில். ஆனால் இப் பகுதிகள் மற்றப் பகுதிகளைவிட லண்டனுக்கருகில் இருந்தன. அதனால் லண்டனைச் சுற்றியும், லண்டனின் அருகிலும், இங்கிலாந்தின் மத்திய பாகத்திலும் இருந்த கவுன்டிகள் மிக்க செல்வம் படைத்தவையாக விருந்தன. இந்தக் கவுன்டிகளை அடுத்து கென்ட் (Kent), சஸ்ஸெக்ஸ் (Sussex) ஆகிய வற்றைக் கொண்ட இங்கிலாந்தின் தென் பாகத்தில் இருந்த கவுன்டிகள் நின்றன. இப் பகுதியின் செல்வநிலைக்கு நீண்ட காலமாக வேலி யமைக்கப்பட்டிருந்த விளைநிலங்களும், பழத்தோட்டங்களும், ஆடுகள் மேய்ப்பதற்குத் தகுந்த தாழ்ந்த நிலங்களும் காரணமாக விருந்தன. இப் பிரதேசத்திற்கு அடுத்தாற்போல் செல்வ நிலையில், குறைந்த மழையை உடைய கிழக்கு ஆங்கிலியா பிரதேசமும், லண்டனை ஒட்டினாற் போல் இருந்த எஸ்ஸெக்ஸ் (Essex) பிரதேசமும் இருந்தன. இவை களுக்கு அடுத்தாற்போல் தலைநகருக்கு வெகு தூரத்தில் இருந்த மேற்குப் பிரதேச கவுன்டிகள் இருந்தன. இப் பிரதேசங்களில் காற்று ஈரம் தோய்ந்ததாக விருந்தது. முரட்டுத்தனம் வாய்ந்த மக்களையும் செழிப்பற்ற நிலத்தையும் உடையதாய் இருந்த வடக்குப் பிரதேசம் செல்வநிலையில் அடிமட்டத்தில் இருந்தது. செஷயர் (Cheshire), டெர்பிஷயர் (Derbyshire), யார்க்ஷயர் (Yorkshire), லங்காஷயர் (Lancashire), நார்த்தம்பர்லாந்து (Northumberland), டர்ஹாம் (Durham), கம்பர்லாந்து (Cumberland) ஆகிய ஏழு கவுன்டிகளும் செல்வநிலையில் அடிமட்டத்திலிருந்தன. வடக்குப் பிரதேசத்தில் இருந்த ஷயர்கள் நிலக்கரிச் சுரங்கங்களை உடையவையாய் இருந்தன. யார்க்ஷயரிலும் லங்காஷயரிலும் நெசவுத்தொழில் நடைபெற்றுவந்தது. அப்படி இருந்தும் அப் பிரதேசக் கவுன்டிகள் செல்வநிலையில் தாழ் நிலையில் இருந்தன. நெசவுத்தொழிலின் மூலம் கிடைத்த செல்வம், அப்பிரதேசங்களில் இருந்த நிலங்களைச் செழிப்படையச் செய்ய பெரு வாரியாக செலவு செய்யப்படவில்லை. அடுத்த நூற்றாண்டில் அச் செல்வம் பயிர்த்தொழிலுக்காகப் பயன்படுத்தப்பட்டது. அந் நூற்றாண்டில் டினிசைடு (Tyneside) பிரதேசத்தில் இருந்த சுரங்கங்களில்

இருந்து கிடைத்த செல்வம், அப் பிரதேசத்திற்கு அருகில் இருந்த கவுன்டிகளில் இருந்த களர்நிலத்தைச் செழிப்படையச் செய்யப் பயன் படுத்தப்பட்டது.

கிளஸ்டரையும் (Gloucester) பாஸ்டனையும் (Boston) இணைக்கு மாறு ஒரு நேர்கோட்டைப் போடுவோமேயானால், வேல்ஸ் (Wales) பிரதேசம் நீங்கலாக இங்கிலாந்தை இரு சமபாகங்களாகப் பிரிக்கலாம். அவைகளை வடமேற்குப் பகுதி, தென்கிழக்குப் பகுதி எனக் குறிப் பிடலாம். தற்காலத்தில் ஜனத்தொகையில் பெரும்பான்மையோர் வட மேற்குப் பகுதியில் வாழ்ந்துவருகின்றனர். இதற்குக் காரணம் அப் பகுதியில் பெருந் தொழிற்சாலைகள் பல இருக்கின்றன. சிறிது கால மாகத் தென்கிழக்குப் பகுதிக்கு மக்கள் திரும்பிக்கொண்டிருக்கின் றனர். இரண்டாம் சார்லஸின் ஆட்சிக் காலத்தில் வடமேற்குப் பாகத் தின் ஜனத்தொகையில் கால்பங்குமட்டுமே அங்கு வாழ்ந்துவந்தனர் என நினைக்க இடமுண்டு. நிலவரிக் கணக்கைக் கொண்டு நோக்கினால், வடமேற்குப் பாகம் 5 பங்கு வரி கொடுத்தால், தென்கிழக்குப் பாகம் 14 பங்கு வரி கொடுத்தது. அதேபோல் உள்நாட்டில் தயாரிக்கப்படும் பொருள்களின்மேல் விதிக்கப்பட்ட வரியைக் கொண்டு நோக்கினால், வடமேற்குப் பகுதி அதில் ஒரு பங்கையும், தென்கிழக்குப் பகுதி 4 பங்குகளையும் செலுத்தியிருக்கிறது. இவை, தென்கிழக்குப் பகுதியிலே தான் பெருவாரியான மக்கள் இருந்தனர் என்பதை எடுத்துக்காட்டும். (ஆக் என்பார் எழுதிய, ‘இரண்டாம் சார்லஸின் ஆட்சிக் காலத்தில் இங்கிலாந்து’ என்ற நூலில், பக்கம் 51.)

பதினேழாம் நூற்றுண்டில், வார்விக்ஷயரில் (Warewickshire) குறிப்பிடத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. தொழில்கள் வளர்ச்சி யடைந்திருந்தன. தொழில் வளர்ச்சியின் காரணமாக விவசாயமும் வளர்ச்சியடைந்தது. காம்டன் (Camden) முதலாம் எலிசெபெத் அரசி யின் ஆட்சிக் காலத்தில் பிரிட்டானியா (Britannia) என்ற நூலை வெளி யிட்டார்; அதில், வார்விக்ஷயர் அவான் நதியால் (Avon) இரண்டு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்று குறிப்பிட்டுள்ளார். ஃபெல்டன் (Feldon) என்று அழைக்கப்பட்ட செழிப்பான நிலங்களைக் கொண்ட பாகம், அவான் நதிக்குத் தென்கிழக்கில் அமைந்திருந்தது. ஆர்டன் காடு (Forest of Arden) எனப் பெயர் பெற்றிருந்த மற்றொரு பாகம் நதியின் வடமேற்குப் பாகத்தில் அமைந்திருந்தது. மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தில், பின்னர் லண்டன் நகரின் பிஷப் பதவியை வகித்த கிப்சன் (Gibson), காம்டனின் நூலில் திருத்தங்கள் செய்து புதிய பதிப்பு ஒன்றை வெளியிட்டார். அந்தப் புதிய வெளி யீட்டிலிருந்து, ஆர்டன் காடு மறைந்து அங்கே மிக்க செழிப்பான நிலங்கள் இருந்தன என்பது தெரியவருகின்றது.

'பிர்மிங்ஹாம் (Birmingham), கருப்புப் பிரதேசம் (Black Country) ஆகியவற்றைச் சுற்றி இருந்த கவுன்டிகளில் ஏராளமான மரங்கள் இரும்புத் தொழிலுக்காக வெட்டப்பெற்றன. அதனால் காடுகளாய் இருந்த பிரதேசங்கள் விளைச்சலுக்குத் தகுந்த நிலங்களாக மாறிக்கொண்டுவந்தன. அந் நிலங்களுக்கருகில் வாழ்ந்துவந்தோர் தம் முயற்சியாலும், ஒருவகை மண்ணை எருவாக உபயோகித்தும், காட்டு நிலத்தையும் களர்நிலத்தையும் விளைநிலங்களாகவும் மேய்ச்சல்நிலங்களாகவும் மாற்றி அமைத்தனர். அதனால் அப் பிரதேசத்தில் தானியம், கால்நடை, பால்கட்டி, வெண்ணெய் முதலியன அங்கு வாழும் மக்களுக்குப் போதுமான அளவு கிடைப்பதுடன், மற்றக் கவுன்டிகளுக்கும் அனுப்பிவைக்கும் அளவிற்கு உற்பத்தி செய்யப்படுகின்றன.'

இதற்கிடையில் ஃபெல்டன் பிரதேசத்தில் மிக்க செழிப்புள்ள நிலங்கள் புல்வெளிகளாக மாறிவிட்டிருந்தன. ஒரு காலத்தில் ஃபெல்டன் பிரதேசம் பிரிஸ்டல் நகரில் தேவைப்பட்ட தானியங்களை உற்பத்தி செய்து அளித்துவந்தது. அப் பிரதேசத்தில் இருந்த கிராமங்களில் இருந்த மக்களின் எண்ணிக்கையும் குறைந்து அங்கே ஒருசில இடையர்களே வாழ்ந்துவந்தனர் என்று கிப்சன் கூறியிருக்கின்றார். ஆர்டன் காடு விளைநிலமாக மாற்றப்பட்டவுடன் அப்பிரதேசம் மிக்க செழிப்புள்ளதாக இருந்ததால், ஃபெல்டன் பிரதேசத்தில் இருந்தோர் ஆர்டன் பிரதேசத்தில் இருந்தோருடன் விவசாயத்தில் போட்டியிட முடியாத நிலையில் இருந்ததே, ஃபெல்டன் பிரதேசம் மேய்ச்சல் நிலமாக மாறுவதற்குக் காரணமாய் இருந்திருக்கவேண்டும் என்று கிப்சன் நினைக்கின்றார். வார்விக்ஷயரின் இரண்டு பாகத்திலும் திறந்தவெளி நிலத்தில் பொதுவாகப் பயிர்செய்யும் முறை மறைந்துவிட்டிருந்தது. அதற்கு மாறாக அனேக நிலக்கிழார்கள் தம் நிலங்களை வேலியிட்டு ஒதுக்கிக்கொண்டனர். இம்மாறுதல்கள் அனைத்தும் ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலே ஏற்பட்டன. டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் நிலங்களை வேலியிட்டு ஒதுக்குவதைப்பற்றி இருந்த பெரும் எதிர்ப்பு ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் இல்லாமற்போயிற்று.[1]

ஸ்டுவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் பிர்மிங்ஹாமிலும் கருப்புப் பிரதேசத்திலும் இரும்புத் தொழில்கள் நடத்தப்பெற்று வந்தாலும், இரும்பைக் காய்ச்சுவதற்காக நிலக்கரியோ அல்லது

[1] கி.பி. 1695-ல் கிப்சன், 'பிரிட்டானியாவின்' புதிய பதிப்பில், ஸ்டிராட்ஃபோர்டு (Stratford) கிருத்தவ ஆலயத்தில் ஷேக்ஸ்பியர் அடக்கம் செய்யப்பட்டிருந்தார் என்று குறித்துள்ளார். அத்துடன் ஷேக்ஸ்பியர் அவ்வூரைச் சார்ந்தவர் என்றும், அவர் 48 நாடகங்களை எழுதி முடித்து மறைந்தார் என்றும் குறித்துள்ளார். ஆனால், இப்போது ஷேக்ஸ்பியரின் நாடகங்களில் 37 மட்டுமே நமக்குக் கிடைத்திருக்கின்றன. ஷேக்ஸ்பியரைப்பற்றி 'பிரிட்டானியாவில்' கிப்சன் குறிப்பிட்டுள்ளதிலிருந்து, அக் காலத்திலேயே ஆங்கிலேயர் ஷேக்ஸ்பியருக்கு எவ்வளவு சிறப்புக் கொடுத்தனர் என்பது விளங்குகின்றது.

எளிதில் எரியக்கூடிய சுட்ட நிலக்கரியோ (coke) உபயோகிக்கப்பட வில்லை. ஆனால், நிலக்கரியானது வேறு பல காரியங்களுக்காக உபயோகிக்கப்பட்டுவந்தது. லண்டன் நகரில் அடுப்பெரிப்பதற்கு நிலக் கரியையே உபயோகப்படுத்திவந்தனர். அத்துடன் நீர் மார்க்கமாக நிலக்கரியைக் கொண்டுசெல்லக்கூடிய நகரங்களிலும் அடுப்பெரிப் பதற்கு நிலக்கரியே பயன்படுத்தப்பட்டது.

அதனால் ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் நிலக்கரி வியாபாரம் பெருகியதில் ஆச்சரியம் ஏதும் இல்லை. பத்தொன்பதாம் நூற்றாண்டில் இரண்டாவது முறையாக நிலக்கரி வியாபாரம் பெருகியது.[1]

[1] நெஃப் (Nef) என்பார் 'இங்கிலாந்தின் நிலக்கரி வியாபாரத்தின் பெருக்கம்' என்ற நூலில் (Rise of the British Coal Industry), முதலாம் எலிசபெத், மூன்றாம் வில்லியம் ஆகியோரின் ஆட்சிக் காலத்திற்கிடையில் நிலக்கரிச் சுரங்க வேலை எந்த அளவு உயர்ந்தது என்பதைக் கீழ்க்காணும் அட்டவணையின் மூலம் விளக்கி யிருக்கின்றார். அதே சமயம் நாட்டின் எப்பகுதிகளில் நிலக்கரிச் சுரங்கங்கள் இருந்தன என்பதையும் காட்டியுள்ளார். நிலக்கரிச் சுரங்கங்கள் அப்போது எங்கிருந்தனவோ அப்படியே இப்போதும் உள்ளன.

ஒவ்வோர் ஆண்டிலும் எவ்வளவு டன்கள் உற்பத்தி செய்யப்பட்டன என்பதைக் காட்டும் அட்டவணை :

| | கி.பி. 1551–60 | கி.பி. 1681–90 | கி.பி. 1781–90 | கி.பி. 1901–10 |
|---|---|---|---|---|
| டர்ஹாம், நார்த்தம்பர்லாந்து | 65,000 | 1,225,000 | 3,000,000 | 50,000,000 |
| ஸ்காட்லாந்து | 40,000 | 475,000 | 1,600,000 | 37,000,000 |
| வேல்ஸ் | 20,000 | 200,000 | 800,000 | 50,000,000 |
| மத்தியப்பிரதேசம் (Midlands) | 65,000 | 850,000 | 4,000,000 | 100,180,000 |
| கம்பர்லாந்து | 6,000 | 100,000 | 500,000 | 2,120,000 |
| கிங்ஸ்வுட் சேஸ் (Kingswood Chase), சாமர்செட் (Somerset) ஆகியவை | 10,000 | 100,000 | 140,000 | 1,100,000 |
| டீன் காடு (Forest of Dean) | 3,000 | 25,000 | 90,000 | 1,310,000 |
| டெவான் (Devon), ஐயர்லாந்து (Ireland) ஆகியவை | 1,000 | 7,000 | 25,000 | 200,000 |
| | 210,000 | 2,982,000 | 10,295,000 | 241,910,000 |
| கிட்டத்தட்ட உயர்வு | | 14 மடங்கு | 3 மடங்கு | 23 மடங்கு |

மத்தியப் பிரதேசம் கீழ்க்கண்ட நிலக்கரிச் சுரங்கங்களைக் கொண்டிருந்தது : யார்க்ஷயர் (Yorkshire), லங்காஷயர் (Lankashire), செஷயர் (Cheshire), டெர்பிஷயர் (Derbyshire), ஷராப்ஷயர் (Shropshire), ஸ்டாஃப்ஸ் (Staffs), நாட்ஸ் (Natts), வார்விக்ஷயர் (Warwickshire), லீஸ்டர்ஷயர் (Leicestershire), வோர்ஸ்டர்ஷயர் (Worcestershire).

பதினேழாம் நூற்றுண்டு முழுவதும் நிலக்கரி, நாட்டின் செல்வம் பெருகுவதற்கும், பல வகுப்பினரின் வாழ்க்கைத் தரம் உயர்வதற்கும் முக்கியக் காரணமாக இருந்தது; அதே சமயம் சுரங்க வேலையில் ஈடுபட்டிருந்த தொழிலாளரின் தாழ்ந்த நிலைக்கும் காரணமாக இருந்தது. சுரங்கச் சொந்தக்காரர்கள் தம்மிடம் வேலை செய்துவந்த தொழிலாளர் களின் நிலையைப்பற்றியும், அவர்கள் சுரங்கங்களில் வேலை செய்யும் போது அவர்களுக்கு நேரிடக்கூடும் இன்னல்களைப்பற்றியும் சற்றேனும் நினைத்தாரில்லை. குழிகள் ஆழமாக ஆழமாக, அவற்றில் வேலை செய் தோர் தரைமட்டத்திலிருந்து வெகு தொலைவில் வேலை செய்ய நேரிட் டது. அவர்களுக்கும், தரைமட்டத்தில் இருந்தோருக்கும் ஒருவிதத் தொடர்பும் இல்லாமற்போயிற்று. சுரங்கத்தில் வெடிவிபத்துகள் அடிக் கடி நிகழ்ந்தன. அத்துடன் விபத்தின் விளைவு மிகக் கொடியதாக இருந்தது. சுரங்கங்களில் பெண்களும், சிறுவர், சிறுமியர் ஆகியோரும் நிலக்கரியை வெளியில் எடுத்துச்செல்ல அமர்த்தப்பட் டிருந்தனர். டர்ஹாமிலும் நார்த்தம்பர்லாந்திலும் வேலை செய்துவந்த ஆயிரக்கணக்கான சுரங்கத் தொழிலாளர்களும், டைன் நதியில் நிலக் கரியைப் படகில் ஏற்றிச்சென்ற படகோட்டிகளும் ஒன்றுசேர்ந்து தமது நிலையை உயர்த்துவதற்காக முயற்சியெடுத்து ஓர் அளவு வெற்றியும் கண்டனர். ஸ்காட்லாந்தில் சுரங்கத் தொழிலாளர்கள் சுரங்க வேலையை விட்டு வேறு தொழிலுக்குச் செல்ல முடியாதவராகச் செய்யப்பட்டனர்; சுரங்க வேலையைச் செய்யக் கடமைப்பட்டவராகவும் செய்யப்பட்டனர். ஆனால், இங்கிலாந்தில் தொழிலாளர்களை அப்படிச் செய்யக் கட்டுப் படுத்த முடியவில்லை. எனினும், சுரங்கத் தொழிலாளர்கள், அவர்கள் குடும்பத்தினர் ஆகியோரின் நிலை மற்ற வகுப்பினரைவிட மிகத் தாழ்ந்ததாக இருந்தது.

ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலும், முன்னைய ஹனோவர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலும் சுரங்கத் தொழிலினால் ஏற்பட்ட விளைவுகளைப்பற்றி நெஃப் (Nef) என்பார் எடுத்துக் காட்டியுள்ளார் :

‘ நிலக்கரிச் சுரங்கவேலை சமுதாயத்தில் இருந்த வகுப்பினரிடையே ஒரு பிளவை உண்டாக்கியது. இடைக்காலத்தில் வாழ்ந்துவந்த குடியானவர்களும் தொழிலாளிகளும் பதினேழாம் நூற்றுண்டில் சுரங்க வேலை செய்தவர்களைப்போல, அண்டை வீட்டாரிடமிருந்து, என்ன குறை இருந்தாலும், பிரிந்து வாழவில்லை.’

இதைத் தவிர, சுரங்கத் தொழிலில், முதலாளிகளுக்கும் சுரங்க வேலை செய்த தொழிலாளர்களுக்கும் இடையே பிளவு இருந்தது. பிற்காலத்தில் அத்தகைய நிலை மற்றத் தொழில்களிலும் ஏற்பட்டது.

அத்துடன் பின்னைய ஸ்டூவர்ட் அரசர்களின் ஆட்சிக்காலத்தில், நிலக்கரி எரிப்பதற்கு உபயோகிக்கப்பட்டதன் காரணமாகத் தோன்றிய மற்றப் பல தொழில்களும் சுரங்கத் தொழிலைப்போல் பெரியனவாகவும், முதலாளித்தவ முறையிலும் அமைக்கப்பட்டன. (நெஃப் எழுதிய, 'இங்கிலாந்தின் நிலக்கரி வியாபாரத்தின் பெருக்கம்' என்ற நூலில், அத்தியாயம் நான்கு, தொகுதி இரண்டு.)

நிலக்கரிச் சுரங்கவேலை பெரிய அளவில் நடைபெற்றுவந்தும், கடல் மார்க்கமாகவோ அல்லது நதி மார்க்கமாகவோ நிலக்கரியைப் பெறமுடியாமல் பல வட்டாரங்கள் இருந்தன. மரங்கள் வெட்டப் பட்டுக்கொண்டேவந்ததால் மரங்கள் இல்லாமற் போயின சில வட்டாரங்களில். அவ் வட்டாரங்கள் நிலக்கரியைப் பெறமுடியாத நிலையில் இருந்ததால், அவ் வட்டாரங்களில் வாழ்ந்த மக்கள் அடுப் பெரிக்கவும் குளிர்காயவும் போதிய விறகு இல்லாமல் துன்பத்திற் குள்ளாயினர். சீரான சாலைகள் அமைக்கப்படும் வரையிலும், கால்வாய்கள் வெட்டப்படும் வரையிலும், பின்னர் இருப்புப்பாதைகள் போடப்படும் வரையிலும் அந் நிலையில் இருந்தன அவ் வட்டாரங்கள். இவ்வசதிகள் இருந்தபோது நிலக்கரி ஒவ்வொரு வீட்டிற்கும் கிடைக்க வழியேற்பட்டது. மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்தில் செல்வி சீலியா ஃபியன்னஸ் (Miss Celia Fiennes) இங்கிலாந்தின் தென் கிழக்குப் பாகத்தில் குதிரைச் சவாரி செய்து ஊர்களையும் மக்களையும் பார்ப்பதற்காகப் பிரயாணம் செய்துவந்தார். பென்சான்ஸ் (Penzance) என்ற இடத்தில் தனது இரவு உணவு, முட்செடிகளைக் கொண்டு சமைக்கப்படுவதைக் கண்டார்.[1] அப் பகுதியில் இருந்த காடுகள் அழிந்துவிட்டிருந்ததால் விறகு கிடைக்கவில்லை. வேல்ஸ் பிரதேசத்திலிருந்து கிடைக்கக்கூடிய நிலக்கரி, கலங்கள் மூலம் இப் பகுதியில் இருந்த துறைமுகங்களுக்குக் கொண்டுவரப்பட்டது. அந் நிலக்கரியும் இறக்குமதி செய்யாதவாறு, போர் நிகழ்ந்த காலங்களில், ஃபிரெஞ்சுக்காரர்கள் தடை செய்துவந்தனர். லீஸ்டர்ஷயரில் (Leicestershire) மாட்டுச் சாணம் அடுப்பெரிக்க உபயோகிக்கப்பட்டுவந்தது. அப்படிச் செய்யாமலிருந்திருந்தால் அச் சாணம் விளைநிலங்களுக்கு எருவாகப் பயன்பட்டிருக்கும்.

[1] கிறிஸ்டோபர் மோரிஸ் (Christopher Morris) என்பவர் செல்வி சீலியா ஃபியன்னஸின் பிரயாணங்களைப்பற்றி எழுதியுள்ளார். சீலியா மூன்றும் வில்லியத்தின் ஆட்சிக் காலத்திலும், ஆன் அரசியின் ஆட்சிக் காலத்திலும் பிரயாணம் செய்தார். சீலியா செல்வம் படைத்தவராக இருந்தார்; அவர் ஆங்கிலிகன் மதத்தைச் சேர்ந்தவராகவும் இருந்தார். அவர் வைகவுன்ட் (Viscount) பதவி வகித்த மூன்றும் சே அண்டு சீல் (Saye and Sele) என்பாரின் தங்கையாவார். அவர் பொழுதுபோக்கிற்காகவும் புதுமையானவற்றைக் காண்பதற்காகவும் பிரயாணங்கள் செய்துவந்தார். பிரயாணங்களின்போது குதிரைச் சவாரி செய்தே அவர் ஊர்களைக் கடந்துசென்றார்.

கி.பி. 1695-ல் கிப்சன், 'பிரிட்டானியாவின்' புதிய பதிப்பை வெளியிட்டபோது, ஆக்ஸ்ஃபோர்டுஷயரில் இருந்த மலைகளைப்பற்றி அதில் குறிப்பிட்டுள்ளார். எலிசபெத் அரசியின் ஆட்சிக் காலத்தில் அடர்ந்த காடுகளைக் கொண்டிருந்த அம் மலைகள் வெறும் பாறைகளாக நிற்கின்றன; சில்டர்ன் (Chiltren) பிரதேசம் ஒன்றே காம்டன் வருணித்தவாறு அப்போதும் இருந்தது என்று எழுதியுள்ளார். அந்த ஷயரின் வடக்குப் பாகத்திலிருந்த ஊர்களிலும் ஆக்ஸ்ஃபோர்டிலும் விறகு எடை போட்டு விற்கப்பட்டது. அதற்குக் காரணம், அப்பிரதேசத்தில் விறகு கிடைத்தற்கரியதாக இருந்ததே. தேம்ஸ் (Thames) நதியில் படகுகள் மூலம் கொண்டுவரப்பட்ட நிலக்கரியைக் கொண்டு ஆக்ஸ்ஃபோர்டு நகரவாசிகளும், சர்வகலாசாலையில் இருந்தோரும் உணவைச் சமைத்துக்கொண்டனர்; அப்படியே நிலக்கரியைக் கொண்டு குளிரும் காய்ந்துகொண்டனர். ஆனால், ஆக்ஸ்ஃபோர்டுஷயரின் வடபாகத்தில் இருந்த நகரங்கள் போதுமான விறகு கிடைக்காததால் தொல்லையுற்று வந்தன.

அடுத்த நூற்றாண்டில் மேலும் மேலும் தொழிலாளர்களின் குடும்பங்கள், அடுப்பெரிக்க விறகு கிடைக்காததால், பலவித உணவைச் சமைக்க முடியாமல் ரொட்டியையும் பால்கட்டியையும் உண்டனர். குளிர்காலத்திலும் மழைக்காலத்திலும், குளிர்காய்வதற்கு விறகை உபயோகப்படுத்த முடியாத காரணத்தால் அவர்கள் குளிரால் அவதியுற்றனர். விறகு கிடைப்பதற்கு அரிதாகப்போனபின், சில காலம் கழிந்தே நிலக்கரி சில பாகங்களில் கிடைக்கத் தொடங்கியது. அந்த இடைக்காலத்தில் ஏழைகள் பெரிதும் அவதியுற்றனர்; செல்வந்தர்கள் கூட ஓரளவு அவதியுற்றனர்.

சீரான, உறுதியான சாலைகள் அமைக்கப்படுமுன்னர்கூட, நிலக்கரியைச் சுரங்கங்களிலிருந்து வெகு தொலைவில் இருந்த இடங்களுக்குக் கொண்டுசெல்ல வசதி இருந்தது. ஆனால், அதற்காக அதிகம் செலவழிக்க வேண்டியதாய் இருந்தது. செல்வி ஃபியன்னஸ், பிரிஸ்டலிலிருந்து நதி வழியே படகுகள் நிலக்கரியை ஏற்றிக்கொண்டு, பிரிட்ஜ்வாடர் (Bridgwater) என்ற ஊரைக் கடந்து, டான்டன் (Taunton) என்ற ஊருக்கு மூன்று மைல் தொலைவில் இருந்த இடத்திற்கு வந்து நிலக்கரியை இறக்கின என்று குறித்துள்ளார். அங்கிருந்து குதிரைகளின்மேல் நிலக்கரியைப் பல இடங்களுக்கு எடுத்துச் சென்றனர் என்றும் குறித்துள்ளார். ஒவ்வொரு குதிரையும் இரண்டு புஷல் (bushell) எனப்பட்ட அளவுள்ள நிலக்கரியைத் தாங்கிச் சென்றன. படகுகள் நிலக்கரியை இறக்கிய இடத்தில் இரண்டு புஷல் நிலக்கரியின் விலை பதினெட்டுப் பென்சாக இருந்தது. அங்கிருந்து கொண்டுசெல்லப்பட்ட நிலக்கரி, மூன்று மைல்களுக்கு அப்பால்

இருந்த டான்டன் நகரத்தில் இரண்டு ஷில்லிங் விலைக்கு விற்கப்பட்டது என்றும், சாலைகளில் நிலக்கரியைத் தாங்கிச் சென்றுகொண்டும் வந்துகொண்டும் இருந்த குதிரைகள் பலவற்றைக் காணலாம் என்றும் ஃபியன்னஸ் குறித்துள்ளார்.

லண்டன் நகரம் மற்ற நகரங்களைவிட மேலும் மேலும் விரிவடைந்து கொண்டே வந்தது. அரசாட்சி திரும்பவும் நிறுவப்பட்டபின் அதிகமாக விரிவடைந்துகொண்டேபோயிற்று. கி.பி. 1700-ல் இங்கிலாந்தின் ஜனத்தொகை 5,500,000ஆக விருந்தது. இதில் ஐந்தில் ஒரு பாகத் திற்குமேல் லண்டனில் வாழ்ந்துவந்தனர்.[1] லண்டனுக்கு அடுத்து முக்கிய நகரங்களாய் விளங்கிய பிரிஸ்டல், நார்விக் (Norwich) ஆகிய நகரங்களில் சுமார் 30,000 மக்கள் வாழ்ந்து வந்தனர். லண்டன் நகரத்தவர் நடத்திவந்த வியாபாரமும், மற்ற நகரத்தவர் செய்துவந்த வியாபாரத்தைவிட அதிகமாக விருந்தது. கி.பி. 1680-ல் லண்டன் துறைமுகத்தில் சுங்கவரி விதிக்கும் அதிகாரிகளுக்குக் கொடுக்கப்பட்ட சம்பளம் வருடத்திற்கு 20,000 பவுன்களாக விருந்தது. பிரிஸ்டல் நகரம் அதேபோல் வருடத்திற்கு 2,000 பவுன்களும், நியூகாசில் (Newcastle), பிளிமத் (Plymouth), ஹல் (Hull) ஆகிய துறை முகங்கள் ஒவ்வொன்றும் வருடத்திற்கு 900 பவுன்களும் செலவிட்டன. மற்றத் துறைமுகங்கள் இந்த அளவிற்கு எட்டவில்லை. நியூகாசிலின் செல்வநிலை, அங்கிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட நிலக்கரியின் அளவைப் பொறுத்திருந்தது. அங்கிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட நிலக்கரியில் நான்கில் மூன்று பங்கு லண்டனுக்கு அனுப்பப்பட்டது. ஹல்லின் செல்வநிலைக்கு மீன்பிடிக்கும் தொழில் காரணமாகவிருந்தது. அத்துடன் வடக்கு இங்கிலாந்தில் பாதுகாப்பிற்காகப் படை ஒன்று அங்கே இருந்துவந்ததன் காரணமாகவும் அந் நகரம் முக்கியத்துவம் வாய்ந்ததாய் இருந்தது. பிளிமத், பிரிஸ்டலைப் போலவும், செல்வத்தில் பெருகிவந்த லிவர்பூலைப் (Liverpool) போலவும், அட்லான்டிக் மகா சமுத்திரத்தின் அக்கரையில் இருந்த குடியேற்ற நாடுகளுடன் நடத்தி வந்த கடல் வாணிபத்தால் செல்வத்தில் உயர்ந்துவந்தது. அத்துடன் கடற்படையின் மேற்குத் தளமாகவும் அது இருந்துவந்ததால் அது ஒரு முக்கிய நகரமாகக் கருதப்பட்டது.

[1] பெயர்வைப்புப் பேரேடுகளிலிருந்து (Registers of Baptisms), கி.பி. 1700-ல் இங்கிலாந்திலும் வேல்சிலும் சேர்ந்து $5\frac{1}{2}$ மில்லியனுக்குமேல் மக்கள் வாழ்ந்துவந்தனர் எனத் தெரிகின்றது. தலைநகரைச் சேர்ந்த வட்டாரத்தில் 674,350 பேர்கள் வாழ்ந்துவந்தனர். தலைநகரில் மட்டும் சுமார் 200,000 பேர்கள் இருந்தனர். (ஜியார்ஜ் அம்மையார் எழுதிய 'லண்டனில் வாழ்க்கை' என்ற நூலில், பக்கங்கள் 24-25 329-330.) இங்கிலாந்து, வேல்ஸ் ஆகியவற்றின் ஜனத் தொகைக் கணக்கை டால்பாட்-கிரிப்ஃபித் என்பார் வெளியிட்டுள்ள சஞ்சிகையில் பார்க்கவும். (Talbot-Griffith, 'Royal Statistical Society Journal', 1929, Vol. XCII, Pt. II., pp. 256-263.)

விட்பி (Whitby), யார்மத் (Yarmouth), ஹார்விக் (Harwich) ஆகிய நகரங்களில் கப்பல் கட்டும் தொழில் சிறப்பாக நடந்துவந்தது. ஆனால், கிங்ஸ் லின்னும் (King's Lynn), கிழக்கு ஆங்கிலியாவில் இருந்த மற்ற சிறிய துறைமுகங்களும் செல்வத்தில் குறைந்துகொண்டே வந்தன. அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று, தேம்ஸ் நதியின் முகத்துவாரம் வியாபாரத்தில் பெருகிவந்தது; இரண்டு, அமெரிக்காவுடன் வியாபாரம் பெருகிவந்ததால் இங்கிலாந்தின் மேற்கே இருந்த துறைமுகங்கள் அதற்கு வசதியானதாக இருந்ததாகும். கப்பல் போக்குவரத்துச் சட்டங்கள் (Navigation Laws) அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுடன் நடந்துவந்த வியாபாரத்திற்கு ஊக்கமளித்தன. அதே சமயம் ஸ்காண்டிநேவியா (Scandinavia) தீபகற்பத்துடனும், பால்டிக் கடற் கரையோர நாடுகளுடனும் ஆங்கிலேயர் நடத்திவந்த வியாபாரம் அதனால் பாதிக்கப்பட்டது. அவ் வாணிபம் பாதிக்கப் பட்டதால், கிழக்குக் கரைத் துறைமுகங்கள் தங்கள் முக்கியத்துவத்தை இழந்தன. லண்டன் துறைமுகம் ஒன்றே இதற்கு விதிவிலக்காக நின்றது. அட்லான்டிக் சமுத்திரத்தைக் கடந்து செல்ல பெரிய கலங்கள் தேவைப்பட்டன. பெரிய கலங்கள் உபயோகத்திற்கு வந்த தால், மேற்கில் இருந்த ஃபௌவி (Fowey), பிட்டிஃபர்ட் (Bideford) ஆகியவற்றைப் போன்ற சிறிய துறைமுகங்கள் பயனற்றவையாய்ப் போயின. அத்துடன் லண்டன் நகர வியாபாரிகளும் லண்டன் மூலதன மும் மற்ற நகரங்களின் வியாபாரத்தைக் கட்டுப்படுத்திவந்தன.

லண்டனில் புதியவர்கள் வந்து குடியேறிக்கொண்டிருந்தனர். வெளிநாட்டிலிருந்து செல்வம் லண்டனுக்கு வந்துகொண்டே யிருந்தது. இவை காரணமாக லண்டன் எவ்வித நஷ்டத்தையும் தாங்கக்கூடியதாக இருந்தது. கி.பி. 1665–1666-ல் கொள்ளை நோயும் (plague) பெருந்தீயும் லண்டனுக்குப் பெருங்கேட்டை விளைவித்தன. அப்படியிருந்தும், லண்டன் நகரின் செல்வாக்கும், செல்வமும், ஜனத் தொகையும் பெருகிக்கொண்டேபோயின.

மூன்று நூற்றுண்டுகளில் லண்டனுக்கு ஏற்பட்ட தீங்குகளில் கி.பி. 1665-ல் தோன்றிய கொள்ளை நோய் கடைசியானது. அதற்குமுன் ஏற்பட்ட தீங்குகளைவிட அதிகமாகக் கொள்ளை நோய் லண்டனைப் பாதிக்கவில்லை. கிரெசி (Crecy) என்ற இடத்திலும், பவாட்டியா (Poitiers) என்ற இடத்திலும் நிகழ்ந்த போர்களுக்கு இடைப்பட்ட காலத்தில் கருப்புக் கொள்ளைநோய், தூரக்கிழக்கு நாடுகளிலிருந்து ஐரோப்பாக் கண்டத்திற்குப் பரவியது. அந் நோய் ஐரோப்பாவின் பெரும்பாகத்தைத் தாக்கியது. ஒரு புதிய, கொடிய வியாதி தோன்றும் போது, அது எவ்வளவு கொடியதாக இருக்குமோ அப்படி இருந்தது கருப்புக் கொள்ளை நோய். அத்துடன், அத்தகைய கொடிய வியாதி

எப்படி ஓர் இடம் விடாமல் பரவுமோ, அப்படியே கருப்புக் கொள்ளை நோயும் பரவியது. எத்தகைய குக்கிராமமும் அந் நோயிலிருந்து தப்ப முடியவில்லை. அந் நோயின் காரணமாக போகாட்சோ (Boccaccio), ஃப்ரூவாசார் (Froissart), சாசர் (Chaucer) ஆகியோரின் காலத்தில் வாழ்ந்தோரில் இரண்டில் ஒரு பங்கினர், மூன்று ஆண்டுக் காலத்திற்குள் உயிரிழந்தனர் என எண்ணப்படுகிறது. கருப்புக் கொள்ளை நோய் இங்கிலாந்தில் நிலைத்தது. பிற்காலத்தில் அத்தகைய நோய் தோன்றியபோதெல்லாம் அதற்குக் கொள்ளை நோய் என்று பெயர் கொடுக்கப்பட்டது. கருப்புக் கொள்ளைநோய் மறுபடியும் இங்கிலாந்து முழுவதையும் ஒரே காலத்தில் பாதிக்கவில்லை. ஆனால், ஆங்காங்கே அந் நோய் தோன்றிக்கொண்டேயிருந்தது. முக்கியமாக அந் நோய், நகரங்களிலும், துறைமுகங்களிலும், ஆற்றங்கரையில் இருந்த ஊர்களிலும் தோன்றிக்கொண்டே யிருந்தது. அவ்விடங்களுக்குக் கப்பல்களிலும் படகுகளிலும் வந்த பொருள்களுடன் கிருமிகளும் வந்துசேர்ந்தன. நகரங்களில் எலிகள் விரைவில் பெருகிவந்ததாலும், எலிகள் கொள்ளை நோய்க் கிருமிகளைத் தாங்கிச் சென்றதாலும், மேற் கண்ட இடங்களில் கொள்ளை நோய் தோன்றிக்கொண்டே இருந்தது. லண்டன் நகரில் லங்காஸ்டிரியன் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலும், டியூடர் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலும், நீண்ட காலங்களுக்குக் கொள்ளை நோய் தொடர்ந்து இருந்துவந்தது. ஆனால், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்தில் லண்டனில் எப்போதாவது தோன்றியது. தோன்றியபோதெல்லாம் மிக்க கொடுமை விளைவித்தது. முதலாம் ஜேம்ஸ் பட்டத்திற்கு வந்ததால் ஏற்பட்ட குதூகலத்தை அப்போது தோன்றிய கொள்ளை நோய் கெடுத்தது. அந் நோயின் காரணமாக 30,000 மக்கள் உயிரிழந்தனர். முதலாம் சார்லஸ் பட்டத்திற்கு வந்ததும் மறுபடியும் கொள்ளை நோய் லண்டன் மக்களைப் பீடித்தது. அந் நோயும் மிக்க கொடுமை விளைவித்தது. கி.பி. 1636-ல் தோன்றிய கொள்ளை நோய் அவ்வளவு கொடியதாக இருக்கவில்லை. அதன் பிறகு முப்பது ஆண்டுக் காலத்திற்குக் கொள்ளை நோய் லண்டன் நகர மக்களைப் பீடிக்கவில்லை. ஆனால், அந்த முப்பது ஆண்டுக் காலத்தில் நடைபெற்ற வேறு நிகழ்ச்சிகள் கொள்ளை நோயின் கொடுமையை மறக்கச் செய்தன. கி.பி. 1665-ல் தோன்றிய கொள்ளை நோய் முன்னைய கொள்ளை நோய்களைவிடக் கொடியதாயிருக்கவில்லை. ஆனால், அக் கொள்ளை நோய், நாகரிகம் வளர்ச்சியடைந்து, அதனால் மக்கள் மேலும் பல வசதிகளுடன் தங்களுக்குத் தீங்குகள் நேராத வகையில் வாழ்ந்துவந்த சமயத்தில் தோன்றியது. ஆகையால், கொள்ளை நோயைப்பற்றி மக்கள் சிந்திக்கும்படி அது செய்துவிட்டது. இக் கொள்ளை நோய் மறைந்த சிறிது காலத்திற்குள், கடவுளின் கட்டளையின்பேரில் நிகழ்ந்ததைப்போல் மற்றொரு தீங்கு லண்டனைப்

பீடித்துக்கொண்டது. அத் தீங்கிற்கு ஒப்புமையாக அதற்குமுன் இங்கிலாந்தில் எதுவும் நிகழ்ந்ததில்லை.[1]

கி.பி. 1666-ல் லண்டனில் தோன்றிய, 'பெருந் தீ' (Great Fire) ஐந்து நாள்களுக்குத் தொடர்ந்து எரிந்தது. அத் தீயில் லண்டனின் விரிந்த பாகங்களைத் தவிர மற்றவை எரிந்து சாம்பலாயின. லண்டன் முழுவதையும் எடுத்துக்கொண்டால் தீயால் பாதிக்கப்பட்டவர் இரண்டில் ஒரு பங்குகூட இருக்கவில்லை என்று கூறலாம். லண்டனின் கோட்டைச் சுவர்களுக்கு அப்பால் இருந்த இடங்களுக்குத் தீ சிறிதே எட்டியது. கோட்டைச் சுவருக்கப்பால்தான் லண்டனின் ஜனத் தொகையில் பெரும்பான்மையோர் வசித்துவந்தனர். தீப்பிடிப்பதற்கு முன் அறுபது ஆண்டுக் காலத்தில் லண்டன் நகரம் விரைவாக விரிவிடைந்துகொண்டே வந்திருந்தது. லண்டனின் ஜனத்தொகை அரை மில்லியனுக்குச் சற்றே குறைவாகவிருந்தது. இங்கிலாந்தின் மற்ற நகரங்களில், வாழ்க்கை, நகர வாழ்க்கையையும் நாட்டுப்புற வாழ்க்கையையும் ஒருசேரக் கொண்டதாய் இருந்தது. லண்டன் நகரில் மட்டுமே தற்காலத்தில் பெரிய நகரங்களின் வாழ்க்கை எப்படி உள்ளதோ அதைப்போல் மாறிக்கொண்டுவந்தது. கோட்டை மதில் களுக்கு அப்பால், அதாவது, செயின்ட் கையில்ஸ் (St. Giles's), கிரிப்பிள்கேட் (Cripplegate), வொயிட்சேபெல் (Whitechapel), ஸ்டெப்னி (Stepney), வெஸ்ட்மின்ஸ்டர் (Westminster), லாம்பெத் (Lambeth) ஆகிய பகுதிகளுக்கு அப்பால் இருந்த, லிபர்டீஸ் (Liberties) என அழைக்கப்பட்ட பகுதிகளில் ஏழைகள் நெருங்கி வாழ்ந்துவந்தனர். ஏழைகளின் குடும்பங்களில் அதிகமான குழந் தைகள் இறந்துவந்தாலும், அவர்களின் எண்ணிக்கை பன்மடங்காகிக் கொண்டேவந்தது.

தீ அணைக்கப்பட்டபின் கட்டடங்கள் திரும்பவும் எழும்பின. புதிய கட்டடங்கள் எழுப்பப்பட்டாலும், ஏழை மக்களின் சுகாதாரமும்

[1]உள்நாட்டுப் போர் நிகழ்ந்த காலத்தில் (1642–46) இங்கிலாந்தின் மற்றப் பாகங்களில், முக்கியமாகத் தெற்கு, மேற்கு ஆகிய பாகங்களில் கொள்ளை நோய் தீவிரமாக இருந்துவந்தது. செஸ்டர் (Chester) போன்ற நகரங்களில் கொள்ளை நோயினால் நாலில் ஒரு பங்கு மக்கள் உயிரிழந்தனர். கி.பி. 1665-ல் லண்டனில் தோன்றிய கொள்ளை நோய் லண்டனை மட்டும் பாதிக்கவில்லை. கிழக்கு ஆங்கிலியா பிரதேசம் தீவிரமாகப் பாதிக்கப்பட்டது. கொள்ளை நோய் இங்கிலாந்தின் வடகோடிக் கும் தென்கோடிக்கும் பரவவில்லை. வெஸ்ட்மூர்லாந்தைச் (Westmorland) சார்ந்த லாங்டேல் (Langdale) என்ற இடத்தில் ஒரு பண்ணை வீட்டில் இருந்தோர் அனைவருமே கொள்ளை நோயினால் இறந்தனர் என்று இன்றும் கூறப்பட்டுவருகிறது. அப் பண்ணை வீட்டிலும் அந் நோய் பரவுவதற்கு, அந் நோயால் பீடிக்கப்பட்ட போர் வீரன் ஒருவனின் உடையை அங்கு அனுப்பிவைத்தது காரணமாக இருந்தது. அந்த ஒரு பண்ணையைத் தவிர அந்த வட்டாரத்தில் எந்த இடத்திலும் கொள்ளை நோய் தலைகாட்டவில்லை. போர்வீரனின் உடை கொள்ளை நோய்க் கிருமியைத் தாங்கிச் சென்றிருக்கவேண்டும்.

ஒழுக்கமும் உயர்வதற்கு வழியேற்படவில்லை. ஏழைகள் வாழ்ந்து வந்த 'லிபர்டீஸ்' என்ற பகுதிகளில்தான் கொள்ளை நோயானது தொடங்கியது. இப் பகுதிகள் தீக்கிரையாகாமல் தப்பியதால், கி.பி. 1722-ல், டீஃபோ (Defoe) குறித்துள்ளதுபோல், அவை முன்னிருந்த நிலையிலேயே இருந்துவந்தன. லண்டன் நகரில் கி.பி. 1665ஆம் ஆண்டிற்குப் பிறகு கொள்ளை நோய் தோன்ருததற்கு லண்டன் நகரம் புதியதாகக் கட்டப்பட்டமை காரணமாய் இருக்க முடியாது என்பது விளங்கும்.

தீயின் காரணமாக மாறுதல் அடைந்த பாகம் கோட்டைச் சுவருக்குள், வீடுகளும் கடைகளும் இருந்த லண்டனின் முக்கிய பாக மாகும். இடைக்காலத்திலிருந்து இருந்துவந்த வியாபாரிகளின் இல்லங்கள், பின்புறம் தோட்டங்களையும் திறந்த முற்றங்களையும் உட்கொண்டிருந்தன. அவ்வில்லங்களின் சுவர்கள் இலேசான மரச் சட்டங்களைக் கொண்டவையாய் இருந்தன. தெருக்கள் குறுகியவையாக இருந்தன. முன்புறத்தில் கூரை முக்கோண வடிவமாகத் தெருவரை நீண்டிருக்கும். அதனால் இருபுறமும் மாடியில் வேலை செய்துவந்தோர் தெருவின் குறுக்கே கைகுலுக்கிக்கொள்வர். பெருந் தீ லண்டனைச் சுட்டெரித்தபோது இத்தகைய கட்டடங்கள் எரிந்து சாம்பலாயின. மரச்சட்டங்களைக் கொண்டிராத சுவர்களே நின்றன. வியாபாரிகள் திரும்பவும் வீடுகட்டத் தொடங்கியபோது முழுவதும் செங்கற்களைக் கொண்ட சுவர்களைக் கட்டினர். அத்துடன் விசாலமாகவும் வீட்டைக் கட்டினர். ஆனால், சாலையிலிருந்து நோக்கினால் அவ்வளவு அழ காய்த் தோற்றமளிக்காத வீடுகளைக் கட்டிக்கொண்டனர். புதியதாக வீடுகள் கட்டப்பட்டதால் சுகாதாரம் உயர்ந்தது.

திரும்பவும் இங்கிலாந்தில் கொள்ளைநோய் தோன்ருததற்கு, வீடுகள் செங்கற்களைக்கொண்டு கட்டப்பட்டது ஓர் அளவு காரணமாகவிருந்தது. வீட்டின் தரைகள் முன்போல் வைக்கோலினால் செய்யப்பட்ட பாய் களுக்குப் பதிலாகக் கம்பளங்களால் மூடப்பட்டன; அத்துடன் திரைச் சீலைகளுக்குப் பதிலாக மரத்தைக் கொண்டு சுவர்களில் சிற்பவேலை செய்யப்பட்டது. இவையும், கொள்ளை நோய் திரும்பவும் தோன்ருததற்குக் காரணமாகவிருந்தன. கிருமிகளும், அக்கிருமிகளைத் தாங்கி நோயைப் பரப்பிவந்த எலிகளும் முன்போல் தங்குவதற்கு இடமில்லாமற்போயிற்று. மேற்கண்டவாறு வைக்கோற் பாய்களையும் திரைச்சீலைகளையும் விட்டொழித்தது, கொள்ளை நோய் ஒழிந்ததற்கு ஒரு முக்கியக் காரணமாக இருந்தது என்று கூறலாம். அது பிராணி களின் வாழ்க்கையில் ஏற்பட்ட ஒரு பெரிய மாறுதலேயாகும். இடைக் காலத்திலிருந்து இருந்துவந்த கரிய நிறமுள்ள எலிகள் மறைந்து, தற்காலத்தில் இங்கிலாந்தில் காணப்படும் பழுப்பு நிற எலிகள்

தோன்றின. இப் பழுப்பு நிற எலிகள், கருப்பு நிற எலிகள் வியாதியைப் பரப்பிவந்த அளவிற்குப் பரப்பக்கூடியவைகளாக இருக்கவில்லை. (சால்ட்மார்ஷ் என்பவர் 'கேம்பிரிட்ஜ் வரலாற்றுச் சஞ்சிகை' யில் எழுதிய கட்டுரை, 1941.)

லண்டன் நகரம் மற்ற நாட்டவர் அதிசயிக்கும் வகையில் விரைவாகத் திரும்பவும் உண்டாக்கப்பட்டது.

'தீயின் விளைவுகள் ஆச்சரியப்படத்தக்கவையாய் இருக்கவில்லை. அதைவிட லண்டன் திரும்பவும் உண்டாக்கப்பட்டதே ஆச்சரியப்படத் தக்கதாய் இருந்தது. அரசனும் பார்லிமென்டும் எடுத்துக்கொண்ட அக்கறையின் காரணமாக உயர்ந்த கட்டடங்கள் கட்டப்பெற்றன. வீடுகள் செங்கற்களைக் கொண்டு முழுவதும் கட்டப்பெற்றன. (முன்பெல்லாம் மரச்சட்டங்களையும் சுண்ணும்பையும் கொண்டனவாக விருந்தன சுவர்கள்.) நான்கு அல்லது ஐந்தாண்டுக் காலத்திற்குள் லண்டன் திரும்பவும் எழும்பியது' என்று சர் ஜான் ரேஸ்பி குறித்துள்ளார்.

கொள்ளை நோயின் காரணமாக ஐந்தில் ஒரு பங்கு ஜனத் தொகையை இழந்துவிட்ட லண்டன் நகரம் அந்த நஷ்டத்தையும் முயற்சியின்றியே சரிசெய்துகொண்டது. இங்கிலாந்தின் மற்ற ஷயர்களிலிருந்தும், ஐரோப்பாவின் பாதி நாடுகளிலிருந்தும் மக்கள் வந்து லண்டனில் குடியேறிய வண்ணம் இருந்தனர். அவ்வகையில் தான் ஜனத்தொகை சரிசெய்யப்பட்டது.

இடைக்காலத்தைச் சார்ந்த டியூடர் வம்சத்தினரின் காலத்தில் சிறப்புற்ற நகரம் மறைந்துவிட்டிருந்தது. முன்னிருந்த தெருக்களின் அமைப்பு ஒன்றே நின்றிருந்தது. புதியதாகக் கட்டப்பட்ட, உலகிலேயே பெயர் பெற்ற லண்டன் நகரமானது அமைப்பிலே விரும்பத்தக்கதாக இருக்கவில்லை.

கோதிக் கட்டடக் கலையின்படி கட்டப்பட்ட கிருத்தவ ஆலயம் உட்பட 89 கிருத்தவ ஆலயங்கள் தீக்கிரையாயின. அவை அப்போது அழிக்கப்பட்டதில் ஒரு நன்மை இருந்தது. அழிக்கப்படுவதற்குச் சிறிது காலத்திற்குமுன்தான் கிரிஸ்டோஃபர் ரென் (Christopher Wren) என்பார், அரச அவையினருக்கும் லண்டன் நகரவாசிகளுக்கும் தெரியவரலானுர். புதியதாக உருவாகிய லண்டன் நகரின் கிருத்தவ ஆலயங்கள் அவரது கலைத்திறனுல் கட்டுவிக்கப்பட்டவையாகும். சாலைகள் பிற்காலத்தில் திருத்தி அமைக்கப்பட்டும் அவர் கட்டுவித்த கிருத்தவ ஆலயங்கள் இன்றும் அப்படியே நிற்கின்றன. அவைகளின் விசாலமான அமைப்பும் அழகும், அவை தோன்றிய காலத்தின்

உயர்ந்த மனப்பான்மையையும், அவற்றைத் தோற்றுவித்தோரின் கலைத்திறனையும் எடுத்துக்காட்டுகின்றன.

செயின்ட் பால்ஸ் (St. Paul's) கிருத்தவ ஆலயம் எவர் ஒருவராலும் கட்டுவிக்கப்பட்டதன்று. லண்டன் துறைமுகத்தில் இறக்குமதி செய்யப் பட்ட நிலக்கரியின்மீது வரி ஒன்று விதிக்கப்பட்டது. அவ் வரி விதிப் பிற்குப் பார்லிமென்ட் அங்கீகாரம் அளித்தது. அவ்வாலயத்தைக் கட்டி முடிக்கும் வேலை எவற்ருலும் தடைப்பட்டுவிடாமல் தொடர்ந்து நடந்துவந்தது. போப்பின் அதிகாரத்தை நிலைநிறுத்தச் செய்யப்பட்ட சதி (Popish Plot), புகழ்பெற்ற புரட்சி, மார்ல்பரோ பிரபு நடத்திய போர்கள் ஆகிய எவற்றின் காரணமாகவும் அவ்வாலயத்தைக் கட்டி முடிக்கும் வேலை தடைப்பட்டு நின்றுவிடவில்லை. ஆன் அரசியின் ஆட்சி உச்சநிலையில் இருந்தபோது அவ்வாலயம் கட்டி முடிக்கப் பட்டது. அதைக் கலைத்திறன் கொண்டு கட்டுவித்த சிற்பியின் ஆவி உடலை விட்டுப் பிரிவதற்குப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பே அக் கட்டடம் முடிவடைந்தது.

போர்ட்லாந்தில் (Portland) கிடைத்த வெள்ளை நிறக் கற்களைக் கொண்டு செயின்ட் பால்ஸ் ஆலயம் கட்டுவிக்கப்பட்டது. அக் கற்கள் போர்ட்லாந்து தீபகற்பத்திலிருந்து கடல் மார்க்கமாகக் கொண்டு வரப்பட்டன. அக் கற்கள் அங்குக் கிடைப்பது தெரிந்திருந்தும், ஸ்டூவர்ட் வம்சத்தினரின் ஆட்சிக் காலத்திலேதான் அவ் வெள்ளைக் கற்கள் பெரும்பாலும் கட்டடங்களில் உபயோகிக்கப்பட்டன. ரென், செயின்ட் பால்ஸ் ஆலயத்திற்கு அக்கற்களை உபயோகித்தது, போர்ட் லாந்து மக்களுக்குப் புதுவாழ்வைத் தேடித்தந்தது. அங்கே கல்லை வெட்டி எடுக்கும் வேலை பெருமளவில் ஆரம்பிக்கப்பட்டது. அக் கற்களைக் கொண்டு சாலைகள் அமைக்கப்பெற்றன. அத்துடன் அக் கற்களைக் கலங்களில் ஏற்றுவதற்காகத் துறைமுகத்தில் வசதி செய்யப்பட்டது. ஏராளமான செல்வம் பலவிதத்திலும் செலவிடப் பட்டது.

'கற்களைப் போர்ட்லாந்திலிருந்து வாங்கி அனுப்புவதற்காக நியமிக்கப்பட்டவர்களுக்கும், அங்கே கப்பல் துறைகளில் ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்படும் இடத்தின் சொந்தக்காரர்களுக்கும் பெருந் தொகை சம்பளமாகக் கொடுக்கப்பட்டது; அத்துடன் கற்களைக் கொண்டுவரும் வழிகள், துறைகள் முதலியவை செப்பனிடவும் செலவிடப்பட்டது. மேலும், கலங்களில் கற்களை ஏற்றுவதற்காகப் பாரம்தூக்கிப் பொறிகளும் பொருத்தப்பட்டன. லண்டனிலிருந்து பலர் போர்ட்லாந்திற்குக் கற்களைக் கொணரும் வேலையை மேற்பார்வை செய்வதற்காக அனுப்பப்பட்டனர். அவர்கள் அத்துடன் கற்கள்

வெட்டியெடுக்கும் வேலை தடையுறாமல் நடைபெறுமாறு பார்த்துக் கொள்ளும் பொறுப்புடையவராய் இருந்தனர். மேலும், அவர்கள் போர்ட்லாந்து மக்களுடன் பழகிக் கற்களைத் தமக்கு அளிக்குமாறு செய்யவும் வேண்டியிருந்தது.' ('பொருளாதார வரலாற்றுச் சஞ்சிகை' —Ec. Hist. Rev., Nov., 1938.)

செயின்ட் பால்ஸ் ஆலயத்திற்கு வெள்ளைக் கற்கள் பயன்படுத்தப் பட்ட பிறகு போர்ட்லாந்து வெள்ளைக் கற்களை ஆங்கிலேயர் தம் கட்டடங்களில் உபயோகிக்கத் தலைப்பட்டனர். முக்கியமாக ரென்னும் (Wren) கிப்ஸ்சும் (Gibbs) கட்டுவித்த கட்டடங்களில் அவ் வெள்ளைக் கற்கள் இடம் பெற்றன. ஆனால், அதேசமயம், சாதாரண மனிதரின் இல்லங்கள் செங்கற்களைக்கொண்டு கட்டப்பெற்றன.

# 10. டீஃபோவின் இங்கிலாந்து[1]

ஆன் அரசி, 1702-1714—1ஆம் ஜார்ஜ், 1714-1727—மார்ல்பரோ போர்கள், 1702-1712—ஸ்காட்லாந்துடன் பாராளுமன்ற, பொருளாதார ஐக்கியம், 1707.

ஆன் அரசியாரின் இங்கிலாந்தையும் அதன் அன்றாட வாழ்வையும் ஆராயவேண்டுமென்றால் டேனியல் டீஃபோவை (Daniel Defoe) நோக்கி நமது கவனம் திரும்புகிறது. அவர் தன்னந்தனியாக, ஊன்றிக் கவனித்துக்கொண்டே நாட்டுப்புறம் முழுவதும் குதிரை மீதேறிச் சவாரி செய்கிறார். தகவல் சேகரிப்பதற்காக இத்தகைய பிரயாணங்களை மேற்கொண்டு பிரிட்டனின் ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்குச் செல்வது அவரது கடமைகளுள் ஒன்று; நாள் பயணம் முடிந்ததும், ஏதாவதொரு வியாபார நகரின் (market town) விடுதியில் தங்கி, தல மக்களின் அபிப்பிராயங்களைப்பற்றித் தனது எஜமானராகிய ராபர்ட் ஹார்லிக்கு அனுப்பவேண்டிய அறிக்கையை வரைவார். ராபர்ட் ஹார்லியும் டீஃபோவைப் போன்றே ஒரு மர்ம மனிதர்; இரகசியமாகச் சரியான தகவல்களைப் பெறுவதில் அவருக்கு அதிக விருப்பம். ஞாயிற்றுக்கிழமைகளில் டீஃபோ டிஸ்ஸெண்டர்களின்[2] (Dissenters) கோயில்களுக்குச் செல்வார்; தொழுபவர்களைக் கூர்ந்து நோக்குவார்; அவர்களது தொழில் விவகாரங்களைப்பற்றித் துருவித் துருவி ஆவலோடு கேட்பார். ஏனெனில், அவர் ஒரு வியாபாரி மட்டுமன்றி, மதத்துறையில் இணங்காதவருமாவார். இணங்காதவர்களுக்குள்ளும் (non-conformists) வைதீக ஆசாரங்களை ஆத்ம ஈடுபாட்டுடன் பின்பற்றுபவர்கள் இருக்கிறார்

[1] ஆன் அரசியின் காலத்திய இங்கிலாந்தின் சமூக வாழ்வுபற்றிச் சில அத்தியாயங்களைச் சில ஆண்டுகட்கு முன்புதான் அவரது ஆட்சியைப்பற்றிய எனது நூலில் நான் எழுதினேன். அந் நூலும் இதைப்போலவே லாங்மென்ஸ் கம்பெனியாரால் வெளியிடப்பட்டது. நான் அதைவிடச் சிறப்பாக இப்பொழுது எழுத முடியாதாகையால் அதைப் பெரிதும் பயன்படுத்தியிருக்கிறேன்.

[2] இங்கிலாந்தில் டியூடர்களின் ஆட்சியில் பாராளுமன்றச் சட்டங்களால் அமைக்கப்பட்ட ஆங்கிலிக மதத்தைத் தழுவ மறுத்தவர்கள், இணங்காதவர்கள் என்று பொருள்படும் Dissenters, Non-Conformists ஆகிய சொற்களால் அழைக்கப்பட்டனர்.

களே, அவ்வகையைச் சேர்ந்தவரல்லர் அவர். ஏனென்றால் எல்லோருக்கும் எல்லாமாக இருக்கக்கூடியவர் அவர்; கடின உழைப்பிலும், ஆடம்பரத்தை வெறுத்து எளிய உடை அணிவதிலும் அவர் ஒரு பியூரிட்டானியர் (Puritan). இவருக்கு நூறு ஆண்டுகட்குப் பிறகு இங்கிலாந்து முழுவதும் குதிரையேறிச் சவாரி செய்து தன் நாட்டைப்பற்றி எழுதிய காபெட்டைப் (Cobbett) போலவே டீஃபோவும் ஒரு யதார்த்தவாதி; சாதாரண எளிய மனிதர். ஆயினும், காபெட்டைப்போல் ஆட்சியாளருக்கெதிரான சீற்றம் இவரது கண்களை மறைக்கவில்லை. ஏனென்றால், வரப்போகின்ற மன நிறைவுக் காலத்தை முன்கூட்டியே அறிவிக்கும் தூதுவனாக விளங்கியது ஆனின் காலம். தனது காலத்தின் மாதிரிப் படிவமாக ஸ்விஃப்டைக் (Swift) காட்டிலும்கூட அதிகமாக டீஃபோ திகழ்ந்தார். சொத்துரிமை பறிக்கப்பட்ட குடியானவராகிய காபெட் எவ்வாறு இறந்துபோன கிராமாந்ர காலத்தை எண்ணிக் கண்ணீர் வடித்தாரே, அதுபோல வியாபாரியாகிய டீஃபோ வரப்போகும் வியாபார மலர்ச்சிக் காலத்தை வாழ்த்தி வரவேற்றார். அறிக்கை (report) தயாரிக்கும் கலையை அவர் முதலில் விரும்பினார். ராபின்சன் குருசோ, மோல் ஃபிளான்டர்ஸ் (Mole Flanders) போன்ற அவரது நாவல்கள்கூட மனித வாடையே அற்ற தீவிலோ அல்லது கள்ளரின் குகையிலோ அன்றாட வாழ்வைப்பற்றிய கற்பனை 'அறிக்கைகளே'. 'எனவே, ஆனின் ஆட்சிக் காலத்தைச் சேர்ந்த இங்கிலாந்தைப்பற்றி இவர் எழுதியவை வரலாற்றாசிரியர்களுக்குக் கிடைத்த ஒரு புதையல். ஏனெனில், பழைய உலகைக் கூரிய இரு கண்களால் முதன்முதலில் நோக்கிய மனிதர்களில் டீஃபோவும் ஒருவர். நிறையக் கிடைக்கும் மற்றச் சான்றுகளை வைத்துக்கொண்டு அவரது அறிக்கையைத் திருத்தலாம், விரிவுபடுத்தலாம்; ஆனாலும், நமது சிந்தனையின் பார்வையின் மையத்தை அது ஈர்த்து நிற்கிறது.[1]

சலிப்பூட்டும் அளவுக்கு விவரமாக டீஃபோவால் வரையப்பட்ட இந்த இங்கிலாந்தின் சித்திரம் ஒரு வளமான தேசிய வாழ்வை நமக்குப் புலப்படுத்துகிறது; அவ் வாழ்வில் நாடும் நகரமும், விவசாயமும் தொழிலும் வாணிபமும் ஒன்றோடொன்று நன்கு இயைந்த வகையில் ஒரு பொருளாதார அமைப்பின் உறுப்புகளாகத் திகழ்ந்தன. அரசாங்கத்தின் நிர்வாக இயந்திரத்தின் பெரும்பகுதி, குறிப்பாக டீஃபோவால் வெறுக்கப்பட்ட 'வறுமைமிக்க, சிதைந்த பரோ நகரங்

[1] 'கிரேட் பிரிட்டனில் சுற்றுப் பிரயாணம்' என்ற தனது நூலை அவர் 1ஆம் ஜார்ஜின் ஆட்சிக் காலத்தில் வெளியிட்டார். ஆனால், அவரது கூற்றுகளுக்கு ஆதாரமாக விளங்கிய பிரயாணங்கள் ஆனின் காலத்தின் முற்பகுதியிலும் இடைப் பகுதியிலும் பெரும்பாலும் நிகழ்ந்தன. பிரயாண நூலின் முதற் பதிப்பு (1724–27) திரு. G. D. H. கோல் (Cole) அவர்களால் 1927-ல் மீண்டும் பதிப்பிக்கப் பட்டு வெளியிடப்பட்டது.

களின்' நிர்வாக இயந்திரம், பழங்காலத்தைச் சேர்ந்த செல்லரித்துப் போன ஒன்றுதான்; அது ஒரு புனிதப் பொருளைப்போலச் சிரத்தை யுடன் காக்கப்பட்டு வந்தது. ஆயினும், வரப்போகும் பல ஆண்டு களில் சீர்திருத்தம் வேண்டுமென்ற கூக்குரலே எழுப்பப்படவில்லை; ஏனெனில், இங்கிலாந்துக்கே உரித்தான தனியார் சுதந்திரக் கோட்பாடானது தனியார் தொழில் முயற்சிகள் தழைத்தோங்கு வதற்கும், பண்டைப் புதர்களை விலக்கிக்கொண்டு புதிய தளிர்கள் வெளிவருவதற்கும் வழி செய்தது. அன்றைய குட்டியதிகாரிகளின் கொடுங்கோலாட்சி இந்த மண்ணுக்கே சொந்தமான பொருளாதார முயற்சியை நசுக்க முடியவில்லை.

இவ்வாறு அமைந்திருந்த இங்கிலாந்து செழிப்புடன் காணப் பட்டது; போர்க்காலத்தில்கூடப் பெரும்பாலும் மனநிறைவுடன் விளங்கியது. அதற்கு ஒரு காரணம், ஆன் ஆட்சியின் முற்பாதியின் நல்ல அறுவடைகளும் மலிவான உணவுமே ஆகும். ஃபிரான்சுடன் போர் நடந்த பத்தாண்டுக் காலத்தில் (1702–12) இறுதி மூன்றாண்டு களில் மட்டும்தான் போர் நிலைமைகள் காரணமாகத் துன்பத்தின், அதிருப்தியின் அறிகுறிகள் காணப்பட்டன. மற்றபடி தொழில், விவசாயம், வர்த்தகம் ஆகிய அனைத்தும் தொடர்ந்து பெருகிக் கொண்டிருந்தன; டீஃபோவால் வருணிக்கப்பட்ட நிலைமைகளி லிருந்து அடுத்து நூறு ஆண்டுகளில் உருவான தொழிற் புரட்சியை நோக்கிச் சமுதாயம் தன்னையுமறியாமல் முன்னேறிக்கொண்டிருந்தது. கடல் வாணிகம், நதிகளில் சரக்குப் போக்குவரத்து, குறிப்பாக நிலக்கரிப் போக்குவரத்து, ஆடு வளர்த்தல், துணிமணி வியாபாரம், மொத்த வியாபாரிகள் விவசாயப் பண்டங்களைத் தேசமெங்கும் கொண்டு சென்று விற்பனை செய்தல்—இவைகளுக்கு டீஃபோ முக்கியத்துவமளிக்கிறார்; இவைகள்தாம் பல நிலச் சொந்தக்காரர்கள் நிலவரி செலுத்துவதற்கு வகைசெய்தன; இந்த வரிதான் மார்ல்பரோ போர்களுக்கு முதுகெலும்பாக விளங்கியது. அவர்கள் வரி செலுத்தும் பொழுது முனகினார்கள். ஆனாலும், போரில் வெற்றி கிட்டும்வரை செலுத்திக்கொண்டுதான் வந்தார்கள்; போரில் வென்றதும் விக்குகளை (whigs) விரட்டிவிட்டுச் சமாதானம் செய்துகொண்டார்கள்.

நாட்டுப்புறக் கனவான்கள் (squires) அக்டோபர் மாதத்திய ஏல் (ale) மதுவை அருந்திக்கொண்டே, பணம் படைத்தவர்களையும் வியாபாரிகளையும் பொருளாதார ஒட்டுண்ணிகளென்றும், போர் நிலைமை களைப் பயன்படுத்திக் கொள்ளை இலாபம் அடிப்பவர்களென்றும், டிஸ்ஸென்டர்களென்றும், நிலப்பிரபுக்களுக்கே உரிய துறையாகிய அரசியல் வாழ்வில் எதிர்காலத்தில் தலையிடப்போகிற திருடர் களென்றும் சபித்தார்கள் என்பது உண்மைதான். ஆனாலும், இந்த

விரும்பத்தகாத மனிதர்களின் செயல்கள்தாம் பொருளாதாரத்துறையில் நாட்டுப்புறக் கனவான்கள் பலரின் குத்தகையை இரட்டிப்பாக்கின; இது அக் கனவான்களுக்கே தெரியும். சமயப் பொறைச் சட்டத்தைப் (Act of Toleration) பற்றிப் பேசியபோதெல்லாம் காலத்தின் சீர் கேட்டைப்பற்றி அவர்கள் புலம்பினார்கள்; ஆனால், அந்தச் சட்டம்தான் நாட்டுக்குச் செல்வத்தை மட்டுமன்றி அமைதியையும் அளித்தது.

ஆன், 1ஆம் ஜார்ஜ் ஆகியோரின் ஆட்சியில் விவசாயிகளும் கைவினைஞரும் (craftsmen) பழைய முறையிலேயே வாழ்ந்துவந்த னர்; ஆயினும், நிலைமைகள் ஒரு விசேஷ வகையில் சாதகமாக இருந் தன. வியாபாரிகள், தரகர்களின் (middlemen) முயற்சியின் காரண மாக விவசாயிகள், கைவினைஞர்கள் ஆகியோரின் பண்டங்களுக்குப் புதிய மார்க்கெட்டுகள் கிடைத்தன; அவர்கள் தங்களது இடைக்கால வறுமையிலிருந்து ஏற்கெனவே பெரிதும் விடுபட்டுவிட்டனர்; ஆயினும், அவர்களது எளிய, கிராமாந்தர நடைமுறைகள் இன்னும் அழிந்துவிடவில்லை. நிலப்பிரபுக்கள் வியாபாரத்தில் முதலீடு செய்து பெருஞ் செல்வம் ஈட்டினார்கள், அல்லது தங்களது செல்வத்தைப் பெருக் கினார்கள். இவ்வாறு வியாபாரத்தில் ஈட்டப்பட்ட பணம் நிலத்தில் மீண்டும் மீண்டும் முதலீடு செய்யப்பட்டது. நகரமும் நாட்டுப்புறமும் இவ்வாறு ஒன்றோடொன்று பிணைந்து செயல்பட்டதன் விளைவாக, மேற் பரப்பில் காணப்பட்ட கடும் சமய, வகுப்புப் பூசல்களுக்கு அடிப்புறத் தில் ஓர் அடிப்படையான இணக்கமும் வலிமையும் ஆன் அரசியின் இங்கிலாந்தில் ஏற்பட்டன. பழைய சமூக அமைப்பு இன்னும் சிதைக்கப்படவில்லை.

சமயம் தேசத்தைப் பிளவுபடுத்தியது; ஆனால், வர்த்தகமோ அதை ஐக்கியப்படுத்தியது; மேலும், சமயத்தைவிட வர்த்தகம் அதிக முக்கியத்துவம் பெற்று வளர்ந்துவந்தது. பைபிளுக்கும் கணக்குப் பேரேட்டுக்கும் இப்பொழுது போட்டி ஏற்பட்டது. அறுபது ஆண்டு கட்கு முன்னால் கையில் வாளேந்திய கிராம்வெல்லாக (Cromwell) இருந்த பியூரிட்டானியர், முப்பது ஆண்டுகட்கு முன்னால் சிறைச் சாலையில் துதிப்பாடல்கள் இசைத்த பனியனாக (Bunyon) இருந்த பியூரிட்டானியர், இப்பொழுது வியாபாரியும் பத்திரிகை எழுத்தாளரு மான டீஃபோவாக இருந்தனர். குவாக்கர்கள் (Quakers) கூட மதாலயங்களுக்கெதிராக வெளிப்படையாக ஆரூடம் கூறுவதை விடுத்து, பணம் ஈட்டுவதில் கண்ணுங் கருத்துமான வியாபாரிகளாக அமைதியாக வாழக் கற்றுவந்தனர். பழைய வழக்கை யொட்டிப் பியூரிட்டானியர்களும் குவாக்கர்களும் 'சமய வெறியர்கள்' என்று பொதுமக்களால் அழைக்கப்பட்டனர். ஆனால், இன்னும் 'சமய வெறியர்கள்' உலவி வந்தார்கள் என்றால், நீதிபதி பிராட்கேட்

(Bradgate) நிச்சயம் அவர்களில் ஒருவரே. இவர் லட்டர்வொர்த்தி லுள்ள (Lutterworth) 'கூட்டமன்றத்தினுள் குதிரையேறிச் சென்று,' சமயப் பிரசாரகர் (preacher) பொய் சொல்கிறுர் என்று அவரிடமே சொன்னுர். ஆயினும், உயர்திருச்சபையினரின் (High Churchmen)* கோபாவேசமானது மிதவாத டோரிகளின் (Tories) மனத்தில் உறுதியாக வேலை செய்துகொண்டிருந்த நாட்டுப்பற்று, பொருளாதார இலாபம்பற்றிய எண்ணங்களால் சதா தணிக்கப்பட்டு வந்தது. இந்த மிதவாத டோரிகளின் தலைவர்தான் ஹார்லி ; ஹார்லியின் ஒற்றர்தான் இந்த டீஃபோ. நிலப்பிரபுக்களின், ஏழைக்குடியானவர் களின் எதிர்ப்பில்லாத் தலைவராக விளங்கிய, நான்டஸ் ஆணையை (Edict of Nantes) ரத்து செய்து சதுமயத்துறையில் இணங்காதவர் களை இறுதியாக ஒழித்துக்கட்டிவிட்ட, ஃபிரான்சின் மன்னரான வல்லமை படைத்த லூயியை மண்டியிடச் செய்வதற்கு வேண்டிய ஒற்றுமையை யும் செல்வத்தையும் வீரியத்தையும் போர்க்களத்தில் வெளிப்படுத்தக் கூடிய இங்கிலாந்து தீவு இதோ இருக்கிறது ; நல்லூழும் திறமையான தலைவர்களும் இருந்து உதவினுல் போதும்.

இடைக்காலத்தைவிட இப்பொழுது அதிகக் கோதுமை விளைந்தது ; அந்த அளவுக்கு ஆங்கிலேய விவசாயம் ஏற்கெனவே வளர்ந்துவிட்டது. மொத்த மக்கள்தொகையின் ரொட்டியில் முப்பத்தெட்டு சதவிகிதம் கோதுமையாக இருந்தது ; ரை அடுத்த இடத்தையும், பார்லியும் ஓட்ஸும் மூன்றுவது நான்காவது இடங்களையும் வகித்தன. எனவே, கோதுமை, ரையின் கணக்கிலேயே மற்றப் பண்டங்களின் விலைகள் கூறப்பட்டன.

ஆனுல், விளைந்த மொத்த தானியத்தில் கோதுமையின் பங்கு, சுடப்பட்ட ரொட்டியில் அதன் பங்கைவிட மிகவும் குறைவாகவே இருந்தது ; ஏனென்றுல், ஏல், பீர் மதுக்களுக்கான மாவு செய்வதற்காக ஏராளமான பார்லி இங்கிலாந்து தீவில் பயிரிடப்பட்டது. உதாரண மாக, எலைக்குத் (Ely) தெற்கிலுள்ள கேம்பிரிட்ஜ்ஷயர் 'கிட்டத்தட்ட முழுதுமே ஒரு தானியப் பிரதேசம்'; டீஃபோ கூறியதைப் போல் 'அத் தானியத்தில் ஆறில் ஐந்து பங்கு பார்லி ; அது பெரும்பாலும் வேரிலும் (Ware), ராய்ஸ்டனிலும் (Royston), ஹெர்ட்ஃபோர்ட் ஷயரிலுள்ள (Hertfordshire) இதர மாவு உற்பத்தி செய்யும் நகரங் களிலும் விற்பனையாயிற்று.' மேற்கிலுள்ள சைடர் மது (cider) உற்பத்தியாகும் கவுன்டிகளைத் (counties) தவிர மற்ற இடங்களில், முந்திய காலங்களில் ஆங்கிலேய ஆண்களும், பெண்களும், குழந்தை களும் ஒவ்வொரு வேளை உணவருந்தும்பொழுதும் ஏல் மதுவைத்தான்

*ஆங்கிலிக சமயத்தைச் சேர்ந்த ஒரு குழுவினர். பிஷப்புகள், பாதிரிகள், சமயச் சடங்குகள் ஆகியவற்றின் முக்கியத்துவத்தை இவர்கள் வலியுறுத்தினர்.

தமது நாட்டின் சொந்தப் பானமாக அருந்தினர்கள்; அதற்குப் போட்டியே இல்லாதிருந்தது. அப்போதுதான் அதிக போதையூட்டும் பானங்கள் ஒரு பக்கமும், தேயிலை, காப்பி போன்றவை மறுபக்கமும் போட்டியாக வந்துகொண்டிருந்தன. என்றுலும், பெண்களின் பானமாக அது இன்னமும் இருந்துவந்தது. குமாரி கோக்கின் (Miss Coke) உடல் 'துரும்பாக இளைத்துவிட்டதற்கும், குரல் மெலிந்து உள்ளிழுத்தாற்போல் காணப்பட்டதற்கும்' காரணம் 'அவள் இந்தக் கோடை முழுவதும் பழம் பீரை அருந்தியதே' என்று 1705-ல் சீமாட்டி கார்னர்வான் (Lady Carnarvon) கூறினுள். சிறுவர்கள் சிறிய அளவு பீரை இன்னும் அருந்திவந்தார்கள்; அவர்களுக்குப் பல சமயங்களில் அசுத்தமான நீரே பானமாக விளங்கியது; அதனுடன் ஒப்பிடும்பொழுது பீர் அருந்துவது எவ்வளவோ மேலானது.

எங்கும் பார்லி பிரதான பானமாக இருந்தது மட்டுமன்றிச் சில மாவட்டங்களின் பிரதான உணவாகவும் இருந்தது. வேல்ஸ் குன்றுகளில் வாழ்ந்த சிறு குடியானவர்கள் மிகச் சிறந்த பார்லி ரொட்டியைச் சாப்பிட்டார்கள். வடக்கத்திய கவுன்டிகளில் வசித்த விவசாயிகள் ஓட்ஸ், ரை தானியங்களைக் கொண்டு பலவிதப் பண்டங்கள் செய்து உண்டார்கள்; ஸ்காட்லாந்திலோ, டாக்டர் ஜான்சன் பல்லாண்டுகளுக்குப் பின்னும் அழுத்தந்திருத்தமாகக் கூறியதுபோல, ஓட்ஸ் 'மக்களைக் காப்பாற்றியது'. இங்கிலாந்தின் மத்திய மாவட்டங்களில் ரையும் பார்லியும் கோதுமையுடன் சமமான இடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தன; வரண்ட தென்கிழக்குப் பகுதியில் மட்டும்தான் கோதுமை முதலிடம் வகித்தது என்று கூறமுடியும்.

ஆனுல், ஆனின் ஆட்சியில், ஒரு மாவட்டத்திலிருந்து இன்னொரு மாவட்டத்துக்கு, குறிப்பாக எங்கெல்லாம் நதிப் போக்குவரவு சாதனங்கள் இருந்தனவோ அங்கெல்லாம், விவசாய உற்பத்திப் பண்டங்களின் பரிவர்த்தனை ஏற்கெனவே பெரிய அளவில் நடந்துவந்தது. பிரிட்ஜ்வாட்டர் கோமகன் (Duke of Bridgewater) செயற்கைக் கால்வாய்கள் வெட்டிய காலத்துக்கு முந்திய இருதலைமுறைக் காலத்திலும் ஆறுகளை ஆழப்படுத்துதல், அணையடைப்புகளை (locks) அமைத்தல் ஆகியவை பெருமளவில் நடைபெற்றன;[1] இதற்கு முக்கிய காரணம் மேற்சொன்ன

[1] ஆன் ஆட்சிக் காலத்துக்கான Statutes, Commons Journals ஆகிய வெளியீடுகளிலும் தல வரலாறுகளிலும் இதற்கான ஏராளமான சான்றுகள் காணப்படுகின்றன. எல்லாவற்றுக்கும் ஓர் உதாரணத்தை நாம் மேற்கோள் காட்டுவோம்: 1699-ல் விஸ்பெக் (Wisbech) மக்கள், லார்க் நதியைக் கப்பல் போக்குவரத்துக்கேற்றதாகச் செய்யவேண்டுமென்று காமன்ஸ் சபைக்கு ஒரு விண்ணப்பம் செய்து கொள்கிறுர்கள்; ஏனென்றுல், சாலைகள் நடைமுறைச் சாத்தியமாயில்லை; அவர்களது மாவட்டம் வெண்ணெய், பாலடைக்கட்டி, ஓட்ஸ் ஆகியவைகளை மட்டும்தான்

பரிவர்த்தனைதான். ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து கீழ்ப்புறமாகத் தேம்ஸ் நதியும், அதன் கிளைநதிகளாகிய வே (Wey), லீ (Lea), மெட்வே (Medway) யும் போக்குவரத்து மிகுந்து, உயிர்த்துடிப்புடன் பரபரப்புடன் திகழ்ந்தன; உணவு, பானம், மரம் ஆகியவை அந்நதிகளின் வாயிலாக லண்டனுக்குச் சென்றன; டைன்சைட் (Tyneside) நிலக்கரியும், வெளிநாட்டிலிருந்து வந்த பண்டங்களும் நதியின் மேற்புறம் பதிலுக்கு இழுத்துச் செல்லப்பட்டன. ஆபிங்டன் (Abingdon), ரீடிங் (Reading) ஒவ்வொன்றும் ஒரு பெரிய விவசாய மாவட்டத்தின் பண்டசாலையாக விளங்கிற்று; தங்களது மாவட்டங்களின் பண்டங்களை நீர்மார்க்கமாக அவை தலைநகருக்கு அனுப்பின. சஸ்ஸக்ஸ் (Sussex), ஹாம்ப்ஷயர் (Hampshire) கடற்கரைகளிலிருந்து தானியமும், செஷயரிலிருந்தும் (Cheshire) மற்ற மேற்குக் கவுன்டிகளிலிருந்தும் பாலடைக் கட்டியும் லண்டனுக்குக் கடல் மார்க்கமாக அனுப்பப்பட்டன. டன்கர்க்கிலிருந்து (Dunkirk) ஃபிரெஞ்சுக் கொள்ளைக்காரக் கப்பல்களின் தாக்குதல்களுக்கு அவை ஆளாயின. ஆண்டின் பல பருவங்களில் சாலைகள் புழுதியாகவும் சகதியாகவும் இருந்ததால், சாமான் வண்டிகள் செல்ல இயலவில்லை; ஆனால், பெரும்பாலும் எல்லாப் பருவக்காலங்களிலும் வடக்கத்திய ஷயர்களிலிருந்தும் மத்திய ஷயர்களிலிருந்தும் ஆடுகளும், மாடுகளும், வாத்துகளும், வான்கோழிகளும் சாலையோரங்களிலிருந்த பரந்த புல்வெளிகளில் மேய்ந்துகொண்டே தலைநகருக்கு ஓட்டிவரப்பட்டன. 1707-ல் ஏற்பட்ட ஐக்கியத்துக்கு முன்பேகூட ஸ்காட்லாந்திலிருந்து ஆண்டுதோறும் 30,000 மாடுகள் இங்கிலாந்துக்கு அனுப்பப்பட்டன; லண்டனுக்கு அருகில் சாலைகளில் வேல்ஸ் கால்நடை ஓட்டிகளின் விநோத மொழி தெரிந்த ஒன்றாக விளங்கியது; ஐரிஷ் கால்நடை வியாபாரம் மட்டும்தான் 2ஆம் சார்லஸின் ஆட்சியில் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி கொல்லப்பட்டது; ஆங்கிலேயக் கால்நடை வளர்ப்போரின் பொறாமைக்குத் தரப்பட்ட பலி இது.

இங்கிலாந்திலும் வேல்ஸிலும் தடையிலா உள்நாட்டு வர்த்தகமானது (internal free trade) ஏற்கெனவே நடந்துவந்தது. ஐரோப்பாவில் தடையிலா உள்நாட்டு வர்த்தகம் நடந்துவந்த பிரதேசங்களில் இங்கிலாந்தும் வேல்ஸும்தாம் மிகவும் பெரும் பரப்பளவு கொண்டவையாகும். ஆன் ஆட்சியின் இடைப்பகுதியில் ஸ்காட்லந்தும் அவைகளுடன் சேர்ந்துவிட்டது. ‘இத்தாலியிலும் மற்றும் பல நாடுகளிலும் வசூலிக்கப்படுவதுபோல் நமது நாட்டில் கேபேல் (gabelle)

---

உற்பத்தி செய்கிறது; கோதுமை, ரை, மாவு ஆகியவை சப்ஃபோக்கிலிருந்து (Suffolk) வருகின்றன. இக் காலத்தில் ஆழப்படுத்தப்பட்டு, முறையான அணையடைப்புகள் அமைக்கப்பட்ட ஆறுகளில் சில: பிரிஸ்டல் அவான், யார்க்ஷயர் டெர்வென்ட், ஸ்டூர், கிளேஹைத் ஃபெர்ரியிலிருந்து கேம்பிரிட்ஜில் குயின்ஸ் மில் வரையில் கேம் நதி.

அல்லது தானிய வரி வசூலிக்கும் காலம் இன்னும் வரவில்லை. இது இங்கிலாந்தில் நமக்கொரு பேரானந்தமாகும்' என்று டீஃபோ எழுதினார். 'உலகின் மற்றப் பகுதிகளைக்காட்டிலும் இங்கிலாந்தில் தொழில் வளர்ச்சி அதிகமாயிருப்பதற்கு' ஒரு காரணம் அங்கு உள்நாட்டுச் சுங்கவரிகள் இல்லாதிருப்பது என்று அறிவுக்கூர்மை மிக்க வெனிஸ் தூதுவரான மோசெனிகோ (Mocenigo), நமது தீவைவிட்டுச் செல்வதற்கு முன்பு 1706-ல் தனது எஜமானர்களுக்கு அறிவித்தார். லண்டனும் ஒவ்வொரு மாகாண நகரமும் உணவுப் பொருள்களுக்குக் கட்டுப்பாடற்ற, திறந்த மார்க்கெட்டுகளாக விளங்கின. நகர்ப்புறச் சுங்கச் சாவடிகளில் சுங்கம் வசூலிக்கப்படவில்லை. இந்தச் சுதந்திரம் தங்களுக்கு அனுகூலமாயிருந்ததால் தானிய வியாபாரிகளும் விவசாயத் தரகர்களும் தீவு முழுவதும் பரந்திருந்தனர். குடியானவனின் பயிர் நிலத்தில் விளையும்பொழுதே அல்லது அறுவடையான கதிர்கள் இன்னும் அடிக்காமல் களத்தில் இருக்கும்பொழுதே அவர்கள் அவைகளை ஊகவியாபாரத்தில் (speculation) வாங்கினார்கள். நாம் எதிர்பாராத மூலைமுடுக்குகளுக்கெல்லாம் இவர்கள் சென்றார்கள்; ஸ்காட்லந்தின் ஹைலந்து (Highland) பகுதியின் மலைச் சமவெளிகளுக்கும்கூட, அங்கு வாழும் முரட்டு மக்களின் வாள்களுக்கும் யாகோபியர்களுக்கும் (Jacobites) அஞ்சாமல், இங்கிலாந்தில் வேட்டை விலங்குகள் வளர்க்கும் தோட்டங்களில் வைத்துக் கொழுக்கச் செய்வதற்காகக் கால்நடைகளைத் தேடி இவர்கள் சென்றார்கள்; தூரத்துப் பண்ணைகளிலும் சிற்றூர்களிலும் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுக்குப் புதிய மார்க்கெட்டுகளை உற்பத்தி செய்வதன் மூலம் விவசாய முன்னேற்றத்துக்கு எங்கும் வகைசெய்தார்கள்.

தொழில் முயற்சியும் முன்னேற்றமும் நிறைந்த இந்தச் சூழ் நிலையில் இங்கிலாந்து பெருமளவில் தானியங்களை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தது. ஏற்றுமதியை ஊக்குவிப்பதற்காக அரசாங்கம் அளித்த உதவித்தொகைகள் இதற்குப் பெரிதும் உதவியாயிருந்தன. ஆன் ஆட்சியின் மத்தியில் கிளௌஸ்டர்ஷயர் (Gloucestershire) நிலக்கரி வியாபாரத் தொழிலாளிகள் தானியத்தின் அதிக விலையை எதிர்த்துக் கலகம் செய்தார்கள். இவ் விலையுயர்வுக்குக் காரணம், தலத்தில் விளைந்த தானியங்களை பிரிஸ்டல் வணிகர்கள் அயல் நாடுகளுக்குப் பெருமளவில் அனுப்பியதுதான். டிரென்ட்டுக்கு (Trent) வடக்கில் வாழ்ந்த கவடு சூதற்ற கனவான்கள்கூடத் தங்களது செல்வத்தையும், தங்களது குத்தகைதாரர்களின் (tenants) செல்வத்தையும் பெருக்குவதற்காகத் தானிய ஏற்றுமதி செய்ய இலாபக் கணக்குப் போட்டுக்கொண்டிருந்தார்கள்.[1]

[1] 1709 ஜூலையில் டான்காஸ்டருக்கு (Doncaster) அருகிலுள்ள எட்லிங்டனிலிருந்து ராபர்ட் மோல்ஸ்வொர்த் தனது மனைவிக்கு எழுதுகிறார்: 'கடவுள்

விவசாயத்துறையிலும் பண்டங்களின் விநியோகத்திலும் காணப்பட்ட இந்தச் சுறுசுறுப்பு இங்கிலாந்தைப் பற்றிய ஒரு மகிழ்வூட்டும் சித்திரத்தை நம்முன் கொண்டுவந்து நிறுத்துகிறது. ஆனால், இதைக் கொண்டு, இங்கிலாந்தானது விருத்தியுடைந்த விவசாயத்தையும் சீர்திருந்திய போக்குவரவு சாதனங்களையும் கொண்டதொரு நாடாகி விட்டது என்ற தவறான முடிவுக்கு நாம் வரக்கூடாது. அந்நிலையை அது எய்தியது அந் நூற்றாண்டின் இறுதியில்தான். நதிகளில் போக்கு வரவு அதிகமிருந்ததற்குக் காரணம் சாலைகள் மோசமாயிருந்ததுதான். இங்கிலாந்தின் மிகச் சிறந்த நிலங்களான தானியம் விளைந்த நிலங்கள் —மிட்லாந்திலும் வடக்கத்திய கிழக்கு ஆங்கிலியாவிலும்—இன்னும் பெரும்பாலும் வேலியமைக்கப்படாமலேதான் இருந்தன. இப் பிரதேசங்களின் பரந்த, வேலியமைக்கப்படாத கிராம வயல்கள் இன்னும் இடைக்கால முறைகளிலேயே பயிரிடப்பட்டுவந்தன; இம் முறைகள் பழங்கால நிலவுடமைக் கணக்குப் பேரேட்டுக் (Doomsday) கமிஷனருக்கு மிகவும் மகிழ்ச்சியை அளித்திருக்கும்; ஆனால், ஆர்தர் யங்கின் (Arthur Young) நவீன அறிவை அவை தமது பிற்போக்குத் தனத்தினால் அதிர்ச்சியுறச் செய்தன.

நிலத்தை விருத்தி செய்யவேண்டும் என்று எண்ணிய நிலப்பிரபு அல்லது குடியானவரின் முயற்சிக்கு இக் கிராம வயல்களில் தடைகள் அதிகமிருந்தன; அங்குமிங்கும் சிதறித் துண்டுதுண்டாகக் கிடந்த நிலங்கள், சமூகம் முழுவதற்குமாக வகுக்கப்பட்ட ஒரு திட்டத்தின் படிதான் பயிரிடப்படவேண்டும். வேலியிடப்படாத தனது துண்டு துண்டு நிலங்களில் எந்த ஒரு மனிதனும் இலாபகரமாக டர்னிப்பையோ அல்லது செயற்கையாகப் புற்களையோ பயிரிடமுடியாது; ஏனென்றால், தானியமானது அறுவடை செய்யப்பட்டு எடுத்துப் போகப்பட்டதும் 'வயல்' முழுவதும் கிராமக் கால்நடைகளுக்கு மேய்ச்சல் நிலமாகத் திறந்துவிடப்பட்டது. அவை அவனது குளோவரையும் (Clover) டர்னிப்புகளையும் மேய்ந்துவிடும்; அவனுக்கு இழப்பீடு ஒன்றும் கிடையாது. திறந்த வயல்வெளி முழுவதும் ஒரே பொதுத் திட்டத் தின்படி பயிரிடப்பட்டது. உதாரணமாக, காட்மான்செஸ்டர் (Godmanchester) போன்றதொரு சிறிய நாட்டுப்புறப் பட்டணத்தில் பண்டை வழக்கத்தின்படி அமீனுக்களை (bailiffs) அனுப்பிக்

---

அறுவடைக்கேற்ற நல்ல வானிலையைக் கொடுத்தால் நமது அரசில் ஏராளமான தானியம் குவியும்; என்றாலும், வெளிநாடுகளில் அதற்குப் பெருங்கிராக்கி இருப்பதால் பல ஆண்டுகளுக்கு அது மிக நல்ல விலைக்கு விற்கும். இதனால் நமது குடியானவர்கள் பெருஞ் செல்வமெய்துவார்கள்.' அவர் அடுத்த ஆண்டு எழுதினார்: 'தானியத்தின் விலை நிச்சயமாக ஏறும்; அதுவும் மிகத் திடீரென்று ஏறும்; ஏனென்றால், பால்டிக்கில் பரவியுள்ள பிளேக் நோயினால் அங்கு நாமும் டச்சுக் காரர்களும் நடத்தும் வியாபாரம் முழுவதும் சீக்கிரமே தடைசெய்யப்படும். அப்பொழுது, டச்சுக்காரர்களுக்கு நாம்தாம் தானியம் தரவேண்டியிருக்கும்.'

குடியானவர்களையெல்லாம் நீதிமன்ற மாளிகைக்கு வரவழைப்பார்கள். (1700) ' மார்ச் 21ஆந் தேதி வெள்ளிக் கிழமைக்கு முன்னதாக யாரும் பொது வயலில் பார்லி விதைக்கக்கூடாது ' என்றும், ' அந் நாளில் வயலோர நிலங்களை மட்டுமே பயிரிடவேண்டும் ' என்றும் அவர்கள் ' ஒருமித்து முடிவு செய்தார்கள்.'

புதிதாக வேலியமைக்கப்பட்ட பண்ணைகளில்தான் விருத்திக்கான அதிக ஊக்கமும், அதன் விளைவாக முன்னேற்றமும் சாத்தியமாயிருந்தன ;—முன்னேற்றம் கட்டாயம் இருந்தே தீரும் என்று நாம் கூறமுடியாது. வேலியமைக்கப்பட்ட இத்தகைய பண்ணைகள் எண்ணிக்கையில் சதா அதிகரித்துக்கொண்டேயிருந்தன. இங்கிலாந்தின் தெற்கு, மேற்கு, வடக்குப் புறங்களில் பழைய வேலியமைந்த பண்ணைகளுக்கு அண்டையில் இவ் வளர்ச்சி அதிகம் காணப்பட்டது. ஆனால், வேலியடைப்புகள் சர்வசாதாரணமாகக் காணப்பட்ட மாவட்டங்கள் இத் தீவின் குறைந்த வளமுடைய, மோசமான பருவநிலைகளைக் கொண்ட பகுதிகளாகவே சராசரியில் இருந்தன. கென்ட் (Kent) மாவட்டத்தில் ஹாப் (Hop) கொடி பயிரிடப்பட்ட நிலங்களும், மேற்குப் பகுதி பழத்தோட்டங்களும் முதன்முதலில் வேலியமைக்கப்பட்ட நிலங்களில் சில என்பது உண்மைதான் ; ஆனால், மேற்கு, வடக்குப் புறங்களில் வானிலையினால் பாதிக்கப்பட்ட சதுப்பு நிலங்களில் திருத்தப்பட்ட பகுதிகளையும் நாம் அவைகளோடு சேர்த்துக்கொள்ள வேண்டும். மத்தியப் பகுதியிலிருந்த சிறந்த தானிய நிலங்களில் பெரும்பகுதி இன்னும் வேலியிடப்படாமலேதான் இருந்தது.

அறுவடையான நிலங்களிலும், புதர்க்காடுகளிலும், புறம்போக்கு நிலங்களிலும் (commons) ஆடுகளும் மாடுகளும் பெரும்பாலும் மேய்ந்தன ; குளிர்காலத் தீவனமாகக் கிழங்குகளோ அல்லது செயற்கையாக வளர்க்கப்பட்ட புற்களோகூட அவைகளுக்குக் கிடைக்கவில்லை. எனவே, அவைகள் நாம் பரிதாப்படுமளவுக்குச் சிறியவையாயும் மெலிந்தவையாயுமிருந்தன. 1710-ல் ஸ்மித்ஃபீல்டு (Smithfield) மார்க்கெட்டில் அவைகளின் எடை 1795-ல் சாதாரண ஆடுமாடுகளின் எடையில் பாதிக்கும் குறைவாகவே இருந்தது. அந் நூற்றுண்டின் தொடக்கத்தில் குளிர்காலத்தில் பிராணிகளை வைத்துக் காப்பது மிகவும் சிரமமானதாயிருந்தது. எனவே, கோடைக்காலப் புற்கள் அழிந்தவுடன் இனவிருத்திக்காகமட்டும் சிலவற்றை வைத்துக் கொண்டு, மற்ற யாவற்றையும் கொன்று உப்பிட்டுப் பத்திரப் படுத்தினுர்கள். உயிர்பிழைத்த மிருகங்களுக்கு வசந்தகாலம் வரை மிகக் குறைந்த தீவனங்களைப் போட்டு உயிருடன் வைத்திருந்தனர். 1703-ல் உப்பின் விலை ஏறியபொழுது, ' உப்பிட்ட பண்டங்களையே பெரும்பாலும் உண்டு வாழும் பரம ஏழைகளுக்கு அது ஓர் அநீதி ' என்று காமன்ஸ் சபைக்கு விண்ணப்பம் செய்யப்பட்டது.

டவுன்ஷெண்டு பிரபுவின் (Townshend) டர்னிப் வயல்கள் காலமும், நார்ஃபோக்கைச் சேர்ந்த கோக்கின் (Coke) கொழுத்த ஆடு மாடுகளின் காலமும் இன்னும் தொடங்கவில்லை. ஆயினும், மேற்கத்திய கம்பளித் துணி வியாபாரிகளுக்கு வேண்டிய ஆடுகள் வளர்க்கப் பட்ட வில்ட்ஷயர், காட்ஸ்வோல்டு மேட்டுநிலங்கள் அப்பொழுதே பார்ப்பதற்கு விந்தையாயிருந்தன. டார்செஸ்டருக்கு (Dorchester) ஆறு மைல் தொலைவில் அமைந்த 'ஆனந்தமயமான புல்வெளியில்' ஐந்து இலட்சத்துக்கும் அதிகமான ஆடுகள் மேய்ந்துவந்தன என்று டீஃபோவுக்குச் சொல்லப்பட்டது; சாலிஸ்பரி (Salisbury) சமவெளியிலும் டார்செட் (Dorset) புல்வெளியிலும் ஒவ்வோர் இரவும் புதிய புதிய இடங்களில் ஆடுகள் கிடைமடக்கப்படுவதால் பூமி மிகவும் செழிப்புள்ளதாகிவிட்டதென்றும், முன்னர் மேய்ச்சலுக்கு மட்டுமே ஏற்றதாக இருந்த அச் சுண்ணும்பு பூமி இவ்வாறு உரமிடப்பட்டதால் விளைநிலமாக வேகமாக மாறிவருகிறதென்றும் அவர் அறிந்தார்.

டியூடர் (Tudor) காலத்திலிருந்து, குறிப்பாக முன்னிலை மீட்சியிலிருந்து (Restoration) விவசாயத்துறையில் புதிய முறைகள் பற்றிய நூல்கள் மேலும் மேலும் அதிக அளவில் அச்சிடப்பட்டு வந்தன. ராயல் சங்கத்திலிருந்து (Royal Society) பொதுமக்கள் வாழ்வுக்குப் பரவிவந்த விஞ்ஞான ஆராய்ச்சி மனப்பான்மையானது செயல்பூர்வக் குடியானவர்களைச் சதா தூண்டிக்கொண்டேயிருந்தது. ஆனல், பல சமயங்களில் அவர்களுக்கு ஒரு பெரும் புதிராகவும் இருந்தது. ஏனென்றல், நிபுணர்களும் நவீன முறைகளை விரும்பியவர்களும் அவ்வளவு ஒத்துப்போனது அரிதுதான். ஆனின் ஆட்சியில் தனது விவசாயப் பணிகளில் விதைக்கும் இயந்திரத்தையும், குதிரையால் இழுக்கப்படும் களைக்கொட்டையும் முதன்முதலில் புகுத்திய, நவீன முறைகளை விரும்பிய ஜெத்ரோ டல் (Jethro Tull), மற்றப் பல விஷயங்களில் தவறான முறைகளைக் கையாண்டார் என்பதைப் பிற்காலத்தில் அனுபவம் காட்டியது. ஆனல், புதிய முறைகளின் பயன் நிரூபிக்கப்பட்டவுடன் அம் முறைகளைப் பயன்படுத்த மனிதர்கள் காத்துக்கொண்டிருந்தார்கள்; சிறப்பாக, வேலியிடப்பட்ட வயல்கள் இத்தகைய மாற்றங்கள் செய்வதற்குப் பெருஞ் சுதந்திரமளித்தன.

விவசாய அபிவிருத்திபற்றிய பேச்சு எங்கும் எதிரொலித்த அக்காலத்தில், முந்திய நூற்றாண்டுகளில் நடைபெற்றது போலவே பொது நிலங்களும் புதர்க்காடுகளும் வேலியமைக்கப்பட்டு வயல்களாகத் துரிதமாக மாற்றப்பட்டுவந்தன; அதுமட்டுமல்லாமல், வேலியமைப்பதானது சமுதாய முன்னேற்றத்துக்கான கடமை என்று நவீனக் கொள்கையாளர்களால் பிரசாரம் செய்யப்பட்டுவந்தது. டியூடர்கள் காலத்தில் கிட்டத்தட்ட எல்லாத் தருக்கவாதிகளும் பொதுநிலங்களையே

ஆதரித்துப் பேசினர்; பொதுமக்கள் வேலியமைப்பை எதிர்த்தனர். ஆனால், ஆன் ஆட்சிபீடமேறியதும், பொதுநிலங்கள் 'சோம்பேறித் தனமான, திருட்டுக் குணம் படைத்த மக்களை உற்பத்திசெய்யும் பண்ணைகள்' என்றும், அம் மக்களின் ஆடுகள் 'பரிதாபகரமான, வாலுந்தோலுமான, அழுகிக்கொண்டிருக்கிற' பிராணிகள் என்றும், புதர்க்காடுகளில் மேயும் அவர்களது மாடுகள் 'பட்டினியால் செத்துக் கொண்டிருக்கிற, வயிறு பெருத்த, கறவலுக்கோ ஏருக்கோ எதற்கும் உதவாத சப்பைகள்' என்றும் விவசாய எழுத்தாளர்கள் தாக்கிக் கொண்டிருந்தார்கள். பொதுநிலங்கள் மீதான சமூக மதிப்புப்பற்றி நடந்த நிரந்தரமான வாக்குவாதத்தில் ஒரு புதிய கட்டம் ஆரம்ப மாயிற்று. இக் கட்டத்தில்தான் தோற்றுப்போன பொதுமக்களின் கட்சியை ஆதரிப்பவராக நூறு ஆண்டுகளுக்குப் பின்னர் காபெட் திகழ்ந்தார். அந்த விவாதத்தின் சிறுமை பெருமைகளைப்பற்றி இன்றுகூட வரலாற்று ஆசிரியர்களிடத்தில் கருத்து ஒற்றுமை கிடையாது. ஆனின் ஆட்சியில் பாராளுமன்றச் சட்டத்தினால் ஏற்படுத்தப்பட்ட வேலியமைப்புகள் ஒன்றும் அதிகமில்லை; ஆனாலும், பொதுச் சட்டத்தின் (Common law) கீழ் ஒப்பந்தத்தின்படியோ அல்லது வேறுவிதமாகவோ வேலியமைப்பு இயக்கம் முன்னேறிக் கொண்டிருந்தது.[1]

ஆங்கிலேய நிலச்சொந்தக்காரக் குடியானவர்களுக்கு (freehold yeomen) டீஃபோவின் காலம் இன்னும் ஒரு செழிப்பான காலமாகவே இருந்துவந்தது; குத்தகைக்காரக் குடியானவர்களின் (tenant farmers) செல்வமும் இன்னும் வளர்ந்துகொண்டேதான் வந்தது. நாட்டின் மக்கள்தொகையில் நிலச் சொந்தக்காரக் குடியானவர்கள், அவர்களது குடும்பத்தினர் ஆகியோரின் தொகை எட்டில் ஒன்று என்று மதிப்பிடப்பட்டது; கணிசமான அளவிலிருந்த குத்தகைக்காரக் குடியானவர்களின் தொகை அதற்குச் சிறிது குறைவு; சராசரியில்

[1] பிளென்ஹீம் போர்க்களத்துக்குப் படையுடன் மார்ல்பரோ கோடையில் சென்று கொண்டிருந்தபொழுது, ஒரு யார்க்ஷயர் கனவான் (squire) தனது மனைவிக்கு எழுதினார்:

'ஒவ்வொரு நிலச்சொந்தக்காரரும் (freeholder) தனது பட்டா நிலத்துக்கு அருகிலுள்ள பொதுநிலத்தில் ஓரளவையும் சேர்த்து வேலியமைத்துக்கொள்ளலாம் என்பது இங்கிலாந்தின் சட்டம். (இது எனக்கு அனுபவத்தில் தெரியும். நிறைய நிலம் படைத்த ஒரு பிரபு இன்னும் அதிகமாகச் சேர்த்துக்கொள்ளலாம்.) ஆனால், அப்பொழுது நிலத்தில் உரிமையுடைய மற்றவர்களுக்குப் போதுமான அளவை விட்டுவிடவேண்டும்; அப்படித் தான் விட்டுவிட்ட பொதுநிலத்தில் தனது ஆடு மாடுகளை மேய்க்கும் உரிமையையும் விட்டுவிடவேண்டும். ஹெல்லபியைச் (Hellaby) சேர்ந்த திரு ஃபிரெட்வெல் (Frettwell) என்ற நமது அண்டை நிலத்துக்காரரின் உதாரணம் ஒன்று இருக்கிறது. இவர் மேனர்ப் பண்ணை யின் (Manor) பிரபுவான காசில்டன் (Castleton) பிரபுவுக்கெதிராகக்கூட வழக்கில் வென்றுவிட்டார். நமக்கும் கன்ஸ்பரோவுக்குமிடையிலான (Guns-borough) வழக்கும் இதைப்போன்றதுதான்.'

நிலச் சொந்தக்காரக் குடியானவர் குத்தகைக்கார விவசாயியைவிடச் செல்வநிலையிலிருந்தார் என்று புரட்சியின்பொழுது கணக்கிடப் பட்டிருந்தது. நூறு ஆண்டுகளுக்குப் பிறகு நிலைமை தலைகீழாக மாறி விட்டது; நிலச்சொந்தக்காரக் குடியானவர்கள் அப்பொழுது அழிந்து போய்விட்டார்கள் என்றே கூறலாம். ஏனென்றால், விவசாய முன்னேற்றம் துரிதமாக ஏற்பட்ட ஜார்ஜ் மன்னர்களின் காலத்தில் குத்தகைக்காரக் குடியானவர்கள் தங்களது நிலப்பிரபுக்களின் மூல தனத்தைக்கொண்டு தம் விவசாயத்தில் பெரும் அபிவிருத்திகளை உண்டுபண்ணினர்; ஆனால், சிறிய நிலச் சொந்தக்காரரோ கால வெள்ளத்துடன் நீந்துவதற்குத் தனது கையையே நம்பியிருக்க வேண்டியிருந்தது; பணவுதவி செய்வார் வேறு யாரும் அவருக்கில்லை. ஆயினும், ஆனின் ஆட்சியில் இவ்விரண்டு வகுப்புகளுக்குமிடையில் குறிப்பிடத்தக்க பொருளாதார வேறுபாடு ஒன்றுமில்லை என்று கூறலாம்.

வேறுபாடு அரசியல், சமூக ரீதியானது. நிலச்சொந்தக்காரருக்குப் பாராளுமன்றத் தேர்தலில் வாக்குரிமை உண்டு; தான் விரும்பியபடி அதை உபயோகிக்கும் நிலையிலும் பெரும்பாலும் அவர் இருந்தார். குத்த கைக்காரக் குடியானவருக்கோ வாக்குரிமை கிடையாது; அப்படியே அவருக்கிருந்தாலும் அவரது நிலப்பிரபு விரும்பியபடியேதான் அவர் அதை உபயோகிக்க வேண்டியிருந்திருக்கும். சிறந்த நிலப்பிரபுவாக விளங்கிய சர் ரோஜர் டி கோவர்லிகூட தனது குத்தகைதாரர்களுக்கு மேல் ஓர் எல்லையற்ற அதிகாரம் படைத்த தந்தையைப்போல்தான் அடிசனால் உலகுக்கு வருணித்தளிக்கப்பட்டார்; உலகும் அதை ஆமோதித்து ஏற்றுக்கொண்டது.

ஆனால், நிலச்சொந்தக்காரக் குடியானவரின் சுதந்திரம் உறுதி யாகப் பேணிப் பாதுகாக்கப்பட்டது. ஆனின் காலத்தில் நாட்டுப்புறக் கனவான்களின் (country gentlemen) தேர்தல் கடிதங்களில், 'வாக்களிப்பதில் தங்களுக்குள்ள சுதந்திரத்தைத் தாங்கள் காட்டப் போவதாக நிலச் சொந்தக்காரர்கள் வலியுறுத்தவில்லை' என்பது போன்ற கருத்துகளை நாம் காண்கிறோம். மற்றவர் அனைவரையும் தன் ஆணைக்குக் கட்டுப்படுத்திவைத்திருந்த கனவான்கள், அரசியல் காரணத்துக்காகவும் வேட்டை காரணமாகவும் நிலச் சொந்தக்காரக் குடியானவர்களின் நிலத்தை வாங்கிக்கொள்ள மிகமிக ஆவலுள்ளவர் களாக இருந்தனர்; அந்த நூற்றாண்டு செல்லச் செல்ல, பல நிலச் சொந்தக்காரர்கள்—குடியானவர்களும் சரி, சிறு கனவான்களும் சரி— தமது நிலத்துக்குத் திருப்திகரமான விலைகள் கிடைத்தால் நாட்டுப் புறத்தைவிட்டு வெளியேறத் தயாராக இருந்தனர்; ஏனென்றால், அங்குப் பெரிய நிலப்பிரபுக்களின் அதிகரித்துவரும் செல்வமும், அப் பிரபுக்

களின் குத்தகைக்கார விவசாயிகளின் அதிகரித்துவரும் செல்வமும் நிலச் சொந்தக்காரர்களின் பழைய முக்கியத்துவத்தை அழித்து வந்தன. சிறு நிலச்சொந்தக்காரர்களின் நிலங்களை வாங்கிப் பிரபுக் களுக்கேற்ற மிகப் பரந்த, ஒரே இடத்திலமைந்த பண்ணைகளை அமைக்கும் வேலை முன்னிலை மீட்சிக்குப் (Restoration) பிறகு தொடங்கி, அடுத்த நூறு ஆண்டுகளிலும் அதற்குப் பின்னரும் தொடர்ந்து நடைபெற்றது.

ஆயினும், நிலச் சொந்தக்காரர்களும் குத்தகைதாரர்களும் முற்றிலும் வேறான வகுப்புகளைச் சேர்ந்தவர்களல்லர்; ஏனென்றால், ஒரு துண்டு நிலத்தைக் குத்தகைதாரர் என்ற முறையிலும், இன்னொரு துண்டு நிலத்தைச் சொந்தக்காரர் என்ற முறையிலும் ஒரே மனிதர் பல சமயங்களில் பயிரிட்டுவந்தார்.

இடைக்காலத்தைச் சேர்ந்த கிராமங்களின் குப்பையும், கூளமும், சுகாதாரமற்ற தன்மையும் நீண்ட காலமாகவே மறைந்துவந்தன. கிராமாந்தர மத்திய வகுப்பினரின் எளிய பெருந்தன்மையும் வசதி நிறைந்த வாழ்வும் அவைகளின் இடத்தைப் பிடித்துக்கொண்டன. ஆனின் காலத்தில் எங்குப் பார்த்தாலும் மனிதர்கள் பண்ணையில்லங் களைக் (farmhouses) கட்டிக்கொண்டும் பெரிதாக்கிக்கொண்டுமிருந் தனர். மாவட்டத்தின் மரபுப்படி அல்லது அங்குக் கிடைத்த பொருளைப் பொறுத்து அவ் வீடுகள் கருங்கல்லாலோ, செங்கல்லாலோ, மரத்தாலோ கட்டப்பட்டன. துணி உற்பத்திக்கு மிகவும் தேவையான ஆட்டு உரோமம் எங்கெல்லாம் உற்பத்தியாயிற்றோ அவ்விடங்களிலெல்லாம், இக் கிராமப்புறச் செல்வக் கொழிப்பின் விளைவுகள் கட்டடக்கலையில் நன்கு பிரதிபலிப்பதைக் காணமுடிந்தது; பதினைந்தாம் நூற்றாண்டி லிருந்து பதினெட்டாம் நூற்றாண்டுவரையிலான காலத்தைச் சேர்ந்த, கருங்கல்லால் கட்டப்பட்ட, பிரம்மாண்டமான காட்ஸ்வோல்டு (Cotswolds) பண்ணையில்லங்களும், தங்களது பிரதேசத்தில் துணி வியாபாரம் வளர்ச்சியுற்றதன் காரணமாகச் சமீபகாலத்தில் பெருஞ் செல்வம் ஈட்டிவந்த கும்பிரிய, வெஸ்ட்மோர்லாந்து மலைவாசிகளின் இல்லங்களும் இதற்குச் சான்றுகளாகத் திகழ்ந்தன.

லேக் மாவட்டத்தில் இன்று பயணம் செய்பவர்கள் பல அழகிய பழைய பண்ணையில்லங்களைக் காணலாம். அவை மட்டுமன்றிப் பல சிறுகுடிசைகளும் (cottages) கட்டப்பட்டன. அவைகள் இன்று சிதைந்துபோய்விட்டன. அங்குதான் லேக் மாவட்டத்துப் பள்ளத் தாக்குகளில் வசித்த ஏழை மக்களின் பெரிய உடல்வலு மிக்க குடும்பங்கள் வளர்ந்துவந்தன. குழந்தைகள் வீட்டுக்குள்ளேயே, தாயைச் சுற்றி, துணி நெசவாளர்களுக்கு நூல் நூற்றுக்கொடுத்து வளர்ந்து வந்தார்கள்; வயது வந்ததும் ஆட்டு மந்தையை ஓட்டிக்

கொண்டு குன்றுகளுக்குச் சென்றூர்கள்; அங்குச் செங்குத்தான மலை யுச்சிகளில் பெருங்கற்களை அடுக்கிச் சுவர்களை எழுப்பினூர்கள்; அச் சுவர்கள்தாம் சுறுசுறுப்புக் குன்றிய இக்காலத்து மக்களையும் ஆச்சரியத் தில் ஆழ்த்துகிறது. வேர்ட்ஸ்வொர்த்தின் தாயகத்தின் அழகு, இயற்கைக்கும் மனிதனுக்குமிடையில் பொருத்தமான ஒரு சமநிலையை எய்தியது பதினெட்டாம் நூற்றூண்டுவாக்கில்தான். முந்திய நூற்றூண்டு களில் பள்ளத்தாக்குகள் 'அடைபட்டும், புதர்களடர்ந்தும், சேறும் சகதியாகவும், கவர்ச்சியற்றும்' விளங்கின; நமது காலத்தில் மனிதன் இயற்கையின் முகத்தை இயந்திரத்தின் உதவியுடன் மிகவும் வெற்றி கரமாகத் திருத்திக்கொண்டிருக்கிறுன். ஆனுல், ஆனின் ஆட்சியில் பள்ளத்தாக்குகள் தங்களது கிராமாந்தர வனப்பின் உச்சத்தை எட்டிப் பிடிக்கத் தொடங்கியிருந்தன; திருத்திப் புனையப்பட்ட வனப்பு அது, அடக்கி அடிமையாக்கப்பட்டதன்று. உயர்ந்தும் சுற்றிலும் காணப்பட்ட மலைகளின் பேரழகுக்கு மாறுனது அது.

ஆயினும், லேக் மாவட்டத்திற்குச் சென்றவர்கள் மிகவும் குறைவு. டீஃபோவுக்கும் அவரது காலத்தவர்களுக்கும் அம் மாவட்டம்தான் இங்கிலாந்திலேயே அதிகக் காடுமேடான மிகவும் வரண்ட பயங்கரமான பகுதியாகத் தோன்றியது. ஆயினும், வியாபார நிமித்தமாகவும் ஆவலால் தூண்டப்பட்டும் விண்டர்மியருக்கு (Windermere) அப்பா லும் ஹார்ட்நாட்டுக்கு (Hardknot) மேலும் கற்கள் நிறைந்த செங்குத் தான பாதைகளில் புதிய நபர்கள் சிலர் சவாரி செய்தார்கள். லேக் பள்ளத்தாக்கு ரொட்டி 'அட்டைக் கறுப்பாகவும், தடிப்பாகவும், மென்மையின்றியும்' இருந்தது என்றும், வீடுகள் காரை பூசப்படாத, கற்களால் கட்டப்பட்ட, 'பரிதாபகரமான சின்னஞ் சிறு குடிசைகள்' என்றும், அவைகள் மாடுகளுக்கேற்றவையே தவிர மனிதர்களுக்கல்ல என்றும் அவர்கள் பழித்தார்கள். ஆயினும், 'அங்கும் இங்கும் சில வீடுகள் பூச்சுவேலை செய்யப்பட்டு இருந்தன'; 'தட்டிச் சுடப்பட்ட ஓட்ஸ் ரொட்டி' சிற்சில சமயங்களில் தந்திரமாகச் சுடப்பட்டுச் சுவை மிகுந் திருந்தது. மேலும், பிரசித்திபெற்ற விண்டர்மியர் உணவான 'சார்ஸ் (charrs) என்றழைக்கப்பட்ட மீன், பானைகளில் அடைக்கப்பட்டு லண்டன் வந்தது.' (நீர் தேங்கி நிற்காத, வடிகால் வசதிமிக்க அடித் தளத்தையும், உறுதியான பண்ணைக் கட்டடங்களையும், அவைகளில் ஓக் மரத்தால் செய்யப்பட்ட மரச்சாமான்களையும் கொண்ட பள்ளத் தாக்கை உடைய) இந்த மகிழ்ச்சி நிறைந்த புல்வெளிப் பிரதேசத்தின் செல்வச் செழிப்பில் ஏற்பட்ட பெரும் அபிவிருத்தி ஆனின் ஆட்சியில் ஒன்றும் முற்றுப்பெற்றுவிடவில்லை என்பதை இப் பிரயாணிகளின் குறிப்புகளிலிருந்து நாம் அறிந்துகொள்ளலாம்; என்றுலும், முன்னிலை மீட்சி தொடங்கிக் கெண்டலில் (Kendal) துணி உற்பத்தி காரணமாக அவ்வபிவிருத்தியில் துரித முன்னேற்றம் காணப்பட்டது.

சமீப காலத்தில் வன்முறைச் செயல்களும் காட்டுமிராண்டித்தனமும் தாண்டவமாடிய, அண்டையிலுள்ள கவுன்டியான நார்தம்பர்லந்தில், கடற்கரை ஓரங்களிலும் தெற்கு டைன் பள்ளத்தாக்கிலும் பிரயாணம் செய்தவர்கள் 'ஏராளமான நல்ல ரொட்டியையும், பீர் பானத்தையும்', கோழிகளையும், 'வாத்துகளையும்', பிரசித்திபெற்ற கிளாரெட் (claret) மதுவையும் கண்டார்கள்; அம்மது அங்குக் காணப்பட்டதற்குக் காரணம் ஸ்காட்லந்து அண்மையில் இருந்ததுதான்; போரையும் பொருட் படுத்தாமல் ஸ்காட்லந்து கனவான்கள் (gentry) ஃபிரான்சிலிருந்து கிளாரெட் மதுவை இறக்குமதி செய்தனர். ஆன் அரியணை ஏறிய பொழுதுகூட நார்த்தம்பர்லந்தில் 'கவுன்டி காவலர்' (county keeper) ஒருவர் இருந்தார். அவருக்கு £ 500 சம்பளம் கொடுக்கப் பட்டது; திருடுபோய் மீட்கப்படாத கால்நடைகளுக்கு இத் தொகையி லிருந்து இழப்பீடு செய்யவேண்டும். ரெடெஸ்டேலுக்கும் (Redes-dale) ரோமன்வாலுக்கும் (Roman Wall) இடையிலான புதர் அடர்ந்த சதுப்புநிலம் இன்னும் கெட்ட பெயருடன் விளங்கிவந்தது; கவுன்டி காவலர் எப்படியோ சாமர்த்தியமாகச் சமாளித்துவந்தார். 'புதரில் மறைந்திருந்து வழிப்பறி செய்யும் கள்ளர்கள் பெரும்பாலும் ஒழிந்துவிட்டார்கள் என்றும், அக் கவுன்டியில் ஆண்டுதோறும் நடை பெறும் வழிப்பறிகள் அனைத்துக்கும் சிறுதொகையே ஈடாகிவிடு மென்றும் பிரயாணிகளுக்குக் கவுன்டி காவலரால் சொல்லமுடிந்தது. ஸ்காட்லந்துடன் சமாதானம், டைன்சைட் சுரங்கங்கள், நியூகாசில் (Newcastle) வியாபாரம் ஆகியவை ஸ்காட்லந்துடனுன எல்லைப் பகுதியில் வாழ்க்கைத்தரத்தை ஏற்கெனவே உயர்த்திவந்தன. ஆயினும், நார்த்தம்பர்லந்தின் தூரத்து நாட்டுப்புற மாவட்டங் களாகியகும்பர்லாந்தும் டர்ஹாமும்—பிந்திய நாள்களைக் காட்டிலும் அப்பொழுது அங்கு மக்கள் நெருக்கம் அதிகமாக இருந் தாலும்கூட—இன்னும் மிகவும் வறுமையில் ஆழ்ந்திருந்தன. இன்று செழிப்பு மிக்க ஆட்டுப்பண்ணை ஒன்றே ஒன்றைமட்டும் கொண்டிருக் கும் 'நகர்' (township) பலவற்றில், அப்பொழுது நடுவில் ஓர் அரண் அமைந்த இல்லத்தைச் சுற்றிச் சுற்றிலும் தோட்டங்களையுடைய சில குடிசைகள் (cottages) ஆறு ஏழு அமைந்திருந்தன. அங்கு உடல் சிரமம் பாராது உழைக்கும் எல்லைப்புற மக்கள் வசித்தார்கள். அவர்கள் வாழ்வில் வசதிகளை அறியாதவர்கள்; சதுப்புநிலத்தை வியர்வை சிந்த உழுது பயிரிட்டும் ஒரு பிடியளவு ஓட்ஸ் தானியமே அவர்களுக்குக் கிடைத்தது.

ஸ்டுவர்ட் மன்னர்களின் காலமுழுவதிலும், குறிப்பாக முன்னிலை மீட்சிக்குப் பிறகு, கோட்டையில்லங்கள் (castles) இருந்த இடங்களில் அழகிய கிராம இல்லங்கள் (country houses) கட்டப்பட்டுவந்தன. கடந்த கொந்தளிப்பு மிகுந்த காலங்களில் இக் கோட்டையில்லங்களில்

தான் ஸ்காட்லந்து எல்லைப்புறத்துக் கனவான்கள் வாழவேண்டியதாயிருந்தது. சிப்சேஸ் (Chipchase), கேப்ஹீட்டன் (Capheaton), வாலிங்டன் (Wallington), முதலாவது ஃபெலோடன் (Fallodon) போன்ற ஸ்டுவர்ட் மாளிகைகளில் சில ஆனின் ஆட்சிக் காலத்திலேயே இருந்தன. ஆனால், சாலைகள் போட்டது, நார்த்தம்பர்லந்து சதுப்பு நிலப் பண்ணைகளுக்கு வேலியமைத்து வடிகால் வசதிகள் செய்தது, அதில் பீச் (Beech) காடுகளை நட்டது, அதில் விசாலமான செங்கல் மதில்களுடன் கூடிய தோட்டங்களை அமைத்தது ஆகியவை பெரும்பாலும் பின்னர் வந்த ஹனோவீரிய (Hanoverian) மன்னர்களின் காலத்து வேலைகள். நெடுங்காலமாகப் பின்தங்கியும் அநாகரிகமாகவும் விளங்கிய இப் பிரதேசத்தின் தோற்றத்திலும் உற்பத்தித்திறனிலும் ஏற்பட்ட இப் பெருமாற்றங்கள் பதினெட்டாம் நூற்றாண்டில் நடைபெற்றவை; 1707ஆம் ஆண்டு நிகழ்ந்த ஸ்காட்லந்துடனான ஐக்கியத்துக்குப் பிறகு அந் நாட்டுடன் நடந்த தடையிலா வாணிகம் (free trade) இதற்கு மிகவும் சாதகமாயிருந்தது. நிலக்கரியில் சம்பாதிக்கப்பட்டு நிலத்தில் முதலீடு செய்யப்பட்ட டைன்சைட் பணம் இதற்கு உதவியது. ராப்ராய் (Rob Roy) நூலில் ஆஸ்பால்டிஸ்டன்கள் விஷயத்தில் நடந்ததுபோல், அப் பிரதேசத்துக்கே சொந்தமான பழைய யாகோபிய (Jacobite), கத்தோலிக்கப் பிரபுக்கள், தொழிலதிபர் குடும்பங்களாலும் வர்த்தகர் குடும்பங்களாலும் வெளியேற்றப்பட்டார்கள். இந்தப் பொருளாதார விளைவுக்கு, 1715ஆம் ஆண்டின் கலகம் போன்ற அரசியல் நிகழ்ச்சிகளும் உதவின. புதிதாக வந்த அக் குடும்பங்கள் தங்களது தொழிற் செல்வத்தையும் தங்களுடன் கொண்டுவந்து, புதிதாக வாங்கிய பண்ணைகளில் கொட்டினார்கள். இதன் காரணமாக அவர்களது பண்ணைகளின் குத்தகையும், அவர்களது குத்தகைக்காரர்களின் செழிப்பும், அவர்களது புதிய கிராம இல்லங்களின் வசதிகளும் அதிகரித்தன.

இங்கிலாந்தில் இன்னும் தெற்கிலமைந்த மாவட்டங்களின் நாகரிகம் மேலும் பழமையானது. உள்நாட்டுப் போருக்குப் (civil war) பிறகு இங்கு இடையீடில்லாமல் தொடர்ந்து நிலவிய அமைதி காரணமாக வாழ்க்கை வசதிகள் பெருகிக்கொண்டிருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் நிலத்தோற்றத்தின் (landscape) சிறப்பு அம்சமான மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையிலான மிகவும் நேர்த்தியான சமநிலை எல்லா இடங்களிலும் நிறுவப்பட்டுவந்தது. காடுமேடாக இருந்த நிலங்களில் வேலிவரிசைகளும் பழத்தோட்டங்களும் தோன்றின; சிறுகுடிசைகளும் (cottages), பண்ணைக் கட்டடங்களும், கூடங்களும் (halls) பழைய சம்பிரதாயக் கட்டடக் கலைப்பாணிகளில், அல்லது 'ஆன் அரசு' என்று இன்று நாம் அழைக்கிறோமே அந்தக் கம்பீரமான, ஆனால் எளிய முறைப்படி பல்கிப் பெருகின; அபிவிருத்தியடைந்தன. இங்கிலாந்துக்கே சொந்தமானதாக இன்று நமக்குத்

தோன்றும் அந்தக் கட்டடக் கலைப் பாணியானது தனது தொடக்கத்தில் டச்சுக் கலையின் செல்வாக்கை ஓரளவு பிரதிபலித்தது. உட்புற அலங்காரங்களும் கட்டட அழகுக்குக் குறைந்தவையல்ல ; 'இங்கிலாந்தில் இன்று திரைச்சீலைகள் வழக்கிலில்லை; ஆனால், எல்லாம் பெருஞ் செலவில் பலகையிடப்பட்டுள்ளன' என்று 1710-ல் ஒரு வெளிநாட்டுப் பிரயாணி எழுதினர். ஐந்தடி உயரமும் அதற்கேற்ற அகலமும் உள்ள விசாலமான பலகைகளை மக்கள் விரும்பினார்கள். முந்திய ஸ்டுவர்ட் காலத்தைச் சேர்ந்த மரச்சட்டங்களின் சிறிய அமைப்பு இப்பொழுது வழக்கொழிந்துவந்தது. பெரிய கண்ணாடிப் பலகைகளுடன் கூடிய பெரிய ஜன்னல்கள் காத்திக் (gothic) கிராதிகளின் இடத்தையும் பிடித்துக் கொண்டன. உயரமான வெளிச்சம் நிறைந்த அறைகள்தாம் அக் காலத்திய புதிய பாணி.

சீனப் பீங்கான் சாமான்கள் டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியாலும் ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியாலும் ஐரோப்பாவுக்குக் கொண்டு வரப்பட்டன. செல்வ மாதர்களிடையில் அவைகட்கு நல்ல கிராக்கி இருந்தது. ஆன் ஆட்சியின் காலத்தில் கிராமங்களிலும் நகரங்களிலும் மாளிகை பலவற்றில் வெள்ளை ஜாடிகளும் நீல ஜாடிகளுமாக அவை மாடங்களில் அடுக்கிவைக்கப்பட்டிருந்தன. உயரமான நிலைக் கடிகாரங்களும் காணப்பட்டன ; கீழ்த்திசை நாடுகளிலிருந்து வந்த அரக்குச் சாமான்கள் அந் நிலைக்கடிகாரங்களைச் சுற்றிலும் அழகு செய்தன. மாளிகைகள் அலங்கரிக்கப்பட்ட விதம் இதுதான். கிரின்லிங் கிப்பன்ஸ் (Grinling Gibbons) தனது மாயத்திறமை முழுவதையும் இன்னும் மரவேலையில் காட்டிக்கொண்டிருந்தார். அமெரிக்க இந்தியத் தீவுகளிலிருந்து மகோகனி வரத் தொடங்கிவிட்டது ; அத்துடன், பதினெட்டாம் நூற்றாண்டின் சிறந்த கலைச்சுவையாகக் கருதப்படும் இலேசான, நேர்த்தியான மரச்சாமான்களும் தோன்றத் தொடங்கின. அந்நிய நாடுகளிலிருந்து கலைப்பொருள் வாணிகர்கள் இங்கு ஈர்க்கப்பட்டனர் ; தங்களது வியாபாரத்துக்கு இங்கிலாந்தில் இருந்த ஏராளமான வாய்ப்புகள் அவர்களை வியப்பிலாழ்த்தின. 'ஃபிரான்சிலிருந்தும் இத்தாலியிலிருந்தும் அரைக்காசு கொடுத்து வாங்கி இறக்குமதி செய்த பொருள்களை ஆனை விலைக்கு விற்று ஆங்கிலேயர்களை அருமையாகவே சுரண்டினர்' அவ் வணிகர்கள். ரோம் நகரின் அரண்மனைகளிலும் பொருட்காட்சிச்சாலைகளிலும் எவ்வளவு ஓவியங்களைக் காணலாமோ அவ்வளவு ஓவியங்களை, பெரும் புகழ் வாய்ந்த இத்தாலியக் கலை மன்னர்களால் தீட்டப்பட்ட ஓவியங்களை, ஆன் அரசியால் ஆளப்பட்ட நிலப்பிரபுக்களும் கனவான்களும் தங்களது கிராமாந்தர மாளிகைகளின் கூடங்களில் பூட்டிவைத்துப் போற்றி வந்தார்கள் என்று அந்நியக் கலைஞர்கள் கூறினார்கள்.

வான்புருவின் பிளென்ஹீம் மாளிகையின் (Vanbrugh's Blenheim House) பிரம்மாண்டமான அமைப்பும் அழகுணர்ச்சியற்ற அலங்காரமும் ஆன் அரசி காலத்திய கட்டடக் கலையைப் பிரதிபலித்தன என்று கூறமுடியாது. சமய, கல்வி சம்மந்தமான, பொதுக் கட்டடங்களில் மேலும் தூய்மையானதொரு கலைச்சுவையே வழக்கமாகக் காணப்பட்டது; சாதாரண வீட்டுக் கட்டடங்களிலோ 'அழகும் எளிமையுமே' விரும்பப்பட்டன. ரென் (Wren) இன்னும் உயிருடனும் சுறுசுறுப்பாகவும் இருந்துவந்தார்; லண்டன் தேவாலயங்களும் ஹாம்ப்டன் கோர்ட்டும் (Hampton Court) அவரால் கட்டப்பட்டு வந்தன. கூடிய விரைவில் ஆக்ஸ்ஃபோர்டில் ராட்கிளிப் காமிராவைத் (Radcliffe Camera) தோற்றுவித்த அந்த அருமையான திறனை கிப்ஸ் (Gibbs) அப்பொழுது கற்றுக்கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் சேர்ந்து 'தொன்மை (classic) அழகைத் தாய்நாட்டு வீரியத்துடன் குழைக்கும்' வித்தையை வருகின்ற தலைமுறைகளுக்குக் கற்றுத்தந்தனர். இப் பெருங் கலைஞர்கள் வகுத்த தகவுப் பொருத்தம் பற்றிய விதிகள் (rules of proportion) பாடப் புத்தகங்களில் இடம் பெற்றன; சுற்றிவாழ்ந்த கட்டடக் கலைஞர்கள் அவைகளைப் பெருமளவில் பயன்படுத்தினர்; இதன் விளைவாகப் பதினெட்டாம் நூற்றுண்டு இங்கிலாந்தில் கிராமங்களிலும் சிறு பட்டணங்களிலும் ஒரே பாணியைச் சேர்ந்த கட்டடங்கள் எங்கும் கட்டப்பட்டன. இந்த மகிழ்ச்சி நிறைந்த காலம் நீடித்து நின்றது. ஆனுல், பத்தொன்பதாம் நூற்றுண்டில் புராதன ஏதென்ஸின் கட்டடக் கலைப் பாணியையும், இடைக் காலக் கட்டடக் கலைப் பாணியையும் பின்பற்ற மனிதர்கள் முயன்ருர்கள்; அப்பொழுதுதான் ஆங்கில மரபு ஒழிந்து, கற்றுக்குட்டிகளின் கற்பனைகளில் உதித்த விகார அமைப்புகளும் அந்நியப் பண்பாட்டு வடிவங்களும் வந்து முளைத்தன.

நாட்டுப்புறக் கனவான்கள் தமது செல்வத்தையும் பண்பாட்டையும் பொறுத்துப் பலதரப்பட்டவர்களாக இருந்தனர். சமூக ஏணியின் உச்சத்தில் கோமகன்கள் (Dukes) இருந்தனர்; இவர்கள் வேறு எந்த நாட்டிலும் இளவரசர்கள் என்று அழைக்கப்பட்டிருப்பார்கள்; இவர்களது வாழ்க்கைமுறையானது இங்கிலாந்திடமிருந்து உதவித் தொகைகளைப் பெற்றுவந்த அயல்நாட்டு மன்னர்களின் அரண்மனைகளையும் சிறப்பில் விஞ்சின. ஏணியின் அடிப்பாகத்தில் கனவான் (squire) இருந்தார்; அவருக்கு ஆண்டொன்றுக்கு இருநூறு அல்லது முந்நூறு பவுன்கள் வருவாய் வந்தது; அவர் தனது நிலத்தின் ஒரு பகுதியைத் தானே பயிர் செய்தார்; அப் பிரதேசத்துக்குரிய மொழியையே பேசினுர்; குடியானவருடன் (yeoman) சமமாகவே பழகினுர்; ஆயினும், குடியானவருக்கு இவர் சிறிது மேம்பட்டவர். இவர் வேட்டை விலங்குகள் வைத்திருந்தார்; குடும்பச் சின்னங்களைப் (coat of arms)

பெற்றிருந்தார் ; ‘ கனவான் ’ என்ற முறையில் இவருக்கு எல்லோரும் மரியாதை செலுத்தினர்கள். குடியானவருக்கு இவை எதுவும் கிடையாது. தனது ஆயுட் காலத்தில் எப்பொழுதாவது ஒரு முறை ஏதாவது வேலை காரணமாக கனவான் லண்டன் செல்வார் ; அப்பொழுது குதிரை மயிரினல் செய்யப்பட்ட அவரது பொய்யான தலை முடியும், குதிரைக்காரர் பெல்ட்டும், நீளமான கையுடைய பழைய மாதிரிக் கோட்டும் நகரத்துக் கூட்டத்திலிருந்து அவரை வேறுபடுத்திக் காட்டும். அவரது நூலகத்தில் சம்பிரதாயப்படி பைபிள், பேக்கரின் வம்சபரம்பரைக் கதைகள் (Baker's Chronicle), ஹுடிபிராஸ் (Hudibras), ஃபாக்ஸின் உயிர்த் தியாகிகள் (Foxe's Martyrs) ஆகியவை காணப்பட்டன ; அவர் இந் நூல்களைப் படித்தார இல்லையா என்பது சந்தேகம் ; என்ருலும், பியூரிட்டானியர்களையும் பேப்பிஸ்ட்டுகளையும் (Papists) பற்றிய இவரது கருத்துகள் மேற்சொன்ன கடைசி இரு நூல்களின் கருத்துகளோடு வழக்கமாக இணங்கியிருந்தன.

ஆனல், இத்தகைய பழங்காலத்துக் கனவான்களையும் காலத்தின் மாறுதல்கள் பாதித்தன. விக்குகளின் போர்களுக்காக நான்கு ஷில்லிங் நிலவரி செலுத்தவேண்டியதாயிருந்தது. இந்தப் பெருஞ் சுமை தாங்காமல் அவர்கள் டோரிகளைத் தீவிரமாக ஆதரித்தார்கள். கிராமப்புறங்களில்கூட வாழ்க்கை முறை செலவு மிக்கதாகிக்கொண்டு வந்தது ; அதே சமயம் வசதி இன்பங்கள் குறைந்தன; சிக்கல் மிகுந்தது; பட்டணத்துச் செல்வாக்கு அதிகரித்தது. கனவான்களால் சமாளிக்க முடியவில்லையென்ருல், அவர்கள் தங்களது நிலங்களை நல்ல விலைக்கு விற்கமுடியும். பல பெரிய நிலப் பிரபுக்கள் தங்களது அண்டை நிலங்களை வாங்கித் தங்களது பண்ணைகளைப் பெரிதுபடுத்திக்கொள்ளக் காத்துக் கிடந்தனர்.

முன்பெல்லாம் பணம் நிலத்திலேயே முதலீடு செய்யப்பட்டு வந்தது ; ஆனல், இப்பொழுது நிலத்துக்கிருந்த அந்த ஒரேயடியான மதிப்பு குறைந்து, முதலீட்டுக்கான பல வழிகள் தோன்றின. ஆயினும், சமுதாயத்தின் செல்வந்தர்களின் நிலப் பசி சிறிதும் தணியவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இது சிலருக்கு வியப்பூட்டலாம். டியூடர் காலத்தில் நிலம், குத்தகை, பத்தில் ஒரு பங்கு வரி (tithe) ஆகிய வற்றைத் தம் குழந்தைகள் பெயரில் எழுதிவைத்த வெள்ளை மனது வியாபாரிகள் இப்பொழுது நிதிகளில் (funds) முதலீடு செய்தார்கள். ஆயினும் சமூக, அரசியல் பேரவா காரணமாக நிலந்திரட்டும் ஆசை முன்பு எப்பொழுதும் இருந்ததைவிட அதிகமாயிற்று. 1680—1740-ல் நார்த்தாம்ப்டன் ஷயரிலும் பெட்ஃபோர்ட் ஷயரிலும் நிலவுடைமையில் ஏற்பட்ட மாறுதல்களைக் கூர்ந்து ஆராய்ந்த திரு. ஹபகூக் (Habakkuk) பின்வருமாறு எழுதுகிருர் :

'சமூகத்தில் மதிப்பையும் அரசியல் அதிகாரத்தையும் பெரிதும் விரும்பிய மனிதர்கள் நிலத்தை வாங்கினுர்கள். அவர்களுக்கிடையில் சில பெரிய வியாபாரிகளும் இருந்தனர் ; அவர்களில் முக்கியமானவர்கள் கிழக்கிந்தியக் கம்பெனியின் தலைவர்கள். இவர்கள் அரசியலில் நுழைய வேண்டும் என்பதற்காகவே நிலங்களை வாங்கினர். ஆனுல், இப் புதிய நிலச் சொந்தக்காரர்களில் பெரும்பான்மையோர் அரசாங்கத்துடன் ஏதாவதொரு முறையில் சம்பந்தப்பட்டவர்கள், அல்லது நீதிபதிகள் சமூகத்தில் நிலவுடைமையால் மட்டுமே பெறக்கூடிய ஒரு முக்கியத் துவத்தைப் பெறுவதற்காக வென்றே அவர்கள் நிலங்களை வாங்கினர். அவர்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் நிலங்களை வாங்கி வைத்தனர் ; சுற்றியிருந்த சில கனவான்களின் நிலங்களையும், திருச் சபைக்குச் (Church) சொந்தமான நிலங்களையும், பாராளுமன்றப் பரோக்களின் மேனர் உரிமைகளையும்கூட வாங்கினர். அவர்கள் தங்களது பணத்தை நிலங்களில் முதலீடு செய்தார்கள் என்று சொல் வதைவிட ஒரு சமூக வகுப்பின் (class) மேல் வரும்படிகளை, சுற்றுப்புற வாழ்வின்மீது ஒரு தளராத பிடியை விலை கொடுத்து வாங்கினுர்கள் என்று கூறுவது அதிகம் பொருந்தும். வயல்கள்மீது தமது பார்வையைச் செலுத்தியபொழுது எத்திசையிலும் தங்களது நிலங் களையே பார்க்க விரும்பினுர்கள். தங்களது நிலங்களை வாங்கும் இத்தகைய பெருநிலப் பிரபுக்களைக் கனவான்களும் வெறுத்தனர் ; அக்காலத்திய நாடகங்கள் பலவற்றில் இவ் வெறுப்புணர்ச்சியே மையக் கருத்தாக அமைந்திருந்தது.' (Ec. Hist. Rev., பக். 12, பிப்ரவரி, 1940, English Land ownership 1680–1740.)

அக்காலத்திய நாட்டுப்புற இல்லங்களில் (country house) செல் வந்தர்களின் வாழ்க்கையைப்பற்றி சிந்தனை செய்யும்பொழுது முதலில் நம் நினைவுக்கு வருபவர்கள் பிரபுக்கள் ; இத்தாலியிலிருந்து வந்த ஓவியங்கள், ஃபிரான்சிலிருந்து வந்த மரச்சாமான்கள், இத்தாலிய, ஃபிரெஞ்சு, லத்தீன் நூல்கள் ஆகியவைகளால் பிரபுக்களின் கிராமப் புறத்து அரண்மனைகள் நிரம்பியிருந்தன ; அவர்கள் இந் நூல்களைத் திரட்டியது மட்டுமன்றி படிக்கவும் செய்தார்கள். இளைஞர் வால்டேர் 1726–1729-ல் இங்கிலாந்துக்கு வந்திருந்தபொழுது இலக்கியத்தையும் விஞ்ஞானத்தையும் பேணியவர்கள் என்ற முறையில் இவர்கள் ஃபிரெஞ்சுப் பிரபுக்களை விஞ்சிவிட்டனர் என்று எழுதினுர். மூன்ருவது ஷாஃப்ட்ஸ்பரி பிரபு (Earl of Shaftesbury) போன்ற தத்துவ அறிஞப் பிரபுக்களும், சாமர்ஸ் (Somers), மாண்டேகு (Montagu) போன்ற புலமைமிக்க அரசியல் வல்லுநர்களும், பண்டைப் பொருள்களைத் திரட்டுவோர்களில் மிகச் சிறந்தவராகிய ராபர்ட் ஹார்லியும் (Robert Harley) அப்பொழுது இருந்தார்கள். 'தேசத்தின் தூண்' என்ற வகையில் ஹார்லி வேறு வேலையிலீடுபட்டிருந்த சமயங்களில் தானே

நூல்களையும் கையெழுத்துப் பிரதிகளையும் தேடித் திரியாமல் போனாலும் கூட, அவரது கையாட்கள் அப் பணியாகவே அலைந்துகொண்டிருந்தனர். விக் கட்சியின் தலைவர்களான பிரபுக்களும், வெஸ்ட்மின்ஸ்டரிலும் செயின்ட் ஜேம்ஸிலும் இருந்த அவர்களது நண்பர்களும் பகைவர்களும் தாங்கள் நாட்டுப்புறக் கனவான்களாயிருந்ததுபற்றிப் பெருமையுற்றனர் ; தாங்கள் கனவான்களாகப் பிறந்தார்களோ அல்லது ஆனார்களோ அதைப்பற்றி அக்கறையில்லை ; தங்களது நாட்டுப்புற இல்லங்களில் வாழ்ந்த இம் மனிதர்களின் ஆலோசனையைக் கேட்க, கவலைமிக்க 'நாடாள்வோர் ஓடோடிவந்தனர் ; அல்லது ஓடோடி வருவதாகக் காட்டிக்கொண்டனர்.

லண்டனில் கேளிக்கைப் பருவம் (season) ஜூன் முதல் வாரத்தில் முடிவுற்றது ; நாகரிகம் விரும்பிகள் தமது நாட்டுப்புற இல்லங்களுக்குக் (country homes) கலைந்து சென்றனர் ; அல்லது பாத்துக்குச் (Bath) சென்று மேலும் சில நாட்கள் கழித்தனர். சிலர் லண்டன் திருமணச் சந்தைக்குத் தமது பெண்களைக் கொண்டுவர மிகப் பொருட் செலவு செய்திருந்தனர் ; இவர்கள் இன்னும் சில நாட்கள் லண்டனில் இருந்தால் அவர்களது குடும்பம் அழிந்துபோகும்; அவர்களது அண்டை மனிதர்களோ ஒரு கவுன்டியின் (county) தலைமை நகரத்தில் காலத்தைச் செலவிட்டுத் தங்களைத் திருப்தி செய்து கொண்டனர் ; அல்லது பெண்கள் கோச்சு வண்டியில் கோடைக் காலத்தில் நாட்டுப்புறங்களில் சுற்றிவிட்டு வந்தனர் ; அல்லது கிறிஸ்துமஸ் சமயத்தில் சகதி நிறைந்த சந்துகளில் தமது சகோதரர்களுக்குப் பின்னால் பின் ஆசனத்தில் (pillion) அமர்ந்து சுற்றி வந்தனர்.

மேரி வோர்ட்லி மாண்டேகு (Lady Mary Wortley Montagu) என்ற அந்தக் கல்வி வாடை வீசும் அதிகெட்டிக்காரச் சீமாட்டி தான் எழுதிய கடிதம் ஒன்றில்—அதில் நமக்கு மிகவும் சலிப்பூட்டுவது டாசோவின் (Tasso) எழுத்துகளிலிருந்து மேற்கோள் காட்டும் பகுதிதான்—மதுவும் வேட்டையும் தவிர 'வேறெந்த இன்பத்தையும் நாடாத', தெற்கத்திய கவுன்டி ஒன்றைச் சேர்ந்த கனவான்களைக் (squires) குறை கூறுகிறார். 'அக் குடும்பங்களின் பரிதாபத்துக்குரிய பெண்கள் கோச்சு வண்டியில் ஏறும் இன்பத்தை நுகர்ந்ததே கிடையாது ; ஏனென்றால், அவர்களது பிரபுக்களுக்கும் எஜமானர்களுக்கும் அத்தகைய ஊர்தி தேவைப்பட்டதே இல்லை ; காரணம் அவர்களது காலை நேரங்கள் வேட்டை நாய்களுடன் கழிகின்றன ; இரவு நேரங்கள் மிருகத்தனமான தோழர்களுடன், குடிபோதையில் கழிகின்றன.' ஆயினும், நார்த்தாம்ப்டன் ஷயர் கனவான்களை அவர் அதே கடிதத்தில் போற்றுகிறார், தூற்றுகிறார். பட்டிக்காட்டுக் கனவான் வெஸ்டர்ன்

(Squire Western) ஓர் அப்பட்டமான உண்மைச் சித்திரம்; அந்தச் சித்திரத்துக்குச் சற்றும் இளைத்தவரல்லர், சோமர்வில்லால் (Somer Ville) வருணிக்கப்படும் நாட்டுப் புறக் கனவான்—ஒருவேளை கனவான் வெஸ்டர்னைப் போல் நாட்டுப்புறங்களில் இவரை யொத்த வர்களை அதிகம் காண முடியாமற் போகலாம்.

என்றாலும், ஆன் அரசியின் காலத்தில் வாழ்ந்த ஓரளவு வசதி மிகுந்த கனவான்களின் பல நூற்றுக்கணக்கான கடிதங்களை நாம் படித்தோமானால், அவர்கள் பெரிய அறிஞர்களுமல்லர், அதே சமயத்தில் பட்டிக்காட்டுக் கோமாளிகளுமல்லர் என்பதை நாம் தெரிந்துகொள் வோம். அக் கனவான்களின் எண்ணங்களை அப்படியே நாம் அக் கடிதங் களில் படிக்கிறோம்; அவர்கள் தங்களது வரவுசெலவுக் கணக்குப் புத்தகங்களில் மிகவும் சிரத்தை காட்டுகிறார்கள்; தங்கள் பெண்களின் திருமணத்தைப்பற்றியும், பிள்ளைகளின் கடன்களைப்பற்றியும், தொழில் களைப் பற்றியும் கவலைப்படுகிறார்கள்; தங்களது பண்ணை வேலைகளைக் கவனிக்கிறார்கள்; மாஜிஸ்டிரேட்டுகளாகத் தமது கவுன்டியின் விவகாரங் களைக் கவனிக்கிறார்கள்; அதே சமயம் தமது வேட்டை நாய்களையும் குதிரைகளையும் பார்த்துக்கொள்கிறார்கள்; புத்தகங்களைக் காட்டிலும் தங்களது தோட்டங்களிலும் குளங்களிலும் அதிகக் கவனம் செலுத்து கிறார்கள்; அதாவது, ஒரு முழுமையான, பயனுள்ள, பொது நலன் களிலும் தம் சொந்த நலன்களிலும் அக்கறையுள்ள, முழுவதும் ஓய்வு நிறைந்த, இயற்கையான, கண்ணியமான வாழ்வை அவர்கள் நடத்து கிறார்கள். அவர்களது வாழ்வைப்பற்றி இத்தகையதொரு சித்திரத்தைத் தான் நாம் காண்கிறோம். ஓரளவு செல்வ நிலையில் வாழ்ந்த அக் கன வான்களின் கடிதங்களையும் நாட்குறிப்பேடுகளையும் (diaries) பார்த் தால் ஆண்டொன்றுக்கு அவர்கட்குத் தங்களது நிலங்களிலிருந்து பல ஆயிரம் பவுன்கள் கிடைத்ததாகத் தெரிகிறது.

தான் செல்வரோ ஏழையோ, ஒரு நாட்டுப்புறக் கனவானின் செலவுகள் ஒரு விதத்தில் மிகக் குறைவு. பெரும் செலவு செய்து பணக்காரப் பள்ளிகளுக்கு மட்டுமே அவர்கள் தங்கள் பிள்ளைகளை அனுப்பவேண்டும் என்று அப்பொழுது கருதப்படவில்லை. தங் களது இருப்பிடங்கட்கு அருகிலுள்ள இலக்கணப் பள்ளிகளில் (Grammar Schools) மதகுருமார்களாவதற்காகப் பயின்றுகொண் டிருந்த குடியானவர், கடைக்காரர் பிள்ளைகளோடு அருகிலமர்ந்து இக் கனவான்களின் பிள்ளைகளும் கல்வி கற்றுவந்தார்கள்; அல்லது அவர்களது வீடுகளுக்கே அவ்வூர் மதகுரு (Parson) வந்து கல்வி புகட்டுவார்; மிகவும் செல்வமிக்க குடும்பமாக இருந்தால் குடும்பப் பாதிரியே (Private Chaplain) வந்து பாடம் சொல்லித் தருவார். சில குடும்பங்களில் விசேஷ ஆசிரியர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர்;

அவர்கள் பெரும்பாலும் ஃபிரான்சிலிருந்து வந்த ஹியூக்னுட் (Huguenot) அகதிகளாகவே இருந்தனர்; ஏனெனில், இங்கிலாந்தில் இந்த வகையைச் சேர்ந்த கல்விமான்கள் நிறைந்திருந்தனர்; இவர் களது ஃபிரெஞ்சு மொழிக்காகச் சிரத்தைமிக்க பெற்ருேர்கள் இவர்களை வரவேற்றனர்; இவர்களது தியாகத்துக்காகவும் கொள்கைகளுக்காகவும் விக் குடும்பங்கள் இவர்களை இரண்டு மடங்கு உற்சாகத்துடன் வர வேற்றன. ஈட்டன் (Eton), விஞ்செஸ்டர், வெஸ்ட்மின்ஸ்டர் ஆகியவை பல நிலப் பிரபுக்களால் பேணப்பட்டு வந்தன என்பது உண்மைதான். ஆயினும், ஆன் ஆட்சியின் இறுதியில் வெஸ்ட்மின்ஸ்டரில்கூட 'ஆண் டொன்றுக்கு உணவுக்கும் அறை வாடகைக்கும் சேர்த்து வெறும் 20 பவுன்களும், பள்ளிச் சம்பளமாக வெறும் ஐந்து அல்லது ஆறு கினிகளுமே செலுத்தும் பிள்ளைகளைக் கொண்ட இடங்களும்கூட' இருந்தன. சுற்றுப்புற மக்களின் தேவைகளையும், ஏழை எளியவர் களின் தேவைகளையும் நிறைவேற்றுவதற்காக எலிசபெத்தின் காலத்தில் நிறுவப்பட்ட ஹாரோ (Harrow), முதலாம் ஜார்ஜின் காலத்தில் பணக்காரப் பள்ளிகளின் அந்தஸ்தை எட்டிப் பிடித்துவிட்டது.

இன்று சுமாரான செல்வம் படைத்த ஒரு கனவான் தனது பையன் ஒருவனின் கல்விக்குத் தனது வரும்படியில் ஆறில் ஒரு பங்கைச் செலவிடவேண்டியிருக்கிறது. ஆனல், அன்று நூறில் ஒரு பங்கைச் செலவிட்டால் போதுமானதாக இருந்தது. இவ்வாருக, ஆண் டொன்றுக்குச் சுமார் £ 2,000 குத்தகை சம்பாதித்த கனவான் மோல்ஸ் வொர்த் (Molesworth), தனது இரு பையன்களில் ஒவ்வொருவருக்கும் உணவு, அறை வாடகை, கல்வி, உடைகள் முதலிய எல்லாவற்றுக்கும் சேர்த்து ஆண்டொன்றுக்கு £ 20 மட்டுமே செலவு செய்தார். அவ்விரு பையன்களும் பள்ளியைவிட்டு, இளையவன் படையில் சேர்ந்த பிறகு தான் அவரது பெருஞ் சுமை ஆரம்பித்தது. அப்பொழுது 'டிக்குக்கு (Dick) நூறு பவுன்கள் தந்தாகவேண்டும்; இல்லாவிட்டால் அவனல் ஓர் அடிகூட நகர முடியாது. அவன் குதிரைகள், உடைகள், மற்றச் சாதனங்கள் எல்லாம் வாங்கியாகவேண்டும்.' 'புகழ் மிக்க பிளென்ஹீம் போரில் கொல்லப்பட்டவர்களின் பட்டியலில் அவன் பெயர் இல்லை.' அவன் கொல்லப்பட்டிருந்தால், அது வருந்தத்தக்கதுதான்; ஆயினும், பணச் செலவு மிச்சமாகும். 'லில்லி (Lille) மீதான மூர்க்கத்தனமான தாக்குதல்கள் எதிலும்கூட அவன் இல்லை'; இதன் விளைவாகத் தனது யார்க்ஷயர் குடும்பத்தின் பெருமிதத்துக்கும் பெருஞ் செலவுக்கும் அவன் மேலும் பல ஆண்டுகள் காரணமாயிருந்துவந்தான். பெரிய பையன் ஜாக் (Jack) அரச தூதனுன் (Diplomat); அரசுக்குப் பணிபுரியும் செலவு மிக்க பல வழிகளில் இது ஒன்றும் குறைந்ததன்று. 1710-ல் இப் பிள்ளைகளின் தந்தை எழுதுகிருர்: 'நமது இந்த இரண்டு பிள்ளைகளும் சேர்ந்து கடந்த ஏழெட்டு ஆண்டுகளில் £ 10,000 செலவு

செய்துவிட்டார்கள்; இந்தப் பையன்களும் நமது பெண்களும் பணத்தி லேயேதான் குளிக்கிருர்கள். பணம் படைத்த ஒரு தந்தையின் வீட்டில் இவர்கள் பிறந்தது அதிருஷ்டம்தான்'; தனது ரெஜிமென்டின்மீது டிக்குக்கிருந்த தணியாத ஆர்வம் காரணமாக ஐந்து ஆண்டுகளுக்குப் பிறகு 'தனக்குக் கொடுக்கப்பட்ட தொகையைவிட £600 அதிகம் செலவு செய்திருந்தான்; படையில் ஊழியம் செய்வதில் அவனுக்கு அவ்வளவு பற்றுதல்.'

இதேபோல, சிறு கனவான்களும்கூடத் தங்களது பையன்களின் கல்விக்காகச் சிறு தொகைகளையே செலவிட்டனர்; பிறகு படை, அரச தூதப் பணி ஆகிய எதிலும் அவர்களைச் சேர்க்காமல், அவைகளைவிடச் சிக்கனமான தொழில்களுக்குப் பயிற்சி கொடுத்தார்கள். காங்க்ரீவ் (Congreve), ஃபார்குவார் (Farquhar) ஆகியோரின் நாடகங்களில் காண்பதுபோல் மேனர் பண்ணையின் இளைய மகன் 'ஷ்ரூஸ்பரி நகரத்துக் கம்பளி உற்பத்தியாளர்' போன்ற யாராவதொருவரிடம் 'ஒப்பந்தக் கற்றுக்குட்டி'யாகலாம் (bound apprentice). 'தம்பி மார்கள் பொதுவாகக் கடைகள், கல்லூரிகள், வழக்கறிஞர் தொழில் ஆகியவற்றில் நுழையவேண்டியதுதான்,' என்று ஸ்டீல் எழுதுகிருர். இந்நிலையில் பெரிய குடும்பங்களை வைத்து நிர்வகிப்பது கனவான் களுக்குச் சாத்தியமாயிருந்தது. அவர்களது குழந்தைகளில் மிகப் பல இளமையிலேயே இறந்துபோனுலும்கூட, உற்சாகமும் ஆவேசமும் மிகுந்த இளைஞர்களை அவர்கள் இங்கிலாந்துக்கு இடையருமல் அளித்து வந்தார்கள். இவ் விளைஞர்கள்தாம் உள்நாட்டிலும் அயல் நாடுகளிலும் இங்கிலாந்தை முன்னேற்றப் பாதையில் அழைத்துச்சென்ருர்கள். ஏனென்ருல், ஐரோப்பாவின் கண்டப்பகுதியில் வாழ்ந்த பிரபுக் குடும்பத்துப் பிள்ளைகளைப் போலல்லாமல், இங்கிலாந்து கனவான் களின் இளைய பிள்ளைகள் மனித சமுதாயத்திற்குப் பொதுவான எல்லாத் தொழில்களிலும் ஈடுபடத் தயாராயிருந்தனர்; தங்களது குடும்ப கௌரவம் என்ற போலிப் பெருமைக்கு அவர்கள் ஆளாகவில்லை. சேனை, வழக்கறிஞர் வேலை, தொழில், வாணிகம் முதலிய எதிலும் ஈடுபட்டுப் பொருளீட்டுவதற்காக இளைய பிள்ளை குடும்பத்தைவிட்டுச் சென்ருன். விக்குகளின் வளர்ச்சிக்குப் பொதுப்படையான காரணங் களில் இதுவும் ஒன்று. எவ்வாறு எனில், நிலம் படைத்த கனவான்களை ஒரு தனியான, அதிகாரம் வாய்ந்த வகுப்பாக (class) வைத்திருக்க டோரிக் கட்சியின் தலைவர்கள் விரும்பினுர்கள்; எனவே, சேனை, வழக்கறிஞர், தொழில், வாணிகம் ஆகியவற்றின் நலன்களும் விக்கு களின் நலன்களும் ஒன்றுபட்டன. நிலம் படைத்த வகுப்பு இன்னும் ஒரு நூற்ருண்டுவரை ஆதிக்கம் செலுத்தியது என்பது உண்மை தான்; ஆனுல், புது நபர்கள் தனது வகுப்பினுள் நுழைவதற்கு அது தாராளமாக அனுமதித்தது; மேனர் பண்ணை இல்லங்களுக்கும், கிராம

மடாலயத்துக்கும் சற்றும் தொடர்பில்லாத, விவசாயத்துக்கு அப்பாற் பட்ட பல நலன்களுடன் நூற்றுக்கணக்கான விதங்களில் நெருங்கிய தொடர்புகளை ஏற்படுத்திக்கொண்டது; இவை காரணமாகத்தான் அது தொடர்ந்து ஆதிக்கம் செலுத்த முடிந்தது. நாட்டுப்புறக் கனவான்கள் (country-gentry) பதினெட்டாம் நூற்றுண்டு இங்கிலாந்தை ஆண் டார்கள்; ஆனால், பெரும்பாலும் வாணிகம், பேரரசு ஆகியவற்றின் நலன்களுக்கு ஏற்றவகையில் மட்டுமே அவர்கள் ஆண்டனர்.

மேல்வகுப்பு, நடுத்தர வகுப்பு (class) ஆகியவற்றின் கல்விமுறை ஏற்கெனவே குறைகூறப்பட்டுவந்தது; ஏனெனில், லத்தீன், கிரேக்க மொழிகள்தான் பாடத்திட்டத்தில் இடம் பெற்றன. லத்தீன் மட்டுமே தெரிந்த 'பதினறு வயதுப் பையன் ஒருவனைவிட வீட்டில் தாயிடம் கல்வி பயிலும் பன்னிரண்டு வயதுப் பெண் புத்திசாலியாயிருக்கிறுள்' என்றுகூடச் சிலர் கூறினர். மேலும், பள்ளியிலும் கல்லூரியிலும் இரண்டாவது பண்டை (classical) மொழி மிக மோசமாகச் சொல்லித் தரப்பட்டது; அதனால் கிறிஸ்து சர்ச் (Christ Church) கல்லூரியின் தலைசிறந்த லத்தீன் பேராசிரியர்கள்கூட, **ஃபலாரிசின் கடிதங்கள்** (Letters of Phalaris) விஷயத்தில் பென்ட்லி தங்களை மடையர் களாக்கிவிட்டார் என்பதைத் தெரிந்துகொள்ள இயலவில்லை; அவர் களது கிரேக்க மொழியறிவு அவ்வளவு குறைவு. பத்தொன்பதாம் நூற்றுண்டில்தான் ஆங்கிலேய அறிஞர்கள் அரிஸ்டோபேன்வையும் ஹொரேசையும் சேர்த்து ஒரே சமயத்தில் நன்றுகப் புரிந்துகொள்ள முடிந்தது.

ஆயினும், பென்ட்லி காலத்தில் இங்கிலாந்தின் கிரேக்க மொழி யறிவு ஐரோப்பாவின் மற்றப் பகுயிலிருந்ததைவிட அதிகம்தான். அக் காலத்திய ஜெர்மெனியில் பண்டைக் கிரேக்கமொழிக் கல்வியே நின்று போய்விட்டது; அதுமட்டுமின்றி கிரேக்க நாட்டின் வரலாறும், புராணக் கதைகளும், பெயர்களும்கூட அப்பொழுது தெரியாமற் போய்விட்டன.[1] ஆனால், இங்கிலாந்திலோ கல்வியறிவுடைய மக்கள் அனைவருக்கும் இவைகள் தெரியும்; கிரேக்க மொழி மூலமாக இவைகளை அவர்கள் தெரிந்துகொள்ளாமலிருந்திருக்கலாம்; ஆனால், லத்தீன் மொழி மூலம், ஆங்கில நூலாசிரியர்கள் மூலம் அவர்கள் தெரிந்துகொண்டார்கள். போப் மொழிபெயர்த்த ஹோமரின் இலக் கியங்கள் தனக்குத் தெரியும் என்று காட்டிக்கொள்ளாத—அல்லது

[1] ஜெர்மெனியில் பல்கலைக் கழக மாணவர்களில் பெரும்பகுதியினருக்குப் பிளேட்டோ, அரிஸ்டாடில், ஹோமர், தூசிடைடிஸ், யூரிபிடிஸ் ஆகியோரின் பெயர்கள்கூடத் தெரியாது என்று 1718-ல் பர்க்ஹார்ட் (Burckhard) எழுதினர். இங்கிலாந்தைப்பற்றி இதைச் சொல்லியிருந்தால் அது படுதவருக இருந்திருக்கும். (The Popular Background of Goethe's Hellenism, Humphry Trevelyan, 1934, p. 8 முதலியன.)

நடிக்காத—ஒரு நவநாகரிக மனிதனும் முதலாம் ஜார்ஜின் இங்கிலாந்தில் இல்லை. ஆங்கில இலக்கியப் புகழ் ஏணியில் ஷேக்ஸ்பியருக்குச் சற்று அடுத்த இடத்தை மில்டன் இப்பொழுது எட்டிக்கொண்டிருந்தார்; கிரேக்க, லத்தீன் இலக்கியக் கருத்துகளையும் புராணக் கதைகளையும் மில்டன் பயன்படுத்தியது இந்தப் பிற்காலக் கவிஞர்கட்கு ஓர் உதாரணமாக விளங்கியது; ஆயினும், இந்தக் கவிஞர்கள் அவரையொத்த படிப்பாளிகளே அல்லர். கட்டடக் கலையிலும் அதன் அலங்காரத்திலும் 'காதிக்' (Gothic) பாணி மறைந்துவிட்டது; பண்டை உலகத்துக் கோவில்களும் சிலைகளும் நேரடியாகவோ மறைமுகமாகவோ உணர்த்திய கருத்துகள் அப் பாணியின் இடத்தைப் பிடித்துக்கொண்டன.

ஆனால், புராதன லத்தீன், கிரேக்க இலக்கியங்களைத்தவிர வேறு எதுவுமே எங்கும் கற்றுக்கொடுக்கப்படவில்லை என்று கருதுவது தவறாகும்; கனவான்களால் ஆதரிக்கப்பட்ட பள்ளிகளில் பற்பல வகைகள் இருந்தன. வல்லமைமிக்கதொரு மகனுக்குத் தந்தையான ராபர்ட் பிட் தனது தந்தையான சென்னை கவர்னர் பிட்டுக்கு—இந்தத் தந்தையும் வல்லமையில் சிறிதும் இளைத்தவரல்லர்—1704-ல் இவ்வாறு எழுதுகிறார்:

'இங்கிலாந்திலேயே மிகச் சிறந்தது என்று மதிக்கப்படுகிற, சோஹோ சதுக்கத்துக்கருகிலுள்ள (Soho Square) திரு. முயூரேயின் கல்விக் கழகத்தில் (Mr. Meure's Academy) எனது இரு சகோதரர்களும் இருக்கிறார்கள். அவர்கள் லத்தீன், ஃபிரெஞ்சு, வரவுசெலவுக் கணக்கு, வாட்போர், நாட்டியம், ஓவியம் ஆகியவற்றைக் கற்றுக்கொள்கிறார்கள். இன்னும் சிறந்த கல்வியளிப்பதற்காக அடுத்த கோடையில் அவர்களை ஹாலந்தில் சேர்க்க எண்ணியிருக்கிறேன். எனது மனைவியின் மாற்றாந் தந்தையாகிய லெப்டினனட் ஜெனரல் ஸ்டூவர்ட் அவர்கள் மார்ல்பரோ கோமகனுடன் செல்வதாயிருந்தால், போர் நடவடிக்கையைப் பார்ப்பதற்காக அவர்களை அவருடைய மேற்பார்வையில் விடலாம் என்று எண்ணியிருக்கிறேன்.'

நமது கல்விமுறைகளைக் கண்டனம் செய்தவர்களில் இருவர் மதிநுட்பம் வாய்ந்த லாக்கும் (Locke) நற்குணம்படைத்த ஸ்டீலும் (Steele); சதா பிரம்படி கொடுப்பது அறிவு புகட்டுவதற்கோ அல்லது ஒழுங்கைப் பராமரிப்பதற்கோ ஏற்ற சிறந்த முறையல்ல என்று இருவருமே வலியுறுத்தினார்கள். மேல்வகுப்பு மக்களின் (upper-class) கல்வியைச் சீர்திருத்தவேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக்கொண்டனர்; ஆனால், செயலில் யாரும் ஒன்றும் செய்யவில்லை. செல்வத்தில் உயர்ந்த, சோம்பேறி ஆங்கிலேயர்களைவிட ஸ்காட்டிஷ் பிரபுக்கள் தங்க

ளது பிள்ளைகட்குச் சிறந்த நூலறிவு புகட்டினுர்கள் என்ற பர்னெட்டின் (Burnet) கருத்தை, ஸ்காட்டிஷ் மக்களை வெறுத்த ஸ்விஃப்ட் (Suift) கூட ஏற்றுக்கொண்டார்.

என்ருலும், படிப்பு முற்றிய, கட்டுப்பாடுகள் மிகுந்த இன்றைய காலத்தைக்காட்டிலும் பதினெட்டாம் நூற்ருண்டானது தனது பள்ளியில் படித்தவர்களில் சிறந்த, புதிய கருத்துகளைக் கொண்ட மனிதர்களை அதிக அளவில் உற்பத்தி செய்தது; அதுவும், கல்வி முறையில் பெருங்குறைபாடுகள் காணப்பட்ட அந் நூற்ருண்டில் இது சாத்தியமாயிற்று என்பதை நினைவில் கொள்ளவேண்டும். மேலும், 'பள்ளி ஆசிரியர்கள் என்ற அந்த லைசென்ஸ் பெற்ற கொடுங்கோலர் களின்' மிருகத்தனமான பிரம்படிகள், ஒழுங்குக் கட்டுப்பாட்டுக் கடங்காத பள்ளித் தோழர்களின் கொடுமைமிக்க அச்சுறுத்தல்கள் என்ற லைசென்ஸ் பெருத கொடுங்கோன்மை ஆகிய எல்லாமிருந்தும் கூடப் பிள்ளைப்பருவத்தில் அன்று நிறைய மகிழ்ச்சியிருந்தது; ஓய்வு இருந்தது; நாட்டுப்புறத்து எல்லையற்ற கேளிக்கைகளில் அவ் வோய்வைச் செலவிட வழியிருந்தது. மேலே கூறப்பட்ட அவ்விரக்க மற்ற கடுமையும் எல்லாவிடங்களிலும் காணப்பட்டது என்று கூற முடியாது. ஈட்டனுக்குப் (Eton) புதிதாக வந்த ஓர் இளம் பிரபு தனது வீட்டுக்கு எழுதுகிருன், 'ஈட்டன் மிகவும் சுலபமானதொரு பள்ளிக்கூடம் என்று நான் நினைக்கிறேன். ஒருவன் தீயொழுக்கங் களில் ஈடுபட்டாலொழிய அவனை யாரும் கெட்டவன் என்று கருத மாட்டார்கள்.'

பெண்கள் கல்வி மிகவும் வருந்தத்தக்க நிலையில் இருந்தது. கீழ்ப் பட்ட வகுப்புகளைப் (classes) பொறுத்தவரை ஆண் கல்வியைவிடப் பெண் கல்வி மிகவும் மோசமாக இருந்தது என்று சொல்லமுடியாது; ஆயினும், வசதிமிக்க குடும்பங்களைச் சேர்ந்த பெண்களின் கல்வி தங்களது சகோதரர்களுடைய கல்வியைவிடக் குறைவானதே. இது ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை. 'மாதர் கல்விக் கழகங்கள்' (ladies academies) தோன்றிய காலத்துக்கு முற்பட்ட நிலை இது. பெண்களுக் கென்று 'விடுதி வசதியுள்ள பள்ளிகள்' (boarding schools) இருந் தன என்பது உண்மை; ஆனுல், அவை மிகச் சில; அவைகளின் தரமும் மிகக் குறைவு. பெரும்பாலான பெண்கள் படிக்கவும், எழுதவும், தைக்கவும், வீட்டை நிர்வகிக்கவும் தங்களது தாய்மார்களிடமே கற்றுக் கொண்டனர். முன்காலத்தைச் சேர்ந்த ஜேன் கிரே சீமாட்டி (Lady Jane Grey), எலிசபெத் அரசி போன்ற கிரேக்க மொழி கற்ற அழகிகள் அக்காலத்தில் இருந்ததாக நாம் கேள்விப்படவில்லை. ஆயினும், சில பெண்கள் இத்தாலியக் கவிகளை வாசித்தார்கள்; இதன் விளைவாகத் தமது காதலர்களின் பயபக்தியைப் பெற்ருர்கள். அறிவுத்

திறமையில் ஸ்விஃப்ட்டுக்கு ஓரளவு சமமானவர்கள் என்ற நிலையில் குறைந்தது இரண்டு பெண்களாவது அப்பொழுது இருந்தார்கள். என்றாலும், 'கனவான்களின் பெண்களில் ஆயிரத்தில் ஒருத்திக்குக் கூடத் தனது சொந்த மொழி சொல்லிக்கொடுக்கப்படுவதில்லை; அம் மொழியில் எழுதப்பட்ட மிக மிக எளிமையான நூலைக்கூட அவளால் படித்து, மதிப்பிடமுடியவில்லை' என்று சொல்லி வருந்தியவரும் அவர் தான். பால் (sex) அறிவு புகட்டப்படவில்லை; இதைப்பற்றி விவாதம் செய்யப்பட்டது. மனைவிகளை அடக்கி வைத்திருப்பதற்குப் பால் அறிவைப் புகட்டாமலிருப்பதுதான் நல்லது என்று ஒருசாரார் அம்முறையை ஆதரித்தார்கள்; ஆனால், மற்றொரு சாராரோ, நாகரிக மாந்தரின் சிறுபிள்ளைத்தனமான நடத்தைக்கும் சூதாட்டப் பழக்கத்துக்கும் காரணம் அவர்களுக்குப் பயனுள்ள கல்வி புகட்டப்படாததுதான் என்று வாதித்தனர்; அக்காலத்தின் தலைசிறந்த இலக்கிய மன்னர்கள் இந்த இரண்டாம் கட்சிக்குத் தலைமை தாங்கினார்கள்.

ஆயினும், மனைவிமார்களும் பெண்களும் தங்களது குடும்பத்து ஆண்களுக்குப் புத்திசாலித்தனமான ஆலோசனைகள் கூறி எழுதினார்கள் என்பதை நாட்டுப்புற இல்லங்களில் (country-house) காணப்படும் அக்காலத்திய கடிதங்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். மூளையற்ற சில்லரை விஷயங்களையும் மாமூல் அடுப்பறை வேலைகளையும் காட்டிலும் இத்தகைய கடிதங்கள் மேலானவை. ஸ்பெக்டேடர் (Spectator) முதலிய பல பத்திரிகைகளும் நூல்களும் அக்காலத்திய பெண்கள், ஆண்கள் இருசாராருக்குமே எழுதப்பட்டன. நகரத்தையும் கிராமத்தையும் பிளவுபடுத்திய விக், டோரி கட்சிகளின் சண்டைகளில் பெண்களும்கூட மிக்க ஆர்வத்துடன் பங்கு கொண்டனர். கிராமாந்தரப் பொழுதுபோக்குகளைப் பொறுத்தவரை ராப் ராய் (Rob Roy) நூலில் வரும் டயானா வெர்னன் (Diana Vernon) என்னும் பாத்திரத்துக்கு முன் மாதிரியாக விளங்கியது, ஃபார்குஹார் (Farquhar) எழுதிய நாடகத்தில் வரும் பெலிண்டா (Belinda) என்ற பாத்திரம். பெலிண்டா தனது தோழிக்கு எழுதுகிறாள்: 'காலை நேரம் முழுவதும் குதிரைமீதேறி வேட்டையாடவும், மாலை நேரம் முழுவதும் பிடில் வாசித்து நடனமாடவும் என்னால் முடியும். சுருங்கச் சொன்னால் குடிப்பதையும் துப்பாக்கி பிடித்துச் சுடுவதையும் தவிர நான் என் தந்தையோடு எதையும் செய்யமுடியும்.'

மேல் வகுப்பிலும் நடுத்தர வகுப்பிலும் (class) பெண்களுக்கு மாப்பிள்ளை தேடுவது அப்பட்டமான பண்டமாற்று முறையிலேயே அடிக்கடி நடந்துவந்தது. 'குளோக்கியை (Cloky) இவ்விடத்தில் கொடுத்துத் தொலைப்பதற்கு நம்மிடம் பணம் இருக்காது' என்று அவளுடைய தந்தை கனவான் மோல்ஸ்வொர்த் எழுதுகிறார்; எனவே,

இன்னும் மலிவாக ஒரு கணவனைக் கண்டுபிடிப்பதற்காக அவளை அயர்லாந்துக்கு அனுப்பவேண்டும். கைஸ் (Guise) என்ற மற்றொரு கனவான் தனக்கு ஒரு மனைவியைத் தேடித்திரிகிறார். 'டயானா சீமாட்டி எனது பண்ணைகளைப் பார்வையிடுவதற்காக ஒரு வழிபடத் தக்க நபரை அனுப்பினார். திரும்பிச்சென்று அவர் கொடுத்த தகவல்களினால் சீமாட்டி மிகவும் திருப்தியடைந்தார். தனது மகளை எனக்குக் கொடுக்க அவர் மனப்பூர்வமாக விரும்பினதாக நான் நினைக்கிறேன்' என்று எழுதுகிறார். ஆனால், மகளின் கருத்து வேறு; எனவே, வேறு விதத்தில் கைஸ் ஆறுதல் அடைந்தார்.

'குவார்ட்டர் செஷென்ஸின் நீதிபதிகளில் நானும் ஒருவன்; அமைதிகாக்கும் நீதிபதி (Justice of the peace) ஒருவர் என்னைத் தனியே அழைத்துச் சென்று, இருபதாயிரம் பவுன் வருமானமுள்ள ஒரு பெண்ணை மணக்க எனக்குச் சம்மதமா என்று கேட்டார். அப் பெண்ணை நான் பார்த்திருக்கிறேன்; ஆனால், பேசியது கிடையாது. மொத்தத்தில் நான் உடனே அவர் கூறியதை ஏற்றுக்கொண்டேன்.'

அதேபோல ஒரு குதிரைப் படை அதிகாரியும் மனந்திறந்து எழுதுகிறார்:

'இந்தப் போர் நடவடிக்கையில் பயனுள்ளது ஏதாவது நிகழும் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை; எனவே, நான் வேறு வழியில் என் எண்ணங்களைத் திருப்பினேன்; காதல் தெய்வத்தின் சந்நிதானத்துக்குச் சென்றேன்; இதன் விளைவாக நல்ல சொத்துடைய ஒரு பெண்ணை என் மனைவியாக்க இரண்டு வாரங்களுக்கு முன் (சில நண்பர்களால்) ஏற்பாடு செய்யப்பட்டது. ஆனால், அடுத்த அடி எப்படி வேகமாக யெடுத்து வைப்பது (ஏற்கெனவே ஒரு திருப்தியளிக்கும் சந்திப்பு எங்களுக்கிடையில் நிகழ்ந்துவிட்டது) என்பதை என்னால் சொல்ல முடியாது.'

மணமாகாமலிருப்பது பெருந் துரதிருஷ்டம் என்று கிட்டத்தட்ட எல்லோரும் கருதினர். எனவே, தங்களது திருமணத்தைப் பிறர் நிச்சயம் செய்வது ஒரு பெருந்தீமை என்று பெண்கள் கருதவேயில்லை. தங்களது தலைவிதியைத் தீர்மானிக்கும் இந்த விஷயத்தில் அவர்களது விருப்பம் வழக்கமாகக் கேட்டறியப்பட்டது என்பதில் சந்தேகமில்லை; ஆனால், அது எவ்வளவு தூரம் ஏற்றுக்கொள்ளப்பட்டது என்பது சூழ்நிலையைப் பொறுத்தது. ஸ்விஃப்ட் 'ஓர் இள நங்கைக்கு அவளது திருமணம்' பற்றி எழுதும்பொழுது, 'உனது பெற்றோர்களால் உனது கணவனாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆள்' பற்றிப் பேசிவிட்டு, உடனே 'உன் கணவன் மிகவும் மதி நுட்பத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்; எல்லோருக்கும் பிடித்திருக்கிறது. அதில் காதல்

என்கிற நகைக்கத்தக்க உணர்ச்சிக் கலப்பே சிறிதுமில்லை' என்று தொடர்ந்து எழுதுகிருர். அக்காலத்தில் 'ஏற்பாடு' செய்யப்பட்ட திருமணங்களில் மிகப் பெரும்பாலானவை இந்த வர்ணனைக்குப் பொருந்தியவையே. ஆயினும், 'நகைக்கத்தக்க உணர்ச்சி பல சமயங் களில் மேம்பட்டு நின்ற காரணத்தால் ஓடிப்போய்த் திருமணம் செய்துகொள்வதும் மிகச் சாதாரணமாக நிகழ்ந்தது; மேரி வோர்ட்லி மாண்டேகு சீமாட்டியின் திருமணம் இதற்கு ஒரு சான்று. மேலும் வேறு வழியின்றி கையற்ற நிலையில் நிகழும் அத் திருமணங்களை விட்டு விட்டாலும்கூட, சாதாரணத் திருமணங்களிலும் பரஸ்பர அன்பின் காரணமாக விளையும் திருமணங்களின் விகிதம் அதிகரித்துக்கொண்டே வந்தது.

மணவிலக்கு (Divorce) என்பதே அன்று பெரும்பாலும் தெரியாது. திருச்சபை நீதிமன்றங்கள் (Church Courts) மூலமாக மட்டும்தான் மணவிலக்கு பெற முடியும்; அதுவும் அதைத் தொடர்ந்து பாராளுமன்றம் ஒரு விசேஷ சட்டத்தை இயற்றவேண்டும். ஆன் அரசியின் பன்னிரண்டாண்டுகளில் ஆறு மணவிலக்குகள் மட்டுமே இம் முறையில் சட்டபூர்வமாக்கப்பட்டன.

இருபாலரும் (Sexes) கட்டுப்பாடின்றி சூதாடினர்கள்; அவர் களிலும் நாட்டுப்புறக் கனவான்களைக்காட்டிலும் (country squires) நாகரிகச் சீமாட்டிகளும் கனவான்களுமே (gentleman) இதில் அதிகம் ஈடுபட்டனர். லண்டன், பாத் (Bath), டன்பிரிட்ஜ் வெல்ஸ் (Tunbridge Wells) ஆகியவிடங்களில் சூதாட்ட மேசைதான் பொழுதுபோக்கின் மையம்; ஆனல், மேனர் இல்லங்களிலோ (Manor Houses) அதை விடக் குதிரைலாயங்களும் நாய்ப்பட்டிகளும் (Kennel) முக்கிய மானவையாக விளங்கின. சூதாட்டம், வேட்டை ஆகியவைகளின் செலவுகளும், கட்டடங்களும், பூங்காக்களும் அமைக்கும் உயர்ந்த வேட்கையும், தோட்டச் சாலையோரங்களில் மரங்கள் நடும் ஆர்வமும் பண்ணைகளை அடகு வைப்பதில் கொண்டுவிட்டன. இந்த அடகு விவசாய அபிவிருத்தியையும் குடும்ப இன்பத்தையும் வெகுவாகப் பாதித்தது. ஆட்டச் சீட்டுகளாலும் சூதாட்டக் காய்களாலும் பெருந் தொகையான பணம் கைமாறியது.

குடித்தல் என்பது எல்லா வகுப்புகளையும் சேர்ந்த ஆங்கிலேயர் களது தேச நோய். இதை அவர்களே ஒப்புக்கொண்டார்கள். ஆனல், பெண்கள்மீது இக் குற்றத்தைச் சுமத்த முடியாது. தேயிலையும் காப்பியும் ஒவ்வொரு வீட்டிலும் குடிபுகாத அக்காலத்தில், கிடைத்த குடிதண்ணீரானது அசுத்தம் நிறைந்ததாயிருந்த அப்பொழுது, மது விலக்கு இயக்கம் என்பதைப்பற்றிப் பேசவே முடியாது. ஆயினும், மிதமான குடிப்பழக்கத்தை ஆதரிக்கும் துண்டுப் பிரசுரங்கள் மத

சங்கங்களாலும், அக்கறைமிக்க தேசபக்தர்களாலும் வெளியிடப்பட்டு, இலவசமாக வழங்கப்பட்டன. குடிகாரர்களின் பல்வேறுன, பயங்கர மான மரணங்களைக் கவர்ச்சிகரமான விளக்கங்களோடு எழுதினுர்கள் ; சில குடிகாரர்கள் இரவில் வீட்டை நோக்கிக் குதிரைமீதேறிச் செல்லும் வழியில் கொல்லப்படுகிருர்கள் ; மற்றும் சிலர் குடிவெறியில் கடவுள் நிந்தனை செய்யும்பொழுது இழுப்புவந்து வீழ்ந்துவிடுகிருர்கள் ; எல்லோருமே நரகத்துக்குச் செல்கிருர்கள் ; இப்படி எல்லாம் வர்ணிக்கப்பட்டன. பாமர மக்களிடையில் ஏல் மதுதான் முதலிடம் வகித்தது. ஆயினும், அதைவிடவும் மோசமானதோர் எதிராளி அதற்குத் தோன்றியிருந்தான். இந்தப் புதிய கீழ்த்தரமான சாராய வகைகள் ஏழைமக்களை ஒரு தப்பிக்கமுடியாத கவர்ச்சியுடன் இழுத்தன. கீழ்த்தரமான இச் சாராயத்தைக் குடிக்கும் பழக்கம் இன்னும் உச்ச கட்டத்தை எட்டவில்லை ; இரண்டாம் ஜார்ஜின் ஆட்சியில்தான் ஹொகார்த்தின் ‘ஜின் சந்து’ (Hogarth's ‘Gin Lane’) எழுதப்பட்ட நாள்களில்தான் அக் கட்டம் வந்தது. என்ருலும், அந்தத் திக்கை நோக்கி அது ஏற்கெனவே சென்றுகொண்டிருந்தது.

இதற்கிடையில் உயர்தர வகுப்பு (class) மக்கள் சில சமயம் ஏல் மதுவையும், சிலசமயம் ஒயின் மதுவையும் குடித்தனர். நாகரிக மனிதர்கள் கிராமப்புறக் கனவான்கள் ஆகிய இவர்களில் யார் அதிகம் குடித்தார்கள் என்று சொல்வது கடினம். ஆனுல், நரிவேட்டை, இதரப் பொழுதுபோக்கு, தானே பயிரிடுதல் முதலிய வெளிவேலைகளில் ஈடுபட்ட கனவானுல் அக்டோபர் மதுவை ஒவ்வோர் இரவும் அருந்தி உடல் நலங்கெடாமல் இருக்கமுடிந்தது போலும் ; ஆனுல், செயின்ட் ஜேம்ஸ் சதுக்கத்து (St. James's Square) அரசியல்வாதியாலும் சூதாட்டக் காரர்களாலும் விக் கட்சி விருந்தில் வழங்கப்பட்ட போர்ட் (Port) மதுவையும், டோரிக் கட்சி விருந்தில் வழங்கப்பட்ட ஃபிரெஞ்சுக் கிளாரெட் (claret) மதுவையும், ஷாம்பேய்ன் மதுவையும் முடிவில்லாமல் அருந்தி அதன் தீய விளைவுகளிலிருந்து தப்பிக்கமுடியவில்லை. மாஜிஸ்டிரேட்டுகள்கூடப் பல சமயங்களில் குடிபோதையில் நீதி மன்றத்துக்கு வந்தார்கள். படைக்கலகச் சட்டத்தின் (Mutiny Act) முன்னெச்சரிக்கையான ஓர் உட்பிரிவு ராணுவ நீதிமன்ற விசாரணைகள் (Courts Martial) உணவு வேளைக்கு முன்னர்தான் நடைபெற வேண்டுமென்று விதித்திருந்தது.

இன்னமும் புகையிலையை நீண்ட ‘சர்ச்வார்டன்’ (Church-warden) குழாய்களில் போட்டுத்தான் புகைத்துவந்தனர். சில நாட்டுப்புற இல்லங்களில் ‘புகைபிடிக்கும் கூடம்’ (smoking parlour) என்று ஒன்று தனியாகவே அமைக்கப்பட்டிருந்தது. ஆனுல், பாத்தில் (Bath) பொது அறைகளில் புகைபிடிப்பது பெண்களிடம்

அவமரியாதையாகவும் இனிமையின்றியும் நடந்துகொள்வதாகும் என்று போ நாஷ் (Beau Nash) அதைத் தடை செய்தார். தென் மேற்குக் கவுன்டிகளில் வசித்த பாமர மக்களில் ஆண், பெண், குழந்தைகள் எல்லோரும் மாலைவேளைகளில் குழாயில் புகைபிடித் தார்கள். 1707-ல் ஆங்கிலத் திருச்சபையின் பாதுகாப்புச் சட்டம் (Bill for the Security of the Church of England) பாராளு மன்றத்தில் நிறைவேறிக்கொண்டிருந்த சமயத்தில் செயின்ட் டேவிட் மாதாலயத்தின் உயர் திருச்சபைக் கட்சியைச் (High Church Party) சேர்ந்த பிஷப் டாக்டர் புல் (Dr. Bull) என்பவர் எபிஸ்கோப்பிய (Episcopae) உறுப்பினர்கள் சிலரின் விக் கொள்கைகளில் சந்தேகங் கொண்டு பிரபுக்கள் சபையின் கூடத்தில் (lobby) அமர்ந்து, கடைசி வரை புகைபிடித்துக்கொண்டே கண்காணித்துவந்தார். தனது சகாக்களான குட்டி மதகுருக்கள் (Parsons) தங்களுக்கு மிகவும் பிடித்தமான பொழுதுபோக்கிடமான ட்ரூபி (Truby's) காபி ஓட்டலில் அமர்ந்து தன்னுடைய குண இயல்புகளைப் பழித்துக்கொண் டிருந்தார்கள் என்பதை ஸ்விஃப்ட் (Swift) வர்ணிக்கிறார் :

> ‘ வாயில் குழாய் வைத்துச் சிந்தனையில் மூழ்கி
> கடவுள் நம்பிக்கை கவிஞர்கட் கில்லையென
> அசைக்கிறார் தலையை ஐயம் தோன்ற.’

ஆன் ஆட்சியின் முதலாண்டில் மூக்குப்பொடி போடும் பழக்கம் இங்கிலாந்தில் எங்கும் பரவியது. மூக்குப்பொடி ஏற்றிவந்த ஸ்பானிஷ் கப்பல்கள் விகோ விரிகுடாவில் (Vigo Bay) நடந்த சண்டையில் பிடிபட்டு, அப் பொடி லண்டன் மார்க்கெட்டில் பிரம்மாண்டமான அளவில் விற்பனைக்கு வந்ததுதான் இதற்குக் காரணம்.

சமுதாயத்தில் நிலவிய குடி, சூதாட்டப் பழக்கங்கள், அரசியல் கட்சிகளுக்கிடையிலான கடும்போட்டி ஆகியவைகளினால் ட்யூவெல் சண்டைகள் (Duels) அடிக்கடி விளைந்தன. இவைகளில் பலர் இறந்தனர். டியூவெல் சண்டை நேர்மையான முறையிலேயே நடந்தது என்று உயிர்பிழைத்தவர் நிரூபித்தால், ஆட்கொலை செய்த குற்றம் சுமத்தப்பட்டு அவர் குறுகியகாலம் சிறையிலடைக்கப்பட்டார் ; அல்லது தனது நல்லூழைப்பொறுத்து ‘தான் மதகுரு என்று வாதாடி’, ‘இரும்புக் கம்பியினால் தொட்டுப்பார்க்கப்பட்டு’ விடுதலை செய்யப்பட்டார். கோமகன் (Duke) தொடங்கி எல்லாக் கனவான் களுக்கும் (gentlmen) உடைவாள் அணியும் சிறப்புரிமை உண்டு ; அவ் வாளைக்கொண்டு ஒருவரையொருவர் கொலை செய்துகொள்ளும் உரிமையும் உண்டு. மாலைவேளைகளில் ஆண்கள் நன்றாகக் குடித்த வுடனேயே வாய்ச்சண்டையில் இறங்குவது இயல்பு ; வாய்ச்சண்டை வலுத்த உடனேயே அறையில் தமது உடைவாளை உருவுவதும்

இயல்பு; அங்கேயே கொலை நடக்காவிட்டால், வீட்டின் பின்புறத் தோட்டத்துக்குச் சென்று, அன்றிரவு கொதிக்கின்ற குருதியுடனும் நடுங்குகின்ற கரத்துடனும் வாள்முனையில் பகையைத் தீர்த்துக் கொள்வார்கள். வாய்ச்சண்டையில் இறங்கிய இருவரும் உடைவாள் அணிந்திராவிட்டால் அன்றிரவு நன்ருகத் தூங்கி, சண்டையை மறந்துவிடுவதும், அல்லது அடுத்த நாள் காலை குடிமயக்கம் தெளிந்த பின் தகராறைத் தீர்ப்பதற்கு வழிசெய்வதும் உண்டு. பொய்த் தலைமுடி (wig) அணிவது உடையின் ஒரு பகுதியாக எவ்வாறு கருதப் பட்டதோ அதேபோல் வாள் அணிவதும் லண்டனில் வழக்கமா யிருந்தது. ஆனுல், நாட்டுப்புறப் பகுதிகளில், பெருந்தோரணையற்ற, ஆனுல், நல்லியல்பு வாய்ந்த கிராமப்புறத்துக் கனவான்களிடையில் நல்லவேளையாக இவ் வழக்கம் அவ்வளவாகக் காணப்படவில்லை; இவர்களின் சொற்கள்தான் அச்சமூட்டுபவையாக இருக்குமே தவிர, செயலன்று. தனது பிரதேசத்துக்குள் நுழையும்பொழுது நாகரிக மனிதர்கள்கூட வாளணிந்து வருவதை போ நாஷ் (Beau Nash) தனது பேரதிகாரத்தைப் பயன்படுத்தி பாத் (Bath) நகரில் தடைசெய்து விட்டார்; மாலைவேளைக் கூட்டங்களிலும் நடனங்களிலும் நீண்ட பூட்சுகளையும் (top boots) அருவருக்கத்தக்க மொழிகளையும் விட்டொழிக்கும்படி பட்டிக்காட்டான்களுக்கு அறிவூட்டிய அவரது மற்ருெரு சிறந்த சமூகப் பணியைப் போன்றதே இதுவும். விழா இயக்குநர் (Master of Ceremonies) என்ற தலைமைப் பதவியை நாஷ் நீண்டகாலம் வகித்தார்; ஆன், முதலாம் ஜார்ஜ், இரண்டாம் ஜார்ஜ் ஆகியோரின் ஆட்சி முழுவதும் இவரது இந்தப் பதவிக்காலம் நீடித்தது. பதினெட்டாம் நூற்ருண்டில் மனித சமுதாயத்தின் புறக் கணிக்கப்பட்ட நடத்தை முறைகளைச் சீர்செய்து நாகரிகப்படுத்து வதற்கு நாஷ் ஆற்றிய பணி மிகப் பெரிது. இதில் மற்றவர் யாருக்கும் அவர் குறைந்தவரல்லர். ஆயினும், பொதுச் சூதாட்டத்தை அவர் ஊக்குவித்து, அதன் விளைவாக ஏற்பட்ட பாங்குகளின் லாபத்தில் ஒரு பங்கைத் தான் எடுத்துக் கொண்டார்.

**எஸ்மாண்ட்** என்ற தனது நாவலில் தேக்கரே (Thackeray) ட்யூவெல் சண்டையைப்பற்றி எழுதி அதற்கு இறவாத் தன்மையை ஊட்டிவிட்டார். அத்தகைய ட்யூவெல் சண்டைகள் லண்டனிலும், கவுன்டிகளின் தலைமைப் பட்டணங்களிலும்தான் பெரும்பாலும் நிகழ்ந்தன. மாண்டேகு மாளிகைக்குப் (Montagu House) பின்புற மிருந்த லெஸ்டர் ஃபீல்ட்ஸில் (Leicester Fields) இச் சண்டைகள் அதிகம் நடந்தன; இன்று பிரிட்டிஷ் பொருட்காட்சிச்சாலை (British Museum) இருக்கும் இடத்தில் அவை இன்னும் அதிக அளவில் நடந்தன. அப்பொழுது புதிய லண்டனின் எல்லையோரத்தில் அவ்விட மிருந்ததுதான் அதற்குக் காரணம். அடுத்துவருபவை போன்ற

இரட்டைச் சம்பவங்கள் நகரங்களில் நடைபெறுவது அப்பொழுது ஒன்றும் புதுமையல்ல :

'போ ஃபீல்டிங்கை, நெட் குட்யியர் கொன்றுவிட்டு, தப்பியோடி விட்டான்; இது ஏற்கெனவே தெரிந்ததுதான். ட்ரூரி லேனில் பிளே ஹவுஸில் இச் சண்டை நடந்தது. அதே இரவில் காப்டன் ஒருவன் ஃபுல்உட் என்ற வாலிபனை இதேபோல் அன்புடன் நடத்திவிட்டான். இதன் விளைவு என்னவென்றால், இரண்டு வார்விக்ஷயர் மன்மதர்கள் குறைந்துவிட்டார்கள். அந்தக் காப்டன் நியூகேட் சிறையிலிருக்கிறான்.'

முன்னிலை மீட்சிக் காலம் (Restoration) தொட்டு இங்கிலாந்தின் முடப் பந்தாட்ட (bowls) மைதானங்களை அந்நிய நாட்டினர் கண்டு வியந்து வந்தனர். 'பில்லியார்ட்ஸ் (billiards) மேசையைப் போல் இம் மைதானங்கள் அவ்வளவு வழவழப்பாக இருந்ததால், பந்துகள் மிகவும் சுலபமாக உருள முடிந்தது. நாட்டுப்புறங்களில் கனவான்களின் வழக்கமான பொழுதுபோக்கு இது ; ஆகையால், மைதானத்தை வழவழப்பாக வைத்துக்கொள்வதற்காக அவர்கள் பருமனான கல் உருளைகளை வைத்திருந்தார்கள்.' இந்த முடப் பந்தும், அதைவிடப் பழைய கால்பந்தும்தான் கிராம விளையாட்டுகள். ஆனால், ஆனின் ஆட்சியில் ஒருவிதமான கிரிக்கெட் விளையாட்டு முடப்பந்தின் இடத்தைச் சிறிது சிறிதாகப் பிடித்துக்கொண்டிருந்தது. அப் புதிய விளையாட்டில் தலைசிறந்து விளங்கியது கென்ட் (Kent) கவுன்டிதான் ; 'கென்ட் மனிதர்களுக்குள்ளும்கூட டார்ட்ஃபோர்ட் (Dartford) மனிதர்கள்தான் மாவீரர்களாக விளங்கினர்கள்.'

சேவற் சண்டையில் எல்லா வகுப்புகளைச் சேர்ந்த மக்களும் 'போர்க்களத்தை'ச் சுற்றி தமது பந்தயங்களைக் கூறித் தொண்டை கிழியக் கத்தினர். ஓர் அந்நிய நாட்டான் தப்பித்தவறி இந்தப் 'போர்க்களத்தினுள்' நுழைந்தானால், 'அது தனது அரசியல் கட்சி விவகாரம் என்பதுபோல ஒவ்வொருவனும் தனது பந்தயக் கோழியுடன் ஒன்றி, ஆறில் நான்கு என்றும் ஐந்தில் ஒன்று என்றும் பேரார்வத்துடன் தொடர்ந்து இரைவதைப் பார்த்தால், அந்தக் கூட்டத்தில் இருப்பவர்கள் அனைவருமே பைத்தியம் பிடித்தவர்கள் என்று அவன் நிச்சயம் முடிவு செய்துவிடுவான்' என்று நாம் படிக்கிறோம். குதிரைப் பந்தயத்திலும் இதேபோன்ற காட்சியைத்தான் காண முடிந்தது. ஆனால், இந்தப் பந்தயம் இன்னும் பரந்ததொரு திறந்த வெளியில் நடைபெற்றது. பார்க்க வந்தவர்கள் பெரும்பாலும் குதிரை மீதேறி வந்திருந்தனர். பந்தயக் குதிரைகளின் பின்னாலேயே ஆவேசத்தில் கத்திக் கொண்டு தங்களது குதிரைகளைச் செலுத்தினர். அங்குக் குழுமி

யிருந்த மக்கள் அவ்விடத்தை அல்லது அந்தக் கவுன்டியைச் சேர்ந்தவர்கள்தான். நாட்டின் எல்லாப் பக்கங்களிலிருந்தும் மக்கள் வந்து கூடிய பந்தயம் நியூ மார்க்கெட்டில் (New market) மட்டுமே நடந்தது. 'அந்த மைதானத்தில் கூடியிருந்த பெருங் கூட்டத்தில் கோமகன் முதல் கிராமத்து விவசாயி வரை மனித இனம் முழுவதுமே சமத்துவத்துடன் கூடியிருந்தது. பெரும்பாலும் எல்லோரும் குதிரை மீதேறியிருந்தனர். ஒருவரிடமும் வாளில்லை; ஆனால், குதிரை விளையாட்டுக்கேற்ற முறையில் பொருத்தமான உடையணிந்து வந்திருந்தனர்; ஒருவரையொருவர் விஞ்சுவதற்கு எல்லோரும் முயன்றனர்.' நியூமார்க்கெட்டிலும், விண்ட்சருக்கு அருகிலுள்ள டாட்செட்டிலும் (Datchet) ஓடும் குதிரைகளுக்குப் பரிசுக் கேடயங்களை (Plates) ஆன் அரசி வழங்கியிருந்தார். இரகசிய இலாகாவின் பணம் (Secret Service) இக் கேடயங்களுக்காகச் செலவு செய்யப்பட்டது. அராபிய, பார்பரி (Barbary) ஜாதிக் குதிரைகள் கொடால்ஃபின் (Godolphin) போன்ற பிரபுக்களால் இங்கிலாந்துக்குக் கொண்டுவரப்பட்டன; இத்தகைய இரத்தக் கலப்புக் காரணமாகப் பின்னர் இங்கிலாந்தில் குதிரைகளின் தன்மையிலும் தோற்றத்திலும் மாபெரும் மாறுதல்கள் ஏற்பட்டன.

நமது முன்னோர்கள் வீட்டிற்கு வெளியே எவ்வகைப் பொழுதுபோக்குகளில் தங்களது காலத்தைச் செலவிட்டார்கள் என்பதை நாம் கற்பனை செய்து பார்க்க முயலுவோம். அவர்களில் பெரும்பாலோர் கிராமங்களிலும், பரவலாக அங்குமிங்கும் சிதறியும் வாழ்ந்தனர் என்பதை நாம் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். பெரும்பாலான மனிதர்கட்குச் சமூகத் தொடர்புக்கான உலகமே கிராமம்தான். ஒரு கிராமப்புறத்துக் கிரிக்கட் பந்தயம், கால் பந்தாட்டம், குதிரைப் பந்தயம் ஆகியவை இன்றைய நவீன அரங்குகளில் நடைபெறும் 'விளையாட்டு விழா'க்களிலிருந்து மிகவும் மாறுபட்டவை. பெரும்பாலான மக்களுக்கு நிலத்தை உழுதல், தங்களது வேலைகட்கு நடந்து அல்லது குதிரை மீதேறிச் செல்லுதல், அங்கிருந்து மீளுதல் போன்ற அன்றாட வேலைகளே 'உடற்பயிற்சியாக' அமைந்திருந்தன. உயர்தர, நடுத்தர வகுப்பு (class) மக்களுக்குக் குதிரைச் சவாரி என்பது மிகமிகச் சாதாரணமான அன்றாடச் செயல்.

தங்களது வீடுகளுக்கு அருகிலேயே பல மனிதர்கட்குப் பல பொழுதுபோக்குகள் இருந்தன; மீன் பிடித்தல், பறவைகளை வேட்டையாடுதல் முதலியன அவைகளில் முக்கியமானவை. இன்று மிகவும் அருகிப்போன அல்லது அழிந்துபோன பல பறவைகள்—டவுன்ஸ் (Downs) பகுதியில் வாழ்ந்த பெருநாரை (Great Bustard), வெஸ்ட்மோர்லந்து, வேல்ஸ் ஆகியவிடங்களில் வாழ்ந்த கழுகு ஆகியவை முதல், பெவிக் (Bewick) அவர்களால் பட்டியல் தயாரித்து வைக்கப்பட்ட பல

சின்னஞ்சிறு பறவைகள் வரை—அன்று இங்கிலாந்தின் வானவெளிக்குக் கலகலப்பு ஊட்டின. நிலப்பரப்பின் பெரும்பகுதி அன்று சொந்தக்காரர்களால் நன்கு பாதுகாக்கப்பட்டுவந்தது; அல்லது வேட்டையாடுவது அங்கு அனுமதிக்கப்படவில்லை. என்றாலும், வலை அல்லது துப்பாக்கியைக் கையிலெடுத்த யாரும், அல்லது கண்ணிகள் செய்யத் தெரிந்த யாரும் வேட்டையைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை; ஏனெனில், பெரும் நிலப்பரப்புகள் அவனுக்காகக் காத்துக்கிடந்தன. ஆனின் ஆட்சியிலும், அந்நூற்றாண்டு முழுவதும் கேம்பிரிட்ஜைச் சுற்றியிருந்த தரிசும் சதுப்பும் மாணவர்களின் பொது வேட்டைக்காடாக விளங்கின; வான்கோழி, கௌதாரி, வாத்து, உள்ளான் முதலிய பறவைகளைத் தடுப்பார் யாருமின்றி வேட்டையாடி அவர்கள் கொண்டு வந்தனர். இந்த ரம்மியமான தீவு முழுவதிலும் கேட்பாரற்றுக் கிடந்த புதர்க்காடுகளும், தரிசுகளும், சதுப்பு நிலங்களும்—இவைகளெல்லாம் எப்பொழுதோ பண்படுத்தப்பட்டு, உழுது விதைக்கப்பட்டு அல்லது கட்டடங்களால் மூடப்பட்டுவிட்டன—காட்டுப் பறவையினங்கள் மறைந்து வாழ இடங்கொடுத்தன. ஆங்கிலேயன் தன் வீட்டைவிட்டு, சில அடிகள் எடுத்துவைத்தால் போதும்; எழில் மண்டிய இயற்கையின் கரங்களால் அணைக்கப்பட்டு மறைந்துபோவான்; வேட்டையாடுவதில் அவனுக்கிருந்த தணியாத ஆசை அவனை எல்லாத் திக்குகளிலும் இழுத்துச் சென்றது.

கிராம மக்களில் மிகச் சிலரே நகர வாழ்வு என்ன என்பதை அறிந்தவர்கள். பெரும்பான்மையான மக்கள் பான் (Pan) என்ற பண்டைக் கிரேக்கத் தெய்வத்தைப் பற்றிய மந்திரக் கதைகளில் மனத்தைப் பறிகொடுத்தே தங்கள் வாழ்க்கை முழுவதையும் கழித்தனர்; ஆங்கிலேயக் குழந்தைகள் தங்களது குடிசைகளில் (cottages) கனலுக்கு அருகில் அமர்ந்து 'ஆவிகள் நடமாடும் மண்டபங்கள், தேவதைகள், பேய் பிசாசுகள், பில்லி சூனியக்காரிகள்' ஆகியோர் பற்றிய கதைகளைக் கேட்டனர்; அவர்களது அறிவுப் பசிக்கு இவைதான் உணவு. ஒருவேளை அவர்களில் பாதிப்பேர் மட்டுமே அவைகளை நம்பினார்கள், ஆனால் எல்லோரும் நடுங்கினார்கள் என்பது உண்மை. பில்லி சூனியக்காரிகளை எல்லோரும் காண முடிந்தது; ஆனால், அவர்களைத் தூக்கிலிடுவதோ அல்லது நீரில் அமுத்துவதோ அன்று சாத்தியமில்லை. ஆயினும், மண்ணில் தோன்றிய அம் மாயக் கதைகள் எல்லோருக்கும் மகிழ்வூட்டின. நகரத்து மக்களிடையில் இக் கதைகளைப் பற்றிய நம்பிக்கையின்மை பரவிவந்தது. ஆனால், கிராமத்து மக்களிடையில் அந்த அவநம்பிக்கை இன்னும் தலைதூக்கவில்லை. அவர்களைப் பொறுத்தவரை, காடுகளில் தேவதைகள் இன்னும் நடமாடின; ஆனால், அவர்கள் புதரைச் சுற்றி வருவதற்குள் அத் தேவதைகள் எப்பொழுதும்

மாயமாய் மறைந்துவிடுகின்றன.[1] கிராமங்களில் நூல்கள் மிகவும் குறைவு. சாதாரணக் குடியானவனும், குடிசைகளில் (cottage) வாழ்பவனும் பைபிள், வழிபாட்டு நூல் (Prayer book),

> பிரான்சின் ஜோன், ஆங்கிலேய மோல், அழகி ரோசமண்ட், ராபின்ஹூட், காட்டில் வளரும் சிறு குழந்தைகள் இவர்கள் பற்றிச் சுவர்களில் ஒட்டப்பட்டிருந்த நாட்டுப் பாடல்கள்

ஆகியவைகளைத் தவிர வேறு எந்த அச்செழுத்தையும் கண்டதில்லை.

இவ்வாருக, 'பகுத்தறிவு நூற்ருண்டு' என்றும், ஆரும் வகுப்பிடையில் செயற்கைக் கவிதை நூற்ருண்டு என்றும் கருதப்பட்ட அக்காலத்தின் இறுதியிலுங்கூட, ஆங்கிலேய மக்களிடம் வியப்பு (wonder) என்ற உணர்வு மடிந்துபோகவில்லை. தனது உள்ளத்தில் கற்பனைக்கு ஓரளவு வித்தூன்றியவைதான் குழந்தைப் பருவத்தில் கேட்ட வடக்குப் பகுதியைச் சேர்ந்த தேவதைக் கதைகளும், நாட்டுக் கதைப் பாடல்களும் ஆகும் என்று வேட்ஸ்வொர்த் (Wordsworth) கூறினர்; பத்தொன்பதாம் நூற்ருண்டுப் பள்ளியறைகளில் நிலவிய பகுத்தறிவுத் தத்துவத்தை அவர் குறிப்பிடவில்லை (Prelude, நூல் V, வரி, 205 முதலியன). நகரத்திலிருந்து வெளியான எந்த ஒரு செய்தித்தாளும், பத்திரிகையும் தேசத்தில் ஒரேமாதிரியான மனப் பான்மையைப் பதித்துவைக்கவில்லை. இவ்வாறு உலகத்திலிருந்து தனித்து ஒதுங்கி வாழ்ந்த நிலையில் ஒவ்வொரு ஷயரும், ஒவ்வொரு குக்கிராமமும் தனக்கென சில தனி மரபுகளை, நலன்களை, தன்மைகளைப் பெற்றிருந்தது. பிளெஹீம் போர், டாக்டர் சேசிவெராலின் (Dr. Sacheverall) நீதிவிசாரணை போன்று பரபரப்பூட்டும் நிகழ்ச்சிகளை விட்டுவிட்டால், நாட்டுப்புற மக்களுக்குத் தங்களது சொந்த விவகாரங்களைத் தவிரப் பேசுவதற்கும் சிந்திப்பதற்கும் ஒன்று மில்லை. தாங்கள் அறிந்த, நன்கு புரிந்துகொண்ட விஷயங்களைப் பற்றிய அவர்களது மதிநுட்பம்வாய்ந்த கிராமப்புறத்து விமர்சனம் தங்களது பிரதேசத்திற்கே உரிய சுருக்கமான, பொருள் பொதிந்த சொற்களில் வெளியிடப்பட்டது. வயல்வரப்புச் சண்டைகள், திருட்டுச் சம்பவங்கள், சச்சரவுகள், காதல் நிகழ்ச்சிகள், பேய் பிசாசுகள், தற்கொலைகள், தானியம் அரைக்கும் ஆலைக்காரன், சாலையோர விடுதிக்

[1] படித்த மேல் வகுப்பு (class) மக்கள் வனதேவதைகள் உண்மையில் வாழ்கின்றன என்று நம்புவதைப் பொதுவாக விட்டுவிட்டார்கள். 1707-ல் தத்துவ அறிஞரான ஷாஃப்ட்ஸ்பரி பிரபு தனது 'Letters Concerning Enthusiasm' என்பதில் சாமர்ஸ் பிரபுவுக்கு எழுதுகிருர்: 'ஒரு காலத்தில் உங்களுக்குத் தெரிந்திருந்தவரும், வனதேவதைகளைப்பற்றி உங்களுக்கு நிறையச் சொல்லியிருந்த வருமான பிரசித்திபெற்ற, மெத்தப் படித்த, உண்மைக் கிறிஸ்தவரான ஒரு தலைமை' மதகுருவின் (Prelate) மனநிலையைத் தங்களுக்கு நான் உண்டுபண்ண முடியும். தேவதைகளைப் பற்றிய நம்பிக்கை ஏதோ புதியது போலவும், நம்பத்தகாதது போலவும் அல்லவா ஷாஃப்ட்ஸ்பரி நினைக்கிருர்!

காரன், உள்ளூர் மதகுரு, கனவான் ஆகியோரது சண்டைகள்—இவை போன்ற அன்றாட கிராம நாடகங்கள்தான் அவர்களது வம்பளப்புக்கும் மனக்கிளர்ச்சிக்கும் ஏற்ற பொருள்களாகத் திகழ்ந்தன.

சாலைகள் இன்னமும் படுமோசமான நிலையிலேயே இருந்தன. இதற்குக் காரணம் அதைப் புதுப்பிப்பதற்கும் செப்பனிடுவதற்கும் வேண்டிய நல்ல நிர்வாக அமைப்பு ஒன்று இல்லாததுதான். ஒவ்வொரு பாரிஷில் (Parish) உள்ள குடியானவர்களும் தங்கள் பகுதியின் வழியாகச் செல்லும் சாலைகளை ஆண்டுக்கு ஆறு நாட்கள் இனமாக வேலை செய்து செப்பனிடவேண்டும் என்பது சட்டம்; அந்நியரது மேற்பார்வை ஏதும் இருக்காது; அவர்களில் ஒருவரே சர்வேயராகத் (surveyor) தேர்ந்தெடுக்கப்பட்டார். சாலைகளை உபயோகிப்பவர்கள் மீது செப்பனிடும் செலவைச் சுமத்தாமல், அச் சாலைகள் செல்லும் பாரிஷ்களில் வாழும் மக்கள்மீது சுமத்தியது அநியாயம்; அதேபோல, பெரும் சாலைகளுடன் சிறிதும் சம்பந்தப்படாத குடியானவர்கள் அப் பெரும் சாலைகளை இனமாக அமைப்பார்கள் என்று எதிர்பார்ப்பதும் முட்டாள்தனம். இதன் விளைவு என்னவென்றால், ரோமானியர்கள் நமது தீவைவிட்டுச் சென்றது முதல் இங்கு நல்ல சாலைகள் மிக அருகிலேயே காணப்பட்டன. வாணிகம் குறைவாக இருந்த இடைக் காலத்தில் (Middle Ages) இதைப்பற்றி யாரும் கவலைப்படவில்லை. வாணிகம் பெருகி, துரிதமாக வளர்ந்துவந்த பிந்திய ஸ்டூவர்ட் காலத்தில் சாலைகளின் முக்கியத்துவம் அதிகரித்தது; பள்ளமும் புழுதியுமாய் விளங்கிய அக்காலத்துச் சாலைகள் தேசத்துக்கே ஓர் அவமானம் என்று கருதப்பட்டது. சாலைகள் படுகேவலமாயிருந்த சில பகுதிகளில், சாலைகளை உபயோகிப்பவரிடமிருந்தே செப்பனிடுவதற்கு வேண்டிய தொகையை வசூலிக்கவேண்டி சுங்கச் சாவடிகள் அமைக்கப் பட்டன; பாராளுமன்றச் சட்டங்கள் மூலம் இதற்கு வழி செய்யப் பட்டது. ஆன் அரியணை ஏறியபொழுது சுங்கச் சாவடிகளை நிர்வகிக்கும் பொறுப்பு அந்தந்தப் பகுதியைச் சேர்ந்த அமைதி காக்கும் நீதிபதியிடமே (Justice of the Piece) ஒப்படைக்கப்பட்டது. ஆனால், அவரது ஆட்சியின் இறுதியில் சுங்கச்சாவடி நிர்வாகிகள் (Turnpike Trustees) என்ற விசேஷ குழுக்கள் சிற்சில சமயங்களில் சட்டப்படி நிறுவப்பட்டன. ஹனோவர் வமிசம் ஆட்சிக்கு வந்த சில ஆண்டுகளுக்குப் பிறகுதான் இக் குழுக்கள் வாயிலாகச் சாலைச் சீர்திருத்தம் பரவலாக ஏற்பட்டது. லங்காஷயரிலுள்ள ஒரு சாலையை டீஃபோ வர்ணிக்கிறார்:

'சாலையோரங்களிலுள்ள நடைபாதைப் பகுதியைச் சிறுசிறு கூழாங்கற்களைப் போட்டு அமைத்திருக்கிறார்கள். நாங்கள் இப்பொழுது பயணம் செய்துகொண்டிருக்கும் இப் பிரதேசத்தில் ஒன்றரை கெஜம்

அகலமேயுள்ள இந்த நடைபாதையில்தான் நடப்பதும் குதிரைச் சவாரியும் செய்யவேண்டும். ஆனால், வண்டிகள் போகும் நடுப்பகுதி மிகவும் மோசம்.'

குளிர்காலத்திலும் பருவநிலை மோசமாயிருக்கும் பொழுதும் வண்டிகள் சாலைகளில் செல்லத் துணிவதில்லை. பொதிக் குதிரை வரிசைகளுக்கு முன்னதாகச் செல்வதற்காக, குதிரையேறிச் செல்பவர்கள் அதிகாலையிலேயே எழுந்து புறப்படுவார்கள் ; ஏனெனில், குறுகிய நடைபாதைகளில் அக் குதிரை வரிசைகளைக் கடப்பது கடினம்.

இந்நிலைமைகளில், நீர்வழிப் போக்குவரத்து மெதுவானதாக இருந்தாலும்கூட அதுதான் சாலைப்போக்குவரத்தைவிடச் சிறந்ததாக விளங்கிற்று ; அதிலும் பெரும் சுமைகளுக்கு அதுதான் மிகவும் ஏற்றது. லைம் ரீஜிஸிலிருந்து (Lyme Regis) லண்டனுக்குக் குதிரைகள் மூலம் மீன் அனுப்ப முடிந்தது ; ஆனால், லண்டனுக்கு நிலக்கரி கடல் வழியாகத்தான் வந்தது. அப்படியிருந்தும் டைன்சைட் (Tyneside) சுரங்க வாயிலில் ஐந்து ஷில்லிங்குக்கு விற்ற நிலக்கரி லண்டனில் முப்பது ஷில்லிங்குக்கும், தேம்ஸ் நதியின் மேற்பகுதியில் அமைந்த நகரங்களில் ஐம்பது ஷில்லிங் வரையிலும் விற்கப்பட்டது. இதற்கு ஒரு காரணம், கடல்வழியாக வந்த நிலக்கரிக்கு வரி விதிக்கப் பட்டது. செயின்ட் பால் ஆலயத்தின் திருப்பணிக்காகவும் ஃபிரெஞ்சுப் போரின் செலவுக்காகவும் இவ் வரி வசூலிக்கப்பட்டது. யார்க்ஷயர், லங்காஷயர், மேற்கு மிட்லந்து ஆகியவிடங்களின் நதிக்கரைப் பட்டணங்களுக்கு கால்டெர் (Calder) அல்லது செவர்ன் (Severn) நதி வழியாக நிலக்கரி அனுப்பப்பட்டதால், அங்கு விலை மலிவா யிருந்தது. ஏனெனில், நதிவழியாக எடுத்துச் செல்லப்பட்ட நிலக்கரிக்கு வரி கிடையாது ; அதுமட்டுமன்றி, டன்கிர்க் (Dunkirk) கடல் கொள்ளைக்காரர்களால் தாக்கப்படும் அபாயமும் இதில் இல்லை ; மேலும் டைன் நதிக்கும் தேம்ஸ் நதிக்குமிடையில் அரசாங்கக் கடற்படையால் ஏற்படுத்தப்பட்ட திருப்தியற்ற காப்பு முறையினால் (convoy) விளைந்த கட்டுத்திட்டங்களும் இதில் இல்லை.

இங்கிலாந்திலுள்ள மாபெரும் நிலப்பிரபுக்கள்கூடச் சுரங்கங்களை வைத்து நிர்வகித்து வந்தார்கள். தங்களது பெருமைக்கு அது இழுக்கு என்று அவர்கள் கருதவில்லை. ஏனெனில், தங்கம், வெள்ளி நீங்கலாக மற்றெல்லாக் கனிப்பொருள்களும் அவை கிடைக்கும் நிலத்தின் சொந்தக்காரர்களுக்கே உரியவை என்று இங்கிலாந்தில் கருதப்பட்டது. ஆனால், ஐரோப்பாவில் பெரும்பாலான நாடுகளில் அவை அவ்வாறு கருதப்படவில்லை. அக்காலத்தில் நிலக்கரிச் சுரங்கங் களை வைத்திருந்த நிலப்பிரபுக்களில் டார்ட்மூத் (Dartmouth) பிரபுவும்

ஒருவர். சேண்ட்வெல்லிலிருந்து (Sandwell) அவரது நாட்டுப்புற இல்லத்துக்கு (country house) அருகிலிருந்த ஸ்டாஃபோர்ட்ஷயர் (Staffordshire) சுரங்கங்களில் பல அவருக்குச் சொந்தம். இவருக்குப் போட்டியாளராக விளங்கினர் வில்கின்ஸ் என்ற நாட்டுப்புறக் கனவான். இவர் 'லெஸ்டர்ஷயர் நிலக்கரித் தொழில்கள் அனைத்தையும் தானே உறிஞ்சிவிட்டார்' என்று கூறப்பட்டது.

அக்காலத்தில் மரத்தூண்களைக் கொடுத்து சுரங்கத்தின் மேற் கூரையைத் தாங்குவதற்குப் பதிலாக நிலக்கரித் தூண்களையே விட்டு விடுவது வழக்கம். சுரங்கக் குழிகள் 400 அடி அல்லது அதற்கும் அதிகமான ஆழம் வெட்டப்பட்டன ; சுரங்கத்திலிருந்து நீரை இறைத்து வெளியேற்றுவதற்கு 1712-ல் பொறியியல் வல்லுநர்கள் ஓர் இயந்திரத்தைக் கண்டுபிடித்தனர். அதுதான் 'முதல் உண்மையான நீராவி இயந்திரம்' என்று கூறப்படுகிறது. டைன்சைடில் கப்பல்களில் நிலக்கரியை ஏற்றுவதற்காக நதிக்கரைவரை மரத் தண்டவாளங்கள் அமைக்கப்பட்டு அவைகள்மீது சுமை வண்டிகள் (trucks) ஓடின ; நியூகாசிலின் சுற்றுப்புறங்களில் மட்டும் நிலக்கரியை இழுத்துச் செல்வதற்கு இருபதாயிரம் குதிரைகள் பயன்படுத்தப்பட்டன. இடைக் காலத்தைக் (Middle Ages) காட்டிலும் அப்பொழுது பெருஞ் சுரங்கங்கள் அதிக ஆழமாயிருந்ததால், வெடி விபத்துகள் அடிக்கடி ஏற்பட்டன. 1705-ல் கேட்ஸ்ஹெட்டிலும் (Gateshead) 1708-ல் செஸ்டர்-ல-ஸ்ட்ரீட்டிலும் நடந்த விபத்துகள் அவைகளுக்கு இரு உதாரணங்கள். பிந்திய விபத்தில் நூறு சுரங்கத் தொழிலாளர்கள் இறந்துபோனர்கள் ; மேலும் 'சுற்றிலும் பல மைல்களுக்குப் பல வீடுகளும் மனிதர்களும் பெரும் சேதமுற்றனர் ; 300 அடி ஆழமிருந்த ஒரு சுரங்கக் குழியிலிருந்து ஒரு மனிதன் வெளியே எறியப்பட்டு வியப்படையத்தக்க தூரத்திற்கப்பால் எறியப்பட்டுக் கிடந்தான்.' இரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, அதே வடக்கு டர்ஹாம் மாவட்டத்தில் மற்ருெரு வெடி விபத்து நடந்தது. அதில் எண்பது பேர் கொல்லப் பட்டனர். ஆயினும், மிகவும் ஆழமில்லாமல், மேலாகவே வெட்டப்பட்ட சுரங்கங்களும் பெரிய அளவில் இருந்தன ; ஒவ்வொன்றும் இரண்டு அல்லது மூன்று ஆட்களைக் கொண்டும், சிற்சில சமயங்களில் ஒரே ஆளைக்கொண்டும் நடத்தப்பட்ட சின்னஞ்சிறு சுரங்கங்களும் மேற்குப் பகுதியில் நூற்றுக்கணக்கில் இருந்தன.

பழைய இங்கிலாந்தில் இல்லத் தொழில் முறை (Domestic System) நிலவியது என்று பொதுவாகக் கூறுவதுண்டு. பல்வகைச் சுரங்கத் தொழிலாளிகளும், எல்லாக் கவுன்டிகளையும் சேர்ந்த கல்லுடைக்கும் தொழிலாளிகளும் இந்தக் கூற்றுக்கு இரண்டு முக்கிய விதிவிலக்குகள். மற்றும் பல விதிவிலக்குகளும் இருந்தன ; ஆனல்,

அவர்களது பெயரைச் சொல்லி, வரையறை செய்யமுடியாது. பல பட்டறைகள் (workshops) மிகவும் பெரியன; கற்றுக்குட்டிகளும் (apprentices) ஊதியம் வாங்கும் ஜெர்னிமேன்களும் (Journey-men) அவைகளில் ஏராளமாக இருந்தனர். இவர்கள் இல்லத்தொழில் முறைக்கும் தொழிற்சாலை முறைக்கும் (factory system) இடையிலிருந்தனர் என்று நாம் கூறலாம். சாதாரணமாகத் தொழிலின் ஆதாரமாக அன்று, இன்னமும் விளங்கிவந்தது கற்றுக்குட்டி முறைதான்; பையன்களுக்கும் சரி, பெண்களுக்கும் சரி, ஒரு தொழிலில் நுழைவதற்கான சட்டப்படியான ஒரே வாயில் அதுதான். கொடுமை நிறைந்த எஜமானர்களால் கற்றுக்குட்டி முறை அடிக்கடி தவருகப் பயன்படுத்தப்பட்டது. கற்றுக்குட்டிகளும், வறிய கற்றுக்குட்டிகளும் (pauper apprentices), பின்னர்த் தொழிற்சாலை முறையின் மிக மோசமான காலத்தில் குழந்தைகள் எவ்வாறு இரக்கமற்ற முறையில் நடத்தப்பட்டார்களோ அதேபோலவே நடத்தப்பட்டனர். இத் தீமைகளைக் கண்காணித்து ஒழிக்கும் மேற்பார்வையாளர்களோ (inspectors) விதிகளோ கிடையாது. கற்றுக்குட்டியானவன் தனது எஜமானனின் 'குடும்பத்தின்' ஓர் அங்கம்; தனது குடும்பத்திலேயே ஒரு மகிழ்ச்சியற்ற முகத்தைக் காண சாதாரணமாக ஒரு மனிதன் விரும்பமாட்டான். மேலும், முக்கியமான அந்தப் 'பள்ளிப் படிப்புக்குப் பிந்திய காலத்தில்' பெறும் தொழில்நுட்பப் பயிற்சியும், அதற்குத் தேவையான ஒழுங்குக் கட்டுப்பாடும் பெறுவதற்குக் கற்றுக்குட்டி முறை இன்றியமையாதது;—நமது இந்தக் காலத்தில் 'பள்ளிப் படிப்புக்குப் பிந்திய காலம்' மிகவும் புறக்கணிக்கப்படுகிறது. பள்ளிக் கல்வியின் குறைபாடுகளுக்கு அது பெருமளவில் ஈடுசெய்தது. பண்டைய இங்கிலாந்தில் கைத்தொழில் வன்மைக்கும், நடத்தைக்கும், திறமைக்கும் பள்ளிக்கூடமாக விளங்கியது கற்றுக்குட்டிமுறைதான்.[1]

பிந்திய நாட்களில் தொழிற்சாலைகளில் சிறுபிள்ளைகள் சின்னஞ்சிறு வயதிலேயே வேலைக்கமர்த்தப்பட்டனர் அல்லவா? அதேபோல அவ்வளவு சிறிய வயதிலேயே இக்காலத்திலும் சிறுவர்கள் தங்களது பெற்றோர்களின் வீடுகளிலேயே வேலையிலீடுபட்டனர். கற்றுக்குட்டியாவதற்கேற்ற வயது வரும்வரை அவர்கள் இவ்வாறு வேலை செய்து

[1] சட்டங்களால் விதிக்கப்பட்டபடி கற்றுக்குட்டி முறையானது எங்கு பார்த்தாலும் கட்டாயமாக்கப்படவில்லை என்று ஆனின் ஆட்சியிலேயே முறையிடப்பட்டது. இன்னொரு கண்டிப்பான, புதிய சட்டம் வேண்டுமென்று கென்டால் மாநகராட்சி மன்றம் (Corporation) 1702-ல் ஒரு விண்ணப்பம் செய்தது; ஏனெனில், 'ஏழு ஆண்டுக் காலக் கற்றுக்குட்டிப் பயிற்சி பெருமல் எத் தொழிலையும் யாரும் ஆரம்பிப்பது சட்டப்படி தடை செய்யப்பட்டிருந்தாலும்கூட, அத்தகைய ஆட்கள் மீது வழக்குத் தொடரும்பொழுது அவர்கள் மிகவும் ஆதரவுடன் நடத்தப்படுகிறுர்கள்; அதனுல் சமீபகாலத்தில் வெகுசிலரே தண்டிக்கப்பட்டிருக்கின்றனர்.' H. M. C. Bagot, R. 10, pt. iv, p. 336.

வந்தனர். ஆடைத்தொழிலில் நூல்நூற்றல் இந்த முறைக்கு ஒரு சிறந்த உதாரணம். கால்செஸ்டரிலும் (Colchester) டாவ்ன்டன் (Taunton) பகுதியிலும் 'பட்டணத்திலும் அதைச் சுற்றியுள்ள கிராமங்களிலும் தனது வாழ்க்கைச் செலவுக்குத் தேவையான வரும்படியைத் தானே சம்பாதித்துக்கொள்ள முடியாத ஐந்து வயது சிறுபிள்ளை எங்குமே இல்லை; பெற்றோர்களால் புறக்கணிக்கப்பட்டு, பயிற்றுவிக்கப்படாத குழந்தைகள்தான் இதற்கு விதிவிலக்கு' என்பதை டீஃபோ கண்டு மகிழ்ந்தார். மேலும், ஆடைத்தொழில் நடந்துவந்த வெஸ்ட் ரைடிங் (West Riding) பள்ளத்தாக்குகளிலும் 'தனது கால்களிலேயே நிற்கக்கூடிய நான்கு வயதுச் சிறுவர்களை எங்கும்' கண்டேன் என்று அவர் எழுதுகிறார். பரிதாபத்துக்குரிய சின்னஞ்சிறு குஞ்சுகள்! ஆனாலும், தங்களது பெற்றோர்களிடம் விடை பெற்றுக்கொண்டு விளையாட அவர்கள் வெளியே வந்ததும், அவர்களுக்கு எல்லையற்ற சேரிப்புறங்களுக்குப் பதிலாக வயல்வெளிகள் சுற்றிலுமிருந்தன. இது எண்ணி மகிழக்கூடியது.

நூற்றல் தொழிலைப் பெரும்பாலும் நாட்டுப்புறத்துக் குடிசைகளில் (cottages) பெண்களும் குழந்தைகளும் செய்துவந்தனர்; நெசவுத் தொழிலைப் பெரும்பாலும் பட்டணங்களில் ஆண்கள் செய்துவந்தனர். இவ்விரண்டும் இல்லத்தொழில் முறையிலேயே நடந்துவந்தாலும்கூட முதலாளித்துவ அமைப்பும் நிர்வாகமும் இதற்குத் தேவை; இப் பணி களை வேலையளிப்போரும் (employers) நடுவரும் (middlemen) செய்துவந்தனர். குடிசைக்காரன் (cottager) உற்பத்தி செய்த பண்டங்களை நடுவர் வாங்கினர். இங்கிலாந்தின் பல்வேறு பகுதிகளிலும் ஆடைத்தொழில் செழிப்புற்றிருந்தது. ஆயினும், அதன் அமைப்பு முறை (organization) இடத்துக்கிடம் மாறுபட்டது.

அக்காலத்திய தொழில்களுக்குச் சிறந்த உதாரணம் ஆடைத் தொழில். ஆங்கிலேய ஏற்றுமதிப் பொருள்களில் உள்நாட்டிலேயே நெசவு செய்யப்பட்ட துணி ஐந்தில் இரண்டு பங்காயிருந்தது. துணி உற்பத்தியை அபிவிருத்தி செய்வதும், உள்நாட்டிலும் வெளியிலும் அதன் விற்பனையைப் பெருக்குவதும் அக்காலத்தின் பெரும் தேசிய நோக்கங்களில் ஒன்று. நமது உள்நாட்டுச் சட்டங்கள் பலவும், பொருளாதாரக் கொள்கை, அயல்நாட்டுக் கொள்கைபற்றிய நடவடிக் கைகள் பலவும் இத் தேசிய நோக்கத்தை அடைவதற்கென்றே ஏற்பட்டன. உலக வாணிபத்தில் நமக்குப் போட்டியாளராக விளங்கிய டச்சுக்காரர்களைவிட நாம் இங்குச் சிறந்த நிலையிலிருந்தோம் என்பதை எல்லோரும் உணர்ந்திருந்தனர். எவ்வாறு எனில், நமது நாட்டிலிருந்து சென்ற கப்பல்களில் ஏற்றியனுப்புவதற்கு நமக்கு இந்த அதிமுக்கியமான துணி இருந்தது; ஆனால், அவர்களுக்கு ஹெர்ரிங்

யீனத்தவிர வேறென்றுமில்லை; எனவே, பிறநாடுகளின் பண்டங்களை ஏற்றிச் செல்வதற்காகவே பெரும்பாலும் தமது கப்பல்களை அவர்கள் பயன்படுத்தினர்.

உலகின் பெரிய மார்க்கெட்டுகளுக்கு ஆங்கிலேய ஆடைகளைத் தடையின்றி ஏற்றுமதி செய்யும் பொருட்டாகவே ஃபிரான்சுக்கும் ஸ்பெயினுக்கும் எதிராக 1702-ல் நாம் ஆயுதமேந்தினோம். அச்சமயத்தில், லூயி XIV-ன் ஆணையின் கீழ் இவ்விரு நாடுகளும் ஆங்கிலேய ஆடைகள் ஸ்பெயின், நெதர்லாந்து, தென்னமெரிக்கா, மத்தியதரைக்கடல் நாடுகள் ஆகியவற்றுக்கு வருவதைத் தடைசெய்ய முற்பட்டன. 1704-ல் ஜிப்ரால்டரை நாம் கைப்பற்றியது ஒரு ராணுவ, கடற்படை சம்பந்தமான பேரவா மட்டுமன்று: மத்தியதரைக் கடலுக்குள் தடையின்றி நுழைவதும், துருக்கியுடனான வாணிபத்தைத் தடையின்றி நடத்துவதும் ஆடைத் தொழிலுக்கு உயிர் நாடியாக விளங்கின. அப்பகுதிகளில் நமது துணி ஏராளமாக விற்பனை யாயிற்று; அதுமட்டுமின்றி, நமது துணி உற்பத்தியில் பயன்படுத்தப் பட்ட எண்ணெய் ஸ்பெயினிலிருந்தும் தென் இத்தாலியிலிருந்தும் நமது வணிகர்களால் நமது நட்டுக்குக் கொண்டுவரப்பட்டது. ஸ்பெயின் நாட்டு மெரினோ ஆட்டுக் (Merino) கம்பளம் இங்கிலாந்தில் நெசவு செய்யப்பட்டு, ஆடை உருவில் மீண்டும் ஸ்பெயினுக்கே விற்கப் பட்டது; அப்பொழுது ஸ்பெயின் நாட்டின் ஆடைத்தொழில் தனது வீழ்ச்சியின் இறுதிக்கட்டத்தில் இருந்தது. சமீப ஆண்டுகளில் ஆடு களுக்கு ‘குளோவர் (Clover) முதலிய பல புல்வகைத் தானியங்கள்’ தீவனமாகப் போடப்பட்டதால் இங்கிலாந்திலேயே ஏராளமாக உற்பத்தி செய்யப்பட்ட நேர்த்தியான கம்பளி தரத்திலும் அளவிலும் மேலும் அதிகரித்தது. நமது ஆடைகளுக்குச் சிறந்த மார்க்கெட்டுகள் என்ற முறையில் நமது அமெரிக்கக் காலனிகள் சிறந்த ஒரு நிலையை வகித்தன. ரஷ்யாவிலுங்கூட இப் புதிய நூற்றாண்டில் நமது ஆடை களுக்குப் பெருங்கிராக்கி வளர்ந்துவந்தது.

தூரக்கிழக்கு நாடுகளில் மட்டும்தான் இந்தக் கனமான ஆங்கிலேய ஆடைகளை விற்பது முடியாததாயிற்று; பாராளுமன்றத்துக்கு முன் தனது கொள்கையை ஆதரித்துப் பேசவேண்டிய நிலை வந்தபொழுது கிழக்கிந்தியக் கம்பெனியை இந்த வாதம் திணரடித்தது. ஆங்கிலேயத் துணியை விற்கத் தவறியது, பதில் ஆடைகளை வாங்குவதற்காகத் தங்கத்தையும் வெள்ளியையும் ஏற்றுமதி செய்தது ஆகிய பொருளா தாரப் பெருங்குற்றங்கள் அக் கம்பெனிமீது சுமத்தப்பட்டன. ஆனால், அது இங்கிலாந்துக்குத் தேயிலையும் பட்டும் கொண்டுவந்ததால், அக் குற்றங்கள் மன்னிக்கப்பட்டன. ‘இந்தியாவில் தங்கம், வெள்ளி கொடுத்து, பட்டு மலிவாக வாங்கப்பட்டு இங்குக் கொண்டுவரப்படு

கிறது; ஆனால், துருக்கியில் நாம் நமது ஆடையை விற்று, பட்டு வாங்கு கிரோம். இதனால் துருக்கியுடனான நமது வாணிபம் அழிந்துவிடும்' என்று கிழக்கிந்தியக் கம்பெனிக்குப் போட்டியாக மூளைத்த துருக்கி கம்பெனி (Turkey Company) வாதித்தது. ஆனால், இந்த வாதம் எடுபடவில்லை. துணி வியாபாரிகள், துருக்கி வியாபாரிகள், வைதீகப் பொருளியல் அறிஞர்கள் (orthodox economists) ஆகியோரின் இவ் வாதம் நாகரிக முதிர்ச்சி, ஆடம்பரம் ஆகிய படைகட்குமுன் நிற்க முடியாமல் தோற்றது. 'நமது கம்பீரமான பகட்டுக்காரர்கள் நமது நாட்டில் ஸ்பிட்டல் ஃபீல்ட்ஸில் (Spital fields) செய்யப்பட்ட உடையை அணிவதைக் காட்டிலும் இந்திய உடையையே அதிகம் விரும்பு கிறார்கள்.' அதுமட்டுமல்லாமல் சீமாட்டிகள் எல்லோரும் 'தே' ('tay')யைக் குடித்தார்கள். எனவே, இந்திய வாணிபம் செழிப்பதைத் தடைசெய்ய பாராளுமன்றம் விரும்பவில்லை. அதே சமயம் துணி வாணிபமும்கூட செழித்து வளர்ந்தது.

கிழக்கிந்தியக் கம்பெனியின் பெருங் கப்பல்கள் காரணமாகத் தேயிலை மட்டுமன்றி, காபியும்கூட இப்பொழுது வழக்கமான பானமாகி விட்டது; பணக்கார வகுப்பினர் இதை அதிகமாகப் பருகினர். இரண்டாம் சார்லஸின் ஆட்சியிலிருந்து முந்திய ஜார்ஜ் மன்னர்கள் ஆட்சிவரை லண்டன் காஃபி விடுதி (London Coffee House) சமூக வாழ்வின் மையமாக விளங்கியது. இதன் காரணமாக, அக்காலத்திய குடிப்பழக்கத்தின் இறுக்கமான பிடி சிறிது தளர்ந்தது; ஏனென்றால், அக்காஃபி விடுதியில் ஆல்கஹால் (Alcohol) விற்கப்படவில்லை. ஆன் அரசியின் காலத்திய சில காஃபி விடுதிகளின் பட்டியலில் சுமார் ஐநூறு பெயர்கள் காணப்படுகின்றன. லண்டன் நகரத்துப் பணக்காரர் ஒவ்வொருவருக்கும் பிடித்தமான காஃபி விடுதி ஒன்று இருந்தது; வழக்கமான நேரத்தில் அவரது நண்பர்களும் மற்றவர்களும் அவரை அவ் விடுதியில் சந்திக்கலாம்.

'யாராவது என்னைத் தேடினால்,
நான் காஃபி விடுதிக்குப் போயிருக்கிறேன் என்று சொல்'

என்று எஜமானன் தனது கற்றுக்குட்டியிடம் (apprentice) சொல்லி விட்டுக் கடையை விட்டுச் செல்கிறான்.

'பிறகு அவன் லாயிடின் காஃபி விடுதிக்குச் சென்று, கடிதங்கள் படிப்பதிலும், விற்பனையைக் கவனிப்பதிலும் தவறுவதில்லை.'[1]

[1] 'Wealthy Shopkeeper' (1706) என்ற நெட் வார்டின் (Ned Ward) நூலில் அவனது அன்றாடப் பகல் வேலை இவ்வாறு பாகுபாடு செய்யப்படுகிறது: எழுதல் 5 மணி; கணக்கறை 8 மணி வரை; பிறகு, டோஸ்ட்டும் செஷயர் பாலாடைக் கட்டியும் சேர்ந்த காலைச் சிற்றுண்டி; தனது கடையில் இரண்டு மணி; பிறகு அடுத்த காஃபி விடுதியில் செய்திகள் சேகரிக்க; மீண்டும் கடையில்; வீட்டில்

செயின்ட் ஜேம்ஸ் தெருவிலிருந்த ஒயிட்டின் சாகொலேட் விடுதியில் மேல் வகுப்பினர் கூடினர்; அவ் விடுதியில் நவநாகரிகச் சூதாடிகளும் தீயொழுக்கக்காரர்களும் பிரபுக் குடும்பத்து இளைஞர்களின் பணத்தை உறிஞ்சி, அவர்களை ஒழுக்கங்கெடச் செய்தனர் என்று ஹார்லி மிகவும் மனக்கசப்போடு ஸ்விஃப்டிடம் புகார் செய்தார். கோகோ மர சாகொலேட் விடுதிக்கு டோரிக் கட்சியினரும் (Tories), செயின்ட் ஜேம்ஸ் காஃபி விடுதிக்கு விக் கட்சியினரும் (Whigs) சென்றனர். காவென்ட் கார்டனுக்கு (Covent Garden) அருகிலிருந்த வில்லின் விடுதியில் கவிஞர்களும், திறனாய்வாளர்களும் (critics), அவர்களது புரவலர்களும் கூடினர்; ட்ரூபியின் விடுதியில் மத குருமார்களும், கிரேக்க விடுதியில் கற்றறிந்த மேதைகளும் குழுமினர்; டிஸ்ஸெண்டர்களுக்கும் (Dissenters), குவேக்கர்களுக்கும் (Quakers), பேப்பிஸ்ட்களுக்கும் (Papists), யாகோபியர்களுக்கும் (Jacobites)கூட விடுதிகள் இல்லாமல் போகவில்லை. அரசாங்கத்துக் கெதிராகவும், திருச்சபைக் கெதிராகவும், தங்களது விரோதிகளுக் கெதிராகவும் ஒரே சமமான ஆவேசத்தோடு, வாயிலிருந்த குழாய்களிலிருந்து சுருள் சுருளாக வந்து அறையில் கவிந்திருந்த புகை மண்டலத்தினூடே பிரயோகிக்கப் பட்ட 'ஆங்கில நாட்டின் பேச்சுச் சுதந்திரத்தை'க் கண்டு அந்நிய நாட்டினர் நெடுங்காலமாகவே வியந்துவந்திருந்தனர்; காஃபி விடுதி வாழ்வின் சாராம்சமே அதுதான்.

இன்று 'கிளப்' (club) வகிக்கும் இடத்தை அன்று காஃபி விடுதி வகித்தது; ஆனாலும் அது செலவில் குறைந்ததாகவும், விதிமுறைக் கட்டுப்பாடுகள் இன்றியும் இருந்தது; அதே சமயம், அயலார் பெருமளவில் அதில் அனுமதிக்கப்பட்டனர். மனிதர்கள் தங்களது சமூக அந்தஸ்தை உறுதியாகப் பற்றிநின்ற அக்காலத்தில், அது ஒரு சமத்துவ உணர்வை ஏற்படுத்தியது; காஃபி விடுதியில் 'நீல ரிப்பன்களும் நட்சத்திரக் குறிகளும் தரித்த நபர்களும், சாதாரணக் கனவான்களும் அருகருகில் அமர்ந்து அன்னியோன்னியமாகப் பழகுவதைக் கண்டால், அவர்கள் தங்களது தர வேறுபாடுகளை வீட்டிலேயே விட்டு வந்துவிட்டார்களோ என்று நீங்கள் வியப்படைவீர்கள்.' ஆனால், அது மட்டுமன்று. தந்தி முறையும், பத்திரிகைகளும் தோன்றாத அக் காலத்தில் செய்திகளைக் காஃபி விடுதியில் மிகவும் சுலபமாகப் பெறலாம். 'பன்னிரண்டு பென்னிக்கு மிகச் சிறந்த சாகொலேட் ஒரு குவார்ட்டும்,

---

(கடைக்கு மேல்) மாட்டின் தொடைக் கறி மதிய உணவு; 1 மணிக்குப் பங்கு மாற்றுச் சந்தை; 3, லாயிட்ஸ் காஃபி விடுதியில், வியாபாரம் சம்பந்தமாக; மீண்டும் கடையில் ஒரு மணி; பிறகு இன்னொரு காஃபி விடுதி (லாயிட்ஸ் விடுதி அன்று), பொழுதுபோக்குக்காக; தெரிந்தவர்களுடன் அருந்துவதற்காக ஒரு 'சாக் (Sack) மதுக்கடையில்'; இருட்டியதும் வீடு; 'லேசான இரவு உணவு' பின்னர் படுக்கை, 'பௌ பெல் (Bow Bell) ஒன்பது அடிப்பதற்கு முன்.'

தபால் வந்த உடனேயே **ஹார்லம் கூராண்ட்** (Harlem Courant) பத்திரிகையின் மொழிபெயர்ப்பும்' இங்குக் கிடைக்கும் என்று சாரிங் கிராஸிலிருந்து (Charing Cross) விண்ட்சர் விடுதி விளம்பரம் செய்தது. செய்திகளின் அரசியல், ராணுவ, பொது முக்கியத்துவத்துக் காகமட்டும் அவைகளை மக்கள் ஆவலோடு கேட்க விரும்பவில்லை; வாணிபம் பற்றிய நிலையைத் தெரிந்துகொள்வதற்காகவும் அவைகளை விரும்பினர்; அதிலும் சிறப்பாக லாயிட் விடுதிக்கு இது மிகவும் பொருந்தும். இன்று கப்பல் போக்குவரத்தைப்பற்றி எண்ணும் பொழுது லாயிடின் பெயர்தான் முதன் முதலில் நமது நினைவுக்கு வருகிறது; அந்த லாயிட் குடும்பத்து எட்வர்ட் லாயிட், ஆன் அரசியின் காலத்தில் லொம்பார்ட் தெருவில் ஒரு காஃபி விடுதி வைத்திருந்தார். கடைசிச் செய்திகளைத் தெரிந்துகொள்வதற்காகவும், வியாபாரம் சம்பந்தமான நேரடித் தொடர்புகளையும் ஆலோசனைகளையும் பெறுவதற் காகவும் வியாபாரிகள் அவரது விடுதிக்கு வந்தார்கள். அக்காலத்திய செய்தித் தாள்களில் வாணிபம், கப்பல் போக்குவரத்து பற்றிய தகவல்கள் கிடையாது. இன்று அச்செழுத்து செய்யும் பல வேலைகளை அன்று வாய்ச்சொல் செய்தது; அந்தச் சொற்கள் லாயிட் விடுதியில் பேசப்பட்டன. அரசியாரின் ஆட்சி முடியுமுன்னதாகவே, ஏலம் விடுவதற்காகவும், கப்பல் போக்குவரத்துச் செய்திகளை வாசித்து அறிவிப்பதற்காகவும் ஒரு மேடையை லாயிட் அமைத்தார்.

ஒரு பக்கம் உயர் திருச்சபைக் கட்சிக்கும் (High Church Party), மறுபக்கம் கீழ் திருச்சபைக் கட்சி (Low Church Party) டிஸ்ஸென் டர்கள் ஆகியவர்களுக்கும் இடையிலான பகைதான் அன்றைய அர சியல், சமயம் சம்பந்தமான சீற்றம் நிறைந்த பேச்சுக்கும் எழுத்துக்கும் முக்கிய கருப்பொருளாகத் திகழ்ந்தது. ஆயினும், மற்றொரு வழியில், வில்லியம், ஆன் ஆகியோரின் ஆட்சிக்காலம் சமய மறுமலர்ச்சிக் காலமாக விளங்கியது. சமயத் துறையில் சுறுசுறுப்புக் காணப்பட்டது. இந்த மறுமலர்ச்சி நாட்டின் வாழ்வில் தன் நிரந்தர முத்திரையை நன்கு பதித்து, எதிர்காலத்திய பெரும் வளர்ச்சிக்கு வித்திட்டது. அறப் பள்ளிகளையும் (Charity Schools), கிறிஸ்தவ அறிவைப் பரப்பும் சங்கத்தையும் (Society for Promoting Christian Knowledge) தோற்றுவித்த இக்காலம் உயர், கீழ் திருச்சபைக் கட்சிகளின் சண்டை களில் மட்டும் தனது கவனத்தைச் செலுத்தவில்லை. இத்தகைய சில நல்ல நடவடிக்கைகளில் இரு கட்சிகளும் ஒன்றோடொன்று ஒத்துழைத்தது மட்டுமன்றி, டிஸ்ஸென்டர்களுடனும் ஒத்துழைத்தன.

இரண்டாம் ஜேம்ஸின் குறுகிய, கொந்தளிப்பு மிக்க ஆட்சியில்தான் இந்தச் சமய மறுமலர்ச்சி தொடங்கியது. டோரி கட்சியைச் சேர்ந்த, பல துண்டுப் பிரசுரங்களின் ஆசிரியரான டேவ்னன்ட் (Davenant) அக்

காலம் எவ்வாறு மனிதர்களின் ஆன்மாக்களை விழிப்புறச் செய்தது என்பதை, ஆன் ஆட்சியின் ஆரம்ப ஆண்டுகளில் இவ்வாறு நினைவு கூர்ந்தார்.

'இரண்டாம் ஜேம்ஸ் மன்னர் நமது நாட்டின் சமயத்தை மாற்றுவதற்கு மேற்கொண்ட நடவடிக்கைகள் எல்லாவகை மனிதர்களின் மனத்திலும் ஒரு புதிய ஆவேசத்தைக் கிளறிவிட்டன; எதைத் தாம் இழந்துவிட நேரிடும் என்று அஞ்சினார்களோ அதை மேலும் தீவிரமாக அவர்கள் கடைப்பிடித்தார்கள். அரசவைவாழ் மக்கள் இங்கிலாந்தின் திருச்சபைக்கு ஏற்புடையதல்லாத ஒன்றைச் செய்வதைக்காட்டிலும், தமது பதவிகளையே துறந்தனர். கடற்படை, நிலப்படைச் சிப்பாய்கள் தீயொழுக்கமிக்க வாழ்வு வாழ்ந்தாலும்கூட, தங்களது கொள்கைகளில் தளரவில்லை. எல்லோரும் உறுதியுடன் நின்றனர். மதகுருமார்கள் தங்களைப் பின்பற்றிய பாமர மக்களுடன் தாங்கள் சாவதற்கும் தயார் என்று காட்டினர். கடவுள் தன்மையின் வாதத்துக்குரிய பகுதிகளை முரட்டுத் தீரத்துடனும், போற்றத்தக்க நூலறிவுடனும் சமாளித்தனர். மதாலயங்கள் எங்கும் கூட்டம் நிறைந்திருந்தது; தங்களை எதிர் நோக்கியிருந்த அடக்குமுறை சற்றுத் தூரத்திலேயே இருந்தாலும் கூட, அது அவர்களது மனத்தில் ஒரு தியாக உணர்வை ஊட்டியது.'

ஒழுக்க நெறித்துறையிலும் சமயத்துறையிலும் ஏற்பட்ட இந்த மறுமலர்ச்சியின் அறிகுறிகள், அதைத் தோற்றுவித்த நெருக்கடி தீர்ந்த உடனேயே முழுவதும் மறைந்துவிடவில்லை. முதலாவதாக, இங்கிலாந்தின் திருச்சபையினுள் ஏற்கெனவே இயங்கிவந்த சமயச் சங்கங்களின் (Religious Societies) பணிகளுக்கு மாபெரும் சக்தியை இது அளித்தது. இந்தச் சங்கங்களைத் 'தீவிர அக்கறை கொண்ட இளைஞர்கள்' அமைத்திருந்தனர். சில சுறுசுறுப்பான மதகுருமார்களின் தூண்டுதல் காரணமாக இவ் இளைஞர்கள் ஒன்றுகூடி, சமய வாழ்விலும் நடைமுறையிலும் ஒருவருக்கொருவர் உதவிபுரிந்து, தம்மைப் பலப்படுத்திக்கொள்ளும் நோக்கத்துடன் இச் சங்கங்களை அமைத்தனர். பல ஆண்டுகட்குப் பின்னர் வந்த ஜான் வெஸ்லி, (John Wesley) திருச்சபைக்குள் இத்தகைய 'சங்கங்களை' நிறுவ வேண்டும் என்று கருதினார். தீவிர சமயப் பற்றுடைய மதகுருவாக விளங்கிய அவரது தந்தையானவர், வில்லியம், ஆன் ஆகியோரின் காலத்தில் சில சங்கங்களுக்கு உதவிபுரிந்து, அவைகளைக் காத்து வந்தாரல்லவா? அத்தகைய சங்கங்களைத் தானும் நிறுவவேண்டும் என்பதுதான் ஜான் வெஸ்லியின் மூலக்கருத்து. தனிமனிதர்களிடையிலும் குடும்பங்களிடையிலும் கிறிஸ்துவ வாழ்வை வளர்ப்பது, திருச்சபைக்குச் செல்வதையும், குடும்ப வழிபாட்டையும், பைபிளைப் படித்தலையும் ஊக்குவிப்பது ஆகிய இவைதான் இச் சங்கங்களின் முதல்

நோக்கம். ஆனால், இவ்வாறு ஏற்பட்ட இந்த உணர்ச்சி வேகம் காரணமாக மேலும் பல பொதுப்பணிகளும் விரைவில் தலைதூக்கின. இப் பணிகளில் சில டிஸ்ஸென்டர்களுக்குப் போட்டியாகவும், வேறு சில அவர்களது ஒத்துழைப்புடனும் நடைபெற்றன.

சட்டங்கள் மூலமாக இரு பல்கலைக்கழகங்களிலிருந்தும், சட்டம் அல்லது வழக்கம் காரணமாகப் பல பள்ளிகளிலிருந்தும் தடைசெய்யப் பட்ட டிஸ்ஸென்டர்கள் நாடு முழுவதிலும் தலைசிறந்த பள்ளிக்கூடங்களையும் கல்விக் கழகங்களையும் (academies) அமைத்திருந்தனர். தொடக்கநிலை, இடைநிலை, உயர்நிலைக் கல்வி ஆகிய அனைத்திலும் அவர்கள் ஈடுபட்டனர். இதைக்கண்டு உயர் திருச்சபையினர் (High Churchmen) பெரும் பொறாமைகொண்டு, அவர்களை ஒடுக்குவதற்காக ஆன் ஆட்சியின் இறுதியில் சமயப் பிளவுச் சட்டம் (Schism Act) என்ற ஒன்றை நிறைவேற்றி வெற்றி கண்டனர். இந்தச் சட்டம் முதலாம் ஜார்ஜின் ஆட்சியில் ரத்து செய்யப்பட்டது. ஆனால், இந்த இணங்காதோர் (Nonconformist) பள்ளிகளின் சவாலுக்கு ஒரு பெருந்தன்மையான முறையிலும்கூட திருச்சபை பதிலிறுத்தது. ஆனின் ஆட்சியில் அறப் பள்ளிக்கூடங்கள் (Charity Schools) இங்கிலாந்து முழுவதிலும் நூற்றுக்கணக்கில் நிறுவப்பட்டன; ஏழை எளியோரின் குழந்தைகளுக்குப் படித்தல், எழுதுதல், ஒழுக்கநெறி, இங்கிலாந்து திருச்சபையின் கோட்பாடுகள் ஆகியவற்றைக் கற்பிப்பது அவைகளின் நோக்கம். இப் பள்ளிகள் அப்பொழுது அதிகம் தேவைப் பட்டன. ஏனென்றால், ஏழைகளின் கல்விக்காக அரசு ஒன்றுமே செய்யவில்லை; சாதாரண பாரிஷ்களில் (Parishes) எவ்வகையான மானியப் பள்ளிக்கூடங்களும் (endowed schools) இல்லை. ஆயினும், பல கிராமங்களில் 'பெருமாட்டிகளும்' (dames) அரசாங்கத்திடம் அனுமதி பெறாத மற்றவர்களும் பள்ளிகள் அமைத்து கிராமத்து மக்களுக்கு எழுத்தறிவித்துவந்தனர்; ஒவ்வொரு பிள்ளையிடமும் சம்பளமாகச் சிறுதொகை வசூலித்தனர்; அங்குமிங்கும் மானியத்தின் அடிப்படையில் சில இலக்கணப் பள்ளிகள் (Grammar Schools) இயங்கி, நடுத்தர வகுப்பு (class) மக்களுக்கு இடைநிலைக் கல்வி (secondary education) அளித்து வந்தன.

அறப்பள்ளிக்கூட இயக்கத்தின் தலைவர்களாகத் திகழ்ந்த திறமை மிக்க மனிதர்கள் மானியப் பள்ளிக்கூடத் துறையில் ஜனநாயக ஒத்துழைப்புக் கோட்பாட்டைப் புகுத்தினார்கள். சில பணக்கார ஸ்தாபகர்களை மட்டும் அவர்கள் நம்பியிருக்கவில்லை. ஒரு பள்ளிக்கூடம் அமைப்பதில் ஸ்தல மக்களின் ஒத்துழைப்பையும் பெறுவதுதான் அவர்களது கொள்கை. சிறு கடைக்காரர்களும் கைவினைஞர்களும் நன்கொடையளிக்கும்படியும், நன்கொடை திரட்டும்படியும் ஊக்குவிக்கப்

பட்டார்கள்; இந்தக் கல்விப் பணியின் வெற்றியில் சொந்த அக்கறை காட்டும்படியும், ஆண்டுதோறும் தாங்கள் பண உதவிசெய்து நடத்தும் அப் பள்ளி நிர்வாகத்தில் ஒரு சொந்தப் பங்கை மேற்கொள்ளும்படியும் அவர்களுக்குக் கற்பிக்கப்பட்டது. அக்காலத்தில் வாழ்வின் பல துறைகளில்—அவைகளில் பொதுநலப் பணியும் கல்வியும் இரண்டு துறைகள்—'ஜாயின்ட்-ஸ்டாக் தொழில் துணிவு' (Joint-stock enterprise) என்ற கோட்பாடு இவ்வாருகப் புகுத்தப்பட்டுவந்தது. ஆன் ஆட்சியின் இறுதிக்காலத்தில் லண்டன் வட்டாரத்தில் 5,000-க்கும் மேற்பட்ட சிறுவர்களும் சிறுமிகளும் புதிய அறப் பள்ளிக்கூடங்களில் கல்வி கற்று வந்தனர்; இங்கிலாந்தின் இதர பகுதிகளில் சுமார் 20,000 குழந்தைகள் கல்வி பயின்றுவந்தனர். பிரஸ்பிடீரிய ஸ்காட்லாந்திலுங்கூட இவ்வியக்கமானது திருச்சபையின் பொதுச்சபையினுல் (General Assembly of the Church) மேற்கொள்ளப்பட்டுவந்தது. பள்ளியில் படிக்கும்பொழுது நல்ல உடைகளை உடுத்துவதும், பிறகு நல்ல தொழிலுக்குப் பயிற்றுவதும் அக் கல்வித் திட்டத்தின் முக்கியமான அம்சங்களாகும். 1708-ல் ஒரு லண்டன் பள்ளியில் ஓர் ஏழைப் பையனின் உடைக்கு ஒன்பது ஷில்லிங் இரண்டு பென்னிகளும், ஓர் 'ஏழைப் பெண்ணின்' உடைக்குப் பத்து ஷில்லிங் மூன்று பென்னிகளும் போதுமானவையாயிருந்தன.

அக்காலத்தின் தன்மைகளைப் புலப்படுத்தும் மற்ருெரு நிறுவனம் 'நடத்தைச் சீர்திருத்தச் சங்கம்' (The Society for the Reformation of Manners). பலரும் பங்குகொண்ட இச்சங்கத்தில் அக்காலத்தின் பண்பற்ற நடத்தைக்கெதிராக மதகுருமார்களும் டிஸ்ஸென்டர்களும் ஒத்துழைத்தனர். குடிப்பழக்கம், வசைச்சொல் மொழிதல், பொதுவிடங்களில் ஒழுங்கீனமாக நடத்தல், ஞாயிற்றுக்கிழமைகளில் தொழில்புரிதல் ஆகியவற்றுக்கெதிராக ஆயிரக்கணக்கான சின்னஞ்சிறு துண்டுப்பிரசுரங்கள் வெளியிடப்பட்டன. லண்டன் கோச்சுவண்டிக்காரர்களிடையில் விநியோகிக்கப்பட்ட **'வசைமொழிக் கெதிரான அன்பான எச்சரிக்கை'** என்பது எவ்வளவு தூரம் வெற்றிபெற்றது என்பதும் அதேபோல் மேற்குப் பிரதேசத்து (West Country) படகோட்டிகளினிடையில் விநியோகிக்கப்பட்ட **'படகோட்டிகளுக்கு அன்பான எச்சரிக்கை'** என்பது எவ்வளவு தூரம் வெற்றிபெற்றது என்பதும் நாமறியோம்! பண்பற்ற முறையில் நடந்துகொண்டவர்களுக்கெதிராகத் தொடுக்கப்பட்ட எண்ணற்ற வழக்குகள் இதைவிட அதிகப் பயனளித்திருக்கலாம். வழக்கற்றுப்போன சட்டங்களை அமலாக்கும்படி நீதிபதிகளின் மனம் மாற்றப்பட்டது. இச் செயல்களுக்கெதிராக ஆத்திரமிக்க எதிர்ப்பு உருவாகியது. சேசிவெரெல் போன்ற உயர் திருச் சபையினர் (High Churchman) சிலர், பாபம், தீயொழுக்கம் சமயமறுப்பு (heresy), சமயப்பிளவு ஆகியவைகளை

ஒடுக்குவதற்குத் ' திருச்சபையின் பண்டை ஒழுங்குக் கட்டுப்பாடுகள் ' மீண்டும் ஏற்படுத்தப்படவேண்டும் என்று ஆரவாரம் செய்தனர் ; மத சம்பந்தமற்ற சாதாரண மனிதர்களும் டிஸ்ஸெண்டர்களும்கூடப் பங்கு பெறும் இந்தப் புதிய **நடத்தைச் சீர்திருத்தச் சங்கத்தை,** அது திருச்சபை நீதிமன்றங்களை (Church courts) விட்டுவிட்டு அரசாங்க மாஜிஸ்டிரேட்டுகளுக்கு விண்ணப்பம் விடுப்பதை, அவர்கள் எதிர்த் தனர். பண்பற்ற நடத்தைக்கெதிராக இவ்வாறு ஒரு ஸ்தாபன ரீதியாக வழக்குத் தொடுப்பதால் மனக்கசப்பு, லஞ்ச-ஊழல், அச்சுறுத்தல் முத லானவை வளரும் என்று ஷார்ப் (Sharp) போன்ற முன்யோசனையுள்ள சில பிஷப்புகளும், ஹோல்ட் (Holt) போன்ற நீதிபதிகளும் அஞ்சினர் கள். பொதுநலப் பணிபுரியும் ஆள்களின் சாட்சியத்தை ஏற்றுக்கொள் ளப் பல மாஜிஸ்டிரேட்டுகள் திட்டவட்டமாக மறுத்துவிட்டனர். சிற்சில இடங்களில் கூட்டம் பயங்கரமானதாக இருந்தது. அச் சங்கத்தின் உறுப்பினர்களில் குறைந்தது ஒருவராவது அங்கேயே கொல்லப்பட்டார்.

ஆயினும், ஆயிரக்கணக்கான வழக்குகளில் தண்டனைகள் விதிக்கப் பட்டன. பொது 'இடம் ஒன்றில் தரம்வாய்ந்த ஒரு மனிதன் மட்டும் தான் வசைச்சொற்களைப் பயன்படுத்தித் தப்பித்துக்கொள்ள முடியும் என்று கூறப்பட்டது. இத்தகைய வழக்குகளை உறுதியுடன் ஆதரித்த மக்களும் பெருமளவில் இருக்கத்தான் செய்தார்கள். குடிகாரர்கள் பிறருக்குத் தொல்லை தருவதை ஒடுக்குவதிலும், பெண்களை அவமதிப்பு களிலிருந்து காப்பதிலும், ஒழுங்குள்ள நடத்தையையும் அமைதிக் கட்டுப்பாட்டையும் பராமரிப்பதிலும் முன்னிலை மீட்சிக் காலம் (Restoration) தொட்டே மாஜிஸ்டிரேட்டுகள் அவமானப்படத்தக்க அளவுக்கு அலட்சியமாக நடந்துகொண்டனர் என்று பல அமைதியான குடிமக்கள் கூறினர்கள். ஞாயிற்றுக் கிழமைகளில் தொழில் செய்வதைப் பெரும் பாலான மக்கள் விரும்பவில்லை என்பது உண்மை. டீல் நகரத்து மேயர் (Mayor of Deal) ஓர் அஞ்சா நெஞ்சர் ; சுறுசுறுப்பு மிக்கவர். அவர் தன் நகரத்து வழக்கத்தை எதிர்த்துத் தன்னந்தனியாகப் போராடி, தனது கருத்துகளில் பெரும்பான்மையை மக்கள் ஏற்றுக் கொள்ளும்படி செய்து, 1708-ல் மீண்டும் மேயராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். அதே சமயம் இன்னொன்றையும் நாம் கவனிக்கவேண்டும். குறிப்பாக'வசைச்சொல் கூறியதற்காகவும், ஞாயிற்றுக் கிழமையில் பய ணம் செய்ததற்காகவும் தொடரப்பட்ட வழக்குகளில் பல மிகவும் ஆத்திர மூட்டுபவையாயிருந்தன என்பது சாத்தியமே. இவ்வாறாக அச் சங்கம் எவ்வளவு நல்லது செய்ததோ அவ்வளவு தீமையும் செய்யுங் காலம் ஜார்ஜ் மன்னர்களின் ஆட்சியில் வந்தது ; இதன் விளைவாக அது மறைந் தொழிந்தது. ஆனாலும், அதன் நடவடிக்கைகள் காரணமாகத்தான் ஆனின் ஆட்சியில் தெருக்களும் மதுக்கடைகளும் மதிப்பான மனிதர் களும்கூடச் 'செல்லும் அளவுக்குத் திருந்தின ; குடிமயக்கம்

குறைந்ததுவு; ஞாயிற்றுக் கிழமையானது வியாபாரத்திலிருந்தும் வேலையிலிருந்தும் ஓய்வுகொள்ளும் நாளாயிற்று.

1710-ல் இங்கிலாந்துக்கு வந்த ஒரு ஜெர்மானியர் நமது நாட்டில் ஞாயிற்றுக் கிழமையின் அவலநிலையைக் கண்டு திகைத்தார் :

'பிற்பகலில் செயின்ட் ஜேம்ஸ் பூங்காவுக்குச் சென்றேன், மக்கள் திரளைக் காண்பதற்காக. ஞாயிற்றுக்கிழமையில் வேறு எந்தப் பொழுது போக்கும் அங்கு அனுமதிக்கப்படுவதில்லை; ஞாயிறு ஓய்வு என்ற விதி இங்குபோல் எங்கும் வழுவாமல் பின்பற்றப்படுவதில்லை; எல்லா விளையாட்டுகளும் தடைசெய்யப்பட்டுள்ளன; விடுதிகள் முதலிய பொதுவிடங்களனைத்தும் மூடப்பட்டுள்ளன; அதுமட்டுமன்றி, படகுகளும் கோச்சு வண்டிகளும்கூட அன்று பெரும்பாலும் ஓடுவதில்லை. எங்களது விடுதிக்காரி (hostess) அந்நியர்கள் வயலின் அல்லது புல்லாங்குழல் வாசிப்பதைக்கூட அனுமதிக்கமாட்டாள்; அப்படிச் செய்தால் தான் தண்டிக்கப்படுவாள் என்ற அச்சம் அவளுக்கு.'

ஆங்கிலேயர்களும் கிறிஸ்தவர்கள்தாம் என்பதற்கான அடையாளம் இந்த ஞாயிற்றுக் கிழமை ஓய்வு ஒன்றுதான் என்று அவர் மேலும் சிறிது வெடுவெடுப்புடன் எழுதுகிறார்.

ஆனால், சமய மறுமலர்ச்சியின் மிகமிக முக்கியமான, நீடித்து நிலைத்துநின்ற தொண்டு கிறிஸ்துவ அறிவைப் பரப்பும் சங்கத்தினாலும் (Society for Promoting Christian Knowledge), அதன் குழந்தையான அந்நிய மண்ணில் சுவிசேஷத்தைப் பரப்பும் சங்கத்தினாலும் (Society for the Propagtion of the Gospel in Foreign Parts) ஆற்றப்பட்டது. இவ்விரு சங்கங்களையும் ஆதரித்தவர்கள் ஒரே மனிதர்கள்தாம்; விடாமுயற்சி மிக்க டாக்டர் தாமஸ் பிரே (Thomas Bray), அவர்களுள் மிகவும் முக்கியமானவர். பின்னாள்களில் அடிமை வர்த்தகத்தையும் (slave trade) அடிமை முறையையும் (slavery) ஒழித்துக்கட்டிய இயக்கங்களுக்கு எந்த உணர்வு அடிப்படையாக விளங்கியதோ, அதே உணர்வுதான் இந்தச் சமயப் பிரசார சங்கங்கள் அனைத்துக்கும்கூட அடிப்படையாக விளங்கியது; மத குருமார்கள், சாதாரண மக்கள், உயர் திருச்சபை, கீழ் திருச்சபை (High and Low Church), நான்ஜெரோக்கள் (Nonjurors), நான்-கன்ஃபார்மிஸ்ட்டுகள் (Nonconformists) ஆகிய எல்லோரையும் உள்ளடக்கிய இச்சங்கங்கள் அனைத்துக்கும் இந்த உணர்வுதான் அடிப்படையாக விளங்கியது. வில்லியம் ஆட்சியின் இறுதி ஆண்டுகளிலும் ஆன் ஆட்சியின் ஆரம்பத்திலும் இச்சங்கங்கள் முழுமூச்சுடன் இயங்கின. பைபிளையும் மற்றச் சமயநூல்களையும் மக்களிடம் வழங்கிப் பரப்புவது தான் இச் சங்கங்களின் முக்கிய நோக்கம். எனவே, இவர்கள் அறப்பள்ளிக் கூடங்களை (Charity Schools) மிகவும் ஆதரித்தனர்; ஏனெ

னில், அங்குதான் இச்சமய நூல்களை ஏழைமக்களுக்குக் கற்றுத்தர முடியும். இவ்விரு இயக்கங்களும் ஒரே சமயத்தில் நடைபெற்றன. இச் சங்கம் வெளியிட்ட நூல்களை மார்ல்பரோ கோமகன் தரைப்படையிலும், பென் போவும் (Benbow) ரூக்கும் (Rooke) கடற்படையிலும் வரவேற்றனர். நாட்டுப்புறத்து மாவட்டங்களில் பைபிள், வழிபாட்டு நூல் (Prayer Book) ஆகியவற்றின் பதிப்புகள் மலிவான விலைக்கு வழங்கப்பட்டன. அமெரிக்காவுக்கு மாபெரும் அளவில் பைபிளும் மற்ற நூல்களும் அனுப்பும் பணி தொடங்கியது; உலகின் மற்றப் பகுதிகட்கும்கூட அவை பெருமளவில் அனுப்பப்பட்டன; ஆயினும், பின்வரும் ஆண்டுகளில் மலைமலையாக அனுப்பப்பட்ட நூல்களுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இது ஒன்றும் பெரிதன்று. என்றாலும், உலகில் இங்கிலாந்தின் வல்லமையும் செல்வமும் வளரவளர இப் பணியும் வளர்ந்துகொண்டே சென்றது. மதப்பிரிவுகளுக்கிடையிலும் அரசியல் கட்சிகளுக்கிடையிலுமான சச்சரவுகளில் இதுவரை சிக்கிக்கொண்டிருந்த ஆங்கிலேயச் சமய உலகம், அச்சிக்கலிலிருந்து விடுபட்டு விலகி ஒரு விரிந்த கண்ணோட்டத்தைப் பெற்றது என்பதை, இந்நடவடிக்கைகள் காட்டின. ஆர்வத்தினால் வெறுப்புக்கு மாறாக, அதைக்காட்டிலும் சிறந்த ஒன்றும் விளையக்கூடும் என்பதை இப் புதிய கண்ணோட்டம் காட்டியது.

ஆனின் ஆட்சிக் காலத்தில், அதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரும் பின்னரும் இருந்ததுபோலவே, சமய வேறுபாடுகள்தாம் அரசியல் வெறுப்பு விருப்புகளுக்கு அடிப்படையாயிருந்தன. எனவே, ஆங்கிலேய வரலாற்று நூலாசிரியர் எவரும் சமயத்தைப்பற்றிய ஆராய்ச்சியைப் புறக்கணித்துவிட்டு, மற்ற நிகழ்ச்சிகளை விளக்குவது இயலாத காரியம். ஆயினும், எந்தச் சச்சரவுகளிலிருந்து நமது அரசியல் உரிமைகள் பெரும்பாலும் தோன்றினவோ, அந்தச் சச்சரவுகளைக் காட்டிலும் நமது தேசத்தின் சமய அறிவு முக்கியமானது என்பதை அவர் மறக்கக்கூடாது. பல அமைதியான பாரிஷ்களிலும் (parishes) எளிய குடும்பங்களிலும் சமய வாழ்வானது தனது போக்கில் போய்க்கொண்டேயிருந்தது; உயர் திருச்சபைக்கும் கீழ் திருச்சபைக்கும் (High and Low Church) இடையிலான சச்சரவுகளைப்பற்றி அதற்குக் கவலையேயில்லை; ஆங்கிலேயச் சமயம் என்பது முக்கியமாக, பண்டைய உலக வாழ்வின் சுதந்திரமான, ஆரோக்கியமான இயக்கம்தானே ஒழிய வேறில்லை. மூடநம்பிக்கை, சமயவெறி ஆகியவை ஒரு பக்கம், இவ்வுலக வாழ்வே முதன்மையானது என்ற மிருகக் கோட்பாடு இன்னொரு பக்கம்—இவை இரண்டுக்கு மிடையில் அது அமைதியாக, இனிமையாக இயங்கிக்கொண்டிருந்தது.

கட்சிச் சண்டைகள் பெருமனக்கசப்புடன் நடைபெற்றுவந்தன; என்றாலும், பதினெட்டாம் நூற்றாண்டு ஆங்கிலேயன் ஒருவனுக்கே

இயல்பான, அந்த அமைதி நிறைந்த, விரிந்த மனப் போக்குடன்கூடிய, நம்பிக்கை நிறைந்த வாழ்வு கற்றறிந்த மக்களின் மனத்தில் ஏற் கெனவே குடிகொண்டுவிட்டது.

'1688ஆம் ஆண்டின் மாண்புறு புரட்சியை (Glorious Revolution) மட்டுமன்றி, மில்டன் என்ற ஒரு கவிஞனையும், நியூடன் என்ற ஒரு பௌதிக விஞ்ஞானியையும், லாக் (Locke) என்ற ஒரு தத்துவ ஞானியையும் பின்னணியாகக் கொண்டு விளங்கிய அடிசனின் இங்கி லாந்து அருந்தவமுடைத்து.

'மனிதர்களின், ஆங்கிலேயர்களின் எல்லாப் பேரவாக்களும் நிறைவேறிவிட்டன; அரசியல் அமைப்பு நிறுவப்பட்டுவிட்டது; 'உரிமைகள்' பெறப்பட்டுவிட்டன; ஹோமரும் வெர்ஜிலும் மிஞ்சப் படாவிட்டாலுங்கூட, எட்டிப் பிடிக்கப்பட்டுவிட்டனர்; பாதைகளி லிருந்து விலகிச் செல்லாமல் விண்மீன்களைக் காக்கும் விதி தெள்ளத் தெளிவாக்கப்பட்டுவிட்டது; உள்ளம் இயங்கும் விதம் நன்கு விளக்கப் பட்டுவிட்டது. இவைகளனைத்தும் ஆங்கிலேயர்களால் செய்யப்பட்டு விட்டன; முக்கியமாகக் கிருத்துவர்களால் செய்யப்பட்டுவிட்டன. புதிரான இந்தப் பிரபஞ்ச வாழ்வின் சுமைகளையும் சிக்கல்களையும் நியூடன், லாக் ஆகியோரின் மதிநுட்பம் வாய்ந்த விளக்கங்கள் அகற்றிவிட்டன; அதற்கு மேலாகச் சமயக் கோட்பாடுகளின் உண்மை நிறுவப்பட்டுவிட்டது.' (Basil Willey, 'Seventeenth Century Background', p. 264.)

இது எவ்வளவு பொருத்தமாகக் கூறப்பட்டிருக்கிறது!

வெஸ்ட்மின்ஸ்டரிலிருந்த பாராளுமன்றத்திலிருந்தும், செயின்ட் ஜேம்ஸ் அரண்மனையிலிருந்த அரசியாரின் அவையிலிருந்தும் இரண்டு கல் தூரத்தில், உலகிலேயே மாபெரு நகரத்தின் மையம் இருந்தது. இங்கிலாந்தின் மற்றெல்லாப் பகுதிகளிலும் ஆணை செலுத்திய அரசவையும் பாராளுமன்றமும்கூட அந் நகரில் கையற்று நின்றன. லண்டன் மாநகர் தன்னாலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட மாஜிஸ்டிரேட்டு களால் ஆளப்பட்டது; அங்குப் போலீஸ்காரர்கள் இருந்திருப்பார்களே யானால், அவர்களும் அந் நகரத்துக்கே சொந்தமானவர்கள்தாம்; தனக்கே சொந்தமான மக்கட் படையினால் (militia) அந்நகர் காக்கப் பட்டது; அத் தீவிலேயே மிகப் பெரிய, சமாளிக்க முடியாத மக்கட் கூட்டம் அங்கு வசிப்பதால் அருகிலுள்ள அரசாங்கத் தலைமையகத் துக்குத் தலைவலியாயிருந்தது. இன்றைய மக்கள்தொகையில் பத்தில் ஒன்றையும், இன்றைய பரப்பளவில் பத்தில் ஒன்றுக்கும் குறைவான தையும் அன்று கொண்டிருந்த லண்டன் மாநகர், இன்றைக்குத் தான் பெற்றிருக்கும் முக்கியத்துவத்தைவிட அதிக முக்கியத்துவத்தை அன்று

பெற்றிருந்தது. தனக்கு மிகவும் நெருங்கிய போட்டியாக விளங்கிய பிரிஸ்டல், நார்விச் நகரங்களைவிட அது, மக்கள்தொகையில் ஏறக்குறைய பதினைந்து மடங்கு பெரியதாக இருந்தது. இங்கிலாந்தின் நகரங்களிலும் கிராமங்களிலும் நடைபெற்ற பெருவியாபார நடவடிக்கைகள் அனைத்தையும் லண்டன் வியாபாரிகளும் மார்க்கெட்டுகளும் ஆட்டிப் படைத்து 'வியாபாரத்தின் இரத்தத்தை உறிஞ்சிக் கொழுத்தன.' லண்டனின் கட்டுப்பாடு ஏதுமின்றித் தங்களது வியாபாரத்தைத் தாமே நடத்துவதாகவும், அமெரிக்கப் பண்டங்களைத் தமது துறைமுகத்துக்குத் தாமே கொண்டுவந்து, தமது சரக்கு வண்டிகள், ஏஜன்ட்டுகள் மூலம் தாமே மேற்குப் பகுதிகளில் விற்பனை செய்வதாகவும் பிரிஸ்டல் மக்கள் மட்டும் பெருமை பேசிக்கொண்டார்கள். மற்றெல்லா இடங்களும் வியாபாரத்தைப் பொறுத்தவரை தலைநகரின் கைப்பொம்மைகளாக விளங்கின. 'எக்சிடெர் கம்பளித் துணிகளை நார்விச்சும், நார்விச் கம்பளித் துணிகளை எக்சிடெரும் லண்டனில்தான் வாங்குகின்றன'. லண்டனுக்கு உணவு, நிலக்கரி, அல்லது கச்சாப்பொருள் ஆகியவற்றை அனுப்பும் பெருந் தேசீய வியாபாரத்தில் ஒவ்வொரு கவுன்டியும் ஈடுபட்டது. பதிலுக்கு லண்டன் தனது விலையுயர்ந்த நாகரிகப் பொருள்களையும், தூரத்து நாடுகளிலிருந்து தான் இறக்குமதி செய்த பண்டங்களையும் ஒவ்வொரு கவுன்டிக்கும் அனுப்பிவைத்தது. நாட்டின் கிழக்கிந்திய வர்த்தகம் முழுவதும், ஐரோப்பா, மத்தியதரைக் கடல் நாடுகள், ஆஃப்ரிக்கா, அமெரிக்கா ஆகியவற்றின் வர்த்தகத்தில் பெரும்பகுதியும் லண்டன் துறைமுகத்தின் வாயிலாகவே நடைபெற்றன.

அத் தலைநகரின் மனித சமுதாயத்தில் கீழ்த்தட்டிலிருந்த ஏழை எளியவர்கள்—பெரிய வியாபாரத் தலமாகவும் துறைமுகமாகவும் விளங்கிய அந் நகரின் துறைமுகத் தொழிலாளர்களும், சாதாரண, தொழில்நுட்பமறியாத அன்றாடத் தொழிலாளர்களும்—மிகமிகச் சுகாதாரமற்ற, மக்கள் நெருக்கம் நிறைந்த, வடிகால்கள், போலீஸ், மருத்துவர்கள் ஆகிய எதுவுமில்லாத, கொடையும் கல்வியும் சமயமும் அணுக இயலாத நிலைமைகளில் வாழ்ந்தனர். லண்டன் நகரத்திலும், அதற்கப்பாலிருந்த பகுதிகளிலும் டீஃபோவின் நாள்களில் நிலவிய நிலைமை இதுதான். அவ்வேழை மக்களிடையில் மரண விகிதம் பயங்கரமாயிருந்தது. ஏல் மதுவை விட்டுவிட்டு அவர்கள் சாராய வகைகளைக் குடிக்கக் கற்றுவந்ததால் அவ் விகிதம் மேலும் ஏறிக் கொண்டே யிருந்தது. 'அல்சேஷியா'விலிருந்த (Alsatia) சட்ட விரோதிகளின் (outlaws) புகலிடங்கள், அருகிலிருந்த டெம்பிள் (Temple) வழக்கறிஞர்களின் கண்களையும் கௌரவத்தையும் உறுத்திய காரணத்தினால், ஆன் அரசி அரியணையேறுவதற்குச் சில ஆண்டுகளுக்கு முன்பே ஒழித்துக்கட்டப்பட்டுவிட்டன; ஆனால், இதன் விளைவாகத் திருடர்களும், வழிப்பறிக் கொள்ளைக்காரர்களும்,

வேசைகளும் ஓரிடத்தில் இதுவரை குழுமியிருந்ததற்குப் பதிலாக, அம் மாநகர் முழுவதும் இப்பொழுது பரவினர். இவர்களையெல்லாம் வைத்துத் தலைமறைவாய்த் தொழில் நடத்திவந்தவர் புகழ்பெற்ற ஜொனதன் ஒயில்ட் (Jonathan Wild). இவர் வெளியுலகைப் பொறுத்தவரை ஒரு நேர்மையான மாஜிஸ்டிரேட்; ஆனல், உண்மையில், இவர் திருட்டுச் சொத்துகளை மலைமலையாகக் குவித்துப் பெரும் பொருளீட்டினர். அவர் தன் கீழாள்களிடம் எவ்வாறு ஒழுங்குக் கட்டுப்பாட்டை நிலவச்செய்தார் என்பது 'Beggar's Opera' என்ற நூலில் முதல் காட்சியிலேயே பீச்சம் (Peachum) என்கிற பாத்திரத்தால் விளக்கப்படுகின்றது. பின்னர் ஒயில்டின் நடவடிக்கைகள் கண்டுபிடிக்கப்பட்டு, விசாரணை நடந்து, 1725-ல் அவர் மரண தண்டனைக்காளாகியவுடனேயே இந் நாடகம் எழுதப்பட்டது. மாஜிஸ்டிரேட்டுகள், போலீஸ்காரர்கள் ஆகியோரின் திறமையின்மையை ஒயில்டின் வாழ்க்கை காட்டுகிறது; இந் நிலையானது, புகழ்பெற்ற ஃபீல்டிங் சகோதரர்கள் போ தெருவில் தங்களது அலுவலகத்தை நிறுவிய பின்னர்தான், பதினெட்டாம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் திருந்த ஆரம்பித்தது.

லண்டனில் திறம்பெருத் தொழிலாளிகளின் (unskilled labour) அணியிலிருந்த நேர்மையான தொழிலாளிகளுங்கூடச் சிறிதும் கல்வியறிவு இல்லாதவர்களாகவே இருந்தனர். படகோட்டிகளின் தலைவர்களில் ஒருவராக விளங்கிய ஜொனதன் பிரௌன் (Jonathan Brown) என்பவர், தானும் தனது தோழர்களும் 'கிறிஸ்து என்பவர் யார், அவர் என்ன செய்தார் என்பதைப் பற்றிக் கேள்விப்பட்டதுகூடக் கிடையாது' என்று டிஸ்ஸென்டர் பிரிவைச் சேர்ந்த உபதேசியாரான (Preacher) காலமி (Calamy) என்பவரிடம் வெளிப்படையாக ஒப்புக்கொண்டார்; ஆனல், கூட்ட மன்றங்களுக்கும் போப்பாண்டவரை ஆதரிப்போரின் சொந்தக் கோயில்களுக்கும் (Popish Chapels) தீவைப்பதற்கு இத்தகைய மனிதர்களை அவர்களது தலைவர்கள் சுலபமாக ஏவமுடிகிறது. இந் நிலையை ஒழிப்பதற்காகத்தான் பொது நன்கொடை வசூலித்து அறப்பள்ளிக்கூடங்கள் (Charity Schools) நிறுவப்பட்டுவந்தன. ஐம்பது புதிய மதாலயங்களை (Churches) நகரின் சுற்றுப்புறங்களில் கட்டுவதற்காகப் பாராளுமன்றம் 1711-ல் பணம் ஒதுக்கியது; இவ்வாறு பல லட்சம் மக்களுக்குப் புதிதாக இடவசதி செய்துதரப்பட்டது. அந்த மாவட்டத்தில் டிஸ்ஸென்டர்களுக்கே சொந்தமான பல ஆலயங்கள் (Chapels) ஏற்கெனவே இருந்தன; அவர்களின் தொகை அம்மாவட்டத்தில் 100,000 என்று பாராளுமன்றக் கமிட்டியினல் கணக்கிடப்பட்டது.

ஆனல், எல்லாவற்றுக்கும் மேலாக லண்டன் எதிர்எதிர் அம்சங்கள் பலவற்றைக் கொண்ட நகரம். இங்கிலாந்தில் ஆக்கப்பட்ட பண்டங்

களும், உலகின் பல பகுதிகளிலிருந்து வந்த பண்டங்களும் பரிவர்த்தனே செய்யப்பட்ட வியாபாரத் தலமாகவும் துறைமுகமாகவும் அது விளங்கியது. திறம் பெருத தொழிலாளிகளின் (unskilled labour) உடல் வலிமட்டும் அங்குத் தேவைப்படவில்லை; பலவகை மேலாள்கள் (foreman), எழுத்தர்கள் (clerks), கடைக்காரர்கள், நடுவர்கள் (middlemen) ஆகியோர் அடங்கிய ஒரு மேற்பார்வையாளர் பட்டாளமே அங்குத் தேவைப்பட்டது. மேலும், லண்டன் ஒரு வியாபாரத்தலம் மட்டுமன்று; தயாரிப்புப் பொருள்கள் (manufacutures) அங்குப் பெருமளவில் உற்பத்தி செய்யப்பட்டன; உற்பத்தியின் இறுதிப் பணிகளும் (finishing processes) அங்குச் செய்யப்பட்டன. ஆடம்பரப் பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டன; நமது தீவிலேயே மிகத் திறமை மிக்க தொழிலாளிகள் இவைகளில் வேலை செய்தனர். ஹியூக்கனோ (Huguenot) சமயப் பிரிவைச் சேர்ந்த பல்லாயிரக்கணக்கான பட்டு உற்பத்தியாளர்கள் அண்மையில் ஸ்பிட்டல்ஃபீல்ட்ஸில் (Spitalfields) வந்து குடியேறியிருந்தனர்; முன்பு ஃபிரான்சில் நடைபெற்றுவந்த திறமை மிக்க தொழில்கள் இப்பொழுது அந் நாட்டிலிருந்துவந்த அகதிகளால் லாங் ஏக்கரிலும் (Long Acre) சோஹோவிலும் (Soho) நடத்தப்பட்டன. இவ்வகதிகள் துரிதமாக ஆங்கிலேயர்களாகிவந்தனர்; தங்களது கால்வினீய முறை (Calvinist) வழிபாட்டுக்கு இன்னும் அதிக அளவில் சுதந்திரத்தைப் பெறுவதற்காக விக் கட்சியினருக்கு இவர்கள் ஏற்கெனவே ஓட்டளித்துவந்தனர். நமது நாட்டின் சீரிய கைவினைத்திறனுக்கும் லண்டனே மையமாக விளங்கியது. அந்நகரின் தலைசிறந்த உற்பத்தி நிலையங்களிலிருந்த கற்றுக்குட்டிகள் (apprentices) நாட்டுப்புறக் கனவான்களின் பிள்ளைகள்தாம்; தாங்கள் இறக்கும்பொழுது தங்களது மூத்த சகோதரர்களைவிடவும் செல்வந்தர்களாக அவர்கள் கண்மூடமுடியும்; வேலை முடிந்தபிறகு பொய்த் தலைமுடி (wig) தரித்து ஆடம்பரமாக அவர்கள் திரிந்தனர். அகன்ற லண்டன் (Greater London) ஆங்கில இலக்கிய, அறிவுத்துறை வாழ்வுக்கும், நாகரிகத்துக்கும், சட்டத்துக்கும், அரசாங்கத்துக்கும் மையமாக விளங்கிற்று. இதன் காரணமாக அந் நகரில் படுமூர்க்கத்தனமான அறியாமையையும், ஏராளமான பல்வகைப்பட்ட திறனையும் அறிவையும் ஒரே சமயத்தில் ஒரே இடத்தில் காணமுடிந்தது. உள்நாட்டு வர்த்தகத்திலும் உலக வர்த்தகத்திலும், அதற்கு மேலாக வெஸ்ட்மின்ஸ்டர் அரசியல்வாதிகள், வழக்கறிஞர்கள், செயின்ட் ஜேம்ஸ் அரண்மனையின் நவநாகரிக மனிதர்கள், பிரபுக்கள் ஆகியோரின் அன்றாடத் தொடர்பு காரணமாகவும் லண்டனின் அறிவுக்கூர்மை மேலும் மேலும் அதிகரித்தது. கேளிக்கைப் பருவத்தில் (season) சமுதாயத்தின் தலைமக்கள் டெம்பிள் பாருக்கு (Temple Bar) மேற்கிலிருந்த வாடகை விடுதிகளில் அல்லது தனிப்பட்ட மாளிகைகளில் தங்கினர்; ஆண்டுதோறும் நம் நாட்டுக்குத் திரும்பிவரும் குருவிகளைப் (swallows) போல இவர்களும்

லண்டனுக்குத் திரும்பத் திரும்பிவந்து லண்டன்காரர்களாகச் சில வாரங்கள் காலங்கழித்தனர்.

இங்கிலாந்தின் மக்கள்தொகையில் பத்தில் ஒரு பாகமும், அதன் பண்பட்ட சிந்தனைச் சக்தியில் பாதியும் லண்டனில் அடங்கியிருந்தன. அத்தகைய லண்டன் நகரமும் வெஸ்ட்மின்ஸ்டரிலிருந்த அரசாங்கத் தின் தலைமைப் பீடமும் மிக அருகருகில் அமைந்து ஒரே தலைநகரமாக இணைந்திருந்த காரணத்தினால், ஆங்கிலேய நாட்டு வரலாற்றின் போக்கை ஒரு தீர்வான முறையில் அந்நகரம் பாதித்ததில் வியப் பொன்றுமில்லை; அதுவும், பயணச் சிரமங்கள் நமது நாட்டின் மற்ற நகரங்களையும் ஷயர்களையும் அரசவையிலிருந்தும் பாராளுமன்றத்தி லிருந்தும் பிரித்துவைத்திருந்த அக் காலத்தில் இதில் ஒன்றும் வியப் பில்லை. ரோம் நகரம் இத்தாலியை எவ்வாறு ஆண்டதோ, ஏதென்ஸ் நகரம் கிரீசை எவ்வாறு ஆள முயன்றதோ, அதைப்போல் லண்டன் இங்கிலாந்தை ஆள ஒருபொழுதும் முயன்றதில்லை. நாட்டின் ஆட்சி யாளர்கள் தமது வாயில்களுக்கு அப்பால் வெஸ்ட்மின்ஸ்டரில் இருந்து, தமது பண்டைய முனிசிபல் உரிமைகளில் தலையிடாமல், தம் நகரத்து மக்களுக்கு இசைந்த கொள்கைகளைக் கொண்டு நாட்டின் சமய விவ காரங்களையும் வெளிநாட்டு விவகாரங்களையும் நிர்வகித்துவந்தவரை, இங்கிலாந்தை மன்னர் ஆண்டாலும் சரி அல்லது பாராளுமன்றம் ஆண்டாலும் சரி, லண்டனுக்குச் சம்மதம்தான். அந் நகரால் விரும்பி ஆதரிக்கப்பட்ட அரசர்களும் அரசிகளும்—8ஆம் ஹென்ரி, எலிசபெத், 3ஆம் வில்லியம், ஆன்—நிலையான அரசியல் அமைப்புகளை விட்டுச் சென்றனர்; அதனுடன் தகராறு வைத்துக்கொண்டவர்கள்—மேரி டியூடர், இரண்டு சார்லஸ்கள், இரண்டு ஜேம்ஸ்கள், காப்பாளர் (Protector)—நிறுவிய அமைப்புகளோ அன்றே அழிந்துபோயின; ஆலிவரும் இரண்டாம் சார்லஸும் அதன் ஆதரவைப் பெற்றே அரியணை ஏறினர் என்றாலுங்கூட அவர்களது அமைப்புகள் நிலைக்க முடியவில்லை.

குடிமக்களை அச்சுறுத்துவதற்காக லண்டன் கோபுரம் (Tower of London) வெற்றிவீரர் வில்லியத்தால் (William the Conqueror) கட்டப்பட்டது; வெஸ்ட்மின்ஸ்டருக்கு அப்பால் லண்டன் நகரத்தின் ஓரத்தில் அது கட்டப்பட்டது. மக்களை நீண்ட காலம் அது அச்சுறுத் தாமற்போனதற்கு அதுவும் ஒரு காரணம். ஓர் ஒதுக்குப்புறத்தில் கட்டப்பட்டிருந்ததால்தான் ஸ்டூவர்ட் மன்னர்களின் காலத்தில் அது லண்டன் மக்களின் அவமதிப்புகளிலிருந்து வெஸ்மின்ஸ்டரையும் ஒயிட் ஹாலையும் (White Hall) காக்கமுடியவில்லை. ஆனின் காலத் திலுங்கூட அக் கோபுரமானது பெரும் படைக்கலச்சாலையாகப் பயன் பட்டுவந்தது; அங்கிருந்து பீரங்கிகளும் வெடிமருந்தும் கடல்கடந்து

போர்க்களங்களுக்கு அனுப்பப்பட்டுவந்தன ; அதில்தான் நாணயச் சாலையும் (Mint), நாணயங்கள் அடிக்கும் இயந்திரங்களும் இருந்தன ; இந்த நாணயச்சாலையின் தலைவராகத்தான் (Master) நியூடன் அப் பொழுது விளங்கினர். இந்த இரண்டு நிறுவனங்களையும் சேர்ந்த அதிகாரிகளும் வசித்த தெருக்களைச் சுற்றி வெளிப்புற மதில்கள் அமைந் திருந்தன. சிற்சில சமயங்களில் அது அரசாங்க சிறைச்சாலையாக இன்னமும் பயன்பட்டுவந்தது. என்ருலுங்கூட வேறு சில நல்ல காரியங்களுக்காகவுங்கூட அது பயன்பட ஆரம்பித்துவிட்டது ; தலை நகரின் உயிர்க்காட்சிசாலையும் (Zoo) பொருட்காட்சிசாலையும் அங்கு தான் இருந்தன. முடிமணிகளையும் (Crown Jewells), புதிதாக நிர்மாணிக்கப்பட்ட போர்க்கருவிச் சாலையையும் (Armoury) காணு வதற்கு மக்கள் இட்டுச்செல்லப்பட்டனர் ; போர்க்கருவிச்சாலையில், போரில் குதிப்பதற்கு ஆங்கிலேய அரசர்கள் குதிரைமீதேறித் தயாராக ஒரு வரிசையில் நின்றனர். இடைக்கால மன்னர்களுக்கு மிகவும் பிடித்தமான இருப்பிடமாக இக்கோபுரம் விளங்கிய அக்காலந்தொட்டு, சிங்கம் முதலிய பல வனவிலங்குகள் அங்கு வைத்துப் பேணப்பட்டு வந்தன ; வட ஆஃப்ரிக்கப் ‘ பார்பாரி ’யின் (Barbary) மன்னர்கள் ஆன் அரசிக்கு அனுப்பிய விலைமதிப்பு மிக்க அன்பளிப்புகளால் அக் கோபுரம் நிறைந்திருந்தது ; அப் பார்பாரியுடன்தான் ஆங்கிலேய வணிகர்கள் வியாபாரம் செய்தனர் ; அதன் மன்னர்களுடன்தான், ஜிப்ரால்டரைக் கைப்பற்றிய ஆங்கிலேயர்கள் ஃபிரான்சுக்கும் ஸ்பெயி னுக்கும் எதிராக உடன்படிக்கைகள் செய்துகொண்டார்கள்.

கோபுரத்துக்கும் (Tower) டெம்பிள் பாருக்குமிடையில் (Temple Bar) லண்டன் நகரம் நீண்டு கிடந்தது ; நதியிலிருந்து வடபுறமாக ஸ்மித் ஃபீல்ட், ஹால்போர்ன், ஒயிட் சேப்பல் மதுக்கடைகள்[1] வரை மட்டுமே அது குறுகிய அளவில் அகன்று கிடந்தது. ஆயினும், நகர எல்லைகளையும் தாண்டி, குறிப்பாக மேற்குப்புறமாகக் கட்டடங்கள் பெருகிவிட்டன ; வெஸ்ட்மின்ஸ்டரிலிருந்த தேசீய அரசாங்கத் தலைமையகம் மக்களை அந்தப் பக்கம் கவர்ந்தது. நகரின் எல்லை ஸ்ட்ராண்டில் (Strand) தொடங்கியது. ஆயினும், வெஸ்ட் மின்ஸ்டரின் நகராட்சி உரிமைகள் லண்டனின் நகராட்சி உரிமைகளுக்குப் போட்டியாக இருக்கவில்லை. லண்டனும் சரி, அரசவையும் சரி, அல்லது பாராளுமன்றமும் சரி, வெஸ்ட்மின்ஸ்டருக்கு ஒரு மேயர் பிரபு (Lord Mayor) வேண்டுமென்று எப்பொழுதுமே விரும்பிய தில்லை. எனவே, வெஸ்ட்மின்ஸ்டரானது சுயாட்சி உரிமைகளை அனு பவிக்கவோ அல்லது நகராட்சி உணர்வைப் பெறவோ எப்பொழுதுமே

[1] முந்திய லண்டன் மாநகர் மதில்களாலும் வாயில்களாலும் சூழப்பட்டிருந்தது. அதைவிட இந்த ‘ மதுக்கடை ’ (bars) எல்லைகள் மேலும் விரிவானவை ; உதாரண மாக, லுட்கேட்டைவிட டெம்பிள் பார் மேற்கில் தள்ளியிருந்தது.

வழியில்லாமற்போயிற்று. அது தலைமை ஸ்டுவார்ட் (High Steward) என்ற அதிகாரியால் நியமிக்கப்பட்ட பன்னிரண்டு நகரத்தார்களால் (burgesses) ஆளப்பட்டுவந்தது. இவர்கள் தமது ஆயுட்காலம்வரை பதவி வகித்தனர். மேலும், இவர்களது அதிகாரமுங்கூட, அமைதி காக்கும் நீதிபதிகள் (Justices of the Peace), பல்வேறு பாரிஷ்களின் வெஸ்ட்ரிகள் (Vestries) ஆகியவைகளின் அதிகாரத்துக்கு முன்னல் துரிதமாக மறைந்தொழிந்துவந்தது. வெஸ்ட்மின்ஸ்டரில் பாராளு மன்றத் தேர்தலுக்கான வாக்குரிமை ஜனநாயக முறையில் அமைந் திருந்தது என்பது உண்மை. பெரும்பாலான பரோக்களில் வாக்குரிமையானது மிகச் சிலருக்கே வழங்கப்பட்டிருந்த அக்காலத் திலுங்கூட, வெஸ்ட்மின்ஸ்டர் தொகுதியில் பாராளுமன்றத் தேர்தலில் வழக்கத்துக்கு மாறுன பெரும் அரசியல் பரபரப்பு காணப்பட்டது. சார்லஸ் ஃபாக்ஸின் (Charles Fox) காலத்துக்கு நெடுநாள்களுக்கு முன்பே நிலைமை இதுதான். ஜெனரல் ஸ்டான்ஹோப் 1710 தேர்தலில் போட்டியிட்டதை நாம் ஓர் உதாரணமாக எடுத்துக்கொள்ளலாம். அவர் விக் கட்சியின் சார்பில் நின்றுர்; கடுமையான போட்டியும் தீவிரமான தேர்தல் பிரசாரமும் நடந்தன. கடைசியில் அவர் தோற்கடிக்கப்பட்டார். ஆயினும், வெஸ்ட்மின்ஸ்டரின் தல சுயாட்சி ஒரு வெறும் அதிகாரவர்க்க ஆட்சி. இருப்பினுங்கூட, போட்டி அதிகாரங் களினுல் விளையும் குழப்பத்தைக் காட்டிலும் அது எவ்வளவோ மேலானது.

மறுபுறத்தில், வழக்கத்துக்கு மாறுகப் பெரிய ஜனநாயக முறையில் லண்டன் மாநகர் பூரண சுயாட்சியை அனுபவித்துவந்தது. அச் சமயத்தில் இங்கிலாந்தின் எல்லா பரோக்களிலும் செல்வாக்குமிக்க ஒரு சிலரே அதிகாரமனைத்தையும் தம் கையில் வைத்திருந்தனர்; இதற்கு விதிவிலக்குகள் இப்ஸ்விச்சும் (Ipswich) நார்விச்சும் (Norwich) மட்டுமே. லண்டனில் 26 ஆல்டர்மன்களையும் (Alder-men) 200 பொதுக் கவுன்சிலர்களையும் தேர்ந்தெடுப்பதற்குத் தலவரி செலுத்தும் வீட்டுச் சொந்தக்காரர் 12,000 பேர்கள் தத்தம் வார்டுகளில் ஓட்டளித்தனர். வார்டுகளின் இந்தத் தலவரி செலுத்தும் மக்கள் 89 கில்டுகள், கம்பெனிகள் ஆகியவற்றின் வில்லைச் சேவகர்களை (Liverymen) ஏறத்தாழ ஒத்தவர்கள்; தங்களது இரட்டைச் செல் வாக்கின் மூலம் லண்டன் நகர சுயாட்சியின் துருப்பிடித்துப்போன, சிக்கல்வாய்ந்த அதிகார இயந்திரத்தைத் தங்களது ஓட்டுகளைக் கொண்டு அவர்கள் தம் விருப்பப்படி இயக்கிவந்தனர்.

கடைக்கார 'வாக்காளர்கள் தங்களது வகுப்பைச் (class) சேர்ந்த வர்களையே பொதுக் கவுன்சிலின் (Common Council) பிரதி நிதிகளாகத் தேர்ந்தெடுத்தனர்; நிதியுலகிலும் அரசியலிலும் பெயர்

பெற்று விளங்கிய பெரிய வணிகப் பெருமக்களை அவர்கள் தேர்ந்தெடுக்கவில்லை. நகரத்துச் செல்வந்தர்களே பெரும்பாலும் ஆல்டர்மன்களாகத் (Aldermen) தேர்ந்தெடுக்கப்பட்டனர். பண்டமாற்றுச் சந்தைப் பெருமக்களுக்கும், கடைக்காரர்களின் ஜனநாயகத்துக்குமிடையில் உறவு ஓரளவு இணக்கமுள்ளதாகவே இருந்தது. இவ்விரு பாலாருமே லண்டனின் தனி உரிமைகளையும் அதிகாரத்தையும்பற்றித் தாம் கொண்டிருந்த பெருமிதமும், அதன் சுதந்திரத்தைக் காக்க வேண்டும் என்பதில் காட்டிய பெரும் அக்கறையும்தாம் இதற்குக் காரணம். ஆயினுங்கூட, சில சமயங்கள் இவ்விரு வகுப்பினருக்குமிடையில் தகராறுகள் இருக்கத்தான் செய்தன; ஆனின் ஆட்சியில் ஒரு புதிய போக்குக் காணப்பட்டது. ஜனநாயகமான பொதுக் கவுன்சில் (Common Council) டோரி கட்சிச் சார்புடையதாகவும், மேயர், ஆல்டர்மன்கள், பணம்படைத்த நகரப் பெருமக்கள் ஆகியோர் விக் கட்சிச் சார்புடையவர்களாகவும் திகழ ஆரம்பித்தனர்.

லண்டனின் தேர்ந்தெடுக்கப்பட்ட மாஜிஸ்டிரேட்டுகளின் அதிகாரம் அந் நகர எல்லையுடன் நின்றுவிடவில்லை. அது வெஸ்ட்மின்ஸ்டருக்கு வெளிப்புறமே நின்றுவிட்டது; ஆயினும், அவர்கள் அதை எல்லாப் பக்கங்களிலும் துண்டித்துவிட்டனர். மிடில்செக்ஸ் ஷிரிவால்டியும் (Shrievalty of Middlesex) சௌத்வார்க் பெய்லிவிக்கும் (Bailiwick of Southwark) கூட அவர்களது அதிகாரத்துக்குட்பட்ட பகுதிகள்தாம். லண்டன் துறைமுகத்தை நிர்வகித்து, வரிவிதித்து வந்தவர்களும் அவர்கள்தாம். மேயர் பிரபு (Lord Mayor) தாம் தேம்ஸ் நதியின் பாதுகாப்பாளர்; கிரேவ்செண்ட் (Gravesend) டில்பரியிலிருந்து (Tilbury) ஸ்டேய்ன்ஸ் பிரிட்ஜ்வரையான (Staines Bridge) அந் நதியின் அறுபது மைல் நீளத்துக்கும் அவர்தாம் பொறுப்பு. சுற்றுப்புறத்தில் பன்னிரண்டு கல் தொலைவுக்கு லண்டன் நகரம் நிலக்கரித் தீர்வை விதித்தது; ஏழு மைல் தொலைவுக்கு மார்க்கெட்டுகளின்மீதான தனது சர்வாதீனத்தை அமல் செய்தது.

இங்கிலாந்திலேயே மக்கள் நெருக்கம் மிக அதிகமான பகுதி லண்டன் மாநகரின் உட்பகுதிதான். பிற்காலத்தில் நிகழ்ந்ததைப் போல், அது இருட்டியவுடன் ‘பூனைகளுக்கும் காவல்காரர்களுக்கும்’ வேட்டைக்களமாய்விடவில்லை; வியாபாரக் கோடீஸ்வரர்களும் கடைக்காரர்களும் தம்தம் குடும்பங்களுடன் தமது வியாபாரத் தலங்கட்கு மேற்புறத்திலேயே படுத்துறங்கினர்; வேலைக்காரர்களும் கற்றுக்குட்டிகளும் (apprentices) உச்சியறையிலும், சுமைதூக்கிகளும் செய்தி எடுத்துச்செல்லும் ஆள்களும் பூமியடியறைகளிலும் மூட்டைக் கிடங்குகளிலும் படுத்துக்கிடந்தனர். இங்கிலாந்திலேயே மிகவும் கொழுத்த சில பணக்காரர்களின் இல்லங்கள் குறிப்பாகப் பழைய யூதப் பேட்டை

யிலும் பேசிங்ஹால் தெருவிலும் (Basinghall Street) காணப்பட்டன. ஆனால், பிரபுக்கள், மக்கள் நெருக்கமிக்க லண்டன் நகரத்திலும், ஸ்ட்ராண்ட் பகுதியிலும் இருந்த தமது பண்டைய அரண்மனைகளை ஏற்கெனவே காலிசெய்துவிட்டனர் ; அங்கிருந்த தோட்டங்கள் மறைந்து வந்தன ; கேளிக்கைப் பருவத்தில் (seasons) பிரபுக்கள் காவன்ட் கார்டன், பிக்காடில்லி, புளூம்ஸ்பரி அல்லது செயின்ட் ஜேம்ஸ் சதுக்கம் அல்லது வெஸ்ட்மின்ஸ்டரின் சில பகுதிகள் ஆகிய இடங்களில் வசித்தனர். நாட்டுப்புறங்களிலிருந்து வந்த கனவான்கள், அரசாங்க ஊழியர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள் முதலியோர் இதே இடங்களில் பிரபுக்களின் அரண்மனைகளைச் சுற்றிச் சிறு சிறு வீடுகளில் வசித்தனர். புகழ்வாய்ந்த பல லண்டன் ‘ சதுக்கங்கள் ’ தோன்றிய விதம் இதுதான்.[1]

ஆயினும், தொழில் காரணமாகவும், விட்டுப் பிரிய விருப்பமில்லாமையினாலும் பணக்கார வியாபாரிகள் இன்னும் தங்களது அன்பு நகரத்திலேயே வசித்துவந்தனர். லண்டனைச் சுற்றி இருபத்தைந்து கல் தொலைவுவரை காடுகள், வயல்கள், இனிமையான கிராமங்கள் ஆகியவைகளுக்கு மத்தியில் கிராமாந்தர இல்லங்களையும், தோட்டம் சூழ் மாளிகைகளையும்கூட அவர்கள் கொண்டிருந்தனர். ஹாம்ப்ஸ்டெட் (Hampstead), மேற்கு ஹாம் (West Ham), வல்தாம்ஸ்டோவ் (Walthamstow), எப்சம் டௌன்ஸின் (Epsum Downs) கீழ்ப்பக்கம், செல் சீ தொடங்கி மேற்பக்கமாக தேம்ஸ் நதியின் பசுமையான கரையோரம்—ஆகிய இவ்விடங்களில் அமைந்திருந்த தங்களது இந்த இல்லங்களிலுங்கூட லண்டனில் வாழ்ந்ததுபோலவே அவர்கள் நன்கு உண்டு, குடித்து மகிழ்ச்சியுடன் வாழ்ந்தனர். வசதி குறைந்தவர்கள் விடுமுறை நாள்களில் டல்விச் (Dulwich) போன்ற நாட்டுப்புறப் பகுதிகளுக்கு நடந்துசென்றனர்.

லண்டனின் போக்குவரத்து வழிகளில் நதிதான் மிக அதிகப் போக்குவரத்து மிக்கது. பெருமளவில் நடைபெற்றுவந்த வியாபாரப்

[1] இவ்வாறாக, முதலில் சதாம்ப்டன் சதுக்கம் என்றழைக்கப்பட்ட புளூம்ஸ்பரி சதுக்கம், முன்னிலை மீட்சிக் காலத்துக்குப் பின்னர் கட்டப்பட்ட ஒரு புதிய நவநாகரிகப் பகுதி. சதாம்ப்டன் பிரபுவின் புளூம்ஸ்பரி பண்ணையில் முதன் முதல் திட்டமிட்டுக் கட்டப்பட்டது அச்சதுக்கம். அவரது மரணத்துக்குப் பிறகு அது அவரது மகளான ரகேலுக்கும், அவரது ‘ அருமைக் கணவரான ’, 1683-ல் மரணதண்டனைக்குள்ளான அந்த விக் (Whig) வீரருக்கும் உரியதாயிற்று. அது முதன் முதலில் கட்டப்பட்ட லண்டன் சதுக்கங்களில் ஒன்று. அதன் வடக்குக் கோடியிலிருந்த சதாம்ப்டன் (பின்னர் பெட்ஃபோர்ட்) மாளிகையின் முன்புறத்தைத் திறந்தவெளியாக விடும் பொருட்டே அதற்கு இவ் வடிவம் கொடுக்கப்பட்டது. அப் பெருமாளிகையின் வடபுறத்திலிருந்த வயல்களில் ஒரு நூற்றாண்டுக்குப் பின்னர் ரஸ்ஸல் சதுக்கம் அதே போல் கட்டப்பட்டது. **‘The Russells in Bloomsbury’, Scot Thomson,** அத்தியாயங்கள் **II, III.**

போக்குவரத்தினூடே பிரயாணிகளும் படகுகளில் போய்வந்துகொண்டிருந்தனர். படகுக்காரர்களுக்கும் பரிசல்காரர்களுக்கும் இடையில் வழக்கமான வசைச்சொற்களும் கேலிப்பேச்சுகளும் பரிமாறிக் கொள்ளப்பட்டன. வட கரையில் லண்டன் பாலத்துக்கும் பாராளுமன்றப் படிக்கட்டுகளுக்குமிடையில் குறைந்தது முப்பது தோணித் துறைகளாவது இருந்தன; மக்களை நதியில் குறுக்காகவும் நெடுக்காகவும் ஏற்றிச்செல்வதற்கு அங்குப் படகுகள் காத்துக்கொண்டிருந்தன. லாம்பெத்துக்குச் (Lambeth) செல்லும் அரசியல்வாதிகளும், ஊர் குருக்களும், குபிட் தோட்டத்துக்குப் (Cupid's Garden) பொழுது போக்குக்காகச் செல்லும் கற்றுக்குட்டிகளும் (apprentices), இளைய வழக்கறிஞர்களும் படகுகளில் சென்றுர்கள். கோச்சுவண்டிகளையும் குதிரைகளையும் ஏற்றிச்செல்வதற்கு வேண்டிய மேடையும் தோணிகளும் கூட இருந்தன. ஏனெனில், 1738-ல் வெஸ்ட்மின்ஸ்டர் பாலம் கட்டப்படும்வரை நதிக்கு மேலே இருந்த ஒரே பாலம் லண்டன் பாலம்தான். அதற்கு மேலே இருந்த தெருவானது, பெருந்தீயினுக்குப் (Great Fire) பிறகு நவீன முறைக்கேற்றபடி மீண்டும் புதிதாகக் கட்டப்பட்டிருந்தது; ஆயினும், அதன் பண்டைய தூண்கள் போக்குவரத்தை இன்னமும் தடைசெய்து, ஆபத்தை விளைவித்துக்கொண்டிருந்தன. பாலத்தைத் தாண்டுவது என்பது இன்னும் ஒரு துணிகரச் செயலாகவே கருதப்பட்டது; புத்திசாலி மனிதர்கள் மேலே செல்வதற்கும், முட்டாள்கள் கீழே செல்வதற்கும்தாம் லண்டன் பாலம் கட்டப்பட்டது என்று சொல்லப்பட்டது.

பாலத்துக்குக் கீழே பெருங்கப்பல்கள்கூடச் செல்லமுடிந்தது. கப்பல்களின் உயரம் அவ்வளவு குறைவு. அதற்குக் கீழே லண்டன் ஏரி (Pool of London) முழுவதும் பாய்மரக் காடுகளில் புதைந்து கிடந்தது. இந்த அழகிய காட்சிக்கு ஆம்ஸ்டர்டாம் ஒன்றைத் தவிர உலகில் வேறு ஈடே கிடையாது. கப்பல் துறைமுகத்தில் நுழையும் கால்வாய் மிகவும் நெருக்கமாயிருந்தது; ஏனென்றால், கப்பல் நிற்கும் பெருந்துறைகளில் (docks) ஒன்றுகூட அப்பொழுது கட்டப்படவில்லை; இதற்கு விதிவிலக்குகள் டெப்ட்ஃபோர்டிலிருந்த (Deptford) துறையும், கிழக்கிந்தியக் கம்பெனியின் கப்பல்கள் பயன்படுத்திய பிளாக்வாலிலிருந்த (Blackwall) ஒரே துறையும்தாம்.

தேம்ஸ் நதிக்கரையில் புல்வெளிகட்கு மத்தியில் தன்னந்தனியாக, கம்பீரத்துடன் விளங்கியது செல்சீ (Chelsea) மருத்துவ நிலையம். அங்கு செட்ஜ்மூர் (Sedgemoor), லேன்டன் (Landen), பாய்ன் (Boyne) ஆகியவைகளிலிருந்து வந்த 400 ஓய்வு பெற்ற சிப்பாய்கள் தங்கியிருந்தனர். கார்ப்பொரல் டிரிம்மின் (Corporal Trim) விறுவிறுப்புடன் மார்ல்பரோ பிரபுவின் போர் நடவடிக்கைகளைப் பற்றி

அவர்கள் பேசிக்கொண்டிருந்தனர். சிறிது தூரத்துக்கப்பால் செல்சீ கிராமம் இருந்தது. அங்குச் சில நாகரிக மனிதர்கள் தங்களது நாட்டுப்புற இல்லங்களை அமைத்திருந்தனர்; லண்டன், வெஸ்ட்மின்ஸ் டரின் இரைச்சல் மிகுந்த பகுதிகளைவிட்டு வெகுதூரம் தள்ளி கென்சிங்டன் அரண்மனைவரை அவர்கள் தங்களது அவ்வில்லங்களைக் கட்டியிருந்தனர்.

லண்டனில் ஒவ்வொரு வீட்டிலும் நிலக்கரி உபயோகிக்கப்பட்டது. இதனுல் காற்று மண்டலம் முழுவதும் நிலக்கரிப்புகை கப்பியிருந்தது. 'லண்டன் நூல்களை நான் எப்பொழுது புரட்டினுலும் என் கைகள் நிலக்கரியைப்போல் கறுப்பாகிவிடுகின்றன' என்று வெளிநாட்டு அறிஞர் ஒருவர் இதைப்பற்றிக் குறைகூறினுர். வடகிழக்குக் காற்று வீசிய நாள்களில் இப் புகை வெகுதூரம் அடித்துச் செல்லப்பட்டு, செல்சீகூட ஆஸ்த்மா நோயாளிகட்குத் தீமை பயக்கும் இடமாயிற்று. சாந்த சுபாவமுள்ள தத்துவ அறிஞர் ஷாஃப்ஸ்பரி பிரபுகூட (Earl of Shaftesbury) இதைச் சொல்லிக் குறைப்பட்டார். இதனுல்தான் பலவீனமான நுரையீரல்களைப் பெற்றிருந்த அரசர் வில்லியம் தன்னுல் முடிந்தபோதெல்லாம் ஹாம்ப்டன் கோர்ட் (Hampton Court) மாளிகையில் வசித்தார். தன்னுல் தவிர்க்கமுடியாதபோதெல்லாம் கென்சிங்டனில் வசித்தார்; இதில் வியப்படைவதற்கு ஒன்றுமில்லை. ஆன் அரசி அரியணை ஏறியபொழுது நாட்டுப்புற கென்சிங்டனி லிருந்து நகர்ப்புற செயின்ட் ஜேம்ஸ் அரண்மனைக்குத் தனது இருப் பிடத்தை மாற்றினுர். ஆனுல், அதற்குமேல் தனது அன்புமிக்க குடி மக்களுக்கு அவரால் ஏதும் செய்யமுடியவில்லை; அடிக்கடி அவர் பாத்துக்குச் (Bath) சென்ருர்; அதைவிட அதிகமாக விண்ட்சருக்குச் (Windsor) சென்ருர். ஆயினும், அவர் திரும்பித் தலைநகரத்துக்கு வந்து அங்கு வசித்தபொழுதெல்லாம் செயின்ட் ஜேம்ஸ் அரண் மனையின் வாயில்கள் எல்லோருக்கும் மூடியே கிடந்தன. அவரது அமைச்சர்களும் பெண்நண்பர்களும் மட்டுமே உள்ளே அனுமதிக்கப் பட்டனர்; இவர்களால் அறிமுகப்படுத்தப்பட்டவர்களுங்கூட சிற்சில சமயங்களில் அனுமதிக்கப்பட்டனர்; தனது ஆட்சி முழுவதும் அவர் நோயாளியாகவே காலங்கழித்தார். வில்லியம் எவ்வாறு ஆஸ்த்மாவில் அவதிப்பட்டாரோ, அதேபோல் ஆன் கீல்வாதத்திலுைம் நீர்க்கோவை யினுலும் (dropsy) அவதிப்பட்டார். பாராளுமன்றத்தை ஆரம் பித்துவைப்பதற்காகக் கோச்சு வண்டியில் ஏறி, எலும்புகள் குலுங்க வெஸ்ட்மின்ஸ்டருக்குச் செல்வதும், ஏதாவது ஒரு மாபெரு வெற்றியைக் கொண்டாடுவதற்காக செயின்ட் பால் மதாலயத்துக்குச் செல்வதும் அவருக்கு ஒரு வேதனையாக இருந்தன; இதைச் சகித்துக் கொள்ள சிற்சில சமயங்களில்மட்டுமே அவர் இணங்கினுர்.

எனவே, வில்லியத்தைப் போலவே ஆன் அரசியாரும் அரச போகத்தைத் துய்த்தது மிகக் குறைவு. உண்மையிலும் சரி, தன் அதிகாரத்திலும் சரி, ஒயிட் ஹால் (White Hall) அரண்மனை அழிவுற்ற நிலையிலிருந்தது; அது மீண்டும் எழுச்சிபெறவே இல்லை. துயர நிகழ்ச்சிகளை நினைவூட்டும் விருந்து மண்டபத்தைத் (Banqueting House) தவிர அவ்வரண்மனை முழுதுமே 1698-ல் வெந்து சாம்பலாயிற்று; கூரையற்று நின்ற அதன் சுவர்கள் இன்னமும் நதிக்கரையை அடைத்து நின்றன. பக்கிங்ஹாம் அரண்மனையில் (Buckingham House) ஒரு குடிமகன்தான் இன்னும் வாழ்ந்து வந்தார். செடான் நாற்காலிகளிலும் (Sedan chairs), ஆறு குதிரை பூட்டிய கோச்சுவண்டிகளிலும் மால் (Mall) பகுதியில் உலாவிக் கொண்டும், செயின்ட் ஜேம்ஸ் அரண்மனையின் ஜன்னல்களுக்குக் கீழ்ப்புறமாக உள்ள அரண்மனைப் பூங்காவில் நடைபோட்டுக்கொண்டும் இருந்த நாகரிக உலகு, உலகிலிருந்து மறைந்து வாழும் தமது அரசி தமக்கு அருகிலேதான் இருக்கிறார் என்ற நினைவோடு திருப்தியடைந்தது. எதிர்த் திசையில் சில நிமிடங்கள் நடந்தால் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் இருந்தன என்பதையும் இங்குக் கூறுவது அதிகப் பொருத்தமாக இருக்கும்.

ஆல்ஃபிரட் அரசரின் நாள் தொடங்கி, நார்மன், பிளான்டேஜினெட் மன்னர்களின் காலம் முழுவதும் ஹென்றி, எலிசெபத் ஆகியோரின் சிறப்புமிக்க காலம் தொட்டு 2ஆம் சார்லஸின் ஆட்சி வரையும் 'அரசவை'யானது இங்கிலாந்தின் துடிக்கும் இருதயமாகவும், ஒரு சிறிய அண்டமாகவும் விளங்கிவந்தது. 2ஆம் சார்லஸின் ஆட்சியில் அரசவையானது கேளிக்கைகளுக்கும், வரைமுறை மீறிய செய்கைகளுக்கும், ஒழுங்கீனத்துக்கும் களமாக விளங்கியது; அதேசமயம் அரசியல் ஆதரவு (patronage), நவநாகரிகம், இலக்கியம், கலைகள், கண்டுபிடிப்புகள் (inventions), கம்பெனிகளுக்குச் சலுகைகள் அளித்தல் போன்ற நூற்றுக்கணக்கான நடவடிக்கைகளுக்கும் அது மையமாக விளங்கியது. அரசரின் பேரவாமிக்க பெருங்குடிகள் பெயரையும் பரிசையும் விரும்பி அங்குத் திரண்டிருந்தனர். ஆனால், முன்னிலை மீட்சிக்குப் பிறகு அரசவையின் பேரொளி குன்றியது. முடிதரித்தோரின் அரசியல் அதிகாரமும் சரி, அவர்கள் குண இயல்புகளும் சரி, முந்திய காலத்திலிருந்ததைப்போல் இல்லை. கண்டிப்புமிக்க வில்லியம், நோயாளி ஆன், ஜெர்மனியிலிருந்து வந்த ஜார்ஜுகள், குடியானவர் ஜார்ஜ், உள்நாட்டு விக்டோரியா இவர்களில் ஒருவர்கூட எலிசபெத் அரசியைப்போல ஓர் அலங்காரமான அரசவையில் அமர விரும்பவில்லை. அன்றிலிருந்து அரசர்கள் ஒதுங்கி வாழுமிடமாயிற்று, செயின்ட் ஜேம்ஸ் அரண்மனை; மக்கள் பயபக்தியுடன் தூரத்திலிருந்தே அதைச் சுட்டிக்காட்டினார்கள்; சிற்சில விழாச்

சமயங்களில் தவிர வேறெப்பொழுதும் உள்ளே நுழையமுடியாது; அவ் விழாக்களிலுங்கூடக் கலகலப்பில்லை. ஆதரவு தேடிய மக்கள் வேறு திசையில் திரும்பினர். பாராளுமன்ற அறைகள், அமைச்சர்களின் தனியறைகள், உலகிலேயே குதூகலம் நிறைந்த பிரபுக்களின் நாட்டுப்புற இல்லங்கள் (Country houses), இறுதியாகக் கல்வியறிவு படைத்த பொதுமக்களுக்கு வேண்டுகோள்—இவைகளின் பக்கம் மக்கள் திரும்பினர். அரசவையின் இந்த வீழ்ச்சி இங்கிலாந்தின் வாழ்வை நேரடியாகவும் மறைமுகமாகவும் பல வழிகளில் பாதித்தது. அன்றைய ஃபிரான்சில் இதைப் போன்றதொரு வளர்ச்சியைக் காண முடியாது; அங்கு வெர்சேல் அரண்மனை ஒரு காந்தமாக மனிதர்களை இன்னும் கவர்ந்துவந்தது; அதன் விளைவாக, மாகாணங்களிலும் நாட்டுப்புறங்களிலும் வாழ்வு வறுமையோடிப்போயிற்று.

# 11. டாக்டர் ஜான்சனின் இங்கிலாந்து

[ஏறக்குறைய 1740–1780][1]

## I

மக்கள்தொகை—மருத்துவத் துறை, பொதுநலப் பணிகள்—நீதி—தல நிர்வாகம்—சமயம்—கல்வி—பல்கலைக்கழகங்கள்—வேல்ஸ்.

ஆனின் ஆட்சியும் வால்போலின் மந்திரிபதவிக் காலமும் சேர்ந்த பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் நாற்பதாண்டுகளில் பெரிய மாறுதல்கள் நிகழ்ந்தன. இதுவரை நாட்டில் கொதித்துப் பரவிவந்த ஸ்டுவர்ட் காலத்திய சச்சரவுகளும் குறிக்கோள்களும் இந் நாற்ப தாண்டுகளில்தான் குளிர்ந்து, நெறிப்படுத்தப்பட்டு, நிலையான ஹனோவர் காலத்து வடிவங்களைப் பெற்றுவந்தன. இந்த விதத்தில் மார்ல்பரோ, போலிங்ப்ரோக், ஸ்விஃப்ட், டீஃபோ ஆகியவர்களின் காலம் இரு சகாப்தங்கள் சந்தித்த காலம். இதையடுத்த ஆண்டுகளில் தான் (1740–1780), பதினெட்டாம் நூற்றாண்டின் தேசியப் பண்புகளை அப்படியே முழுவதும் பிரதிபலித்த ஒரு தலைமுறையை நாம் காண்கிறோம்; மன அமைதியுடன்கூடிய, திருப்தி நிறைந்த, தனக்கே உரிய ஒரு கண்ணோட்டத்தைக் கொண்ட ஒரு சமுதாயத்தை நாம் காண்கிறோம். கடந்த காலத்து உணர்ச்சி வேகத்தினால் விளைந்த தொந்தரவுகள் நின்றுபோய்விட்டன; தொழிற் புரட்சியாலும் ஃபிரெஞ்சுப் புரட்சியாலும் நேரப்போகிற எதிர்காலத்தைப்பற்றிய கவலைகளும் இன்னும் தலைதூக்கவில்லை. கடந்த காலத்திய சமய வெறிக்கும், எதிர்காலத்தைக் கலக்கப்போகிற வகுப்பு (class) வெறி, இன (race) வெறி ஆகியவற்றுக்குமிடையில் இந்தக் குறுகிய கால அமைதியை இரக்க சிந்தையுடைய இறைவன் மனித சமுதாயத்துக்கு அளித்தான். இங்கிலாந்தில் அது பிரபுக்களாட்சிக் (aristocracy) காலம்; உரிமைக் குரல் எழுந்த காலம்; சட்ட ஆட்சிக் காலம்; சீர்திருத்தங்கள் தோன்றாத

[1] 2ஆம் ஜார்ஜ், 1727–1760. 3ஆம் ஜார்ஜ், 1760–1820. டாக்டர் ஜான்சன், பிறப்பு 1709, இறப்பு 1784. ஏழாண்டுப் போர், 1755–1761. அமெரிக்க விடுதலைப் போர், 1776–1782.

காலம் ; தனியார் முயற்சி முளைத்து, நிறுவனங்களும் அமைப்புகளும் நசித்த காலம் ; மேற்புறம் சமயப் பொறையுடைமையும், அதற்குக்கீழ் வெஸ்லியின் கொள்கைகளும் நிலவிய காலம் ; மனிதாபிமானக் கொள்கைகளும், பொதுநல உணர்வும், பணியும் வளர்ச்சியுற்ற காலம் ; மனிதனின் வாழ்வுக்கு அணிபூட்டி, வளமளிக்கும் தொழில்கள், கலைகள் அனைத்திலும் ஓர் ஆக்க முயற்சி தோன்றி வெளிப்பட்ட காலம்.

அது ஒரு 'தொன்மைக்' காலம் (classical age); அதாவது, எதிர்க்கப்படாத ஊகங்கள் (assumptions) மேற்கொள்ளப்பட்ட காலம்; மனித வாழ்க்கைபற்றி நீதியுரை வழங்குவதற்கு டாக்டர் ஜான்சன் போன்ற எளிமை மிக்க தத்துவ அறிஞர்களுக்கு அப்பொழுது நிறைய ஓய்வு இருந்தது ; தங்களுக்குப் பழக்கப்பட்டுப்போன சமுதாய நிலையும் சிந்தனை முறைகளும் சதா மாறும் தன்மையுடையன அல்ல என்றும், அவைகள் நிலையானவை என்றும், பகுத்தறிவு, அனுபவம் ஆகியவற்றின் விளைவுகள் அவை என்றும் அவர்கள் திடமாக நம்பினர். அத்தகையதொரு காலம் தான் முன்னேற வேண்டுமென்று விழைவதில்லை ; ஆயினும், அது உண்மையில் முன்னேறக்கூடும் ; தான் பயணம் புறப்படுவதாக அது எண்ணுவதில்லை ; பயணம் முடிந்துவந்து சேர்ந்துவிட்டதாகவே எண்ணுகிறது ; தான் பெற்றிருப்பவைகளுக்காக அது நன்றி செலுத்துகிறது ; வாழ்க்கையை அனுபவிக்கிறது ; 'எல்லையிலாத் துன்பங்களைத் தோற்றுவிக்கும் ஏன், எதற்கு என்ற ஆராய்ச்சிக் கேள்விகளை' அது கேட்பதில்லை. எனவே, இந்தத் 'தொன்மை' மனிதர்கள், பண்டைய கிரேக்க, ரோமானிய உலகை ஒரு பந்த உணர்வோடு திரும்பி நோக்கினர்கள். மேல்வகுப்பு (class) மக்கள், கிரேக்கர்களையும் ரோமானியர்களையும் கௌரவ (honorary) ஆங்கிலேயர்களாகவும், விடுதலை வேட்கையிலும் பண்பாட்டிலும் தமது முன்னோடிகளாகவும் கருதினர் ; ரோமானிய செனேட்டானது பிரிட்டிஷ் பாராளுமன்றத்தின் ஆதிவடிவம் என்று அவர்களால் கருதப்பட்டது. 'காதிக்' (Gothic) ஆசைகளும் அநாகரிகமும் நிறைந்த இடைக் காலத்தைப் (mediaeval period) பற்றிய ஆராய்ச்சி சிறிது நின்று போயிற்று ; அக் காலத்தை அன்புக் கண்ணோடு நோக்குவாரும் குறைந்துபோயினர். இதன் விளைவாக, இடையே தடுப்பவை எவையுமின்றி, காலப் பெருவெளியைக் கடந்து, தூரத்துக் கரையில் நின்றிருக்கும் அந்த ஒரே ஒரு நாகரிகத்தை—'தொன்மை' நாகரிகம் என்று கூறுவதற்குத் தகுதி வாய்ந்த அந்த ஒரே ஒரு நாகரிகத்தை—கண்ணெடுத்துப் பார்க்க முடிந்தது ; தங்களது நற்பேறு வாய்ந்த நாகரிகத்தைப்போல அது ஒன்றுதானே அமைதியும் அறிவொளியும் கலையொளியும் வீசி நின்றது !

பதினெட்டாம் நூற்றுண்டின் நடுப்பகுதியில் நிலவிய மனநிறைவுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில், விக்டோரியா காலத்து மக்களின் மன

நிறைவு தன்னடக்கமே உருவானது என்றுதான் நாம் கூறவேண்டும். ஏனென்றால், விக்டோரியா காலத்தில் வாழ்ந்த மக்கள் ஓரளவுக்குத் தீவிரமான வெற்றிகரமான சீர்திருத்தவாதிகள்; தாங்கள் தோற்றுவித் திருக்கும் அபிவிருத்திகளைக் கண்டு தங்களைத் தாங்களே அவர்கள் மெச்சிக்கொண்டனர். ஆனால், குறைபாடுகள் மலிந்த இந்த உலகத்தில் இங்கிலாந்துதான் தலைசிறந்த நாடாகத் தோன்றியது, பிளாக்ஸ்டன், கிப்பன், பர்க் ஆகியோரது காலத்திய மனிதர்கட்கு. 1688-ன் புரட்சியும் நல்லூழும் தம்மை எந்தச் சிறந்த நிலையில் வைத்துச் சென்றதோ, அதே நிலையில் பிற தொந்தரவுகள் எதுவுமின்றித் தனித்து வாழவேண்டுமென்று அவர்கள் விரும்பினர்கள். பொதுவாக மனித இனத்தின் எதிர்காலத்தைப்பற்றிய தங்களது நம்பிக்கையின்மையின் அடிப்படையில் எழுந்ததுதான் இங்கிலாந்தைப்பற்றிய அவர்களது நம்பிக்கைகள்; உலக முழுவதும் எப்பொழுதும் 'முன்னேறிக்கொண் டிருக்கும்' என்ற நம்பிக்கை அவர்களுக்கில்லை; ஆனால், இத்தகைய நம்பிக்கை பத்தொன்பதாம் நூற்றாண்டு மக்களின் எளிய மனத்துக்கு மகிழ்ச்சியூட்டியது.

ஆங்கிலேய வாழ்வின் யதார்த்த நிலைமைகளை யார் யார் மிக நெருங்கிக் கூர்ந்து கவனித்தார்களோ அவர்கள்தாம் மனநிறைவு சிறிதும் இன்றிக் காணப்பட்டனர்; இதற்கு உதாரணமாக விளங்கிய வர்கள் ஹொகாரத் (Hogarth), ஃபீல்டிங் (Fielding), ஸ்மோலெட் (Smollett), பல பொது நல ஊழியர்கள் ஆகியோர்; தங்களுக்கு எவை எவை தீமை என்று தோன்றினவோ அவைகளையெல்லாம் இவர்கள் ஈவு இரக்கமின்றி, டிக்கன்ஸைப்போல (Dickens), அம்பலப்படுத்தி னர்கள். என்றாலும், அவர்களது கண்டனம்கூட அக் காலத்திய 'தொன்மைக் கால', பழங்காலத் தத்துவத்தின் வரம்புகட்கு உட்பட்ட தாகவே விளங்கியது. அதே சமயம், அக் காலத்தின் மனநிறைவு ஆதாரமற்றது என்று நாம் கூறமுடியாது; ஆனால், சீர்திருத்தத்துக் கான எவ்விதமான இயக்கத்துக்கும் விரோதமான ஒரு சூழ்நிலையை அது காத்துவந்தது துரதிருஷ்டவசமானதுதான். அச் சமுதாயத்தில் எவ்வளவோ குறைபாடுகள் இருந்தாலுங்கூட, மேல்புறம் பிரகாசமாயும் உட்புறம் நிலைபெற்றதாயும் அது விளங்கியது.

பதினெட்டாம் நூற்றாண்டில் இங்கிலாந்து, வேல்ஸின் மக்கள் தொகையைச் சற்று பார்ப்போம். ஆன் அரசி அரியணையேறியபோது சுமார் ஐந்தரை மில்லியனாக இருந்த மக்கள்தொகை 1801-ல் ஒன்பது மில்லியனாக அதிகரித்தது. நமது தீவின் வாழ்வில் பெருமாற்றங்கள் ஏற்படப்போவதை முன்கூட்டியே பறைசாற்றிய இத்தகைய பெருக்கம் இதுவரை நாம் காணாத ஒன்று; இதற்குக் காரணம் குடியிறக்கம் (immigration) அன்று. கூலி மலிவான ஐரிஷ் தொழிலாளிகள்

இப்பொழுது இங்கிலாந்துக்குள் வந்தார்கள்; நமது சமூக, பொருளாதார வாழ்வின் ஒரு முக்கியமான அம்சமாக இது இப்பொழுது விளங்கியது. ஆனால், அதே தொகையில் ஆங்கிலேயர்கள் கடல் கடந்து வெளிநாடுகளுக்குக் குடியேறியதால், இக் குடியிறக்கம் சரிக் கட்டப்பட்டது. எனவே, மக்கள்தொகைப் பெருக்கத்துக்குக் காரணம், பிறப்புவீதத்தின் அதிகரிப்பும் இறப்புவீதத்தின் பெரு வீழ்ச்சியுமாம். அதிகக் குழந்தைகள் உயிர்வாழ்ந்ததும், வயதுவந்தோரின் சராசரி ஆயுட்காலம் நீண்டதும் நவீன காலத்தின் தொடக்கத்தைக் குறிக்கின்றன; இப் பெருமாற்றம் பதினெட்டாம் நூற்றுண்டில் தொடங்கியது. இதற்குத் தலையாய காரணம் மருத்துவ வசதிகளில் ஏற்பட்ட முன்னேற்றம்.

அந் நூற்றுண்டின் முதல் பத்தாண்டுகளில் இறப்பு வீதம் திடீரென அதிகரித்தும் பிறப்பு வீதத்தையும் கடந்துவிட்டது. ஆனால், இந்த ஆபத்தான போக்கு 1730-க்கும் 1760-க்குமிடையில் மாறியது. 1780-க்குப் பிறகு இறப்பு வீதம் மிகவேகமாகக் குறைந்தது.

முதலில் இறப்பு வீதம் அதிகரித்ததற்கும், பின்னர் அது வீழ்ச்சி யுற்றதற்கும் பீர் (beer) மதுவுக்குப் பதிலாக மலிவான ஜின் (gin) அருந்தும் பழக்கம் முதலில் வளர்ந்து, பிறகு குறைந்தது ஒரு காரணம் என்று கருதப்பட்டது. ஏழைமக்களின் பழக்கங்களில் ஏற்பட்ட இந்த மாறுதலின் தீய விளைவுகளை ஹொகார்த் தனது புகழ் பெற்ற நூல்களில் என்றும் அழியாத முறையில் தீட்டிக் காட்டுகிறார்; 'Gin Lane'-ல் நாம் காணும் பயங்கரத்துக்கு மாறாக நிற்கிறது 'Beer Street'-ன் வளமும் செழிப்பும். அந்நூற்றுண்டின் மூன்றாவது பத்தாண்டுகளில், அதாவது, 'Beggar's Opera' சித்திரித்துக் காட்டிய அப் பத்தாண்டுகளில், அரசியல்வாதிகளும் பாராளுமன்ற உறுப்பினர் களும் ஜின் அருந்தும் பழக்கத்தை வேண்டுமென்றே ஊக்குவித்தனர்; சாராய உற்பத்தித் தொழில்மீதான கட்டுப்பாடுகளை யெல்லாம் அகற்றி, சாராய வகைகளின் மீதிருந்த வரியை மிகமிகக் குறைத்தனர். சாராயம் காய்ச்சுவதற்குத் தானியம் தேவை; எனவே, அது நிலச் சொந்தக்காரர்களுக்கு நல்லது என்று கூறினார் டீஃபோ; நிலப்பிரபுக் களடங்கிய பாராளுமன்றமும் அவ்வாறே எண்ணியது. ஆனால், அதனால் நேர்ந்த பயங்கரமான சமூக விளைவுகள் பொதுநல ஊழியர் களால் பாராளுமன்றத்தின் கவனத்துக்குச் சிறிதுசிறிதாகக் கொண்டு வரப்பட்டவுடன், அத்தீமையைத் தணிக்க அரைகுறை நடவடிக்கைகள் சில மேற்கொள்ளப்பட்டன. ஆனால், 1751 வரை அது உண்மையாகத் தடுக்கப்படவில்லை; அவ்வாண்டில்தான் சாராய வகைகள் மீது பெரு வரிகள் சுமத்தப்பட்டன; தயாரிப்பாளர்களாலும் கடைக்காரர்களாலும் அது சில்லறை விற்பனை செய்யப்படுவது தடை செய்யப்பட்டது (24 G. II, c. 40).




Diagram from *Population Problems of the Age of Malthus*. G. Talbot Griffith.
Cam. Press, 1926.

'1751 ஆம் ஆண்டின் சட்டம் அளவுக்கதிகமாகச் சாராயம் குடிப்பதால் விளையும் தீமைகளை உண்மையிலே குறைத்தது. அது லண்டனின் சமூக வரலாற்றில் ஒரு திருப்பு மையம்; வெகுகாலத்துக்கு அது அவ்வாறே கருதப்பட்டுவந்தது' என்று பதினெட்டாம் நூற்றுண்டு லண்டனின் வரலாற்றுசிரியர் கூறுகிறுர். போற்றத்தக்க அந்த ஆண்டுக்குப் பிறகும்கூட, லண்டனில் வயதுவந்தோர் மரணங்களில் எட்டில் ஒரு பாகம் அதிகக் குடியினுல் விளைந்ததே என்று மருத்துவ அறிஞர்கள் கணக்கிட்டனர்; என்றுலும், தீமையின் உச்ச கட்டம் போய்விட்டது; அந் நூற்றுண்டின் பிற்பாதியில் ஆல்க ஹாலுக்குப் போட்டியாகத் தேயிலை வந்தது; அதைத் தலைநகரிலும் நாடு முழுவதிலும் எல்லா வகுப்பினரும் (classes) அருந்தினர்.

ஜின் அருந்தப்பட்ட காலத்தின் உச்சகட்டமான 1740—1742-ல் லண்டன் பகுதியில் சவ அடக்கம் ஞானஸ்நானத்தைப்போல் இரு மடங்காயிருந்தது! அதிக ஆரோக்கியமான, குடிப்பழக்கம் குறைவான நாட்டுப்புறங்களிலிருந்து மக்கள் தலைநகருக்குத் தொடர்ச்சியாக வந்து கொண்டே யிருந்தார்கள்; எனவே, அங்கு மக்கள்தொகை குறைய வில்லை. அந் நூற்றுண்டின் நடுப்பகுதிக்குப்பிறகு வரவேற்கத்தகுந்த பெருமாறுதல்கள் ஏற்பட்டன. 1750-ல் லண்டனில் இறப்பு வீதம் 20-ல் 1; 1821-ல் அது 40-ல் 1 ஆகக் குறைந்துபோய்விட்டது. 1700-க்கும் 1820-க்குமிடையில் அகன்ற லண்டனின் (Greater London) மக்கள் தொகை இரட்டிப்பாயிற்று (674,000-லிருந்து 1,274,000); ஆயினும், ஒவ்வோர் ஆண்டிலும் பதிவு செய்யப்பட்ட சவ அடக்கத்தின் தொகை மாறவேயில்லை. வேறு வகையில் சொன்னுல், மரணத்தின் அம்புகட்கு இரையாகக்கூடிய நபர்களின் எண்ணிக்கை ஒரு நூற்றுண்டுக்கு முன்னிருந்ததைவிட 1820-ல் இருமடங்காக இருந்தாலுங்கூட, அதன் அம்புகள் தாக்கிய இலக்குகளில் அதிகரிப்பு ஒன்றுமில்லை. (பார்க்க, திருமதி ஜார்ஜ், 'London Life in the Eighteenth Century,' பக். 24-38.)

மலிவான ஜின் பானத்தின் காலம் நீடித்தவரை (1720—1750) தலைநகரின் மக்கள்தொகைக் குறைவுக்கு அது ஒரு முக்கியக் காரணமா யிருந்தது. நாடு முழுவதிலுமே அதனுல் விளைந்த சேதம் அதிகம் தான்; ஆயினும், ஏல் மதுவானது நகர்ப்புறங்களைக் காட்டிலும் கிராமப் புறங்களில் அதிகம் அருந்தப்பட்டது. லண்டன் பகுதிக்கு அப்பால் ஜின் சாராயத்தால் விளைந்த தீமைகளைச் சிற்சில சமயங்களில் சமூக வரலாற்றுசிரியர்கள் மிகைப்படுத்திவிட்டார்கள். உதாரணமாக, 1700-க்கும் 1220-க்குமிடையில் இறப்பு வீதத்தில் காணப்பட்ட பெரும் அதிகரிப்புக்கு ஜின் காரணமாக இருக்கமுடியாது; ஏனெனில், அவ்வாண்டுகளில் மலிவான சாராய வகைகளைக் குடிக்கும் பழக்கம்

அதிகம் பரவவில்லை. மேலும், இங்கிலாந்து முழுவதற்குமான சிறப்பு வீதம் 1730-லிருந்து 1750வரை வெகு துரிதமாகக் குறைந்தது; ஆனால், அந்த ஆண்டுகளில்தான் ஜின் அருந்தும் பழக்கம் மிகமிக அதிக அளவில் இருந்தது.

எனவே, அந்நூற்றாண்டின் நடுப்பகுதியிலும், அதைக் காட்டிலும் அதிகமாக அதன் கடைசி இருபது ஆண்டுகளிலும் இறப்பு வீதம் குறிப்பிடத்தக்க அளவில் வீழ்ச்சியுற்றதற்கு வேறு காரணங்களை நாம் காணவேண்டும்; சாராய வகைகளை அருந்தும் பழக்கம் அவ்வாண்டு களில் குறைந்தது என்கிற காரணம் மட்டும் போதுமானதன்று. ஆங்கிலேயக் குழந்தைகளும் சிறுவர்களும் வயதுவந்தோரும் மரண முறுவது ஏன் குறைந்தது என்பதற்கு இரு காரணங்கள், வாழ்க்கை வசதிகளில் ஏற்பட்ட அபிவிருத்தியும், மருத்துவத் துறையில் ஏற்பட்ட முன்னேற்றமும். பதினெட்டாம் நூற்றாண்டில் விவசாயத் துறையில் விளைந்த பெருமுன்னேற்றம் காரணமாகப் பலருக்கு மேலும் கூடு தலான உணவு கிடைத்தது. போக்குவரத்துச் சாதனங்களில் ஏற்பட்ட முன்னேற்றமும், தொழில் முறையில் ஏற்பட்ட மாறுதல்களும் அதிக வேலை வாய்ப்புகளையும் கூடுதலான ஊதியத்தையும் கொடுத்தன; மேலும், குடியானவர்கள் வாங்கக்கூடிய அளவுக்குப் பலவகைப்பட்ட பொருள்கள் பெரும் அளவில் உற்பத்தியாயின. தொழிற் புரட்சியும் விவசாயப் புரட்சியும் சமூகத்தின் மீதும், கிராம நகர வாழ்க்கை வசதி களின் மீதும் பல விரும்பத்தகாத விளைவுகளைத் தோற்றுவித்தன என்பது உண்மை. மகிழ்ச்சிக்கும், அதற்குத் தேவையான திருப்தி மனப்பான்மைக்கும் அது எப்பொழுதுமே வழிசெய்தது என்று கூற முடியாது. என்றாலும், அது சராசரியில் ஒவ்வொரு மனிதனுக்கும் முன்னைக்காட்டிலும் அதிக உணவை, உடையை, மற்றப் பொருள்களை வழங்கியது; என்றாலும், அவைகளின் பங்கீட்டில் (distribution) அநியாயமான ஏற்றத்தாழ்வுகள் இருக்கத்தான் செய்தன. பொருள்கள் இவ்வளவு பெருகியதால் மனிதனின் ஆயுள் நீடித்தது; மக்கள் தொகை தொடர்ந்து பெருகியதற்கு இது ஒரு காரணம்.

இறப்பு வீதம் குறைந்ததற்கு இதைக் காட்டிலும் ஒரு பெரிய காரணம் மருத்துவத்துறை முன்னேற்றம். பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதிலும் மருத்துவத் தொழிலானது போலியறிவு, மரபுவழி வந்த மூடநம்பிக்கை ஆகிய அறியாமை இருளிலிருந்து, விஞ்ஞானம் என்ற ஒளியை நோக்கிப் பயணம் செய்துகொண்டே வந்தது. மருத்துவர், அறுவை மருத்துவர், மருந்துக் கடைக்காரர், லைசென்சு பெறாமல் மருத்துவத் தொழில் செய்வோர் ஆகிய எல்லோருமே அறிவிலும் பணியிலும் வளர்ந்து முன்னேறினர்; குறிப்பாக ஏழை மக்களிடையில் அவர்களது பயன் கருதாப் பணி அதிகரித்தது. இது

வரை அடியோடு புறக்கணிக்கப்பட்டுவந்த ஏழைகள் இப்பொழுதுதான் அவர்களது கவனத்தை ஈர்த்தனர். விஞ்ஞானமும் பொதுநலப் பணி ஆர்வமும்தாம் 'புத்தறிவுக் காலத்தின்' (Age of enlightenment) உணர்வுகளைச் சிறப்பாகப் பிரதிபலித்தன; இந்த உணர்வுகள் காரண மாக மருத்துவர்கள் இன்னும் நல்ல பயிற்சியையும் தொழில் பழக்கத் தையும் பெற்றனர்.

அந் நூற்றுண்டின் ஆரம்பத்தில் பெரியம்மைதான் (வைசூரி) பேரச்சமூட்டும் நோயாக அழகையும், அதற்கு மேலாக ஆவியையும் அழிக்கும் நோயாக விளங்கியது. பல நாடுகளில் பயணம் செய்த மேரி வோர்ட்லி மாண்டேகு சீமாட்டி துருக்கியிலிருந்து நோய்தடுப்பு ஊசியை (inoculation) இங்கிலாந்தில் அறிமுகம் செய்தார். ஒரு நோய்தடுப்பு ஊசி போடும் மருத்துவ நிலையம் லண்டனில் நிறுவப் பட்டது. இந்த வைத்திய முறை இயற்கைக்கு விரோதமானதாகவும் தெய்வத்தை இகழ்வதாகவும் முதலில் கருதப்பட்டாலுங்கூட, அது ஓரளவு பரவி, அந் நோயின் விளைவுகளைக் குறைத்தது. என்றாலும், அந்நூற்றுண்டின் இறுதியில் அம்மைப்பால் குத்தும் முறையை (vacci-nation) ஜென்னர் கண்டுபிடிக்கும்வரை ஒவ்வொரு தலைமுறையிலும் பதின்மூன்றில் ஒருவர் வைசூரிக்குப் பலியாயினர்.

இங்கிலாந்தின் வாழ்வுக்குத் தனது பெரும் அறிவுத் துறைப் பணியை ஸ்காட்லாந்து ஆற்றத் தொடங்கியது. பாராளுமன்றங்களின் ஐக்கியத்தையும், வாணிகத்தின் ஐக்கியத்தையும் தொடர்ந்து மூளை களின் ஐக்கியமும் வந்தது. அக் காலத்தில்தான் ஹியூம், ஸ்மோலெட், ஆடம் ஸ்மித், பாஸ்வெல் ஆகியோர் வாழ்ந்தனர். அக் காலத்தில்தான் சர் ஜான் பிரிங்கில் (Sir John Pringle), ஹண்டர் சகோதரர்கள், வில்லியம் ஸ்மெல்லீ (William Smellie) ஆகியோர் ஸ்காட்லாந்தி லிருந்து லண்டனுக்கு வந்தனர். ஹண்டர் சகோதரர்கள்தாம் பிரிட்டிஷ் அறுவைச் சிகிச்சை முறையை 'அம்பட்டன் வைத்தியத்' தொழிலி லிருந்து நிபுணர்களின் விஞ்ஞானக் கலையாக மாற்றினர்; அதேபோல் தாய்ப்பேறு கால மருத்துவ இயலில் (Midwifery) ஒரு புரட்சியை உண்டாக்கினுர் ஸ்மெல்லீ. பிரிங்கில், இராணுவ சுகாதார முறையை விஞ்ஞான அடிப்படையில் திருத்தியமைத்தார்; பொதுமக்களின் பழக்கவழக்கங்களையும், அவர்களது சுகாதாரத்தையும்கூட அது நல்ல வழியில் பெரிதும் பாதித்தது.

மருத்துவத் தொழில்திறனில் (skill) ஏற்பட்ட பெரும் அபிவிருத்தி களுக்கு உறுதுணையாக மருத்துவ நிலையங்கள் நிறுவப்பட்டன; சமய நம்பிக்கைக் காலம் (Age of Faith) எவ்வாறு தனது பக்திப் பரவசத்தை மதாலயங்களை அமைப்பதிலும் அழகுபடுத்துவதிலும்

வெளிக்காட்டியதோ, அதேபோல இந்தப் பொதுநலப் பணி ஆர்வமும் மருத்துவ நிலையங்களை நிறுவியது. மகப்பேறு மருத்துவ நிலையங்கள் முக்கியமான நகரங்களிலெல்லாம் நிறுவப்பட்டன. எல்லாவித நோயாளி கட்கும் கவுன்டிகளில் மருத்துவ நிலையங்கள் நிறுவப்பட்டன. தலை நகரில் 1720-க்கும் 1745-க்குமிடையில், கை (Guy's), வெஸ்ட்மின்ஸ்டர், செயின்ட் ஜார்ஜ், லண்டன், மிடில்செக்ஸ் ஆகிய மருத்துவ நிலையங்கள் அமைக்கப்பட்டன; இடைக்காலத்தில் (Mediaeval age) நிறுவப்பட்ட செயின்ட் தாமஸ் மருத்துவ நிலையம் ஆனின் ஆட்சியிலேயே புதிப்பிக் கப்பட்டுவிட்டது; பார்ட்டின் (Bart's) மருத்துவ நிலையத்தில் கல்வி புகட்டுமுறையும் பயிற்சியும் துரிதமாக அபிவிருத்தியடைந்துவந்தன. 1700-க்குப் பிறகு 125 ஆண்டுகளில் 154-க்குக் குறையாத புதிய மருத்துவ நிலையங்களும் மருந்துச்சாலைகளும் பிரிட்டனில் அமைக்கப் பட்டன. இவைகள் நகராட்சி மன்றங்களால் நிறுவப்பட்டனவல்ல. நகராட்சி மன்றங்கள் அன்று படுமோசமான நிலையிலிருந்தன; எனவே, இவைகள் அனைத்தும் தனியார் முயற்சியினாலும், மனமுவந்த ஆதர வினாலும், நன்கொடைகளாலுமே தோன்றின.

சிறு குழந்தைகளிடையில் இறப்புவீதம் கேட்பவர் நெஞ்சைத் திடுக்கிடச் செய்யும் அளவுக்கு அதிகமாயிருந்தது. தந்தை பெயர் தெரியாமல் பிறந்து, தாயாலும் கைவிடப்பட்ட குழந்தைகளிடையில் இந்த வீதம் இன்னும் அதிகம். அன்புள்ளம் கொண்ட அக் காலம் இதைக் கண்டு கரைந்தது; தன்னாலியன்றதைச் செய்ய முன்வந்தது. இத் தீமையை ஒழிக்கப் பெரிதும் முயன்ற ஜோனஸ் ஹான்வே (Jonas Hanway) 'பாரிஷ் குழந்தைகளில் மிகமிகச் சிலவே உயிர்பிழைத்து, கற்றுக்குட்டியாகப் (apprentice) பயிற்சி பெறுகின்றன' என்று கூறினர். ஆயிரக்கணக்கான சிசுக்கள் பாரிஷ் குழந்தைகளாக ஆகும் வயதுவரைகூட உயிருடனிருப்பதில்லை; கைவிடப்பட்டுக் காலியறை களில் அவை இறந்துபோகின்றன; அல்லது செலவுச் சுமையாகவும் அவமானச் சின்னமாகவும் இருக்கின்ற காரணத்தால் தமது தாய்மார் களால் நடுத்தெருவில் கிடத்தப்பட்டு இறந்துபோகின்றன. பெற்றவர் களால் கைவிடப்பட்டு, சாலையோரங்களில் பச்சிளங் குழந்தைகள் கிடக்க, கௌரவமான மனிதர்கள் முகத்தைச் சுளுக்கிக்கொண்டு ஒதுங்கிச் செல்லும் காட்சியைக் கண்டு, மாலுமியான காப்டன் கொராம் (Captain Coram) அவர்களின் அன்பு மனம் பொறுக்கவில்லை. கண்டெடுக்கப்பட்ட குழந்தைகளின் விடுதி (Foundling Hospital) என்ற ஒன்றை நிறுவக் கொராம் பல்லாண்டுகள் முயன்று, இறுதியில் 2ஆம் ஜார்ஜிடமிருந்து ஒரு சாசனத்தைப் பெற்ருர்; ஹேண்டெல் (Handel) ஓர் இசைக்கருவியைக் (organ) கொடுத்தார்; ஹொகார்த் ஓர் ஓவியம் வரைந்து தந்தார்; நன்கொடைகள் வந்து குவிந்தன; 1745-ல் விடுதி முடிக்கப்பெற்றுத் திறக்கப்பட்டது. பல சிசுக்களின் உயிர்கள்

காக்கப்பட்டன; கைவிட்டோடிய பல குழந்தைகள் வளர்க்கப்பட்டுத் தொழிற் பயிற்சி தரப்பட்டன.

போற்றத்தக்க இந்தக் காப்டன் இறந்த சில ஆண்டுகள் கழிந்து, அவரால் நிறுவப்பட்ட இந்த விடுதியின் வரலாற்றில் ஒரு கெட்ட தருணம் வந்தது. அவ் விடுதிக்குக் கொண்டுவரப்படும் குழந்தைகள் அனைத்தும் சேர்த்துக்கொள்ளப்படவேண்டும் என்ற நிபந்தனையிட்டு, 1756-ல் அதற்கு ஓர் உதவித்தொகையளித்தது பாராளுமன்றம். பதினையாயிரம் குழந்தைகள் கொண்டுவரப்பட்டன; இதன் இயற்கையான விளைவு என்னவென்றால், இப் பெருந்தொகையில் 4,400 பேர்கள்மட்டுமே உயிருடன் வாழ்ந்து, தொழிற் பயிற்சி பெற்றனர். இந்தப் பயங்கரமான பரிசோதனைக்குப் பிறகு, இந்த விடுதியானது மீண்டும் ஒரு தனியார் நிறுவனமாக ஆயிற்று; ஒரு சிலரே சேர்த்துக்கொள்ளப் பட்டனர்; இதனால் இறப்பு வீதமும் குறைந்தது. இது மிகப் பல்லாண்டுகள் தொடர்ந்து நற்பணி ஆற்றி, சமூக நிலைமைகள் ஓரளவு நல்ல முறையில் திருந்திய இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நகரத்தைவிட்டு வெளியே சென்றது; 'கண்டெடுக்கப்பட்ட குழந்தைகளின் விடுதி இருந்த இடம்' எல்லாக் குழந்தைகளுக்குமான ஒரு விளையாட்டு மைதானமாக மாறி, 'கொராம் மைதானம்' (Coram Fields) என்று புதுப்பெயர் பெற்றது.

3ஆம் ஜார்ஜின் ஆட்சியில் ஆரம்பத்தில் ஹான்வேயின் விடா முயற்சி காரணமாக ஒரு சட்டம் இயற்றப்பட்டது. லண்டன் பகுதியில் இருக்கும் பாரிஷ்கள் (parishes) தங்களது 'பாரிஷ் குழந்தைகளைத்' தொழிலகங்களில் (work-houses) வைத்திருக்கக்கூடாதென்றும், அங்கே அவைகள் வெகு விரைவில் இறந்துபோகின்றன என்றும், இனி அவைகளை நாட்டுப்புறக் குடிசைகளில் (cottages) வைத்து வளர்க்க வேண்டுமென்றும், அங்கே அவைகள் உயிர்வாழ்ந்து நன்கு வளர்கின்றன என்றும் அச் சட்டம் விதித்தது.[1]

[1] ஹான்வே (1712-1786) வேறொன்றுக்காகவும்கூட மிகவும் புகழ் பெற்றவர். அவர்தான் இங்கிலாந்தில் குடையைப் புகுத்தினார். பல ஆண்டுகள் அவர் ஒரு குடையைப் பிடித்துச் சென்றார்; சாதாரண மக்களும், தங்களது பிழைப்புக் கெட்டுவிடும் என்று கோபமுற்ற செடான் (Sedan) நாற்காலி தூக்கிகளும், கோச்சு வண்டிக்காரர்களும் அவரைக் கேலி செய்தனர்; அவர் எதையும் பொருட்படுத்தவில்லை. இறுதியில் அவரது ஆயுட்காலத்தின் கடைசி ஆண்டுகளில் அவரைப் பலர் பின்பற்ற ஆரம்பித்தனர். ஆயினும், அவர் இப் பழக்கத்தை மீண்டும் புகுத்தினார் என்று கூறுவதுதான் பொருத்தமாகும். ஏனெனில், ஹான்வே பிறப்பதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே, 1710-ல், ஸ்விஃப்ட் தனது 'City Shower' என்பதில் இவ்வாறு எழுதியிருந்தார்:

எண்ணெய் பூசிய குடையினின்றும் மழைநீர் அருவி கொட்ட,
ஆடையைத் தூக்கிப் பிடித்து விரைகிறாள் தையல்காரி.

ஒருவேளை தான் சிறு பிள்ளையாயிருந்தபோது லண்டனில் குடை உபயோகிக்கப் படுவதை ஹான்வே பார்த்திருக்கக்கூடும்.

அதேபோல, கடனாளிகளின் சிறைச்சாலைகளில் நிலவிய சீர்கேடுகளை ஜெனரல் ஓகில்தோர்ப் (Oglethorpe) சுட்டிக்காட்டினார். ஃபிளீட் (Fleet), மார்ஷல்சீ (Marshalsea) சிறைச்சாலைகளில் நடந்த கொடுமைகளைப்பற்றி விசாரணை செய்வதற்கு 1729-ல் இவர் பாராளுமன்றத்தை இணங்கச் செய்தார்; இவ்விடங்களில் பணமே இல்லாத கைதிகளிடமிருந்து சிறைக்காவலாளிகள் தமது சம்பளத்தைப் பறிப்பதற்காக அவர்களைச் சித்திரவதை செய்து கொன்றார்கள். அந் நூற்றாண்டு முழுவதும் ஆங்கிலேயச் சிறைச்சாலைகள் நமது நாட்டின் பெயருக்குக் களங்கமூட்டுபவையாகவே விளங்கின; முறையாகச் சம்பளம் கொடுத்துப் பொது அதிகாரிகளை நியமித்து நடத்தும் கிராமங்களையும் செலவுகளையும் எண்ணி அஞ்சி, சிறைச்சாலைகளை நடத்தும் பொறுப்பை இத்தகைய அரக்கர்களிடம் தல அதிகாரிகள் குத்தகைக்கு விடும் பழக்கம் தொடர்ந்து நீடித்தது.[1]

என்றாலும், நிலவிவந்த தீமைகளின் பக்கம் கவனத்தை ஈர்த்து, அவைகளில் சிலவற்றை ஓகில்தோர்ப் குறைத்தார். ஆனால், துயரம் மண்டிய இச் சிறைச்சாலைகளினுள் என்ன நடந்தது என்பதைப்பற்றி அதற்கு முந்திய தலைமுறைகள் சிறிதும் கவலைப்பட்டதில்லை.

இந்த ஜெனரல்தான் ஜார்ஜியா (Georgia) என்ற குடியேற்ற நாட்டை (colony) நிறுவி, அதன் முதல் கவர்னராக ஆனவர்; பல கடனாளிகளையும் ஏழைகளையும் அவர் குடியேற்ற நாட்டுக்குக் கடல் கடந்து அனுப்பினார்.

‘இரக்கமெனும் ஊற்று இதயத்தில் உந்த
எட்டுத் திசையும் சென்றிடலாம்;
ஓகில்தோர்ப் இதற்கோர் உதாரணமே’

என்ற கவிஞர் போப்பின் புகழ்மாலை இவருக்கு மிகவும் பொருத்தமானது தான்.

அந்தக் காலத்தில் பலருக்கு ‘இரக்கமெனும் ஊற்று இதயத்தில்’ பெருகியது. ஓகில்தோர்ப்பின் நண்பரான, ஈடில்லா டாக்டர் ஜான்சனின் வியக்கத்தக்க குடும்ப அமைப்புக்கு இதுதான் காரணமாய் விளங்கியது. அந் நூற்றாண்டின் ஆரம்பம்முதல் இறுதிவரை, தீவிர

[1] முன்பு கைதிகளிடமிருந்து பணம் பறித்துச் சிறைக்காவல்காரர்கள் சம்பளம் எடுத்துக்கொண்டனர். இதை விடுத்து, முறையாகச் சம்பளம் கொடுக்கும் பழக்கத்தை ஏற்படுத்தவேண்டுமென்று பெட்ஃபோர்ட்ஷயர், மற்றைய அண்டை கவுன்டிகள் ஆகியவற்றின் நீதிபதிகளைக் கேட்டுத் தோற்றுப்போனார் ஜான் ஹோவார்ட்; 1773-ல் சிறைச்சாலைகள்பற்றிய தனது ஆயுட்பணியை இவ்வாறு தான் தொடங்கினார்.

மதப்பற்றுக் கொண்ட மனிதர்கள் தங்களது புதிய பியூரிட்டானியக் கோட்பாடுகள் காரணமாகப் புதிய ஏற்பாட்டைப் (New Testament) பின்பற்ற முயன்றனர்; ராபர்ட் நெல்சன், எலிசபெத் ஹேஸ்டிங்ஸ் சீமாட்டி, வெஸ்லி சகோதரர்கள், கூப்பர், கடைசியாக வில்பர்போஸ் ஆகியவர்கள் இவர்களில் சிலர்; இவர்கள், கிராம்வெலின் குதிரை வீரர்கள் எந்தப் பழைய ஏற்பாட்டின் (Old Testament) சற்றுக் கடுமையான கொள்கைகளை ஏற்றுப் போர்க்களம் புகுந்தார்களோ, அந்தப் பழைய ஏற்பாட்டைப் பின்பற்ற மறுத்தார்கள். இப் புதிய பியூரிட்டானிய சமயம் வலிமை பெற்று விளங்கிய இம் முதல் கட்டத்தில் மாமா டாபி (Uncle Toby), வேக்ஃபீல்ட் மதகுரு (Vicar of Wakefield), திரு. ஆல்வொர்த்தி (Mr. Allworthy), உள்ளூர் குரு ஆடம்ஸ் (Parson Adams) ஆகியோர் நாவல் இலக்கியத்தில் தலை சிறந்த கதாபாத்திரங்களாக இடம்பெற்றது ஏதோ தற்செயலாக நிகழ்ந்ததன்று. பிறரது, குறிப்பாக ஏழைகளது தேவைகளையும் துன்பங்களையும் குறித்துப் பெரிதும் கவலைப்படும் இயல்பை இக் காலத்திய இலக்கியத்தில்மட்டுமன்றி, பொதுநலப் பணியையே தமது வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட மனிதர்களின் வாழ்க்கையிலும் நாம் காண்கிறோம்; மேலும், அக் காலத்திய பணிகளிலுங்கூட—முதலில் அறப்பள்ளிக்கூடங்களும், பின்னர் மருத்துவ நிலையங்களும் நிறுவப் பட்டன; பிறகு அந் நூற்றாண்டின் கடைசி ஆண்டுகளில் ஞாயிறு பள்ளிகள் (Sunday Schools) நிறுவப்பட்டன—இதை நாம் காண்கிறோம். இது இன, நிற வேறுபாடுகளின் எல்லைகளைக் கடந்து சென்றது. அரசியல்வாதிகளின் அரசியல் தந்திரம் மிகுந்த கல்மனத்தை யும் கரைத்தது. இந்தியா, ஃபிரான்சு ஆகிய நாடுகளைப்பற்றி பர்க்கும் (Burke) ஃபாக்ஸ்ஸும் (Fox) கொண்டிருந்த சில தவறான கருத்து களுக்கும், அவர்களது சிறந்த சொற்பொழிவுகளுக்கும் தூண்டு சக்தியாக விளங்கியது, 'கொந்தளித்துப் பொங்கிய இந்த இரக்க உணர்வுதான்'; மேலும், அடிமை வியாபாரத்துக்கு (slave trade) எதிராக ஆங்கிலேயர்களின் மனச்சான்று இறுதியாகக் கொதித் தெழுந்ததற்கும் இதுதான் காரணம்.

ஆயினும், இப்புதிய மனிதாபிமான உணர்வு தனியார் முயற்சியைத் தட்டியெழுப்பியதேயொழிய, நிர்வாகம், நகராட்சி, சட்டமியற்றுதல் ஆகிய எதிலும் அது எவ்வித மாறுதலையும் தோற்றுவிக்கவில்லை. அரசாங்கம் தனது சிப்பாய்களையும் கடற்படை வீரர்களையும் நடத்திய விதத்தைக் காட்டிலும், தனியார் துறையில் எஜமானர்கள் தங்களது வேலையாள்களை நல்ல முறையில் நடத்தினர். அரசாங்கக் கடற்படைக் கப்பல்களில் வாழ்க்கை நிலைமைகள் படுகேவலமாக இருந்ததால் மக்கள் தாமாகவே முன்வந்து கடற்படையில் சேரவில்லை; எனவே, ஆள் திரட்டும் குழுவினால் (press-gang) கட்டாய முறையில் ஆள் சேர்க்கும்

அநீதி மூலமாகவே கடற்படை இயங்கிவந்தது. மீன் பிடிப்போன், வியாபாரக் கப்பல் மாலுமி ஆகியோரின் வாழ்வும் இன்னல் நிறைந்தது தான்; ஆயினும், போர்க்கப்பல் வாழ்வைவிட அது மேலானது. போர்க் கப்பலில் உணவு படுமோசம்; அளவும் குறைவு; சம்பளமும் குறைவு; அதுவும் ஒழுங்காகத் தொடர்ந்து தரப்படவில்லை; உடல்நலத்துக்கான வசதிகள் ஒன்றுமே இல்லை; ஆனால், ஒழுங்குக் கட்டுப்பாடு மிகமிகக் கடுமை. 'நமது கடற்படை அநீதியினால் ஏய்க்கப்பட்டும், வன் முறையினால் திரட்டப்பட்டும், கொடுமையினால் ஆளப்பட்டும் வருகிறது' என்று அந்த நல்ல அட்மிரல் வெர்னன் கூறினார். இவர் கடற்படை வீரர்களின் இன்னல்களை அச்சமின்றி எடுத்துக் கூறியதற்காக 2ஆம் ஜார்ஜின் ஆட்சியில் பல துன்பங்களை அனுபவித்தார்.

காலாட்படைச் சிப்பாயும் அவ்வாறே நடத்தப்பட்டான். உள் நாட்டில் அவன் தங்குவதற்குப் பாளையங்கள் (barracks) கிடையா; அவன் ஏல் மதுக் கடைகளில் தங்கவேண்டியிருந்தது; அவனது செலவுகள் ஊர் மக்கள் மீது சுமத்தப்பட்டன; மக்களோ சிப்பாய்களை அடியோடு வெறுத்தனர்; சிப்பாய்களும் மக்களை அடியோடு வெறுத்தனர்; கலகம், கள்ளக் கடத்தல் (smuggling) ஆகியவற்றுக் கெதிரான திறமை வாய்ந்த போலீஸ் படையாக இச் சிப்பாய்களே விளங்கினார்கள்; எனவே, மக்களின் வெறுப்பு மேலும் அதிகரித்தது. ஒழுங்குக் கட்டுப்பாட்டுக்கு ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம். 2ஆம் ஜார்ஜின் சிப்பாய்களில் ஒருவனுக்குப் பதினாறு ஆண்டுகளில் 30,000 கசையடிகள் கொடுக்கப்பட்டன—'ஆயினும் அம் மனிதன் உற் சாகமாகவும் உடல் நலத்துடனும் இருக்கிறான்; கசையடிகளைப்பற்றிக் கடுகளவும் கவலைப்படுவதில்லை.' உள்நாட்டில் நிலை இவ்வாறென்றால், மேற்கிந்தியத் தீவுகளின் பாதுகாப்புக்காக அனுப்பப்படுவது மரண தண்டனைக்கு ஒப்பானது. கடலிலும் நிலத்திலும் போரிட்டு இங்கிலாந் துக்கு ஒரு பேரரசை வென்றுதந்து, அதன் வாணிகத்தைக் காத்து, செல்வத்தைத் தேடி, உள்நாட்டில் மகிழ்ச்சியை நிலைநிறுத்தியவர்கள் இந்த மனிதர்கள்தாம்; அவர்களுக்குக் கிடைத்த கைம்மாறு என்னே!

அந் நூற்றாண்டு முழுவதும், ஆங்கிலேயச் சட்டம் என்ற அந்தக் 'கொலைகாரச் சட்டத் தொகுப்பில்' (Bloody Code) புதுப் புதுச் சட்டங்களைப் பாராளுமன்றம் சேர்த்துக்கொண்டே வந்தது. இதன் விளைவாக, மரணதண்டனை விதிக்கப்படும் குற்றங்களின் பட்டியல் நீண்டது. இறுதியில் அதில் இருநூறு குற்றங்கள் இருந்தன. குதிரை, ஆடு திருடுதல், நாணயங்கள் அச்சடித்தல் ஆகியவைகளுக்கு மட்டு மன்றி, ஐந்து ஷில்லிங் பெறுமானமுள்ள எதையும் ஒரு கடையிலிருந்து திருடுதல், ஒரு மனிதனிடமிருந்து எதையும்—கைக்குட்டையாக இருந் தாலுங்கூடச் சரிதான்—திருடுதல் ஆகிய இவ்வனைத்துக்கும் மரண

தண்டனை விதிக்கப்பட்டது. சட்டத்தில் காணப்பட்ட குழப்பத்தை அளவிடமுடியாது. உதாரணமாக, கொலை செய்ய முயன்ற குற்றத்துக்கு இலேசான தண்டனையும், மூக்கை அறுத்ததற்கு மரண தண்டனையும் கொடுக்கப்பட்டன. மனிதாபிமானம் மிகுந்துவந்த காலத்தில் சட்டத்தின் கடுமை அதிகரித்ததன் விளைவு என்னவென்றால், சிறுசிறு குற்றங்களைச் செய்த மனிதர்கள் தூக்குமேடை ஏறவேண்டியிருக்கும் என்ற காரணத்தால், ஜூரிகள் பற்பல சமயங்களில் அத்தகைய அற்ப குற்றங்களுக்காக மனிதர்களுக்குத் தண்டனையளிக்கவே மறுத்தனர். மேலும், வழக்கொழிந்துபோன, சிக்கல் மிகுந்த சட்ட நடைமுறைகளின் பிடிகளிலிருந்து சட்ட நுட்பப் பிரச்சினைகளை எழுப்பித் தப்பித்துக்கொள்வது ஒரு திறமை மிக்க வழக்கறிஞரின் உதவியால் ஒரு குற்றவாளிக்கு எளிதாயிற்று. ஆறு திருடர்கள் விசாரணைக்கு வந்தால் ஐந்து பேர்கள் எப்படியாவது விடுதலைபெற முடிந்தது; துரதிருஷ்டசாலியான ஒருவன் மட்டுமே தூக்கிலிடப்பட்டான். அந்த ஆறு பேருக்கும் சிறைத்தண்டனை நிச்சயம் என்றிருந்தாலுங்கூட அது ஒரு நல்ல எச்சரிக்கையாக இருந்திருக்கும்.

மேலும், ஒரு குற்றவாளி கைது செய்யப்படுவது அருமையிலும் அருமை; இது நிலைமையை இன்னும் மோசமாக்கிற்று. காரணம், அப்பொழுது நமது தீவில் திறமையான போலீஸ் படை இல்லை; அந் நூற்றாண்டின் மத்தியில் போ தெருவில் தமது வீட்டில் ஃபீல்டிங் (Fielding) சகோதரர்கள் தங்களது அலுவலகத்தை அமைத்தனர். இந்த அலுவலகத்தைச் சேர்ந்த 'ஓட்டக்காரர்கள்' (runners) மட்டுமே அன்று போலீஸ் படையாக விளங்கினர்.[1] ஒரு கட்டுக்கடங்காத கூட்டத்தைக் கலைக்கவேண்டுமென்றால் சிப்பாய்களைத்தான் அழைக்க வேண்டும். இதன் விளைவுதான், கார்டன் கலகங்கள் (Gordon Riots, 1780) என்ற அந்த அவமானப்படத்தக்க சம்பவம்; அதில் எழுபது வீடுகளும் நான்கு சிறைகளும் லண்டன் கும்பலால் தீக்கிரையாக்கப்பட்டன. ஆயினும், நமது முன்னோர்கள் இவ்வளவுதூரம் பொது அமைதியையும் தனியார் சொத்துகளையும் பாதுகாத்ததே வியப்பாகத்தான் இருக்கிறது. அவர்களும், நமது தலைமுறையினரைப்போல, அவ்வளவு நேர்மையாகவும் சட்டத்துக்குக் கீழ்ப்படிந்தும் நடந்திருக்க

[1] நாவலாசிரியர் ஹென்றி ஃபீல்டிங்கும், பிறவிக் குருடரான, திறமை மிக்க ஒன்றுவிட்ட சகோதரர் சர் ஜான் ஃபீல்டிங்கும்தாம் அந்த நூற்றாண்டிலேயே லண்டனின் தலைசிறந்த மாஜிஸ்டிரேட்டுகள். உண்மையில் அவர்கள் வெஸ்ட்மின்ஸ்டரின் உதவிச் சம்பளம் பெற்ற நீதிபதிகள். அக் காலத்திய நாட்டுப் பாடல் ஒன்றில் வழிப்பறிக் கொள்ளைக்காரன் ஒருவன் பாடுகிறான் :

'நாடகம் பார்க்க நான் ஒரு நாள்
லண்டன் சென்றேன் காதலி கைபிடித்தே
ஃபீல்டிங்கின் பிசாசுக் கூட்டமொன்று
பிடித்ததுவே என்னை அந்நகரில்.'

வேண்டும். ஏனெனில், நமது இன்றைய பெருநகரங்களில் போலீஸ் படையைக் கலைத்துவிட்டால் விளைவுகள் என்னவாக இருக்கும்?

ஆயினும், ஐரோப்பாவின் கண்டப் பகுதியில் நெப்போலியனின் சட்டத் தொகுப்பு (Code Napoleon) புகுத்தப்படும்வரையில் ஆங்கிலேய நீதிமுறைதான் தலைசிறந்ததாக விளங்கியது என்று பிளாக்ஸ்டன் (Blackstone) பெருமை பேசினாரல்லவா? அதில் குறைபாடுகள் மலிந்துகிடந்தன என்பது உண்மை; இருந்தாலும் பிளாக்ஸ்டனின் கூற்றில் உண்மை இல்லாமலில்லை. ஃபிரஞ்சுப் புரட்சிக்கு முந்திய மன்னராட்சியின் காலத்தில் ஐரோப்பியச் சட்டத் தொகுப்புகளைக் காட்டிலும் இதில் குறைந்தது இரண்டு நல்ல சிறப்புகளாவது இருந்தன. அரசியல் சம்பந்தப்பட்ட வழக்குகளில் அரசாங்கத்தின் குற்றச்சாட்டுக்கெதிராகத் தன்னைக் காத்துக்கொள்ளக் கைதிக்கு ஓர் உண்மையான வாய்ப்பு அளிக்கப்பட்டது; 1695-ல் இயற்றப்பட்ட துரோகச் சட்டத்தினாலும் (Treason Law), புரட்சிக்குப் பிறகு அரசியல், நீதித்துறை நடவடிக்கைகளின் பொதுவான போக்கினாலும் ஏற்பட்ட அபிவிருத்திகள் இதற்குக் காரணமாயிருந்தன. எந்த வழக்கிலும், அது அரசியல் சம்பந்தப்பட்ட வழக்காக இருந்தாலும் சரி, வேறு வகையானதாக இருந்தாலும் சரி, கைதியை அடித்துத் துன்புறுத்திச் சான்றுகள் திரட்டுவதோ அல்லது குற்றத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்வதோ அனுமதிக்கப்படவில்லை. ஆயினும், ஒரு தண்டனை முறை என்ற விதத்தில் துன்புறுத்துதல் கைவிடப்பட்டது என்று சொல்ல முடியாது; ஏனெனில், சக்கரத்தில் வைத்து ஒருவனை வதைப்பது நமது தீவு அறியாத ஒரு வழக்கம் என்றாலுங்கூட, கசையடி அமலிலிருந்தது; தரைப்படையிலும் கடற்படையிலும் இதைச் சிறப்பாகக் காண முடிந்தது; இதுவும் ஒருவிதத் துன்புறுத்தும் முறைதானே.

ஆங்கிலேய மக்கள் தங்களால் வெறுக்கப்படும் செயலைச் செய்த ஒருவன் தண்டிக்கப்படுவதைக் கண்ணால் காண விரும்பினார்கள். ஊர் மதகுரு உட்ஃபோர்ட் (Parson Woodforde) என்பவர் மனிதர்களிடமும் வாயில்லா விலங்குகளிடமும் பேரன்பு பூண்ட ஒரு புனிதர். அவரது நாட்குறிப்பேட்டிலிருந்து இரண்டு பகுதிகளை மேற்கோள் காட்டுவோம்:

'1777, ஜூலை 22. உருளைக்கிழங்கு திருடியதற்காக ராபர்ட் பிக்கென் இன்று பிற்பகல் ஒரு வண்டியின்பின் கட்டப்பட்டுக் காரியின் (Cary) (சாமர்செட்) தெருக்கள் நெடுகிலும் கொலைப்பணியாளால் (hangman) கசையடி கொடுக்கப்பட்டு இழுத்துச் செல்லப்பட்டான். ஜார்ஜ் விடுதியிலிருந்து (George Inn) ஏஞ்செல் வரையிலும், அங்கிருந்து திரும்பவும் தென்காரியில் ராயல் ஓக் வரையிலும் தெரு நெடு

கிலும், பிறகு ஜார்ஜ் விடுதி வரையிலும் அடிக்கப்பட்டான். அவன் பழைய குற்றவாளியாதலால் £0.17.6 திரட்டப்பட்டுக் கொலைப்பணி யாளுக்குக் கொடுக்கப்பட்டது. ஆனால், இது ஒன்றும் அதிகமன்று— கொலைப்பணியாள் கைதேர்ந்தவன்; அரக்கனே மனித உருக்கொண்டு வந்ததுபோலிருந்தான். என்னைக் கேட்டால் ஒரு செப்புக் காசுகூட நான் அதற்காகத் தரமாட்டேன்.'

'1781, ஏப்ரல் 7. எனது வேலைக்காரன் வில் (Will) பத்து மைலுக்கப்பாலுள்ள நார்விச் சென்று, அங்கு மூன்று வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் தூக்கிலிடப்படுவதைக் காண விரும்பினான்; இன்று காலை அவனுக்கு அனுமதியளித்தேன். மாலை ஏழு மணிக்கு வில் திரும்பிவந்தான். அம் மூவரும் தூக்கிலிடப்பட்டுவிட்டனர்; தம் செய்கைகளுக்காக வருந்தியவர்கள்போல் தோன்றினர்.'

கண்டப் பகுதியில் (continent) நிலவிய நீதிமுறையைவிட ஆங்கிலேய நீதிமுறை சிறந்ததோ இல்லையோ, ஐரோப்பியத் தத்துவ அறிஞர்களும் ஆங்கிலேயத் தத்துவ அறிஞர்களும் தத்தம் நாடுகளின் சட்ட முறைகளையும் தண்டனை முறைகளையும் இப்பொழுது கடுமை யாகத் தாக்கத் தொடங்கினர். கடந்த நூற்றாண்டுகள் எந்தத் தீமைகளை இயற்கையானவை என்று ஏற்றுக்கொண்டனவோ, அதே தீமைகளை இன்று இவர்கள் எதிர்க்க முற்பட்டார்கள். இது ஐரோப்பா முழுவதிலும் காணப்பட்ட மனிதாபிமான இயக்கத்தின் ஒரு பகுதியே யாகும். ஐரோப்பியக் கண்டப் பகுதியில் வால்டேரும் 'தத்துவ அறிஞர்களும்' (philosophere) இவ்வியக்கத்தில் சம்பந்தப்பட்ட வர்கள்; இங்கிலாந்திலோ 'தத்துவமும்', அதே அளவில் சமயமும் இதில் சம்பந்தப்பட்டிருந்தன. ஐரோப்பாவின் குற்றவியல் சட்டங்களை இத்தாலியச் சீர்திருத்தக்காரரான பெக்காரியா (Beccaria) தாக்கினர்; இவரையடுத்து, உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் சிறைச்சாலைகளின் கேவலமான நிலைமைகளை ஹோவார்ட் எடுத்துக்கூறித் தாக்கினர்; பிறகு, ஆங்கிலேயச் சட்டத்தின் பயனற்ற சிக்கல் நிறைந்த முட்டாள் தனத்தை பெந்தாம் (Bentham) அலசி ஆராய்ந்தார். மிகமிகப் பத்தாம் பசலித் தன்மை வாய்ந்த வழக்கறிஞர் தொழிலுக்கு இச் சட்டங்கள்தாமே தேனாக இனித்தன!

மன்னர்களின் தனிப்பட்ட விருப்பங்களைக் காட்டிலும் சிறந்தது சட்டத்தின் ஆட்சி (rule of law) என்ற நல்ல கருத்து பதினெட்டாம் நூற்றாண்டு ஆங்கிலேயர்களின் மனத்தில் ஆழப் பதிந்திருந்தது. 1688-ன் புரட்சியோடு சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளும், நீதிபதிகளை நினைத்தபடியெல்லாம் பதவியிலிருந்து நீக்க முடியாது என்ற நிலை பின்னர் ஏற்பட்டதும் சட்டத்தின் ஆட்சியை நன்கு நிலைநிறுத்தின.

நீதிபதிகள் அரசாங்கத்தின் அடிமை ஊழியர்கள் அல்லரென்றும், அரசாங்கத்துக்கும் குடிகளுக்கும் இடையில் அவர்கள் சுயேச்சையான நடுவர்கள் என்றும் நன்கு நிறுவப்பட்டது.

'Commentaries on the Laws of England' என்ற ஒரு நூலை பிளாக்ஸ்டன் எழுதினுர் (1765). சட்ட உணர்வுமிக்க அக்காலத்தில் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் இருந்த கற்றவர்கள் எல்லோரும் இந் நூலைப் படித்தனர். சட்டத்தின் ஆதிக்கநிலை (Supremacy of law) என்ற உயர்ந்த கருத்து அந்நூலில் புகழ்ந்து பேசப்பட்டது. ஆனுல், இதிலும் ஒரு குறைபாடு விளைந்தது. இவ்வாறு போற்றிப் புகழப்பட்ட அச் சட்டம் நிலையானது என்றும், எக்காலத்துக்கும் அது பொருந்தும் என்றும் கருதப்பட்டது ; ஆனுல், ஒரு நாட்டின் வாழ்வில் ஒரு நிரந்தர விதியாகச் சட்டம் இருக்கவேண்டுமானுல், சமுதாயத்தின் மாறிவரும் தேவைகளுக்கும் சூழ்நிலைகளுக்கும் ஏற்றவகையில் மாறக்கூடியதாக அது இருக்கவேண்டும். பதினெட்டாம் நூற்ருண்டில் பாராளுமன்றமானது சட்டமியற்றும் செயலில் ஒன்றும் சுறுசுறுப்பு காட்டவில்லை ; நிலங்களுக்கு வேலியமைத்தல், சுங்கச் சாவடிச்சாலைகளை அமைத்தல் அல்லது வேறு பொருளாதார நடவடிக்கைகள் முதலியவை சம்பந்தமாக உறுப்பினர்களால் மட்டுமே தனிப்பட்ட முறையில் மசோதாக்கள் கொண்டுவரப்பட்டு, நிறைவேற்றப்பட்டன. நிர்வாக விஷயங்களிலுங்கூட சட்டமியற்றும் வேலை பின்தங்கிய நிலையிலேயே இருந்தது ; பெரும் தொழில் வளர்ச்சிகள் ஒவ்வோர் ஆண்டும் சமூக நிலைமைகளை மாற்றிப் பெருகிவரும் மக்கள் தொகையின் தேவைகளை அதிகரித்துவந்த அக்காலத்தில் இது மிகவும் வருந்தத்தக்கது.

எனவே, ஆங்கிலேயச் சட்டச் சீர்திருத்தத்தின் தந்தையாக விளங்கிய ஜெரீமி பெந்தாம் (Jeremy Bentham) பிளாக்ஸ்டனை ஒரு மாபெரும் விரோதியாகக் கருதினுர். 'என்ருே இறந்தொழிந்துபோன பழைய காலத்தின் தேவைகளை அடிப்படையாகக்கொண்டு எழுந்த ஆங்கிலேயச் சட்டங்களை அதே வடிவில் வைத்து வழிபடுமாறு மக்களுக்கு அறிவுரைகூறி, மாற்றப்பாதையில் இவர் வழிமறித்து நிற்கிருர்' என்று பெந்தாம் கருதினுர்.[1]

'Fragments on Government' என்ற தனது நூலில் பிளாக்ஸ்டனுக்கெதிரான முதல் தாக்குதலை இளைஞர் பெந்தாம் 1776-ல்

[1] பிளாக்ஸ்டனின் பழைமைப் பற்றை பெந்தாம் ஓரளவு மிகைப்படுத்திவிட்டார் என்று பேராசிரியர் ஹோல்ட்ஸ்வொர்த் (Holdsworth) கருதுகிருர். பெந்தாம் கூறுவதைப்போல் அவர் ஒன்றும் எல்லாவிதத்திலும் அவ்வளவு குருடரல்லர் என்று கருதுகிருர்.

தொடங்கினர்; அவ்வாண்டு மிக முக்கியமானது; ஏனெனில், ஆடம் ஸ்மித்தின் 'Wealth of Nations' நூலும், கிப்பனின் வரலாற்று நூலின் முதல் பகுதியும் 'எழுதப்பட்ட ஆண்டு அதுதான்; அமெரிக்கச் சுதந்திரப் பிரகடனம் வெளியிடப்பட்டதும் அவ்வாண்டில்தான். எண்பதாவது வயதைத் தாண்டிய பெந்தாம் 1832-ல் இறந்த சமயத்தில் தான், பிளாக்ஸ்டனின் காலத்தியச் சட்டங்களைத் திருத்தும் வேலை தொடங்கியிருந்தது. ஆனாலும், அவரது விடாமுயற்சிகள் வீண்போக வில்லை; வளர்ந்துவரும் தலைமுறையினரிடம் தனது கருத்துகளை அவர் பரப்பி வெற்றி கண்டுவிட்டார். அப்பொழுது தொடங்கி பெந்தாமின் 'பயன்முதல் தத்துவக் கோட்பாடுகட்கு' (utilitarian principles) ஏற்ற வகையில் நமது சட்டங்கள் விரைவாகத் திருத்தப் பட்டு வந்தன.

சீர்திருத்தம் என்பது பத்தொன்பதாம் நூற்றாண்டுக்கென்றே ஒதுக்கிவைக்கப்பட்டது. ஏற்கெனவே ஹனோவர் வமிச அரசர்கள் காலத்தில் சட்டத்தின் ஆட்சி (rule of law) நிலைநிறுத்தப்பட் டிருந்தது; அச் சட்டத்தில் குறைபாடுகள் இருக்கலாம்; ஆனாலும், அது சுதந்திர உரிமைகளைத் தந்தது. அந்த உறுதியான அடிப்படையின் பேரில்தான், நமது பிந்திய சீர்திருத்தங்கள் எல்லாம் நிறுவப்பட்டன. பதினெட்டாம் நூற்றாண்டு சுதந்திர உரிமைச் சட்டத்தைச் (law of freedom) சமைக்காமல் இருந்திருந்தால், இங்கிலாந்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டானது புரட்சி வன்முறை மூலமாக முன்னேறியிருக்கும்; ஆனால், அதற்குமாறாகப் பாராளுமன்றத் தினால் சட்டங்கள் திருத்தப்பட்டு அமைதியான வழியில் அது முன்னேறியது.

பதினெட்டாம் நூற்றாண்டில் எங்குபார்த்தாலும் பேசப்பட்ட இரவலர் சட்டத்தின் (poor-law) செயல்முறைக் குறைபாடுகளுக்குக் காரணம், நவீன அரசாங்க நிறுவனங்கள் இல்லாததுதான்; அதற்கு மேலாக, மத்திய நிறுவனமும் கட்டுதிட்டமும் அறவே இல்லாமற் போயின. ஏழைகள், வேலையற்றோர் ஆகியோர் பிரச்சினை ஒரு தேசப் பிரச்சினை, அல்லது ஒரு பிரதேசப் பிரச்சினை; ஆயினும், ஒவ்வொரு குட்டி பாரிஷும் (Parish) இப் பிரச்சினையைத் தனிப்பட்டமுறையில், அடுத்த பாரிஷ்களுக்கு விரோதமான முறையில், கவனித்துவந்தன. கிராமப்புற அறியாமையும், குறுகிய மனப்பான்மைகொண்ட தலப் போட்டியும் பொறாமைகளும் தத்தம் முறைகளில் இப் பெரும் பிரச்சினை யைக் கவனித்துவந்தன; இரவலர் வரிப் (poor-rate) பணத்திலிருந்து ஒருவரை ஆதரிக்கவேண்டிய நிலை வருவதற்கு முன்னாலேயே அவரைப் பாரிஷிலிருந்து விரட்டிவிட முயலப்பட்டது. இதனால் தொழிலாளர் களின் இடப்பெயர்ச்சி (fluidity of labour) தடைப்பட்டு,

வேலையில்லாப் பிரச்சினை தீவிரமடைந்தது. ஒவ்வொரு பாரிஷில் வசித்த மக்களும் தம்மிடை காணப்பட்ட ஏழைகளை ஆதரிக்க இரவலர் வரி செலுத்துவது சட்டப்படி கட்டாயமாயிருந்தது; ஆனால் சாலைகள், சிறைகள், சுகாதார வசதிகள், போலீஸ் ஆகியவற்றுக்காக மாஜிஸ்டிரேட்டுகள் கூடுதல் வரி விதித்தால் அதைப் பெரும் கொடுமையாக மக்கள் கருதினர். இந்த விதத்தில் போலீஸ், சிறைச்சாலை ஆகிய பிரச்சினையைவிட ஏழைகளின் பிரச்சினை எவ்வளவோ மேலானதாக இருந்தது.

இங்கிலாந்தின் கிராமங்கள் அமைதி காக்கும் நீதிபதிகளால் (Justices of the Peace) ஆளப்பட்டுவந்தன. தல வரியைக் கூட்டுவது, அதைச் செலவிடும்முறை ஆகியவற்றை அவர்களே முடிவு செய்தனர். இந் நீதிபதிகள் பெயரளவில் மன்னராலும், ஆனால், உண்மையில் அந்த ஷயரின் கனவான்களின் விருப்பத்தின்படி லெப்டினன்ட் பிரபுவாலும் (Lord Lieutenant) நியமிக்கப்பட்டனர். பெயரளவில் அரசாங்க அதிகாரிகளாயிருந்த இந் நீதிபதிகள் உண்மையில் தல அதிகாரத்தைப் பிரதிநிதித்துவப்படுத்தினார்கள். டியூடர் காலத்திலும், முந்திய ஸ்டுவர்ட் காலத்திலும் இவர்கள் பிரிவி கவுன்சிலைக் கண்டு நடுங்கினார்கள்; இவர்களின் நடவடிக்கைகளுக்கு, பிரிவி கவுன்சில் தேசியக் கோட்பாடுகளின் அடிப்படையில் வழிகாட்டிச் சென்றது. ஆனால், இப்பொழுது எல்லாம் மாறிவிட்டன. சமயத்திலும் அரசியலிலும் தங்களது விசுவாசத்தை அளவுக்கு மீறிப் பரிசோதித்துப் பார்த்த மத்திய அரசாங்கத்துக்கெதிராக இந்த ஊதியம் பெறு தல மாஜிஸ்திரேட்டுகள் நடத்திய புரட்சியைக்கூட ஒரு விதத்தில் 1688ஆம் ஆண்டின் புரட்சி விளங்கியது. இரண்டாம் ஜேம்ஸின் அதிகாரப் பேராசை காரணமாக, பாராளுமன்றத்தில் சிறப்புரிமைகளும், ஆங்கிலேயர்களின் உரிமைகளும் அதிகமாக மீண்டும் வலியுறுத்தப்பட்டன. இதன் விளைவாக அரசியல் விவகாரங்களில் மட்டுமன்றி, சமூக விவகாரங்களிலும்கூட, தல அதிகாரிகளின் மீதான மத்தியக் கட்டுப்பாடு அறவே அகன்றுவிட்டது. எல்லா விவகாரங்களிலும் முழு அதிகாரத்தையும் தன் பிடியிலேயே வைத்திருக்கவேண்டுமென்று பிரிவி கவுன்சில் முயன்றது; அதனால், நாட்டுக்கு நல்லது விளையும் முறையில் முன்பு தான் வைத்திருந்த அந்த அதிகாரங்களையும்கூட இப்பொழுது அது இழந்துவிட்டது. பதினெட்டாம் நூற்றாண்டில் நிலைமை எதிர்மாறாக ஆகிவிட்டது; மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குத் தாம் அடங்கியிருப்பதற்குப் பதிலாக, அமைதி காக்கும் நீதிபதிகள் மத்திய அரசாங்கத்தின்மீதே ஆட்சி செலுத்தினர் என்று கூறலாம். இதற்குப் பெரும் தேசியப் பாராளுமன்றத்தின் குவார்ட்டர் செஷன்சு ஒரு வாய்ப்பை அளித்தது. 'ஒயிட்ஹாலைப்' பற்றி அன்று எந்தத் தல அதிகார நிறுவனமும் கவலைப்பட்டதில்லை.

அமைதிகாக்கும் நீதிபதிகளின் அதிகாரங்களும் கடமைகளும் கிராமப்புற வாழ்வின் எல்லாத் துறைகளேயும் தம்முள் அடக்கியிருந்தன. குவார்டர் செஷன்சில், அல்லது சிறு செஷன்சில் (Petty Sessions), அல்லது தனியொரு மாஜிஸ்டிரேட்டின் இல்லத்தில் அவர்கள் அமர்ந்து நீதி வழங்கினர். சாலேகள், பாலங்கள், சிறைகள், தொழிலகங்கள் (work houses) ஆகியவற்றைப் பராமரிக்கும் பொறுப்பு அவர்களேச் சார்ந்தது. பொது விடுதிகள் (public houses) அவர்களிடமிருந்தே லேசென்சு பெறவேண்டும். எங்கெங்கு கவுன்டி வரி விதிக்கப்பட்டதோ, அங்கெல்லாம் அதை விதித்தவர்கள் அவர்கள் தாம். இவையும், இதர பல கவுன்டிப் பொறுப்புகளும் இவர்களது அதிகாரத்திலிருந்தன. ஆயினும், இவர்களுக்கு உதவவும், தல நிர்வாகத்தை நடத்தவும் எந்தவிதமான முறையான அலுவலகமோ, அல்லது திறமை வாய்ந்த அதிகார நிறுவனமோ கிடையாது. ஏனென்ருல், அதற்கு மேலும் அதிகமான கவுன்டி வரி வசூலிக்க வேண்டும்; மக்களோ அதைச் செலுத்த விரும்பவில்லே; வரிச்சுமை குறைவாக இருப்பதையே அவர்கள் விரும்பினுர்கள்; தல ஆட்சி திறமையற்ற முறையில் நடப்பதைப்பற்றி அவர்களுக்குக் கவலேயில்லே. இந்த விஷயத்தில் இங்கிலாந்தின் இன்றைய நடைமுறை மிகமிக மாறுபட்டது; ஆகையால், எவ்வளவு பெரிய மாற்றம் நிகழ்ந்திருக்கிறது என்பதைப் புரிந்துகொள்வதுகூடக் கடினம்.[1]

அந் நூற்ருண்டின் மத்தியில், வாழ்வின் அநீதிகளேக் கூர்ந்து கவனித்த ஃபீல்டிங், ஸ்மோலெட் முதலியோர் அமைதிகாக்கும் நீதிபதிகளின் பொறுப்பற்ற அதிகாரத்தைப்பற்றியும், கொடுங்கோன்மை, ஒரவஞ்சனே ஆகிய முறைகளில் அவர்கள் தமது அதிகாரத்தை அடிக்கடி தவருகப் பயன்படுத்துவதையும் தமது எழுத்துகளில் கடுமையாகத் தாக்கினுர்கள். அமைதிகாக்கும் நீதிபதிகளுக்கிடையில் ஒரு கெட்ட வகை ஒன்று இருந்தது; அவர்கள் 'வியாபாரம் செய்யும் நீதிபதிகள்' (Trading Justices) என்றழைக்கப்பட்டனர்; இவர்கள் சமுதாயத்தின் மேல் தட்டிலிருந்து வந்தவர்கள் அல்லர். பணம் சேர்ப்பதற்கென்றே எவ்வாருவது முயன்று மாஜிஸ்டிரேட்டுகளாக ஆனவர்கள். ஆனுல், பொதுவாகக் கூறுமிடத்து, நாட்டுப்புற மாவட்டங்களில் பெரும்பாலும் எல்லா வேலேகளேயும் செய்த இந்த நீதிபதிகள் செல்வம் படைத்த கனவான்கள். அவர்கள் லஞ்சம் வாங்கவோ அல்லது தவருன வழிகளில் செல்லவோ தேவையில்லே; அவ்வளவு செல்வந்தர்கள். சம்பள

[1] 1782-க்கும் 1793-க்கு மிடையில் ஏழைகள் நிவாரணத்திற்கான ஆண்டுச் செலவு இரண்டு மில்லியன் பவுன்கள்; தலவரிகளேக் கொண்டு செய்யப்பட்ட மற்ற எல்லாச் செலவுகளும் சேர்ந்து ஆண்டு ஒன்றுக்கு 200,000 பவுன்களுக்கு மேல் செல்லவில்லே! Halevy *Hist. of Eng. People*, II, பக்கம் 233 (பெலிகன் பதிப்பு).

மில்லாமல் பொதுப்பணி செய்வதில் அவர்கள் பெருமைப்பட்டார்கள்; தங்களது அண்டை மனிதர்களிடம் நல்ல பெயரெடுக்கவேண்டு மென்பதே அவர்களது அக்கறை. ஆயினும், பெரும்பாலும் அவர்கள் ஒன்றுமே அறியாதவர்கள்; தவருன கருத்துகள் கொண்டவர்கள்; ஆனுல், அநீதி செய்யவேண்டும் என்ற கருத்துடையவர்கள் அல்லர். கடைசியாக, யதேச்சாதிகாரிகளாக விளங்கினுர்கள்.

இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்ருண்டு ஒரு மதவிரோத காலம் என்று பலர் பொதுவாக நினைக்கிருர்கள். இது தவறு. பிந்திய இடைக்காலத்திலும், டியூடர் காலத்திலும் இருந்ததைவிட அதிகப்படி யான மக்கள் கிறிஸ்தவ சமயக் கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்ட ஒரு நீதி நெறியை இப்பொழுது வாழ்வின் விதியாகக் கொண்டிருந்தனர். பதினேழாம் நூற்ருண்டு எந்த அளவுக்கு ஒரு 'சமய காலமோ', அதே அளவுக்கு வெஸ்லி, கூப்பர், டாக்டர் ஜான்சன் ஆகியோர் வாழ்ந்த இக் காலமும்கூட ஒரு 'சமய காலம்' என்று கூறலாம். ஆனுல், ஒரு வித்தியாசம். கிறிஸ்துவ சமயத்தின் பல்வேறு போட்டிக் கோட்பாடுகளைப்பற்றி வாளேந்திப் போரிடுவது இப்பொழுது நின்றுபோய்விட்டது; இதன் விளைவாக, இன்னும் அதிகமான கருத்து வேற்றுமைகளுங்கூட ஓரளவு பொறுத்துக்கொள்ளப்பட்டன.

சமயப்பொறை (toleration) என்பது அரசியல் துறையில் மிகவும் பயனளிப்பது என்பது மட்டுமன்று; அது நீதியானதும் சரியானதும் ஆகும் என்று லாக் (Locke) கூறினுரல்லவா? அந்தக் கூற்ருனது பதினெட்டாம் நூற்ருண்டு செல்லச்செல்ல எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது. எல்லோராலும் நிந்திக்கப்படுகிற அந்த நூற்ருண்டு இதனுல் கிறிஸ்துவ சமய ஒழுக்கங்களில் தவறியதாகாது என்று வாதிக் கலாம். மனித அனுபவமானது நெடுங்காலமாகவே சமயத்தையும், பிற சமய வெறுப்பையும் ஒன்ருகக் கருதிவந்தது; இதன் காரணமாக, பிற சமய வெறுப்பு தணிந்ததும், மதமே சீர்கேடுற்றுவிட்டது என்று மக்கள் நினைத்தனர். இந்தமாதிரி எண்ணுவது சரியானதன்று.

தங்களிடம் சமுதாயம் சமயப் பொறையுடன் நடந்துகொள்ள வேண்டுமென்று எதிர்பார்ப்பதற்கு நாத்திகர்களுக்கோ அல்லது ரோமன் கத்தோலிக்கர்களுக்கோ உரிமை கிடையாது என்றும், ஏனெனில், நாத்திகர்கள் ஒழுக்க நெறிகளையும், கத்தோலிக்கர்கள் அரசையும் எதிர்த்துப் பலவீனப்படுத்தினுர்கள் என்றும் லாக் எழுதி னுர். இரண்டாம் ஜேம்ஸ், வில்லியம் ஆகியோரின் காலத்திலேயே அவர் இவ்வாறு வாதித்தார். ஆயினும், தனக்குப் பிந்திய நூற்ருண்டில் தாராள மனப்பான்மையும், சமயப் பொறையும் மிக்க ஒரு தத்துவம் மக்களிடையில் பரவ இவர் உதவினுர்; இத் தத்துவத்தினுல் இவ் விருவகையினரும் கூடப் பயன் எய்தினர்.

'Reasonableness of Christianity' என்ற ஒரு நூலை லாக் எழுதினர் (இந் நூலின் தலைப்பே ஒரு புதிய கருத்துப் போக்கையும், சமயப் போக்கையும் குறிக்கிறது). இரண்டு இயக்கங்களுக்கு இது ஒரு தொடக்கமாக இருந்தது; ஒன்று லாடிடுடினேரியனிசம் (Latitudinarianism). சிறிது காலத்துக்கு இங்கிலாந்தின் திருச்சபையில் இது எங்கும் பரவலாகக் காணப்பட்டது; என்றாலும் மெதாடிசத்தில் (Methodism) இது காணப்பட்டது என்று கூறமுடியாது. இரண்டு, ஆங்கிலேய இயற்கைச் சமய இயக்கம் (English Deistic movement); செல்வாக்குடைய மக்கள் அனைவரும் இதைவிட்டு விலகியே நின்றார்கள்.

அந் நூற்றாண்டின் முதல் முப்பதாண்டுகளில் டோலண்ட் (Toland), டிண்டால் (Tindal), காலின்ஸ் (Collins) போன்ற இயற்கைச் சமயவாதிகள் தங்களது கருத்துகளை மிகவும் எச்சரிக்கையாக நூல்களில் எழுதி வெளியிட முடிந்தது; யாரும் அவர்களைத் தண்டிக்கவில்லை. ஸ்விஃப்ட் தனது கேலி நிறைந்த சொற் கணைகளால் பதிலளித்தார்; மேலும், அவர்களைவிட அறிவில் தலையோங்கி நின்ற பிஷப் பட்லர் (Butler), பிஷப் பெர்க்ளி (Berkeley), பென்ட்லி (Bentley), வில்லியம் லா (William Law) ஆகியோரும் எதிர்த்து வாதப் போர் நடத்தினர். இந்த ஆங்கிலேய இயற்கைச் சமயவாதிகளின் சீடர்களில் மிக்க அஞ்சாமையும் வல்லமையும்கொண்ட வால்டேருக்கு ஃபிரான்சில் அத்தகைய எதிர்ப்பு ஒன்றுமில்லை; ஆனால், திருச்சபையும் அரசும் அவருக்கு விரோதிகளாயின. ஐரோப்பியக் கண்டப் பகுதியின் இயற்கைச் சமயமானது இங்கிலாந்தின் இயற்கைச் சமயத்தைக் காட்டிலும் அதிக உறுதியுள்ளதாகவும், கிறிஸ்துவ சமயத்தை எதிர்ப்பதாகவும் விளங்கியதற்கு இதுவும் ஒரு காரணம். எனவேதான், மிகவும் சமீப காலத்தில் வாழ்ந்த, பதினெட்டாம் நூற்றாண்டுச் சிந்தனையின் வரலாற்றாசிரியர் 'விஞ்ஞானத்துக்கும் சமயத்துக்குமிடையிலான அந்தப் புனிதக் கூட்டணி என்ற இங்கிலாந்துக்கே உரிய, அந்த அம்சத்தைப்' பற்றிப் பேசினர்; அக் கூட்டணி 'அந் நூற்றாண்டின் இறுதிவரை (ஹ்யூமுக்கு மாறாக) தொடர்ந்து நீடித்தது.' (Basil Willey, 'The Eighteenth Century Background', பக்கம் 136.) இந்தப் 'புனிதக் கூட்டணியை' ஏற்படுத்தியவர் டேவிட் ஹார்ட்லி (David Hartley); கோலாரிட்ஜ் (Coloridge) தனது மகனுக்கு இவரது பெயரைத்தான் சூட்டினர். போப்பின் (Pope) புகழ்பெற்ற சொற்களில் :

> இயற்கையும் இயற்கையின் விதிகளும்
> மறைந்து கிடந்தன இருளில்;
> 'தோன்றுக நியூடன்!' என்றார் இறைவன்!
> இருளகன்றது, ஒளி பிறந்ததே.

ரூபிலாக்கால் (Roubillac) செய்யப்பட்ட நியூடனின் உருவச்சிலை கேம்பிரிட்ஜ் டிரினிட்டி கல்லூரியின் மதாலயத்தில் 1755-ல் நிறுத்தப் பட்டது. விஞ்ஞானம், சமயம் ஆகியவற்றின் ஒற்றுமையை இந் நிகழ்ச்சி சிறந்த முறையில் உருவகப்படுத்தியது.

மூன்றும் ஜார்ஜின் ஆட்சியின் ஆரம்ப ஆண்டுகளில் உறுதிமிக்க ஐயக் கொள்கையினரும் (sceptics) இருக்கத்தான் செய்தனர்; பேரறிஞர்களான ஹ்யூம், கிப்பன் போன்றவர்கள் அவர்களில் சிலர். ஆயினும், கிப்பன் (Gibbon) கூடத் தனது உண்மையான கருத்துகளை வஞ்சப் புகழ்ச்சியென்ற அந்த மெட்டான போர்வைக்குள் மறைத்தேதான் வெளியிடமுடிந்தது. ஐயக்கொள்கையைக் கடைப்பிடித்த இந்த அறிஞர்களும், அவர்களைப் பின்பற்றியவர்களும் சமுதாயத்தால் மதிக்கப்படவில்லை என்பதை பாஸ்வெல் எழுதிய ஜான்சன் வாழ்க்கை வரலாற்றைப் படித்த ஒவ்வொருவரும் அறிவர். வைதீக எழுத்தாளர் களின் தாக்குதல்களும்—அவைகளின் தரம் வீழ்ந்துபோய்விட்டாலும் கூட—பயங்கரமாயிருந்தன. கிப்பன் எழுதிய ரோமாபுரி வரலாற்றின் முதல் பகுதி எவ்வாறு மக்களால் வரவேற்கப்பட்டது என்பதைப்பற்றி அவருக்கு ஹ்யூம் (Hume) 1776-ல் எழுதினுர். (சமயக் கோட்பாடு விஷயத்தில் நம்பிக்கையின்மையும் உறுதியின்மையும் மிகப் பெருமளவில் நிலவிய காலம் அது என்று பிற்காலத்தில் வழக்கமாகக் கருத்தப்பட்டது.): 'இங்கிலாந்தில் மூடநம்பிக்கைகள் நிலவுவதானது, தத்துவம் வீழ்ச்சியடையப்போகிறது, ரசனை (taste) தாழ்வடையப் போகிறது என்பதை முன்கூட்டியே அறிவிக்கிறது.' ஹ்யூம் நம்பிக்கையை அளவுக்கதிகமாகக் கைவிடுகிருர்; என்றுலும்கூட, அவர் உண்மை அனுபவத்தைக்கொண்டு பேசுகிருர்.

ஆயினும், இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றுண்டைச் சேர்ந்த இந்த அறிஞர்களின் ஐயக்கொள்கை (scepticism) மெத்தப் படித்த மக்களிடையே மட்டுமே பரப்பப்பட்டது. இதன் நம்பிக்கை மிகுந்த தத்துவமானது, மேல் வகுப்பு (upper-class) மக்களின் வாழ்க்கை நிலைமைகளின் காரணமாகத் தோன்றியதாகும். ஆனுல், இயற்கைச் சமயம்தான் (Deism) ஜனநாயகத்துக்கு ஏற்ற ஒரு சமயம் என்ற வகையில் ஃபிரெஞ்சுப் புரட்சிக்காலத்தில் பொதுமக்களிடம் டாம் பெய்ன் (Tom Paine) பேசியபொழுது, ஒரு புதிய காலம் பிறந்துவிட்டது. பழைமை விரும்பியான கிப்பனின் காலத்தில், நம்பிக்கையின்மை என்பது, தலைமுடிப் பவுடரைப்போல, பிரபுக் குடும்ப மக்களுக்கு மட்டுமே ஏற்றது என்று கூறப்பட்டது. தேசத்தில் பொதுமக்கள் அனைவரும் கிறிஸ்துவ சமயக் கோட்பாடுகளில் அசையாத நம்பிக்கை வைத்திருந்தனர்; அவைகளுக்காக உழைக்கவும் செய்தனர்; எவ்வாறு அவை அன்று போதிக்கப்பட்டனவோ அவ்வாறே அவை ஏற்றுக்

கொள்ளப்பட்டன. சமூகத்தின் கீழ்த்தட்டில் வசித்த மக்களுக்கு ஒன்றுமே போதிக்கப்படவில்லை; ஆயினும், அறப்பள்ளிக்கூடங்களும் (Charity Schools), வெஸ்லியின் சங்கமும் (Wesleyan Mission) இவர்களையுங்கூட அறியாமையிலிருந்து கைதூக்கிவிட்டு, சமயக் கருத்துகளை நன்கு அறிந்த கிறிஸ்தவர்களின் அறிவுத் தரத்துக்கு உயர்த்த முயன்றுவந்தன.

இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றுண்டின் சமயமானது, நிறுவப் பட்ட திருச்சபையிலும் சரி (Established Church), டிஸ்ஸென்டர் வகுப்புகளிலும் சரி, இருவகைப்பட்டதாயிருந்தது; சுருக்கம் காரண மாக நாம் இவைகளை லாடிடூடினேரியப் பிரிவு (Latitudinarian) என்றும், மெதாடிசப் பிரிவு (Methodist) என்றும் அழைக்கலாம். இவை இரண்டில் எது ஒன்றையும் நாம் விட்டுவிடமுடியாது. அவ்வாறு செய்தால், நமது சமூக ஓவியம் தவருக வரையப்பட்டதாகிவிடும். இவ்விரு பிரிவுகளுமே குறைப் பிறவிகள்; ஒன்று மற்றென்றுடன் கூடிஞல் முழுமைபெறுகிறது. ஒவ்வொன்றுக்கும் தனித்தனி இயக்கம் இருந்தது; ஒவ்வொன்றின் தன்மைகளிலும் குறைபாடுகள் இருந்தன; ஆனல், மற்றதன் இயக்கமும் நிறைவும் அதற்கு ஈடுசெய்தன. லாடிடூடினேரியர் சமயப் பொறைக்காகப் போராடினர்; இப் பொறை யின்மையால்தான் எந்த உலகைக் காக்கக் கிறித்துவ சமயம் எழுந்ததோ அதே உலகில் பல நூற்றுண்டுகளாகக் கொடிய நாசத்தை அது ஏற்படுத்திவிட்டது; சமயக்கோட்பாடுகட்குப் பொருள் கூறும்பொழுது அதில் நியாயத்தன்மை (Reasonablenesss) இருக்கவேண்டுமென்றும் லாடிடூடினேரியர் கூறினர்; இது இல்லாமற்போஞல் விஞ்ஞான மனப் போக்குடைய உலகில் அவை ஏற்றுக்கொள்ளப்படமாட்டா என்றுர். இதற்கு மாருக, மெதாடிசமோ சுயக்கட்டுப்பாட்டை மீண்டும் வலியுறுத் தியது; சுறுசுறுப்புடன் கூடிய சமயப் பணியையும் அது வேண்டியது; இது இல்லாமற்போஞல் சமயம் தனது வலியை இழந்துவிடும்; தனது குறிக்கோளை மறந்துவிடும். இந்தப் புதிய எவஞ்சலிய இயக்கமானது ஒரு தீவிர மனிதாபிமானப் பற்றுடன் கூடியது. அக்காலத்திய லாடிடூடினேரியனிசம், மெதாடிசம் ஆகிய இரண்டுமே காலமாற்றத்துக் கேற்றவாறு தாமும் மாறுதலடைந்துவிட்டன. ஆயினும், அவைகளால் காப்பாற்றப்பட்டு, பேணப்பட்ட கோட்பாடுகள் புதிய வடிவங்களில், புதிய தொகுப்புகளில் நீடித்து நிலைபெற்றன. இதன் விளைவாக, கிறிஸ்துவ சமயமானது ஆங்கிலேய வாழ்வில் தலைமுறை தலைமுறை யாக ஒரு மாபெரும் சக்தியாக விளங்கமுடிந்தது.

1688 புரட்சி தொடங்கி அரசியல் சூழ்நிலை லாடிடூடினேரியனிசத் துக்குச் சாதகமாயிருந்தது. முதலாம் ஜார்ஜ் ஆட்சி பீடமேறியபின் திருச்சபையின் உயர்பதவிக்கான திறவுகோல்களைத் தமது கையில்

வைத்திருந்த விக் அரசியல்வாதிகள் ஹனேவிரிய வம்சத்தைப் பாதுகாக்க மிக்க ஆவல்கொண்டிருந்தனர். எனவே, பரந்த சமய நோக்குடைய கிப்சன் (Gibson), வேக் (Wake) போன்ற நூற்புலமை மிக்க அரசியல்வாதிகளையும், ஐயப்படத்தக்க ஹோட்லியையும் (Hoadly) ஊக்குவித்தனர்; 'உற்சாகத்தை' (enthusiasm) வெறுத்து ஒதுக்கினர்; ஏனென்றால், வால்போலின் காலத்தில், அது உயர் திருச்சபையிலும் (High Church) யாகோபியர்களிடையிலும் காணப்பட்ட சமயவெறியைக் குறித்தது. ஆட்டர்பரியும் (Atterbury) சேசிவெரலும் இச் சமயவெறியைப் பூண்டிருந்தவர்கள். அந் நூற்றுண்டு செல்லச்செல்ல, நிறுவப்பட்ட திருச்சபையைச் (Established Church) சேர்ந்த மதகுருமார்களும் மேல்வகுப்பினரும் (upper class) எல்லா வகையான 'உற்சாகத்தையும்'—வெஸ்லியின் 'உற்சாகத்தையும்' கூட—தீயவை எனக் கருதினர்.

மூன்றும் ஜார்ஜ் அரியணையேறியபொழுது, ஹனேவர் வமிசத்தை ஆதரிக்கக்கூடிய மனநிலைக்குத் திருச்சபை மாறிவிட்டது. இதனுல் லாடிடுடினேரியனிசம் தோன்றுவதற்குக் காரணமாக விளங்கிய அரசியல் நோக்கம் மறைந்தொழிந்துவிட்டது. ஆயினும், லாடிடுடினேரிய இயக்கமானது தனது பழைய வேகத்தைக்கொண்டும், அரசியலல்லாத வேறு சக்திகளின் உதவிகொண்டும் தொடர்ந்து நீடித்தது. லாக்கும் நியூடனும் இறந்துபோய்விட்டாலும், அவர்களது கருத்துகள் மக்களை ஆட்கொண்டன. விஞ்ஞானக் கண்ணேட்டம் வளர்ந்தது; 'கிறிஸ்துவ சமயத்தின் நியாயத்தன்மை' நிரூபிக்கப்பட வேண்டுமென்றும், வலியுறுத்தப்படவேண்டுமென்றும் அது கோரியது. விந்தைச் செயல்களை நம்புவார் குறைந்தனர். விண்மீன்கள் தமது பாதைகளை விட்டுப் பிறழாவண்ணம் காக்கும் புவியீர்ப்பு போன்ற பிரபஞ்சத்தின் 'மாற்றவியலா விதிகள்' ஆண்டவனது பெருமையின் ஓர் அம்சமாக இப்பொழுது கருதப்பட்டன.

பரந்த ஓர் வானப் பாதை
    பாரெல்லாம் நீல வண்ணம்
பிரகாச விண்மீன் கூட்டம்
    படைத்தவன் கருத்தைச் சொல்லும்
பரிதியோ நாளும் நாளும்
    பரமன்தன் சக்திதன்னை
பரந்த இவ்வுலகத்திற்கு
    பறைசாற்றி நிற்கும் இங்கே.

அடிசனின் இந்தத் துதிப்பாடல் Spectator பத்திரிகையில் 1712-ல் வெளியாயிற்று; ஆயினும், அந் நூற்றுண்டு முழுவதும் அது

எதிரொலித்தது. பின்னர் இளைஞர் கோலரிட்ஜும், வேர்ட்ஸ் வொர்த்தும் 'அவ் வியத்தகு கதையைத் தொடர்ந்து பாடினர்.'[1]

இத்தகையதொரு சமயம் சிறிதுசிறிதாகத் தனியொருமைக் கோட்பாடு (Unitarianism) அல்லது இயற்கைச் சமயத்தில் மூழ்கி விடுவது மிகவும் எளிது. உண்மையில் ஆங்கிலேயப் பிரஸ்பிடீரிய சமயம் தனியொருமைக் கோட்பாட்டை ஏற்றுக்கொண்டது; தத்துவ அறிஞரும் விஞ்ஞானியுமான பிரீஸ்ட்லி (Priestley) அதன் தலைவ ராஞர். முந்திய நூற்றுண்டுகளில் சமயம் ஒரு கோட்பாடாக (dogma) விளங்கியது. ஆனுல், இப்பொழுது அதை ஒரு நன்னெறி என்ற வகையில் போதிப்பது நாகரிகமாயிற்று; அதில் சிறிது கோட் பாடும் ஓரளவு தயக்கத்துடன் சேர்க்கப்பட்டது. நிறுவப்பட்ட திருச் சபையின் (Established Church) சமயமானது கானன் சார்லஸ் ஸ்மித் (Canon Charles Smyth) என்பவரால் கீழ்வருமாறு வருணிக்கப்பட்டிருக்கிறது.

"பதினெட்டாம் நூற்றுண்டின் ஆங்கிலிகச் சமயத்தில் மாபெரும் சக்தியாக விளங்கியவர் ஆர்ச்பிஷப் டில்லாட்சன் (Tillotson, 1630 –1694). அவரால் நல்லதும் விளைந்தது, கெட்டதும் விளைந்தது. பிந்திய இடைக்காலத்திலிருந்த திரிதுறவிகளின் (friars) பெரும் மதாலயங்களைப்போல், இக்காலத்திலும் நமது மதாலயங்கள் 'கேட்பதற் கேற்ற வகையில் அமைக்கப்பட்டிருந்தன.' அதற்கேற்ற முறையில், பிரசங்கம் செய்வதற்கு ஓர் எளிய, நடைமுறைக்கேற்ற, தெளிவான உரைநடையை டில்லாட்சன் உருவாக்கினுர். டில்லாட்சன் புகுத்திய இந்த முறை பெரு வெற்றி கண்டது. இடைக்காலத் திருச்சபையி லிருந்து தலைமுறை தலைமுறையாக வந்த மதாலயப் பிரசங்க முறையிலிருந்து இது அறவே வேறுபட்டது. லாட்டிமர், ஆன்ட்ரூஸ், டோன், டெய்லர் ஆகிய எல்லோருமே இடைக்காலத்தைச் சேர்ந்தவர்கள்தாம். சொல்லடுக்கும் நடிப்புமாகச் சீர்கெட்டுப் போகாமல் ஆங்கிலிகப் பிரசங்க முறையை டில்லாட்சன் எவ்வாறு காப்பாற்றினுர் என்பதை இதிலிருந்து காணலாம். இது அவர் செய்த ஒரு நற்பணி. அடுத்ததாக, அவரது பிரசங்கத்தின் கருத்து உலக வழக்குக்கேற்ற நன்னெறியே அன்றி வேறில்லை; இந்த நன்னெறி யானது அறிவின் அடிப்படையில் அமைந்ததேயன்றி, வெளிப்பாட்டின் (revelation) அடிப்படையில் அன்று; இது மக்களுடைய பொது

[1] பார்க்க: கோலரிட்ஜ் எழுதிய 'Hymn before Sun-rise, in the Vale of Chamouni'. லாக் முதலியவர்களுக்கும் வேர்ட்ஸ்வொர்த்துக்குமிடையிலான தொடர்புக்குப் பார்க்க: திரு. பேசில் வில்லி எழுதிய 'Seventeenth Century Background', அத்தியாயம் XII; அவரது பிந்திய, ஆனுல் அதே அளவு முக்கிய மான 'The Eighteenth Century Background' என்ற நூலையும் பார்க்க.

அறிவுக்கு ஏற்புடையதாக வேண்டுமேன்றே இவ்வாறு அமைக்கப் பட்டது. ஒழுக்க நெறித்தூய்மை பற்றிய சுவிசேஷம் (Gospel of Moral Rectitude) ஆங்கிலேயர்களின் குணஇயல்பு விஷயத்தில் ஆற்றியிருக்கும் பணி பெரிது; மதவெறியர்கள்தான் இதை மறுக்கக் கூடும். ஏனென்றால், 'ஆங்கிலேயர்கள் தாங்கள் எங்கிருப்பினும் ஒரு கடமையுணர்வை எப்பொழுதும் கொண்டிருக்கிறார்கள் என்றால், அதற்குக் காரணம் டில்லாட்சனின் கொள்கைகள்தாம் (Baring Gould). ஆயினும், கிருஸ்துவ சுவிசேஷத்துக்கு இது மிகவும் குறைந்ததுதான். என்றாலுங்கூட இன்றைக்கு, நமது உண்மைத் தேசியச் சமயம் என்ற முறையில் அது இன்னமும் அரியணையில் அமர்ந்திருக்கிறது; இங்கிலாந்தின் திருச்சபையின் பிரசங்க மேடை களில் இல்லாமற்போனாலும், ஆங்கிலேய ஆண் பெண்களின் உள்ளத்தில் அது வீற்றிருக்கிறது.'' (The Priest as Student, கிறிஸ்துவ அறிவைப் பரப்பும் சங்கம், 1939, பக்கங்கள் 263–264.)

மூன்றாம் ஜார்ஜின் ஆட்சியின் தொடக்கத்தில் சமூக, கலாசாரத் தரத்தில் ஊர்குரு (parson) உயர்ந்துவந்தார்; கனவான்களுக்குச் சம மானதொரு நிலையில் அவர் இப்பொழுது வாழ்ந்தார். இந்நிலை முன்பு இல்லை. ஆனால், பாரிஷ் மக்களுடனான அவரது நெருங்கிய தொடர்பு இதன் காரணமாக அறுந்துவிட்டது. மதாலயத்தில் அவரது சமயச் சொற்பொழிவுகள் பெருங்கவனத்துடன் எழுதப்பட்டு, பிரசங்கமேடையி லிருந்து வாசிக்கப்பட்டன. தூங்கிக்கொண்டிருக்கும் கனவானைச் (squire) சுற்றி உயரமான பெஞ்சின்மேல் அமர்ந்திருக்கும் நாகரிக உடைதரித்த இளைஞர்களுக்குச் சுவையூட்டி மகிழ்வூட்டும் முறையில் எழுதப்பட்ட இலக்கிய உரைகள் அவை; ஆனால், மதாலயத்தின் நடுவில் பொறுமையாக அமர்ந்து கேட்டுக்கொண்டிருக்கும் கிராமப் புறப் பொதுமக்களுக்கு அவை விளங்குவதில்லை; அவர்களோடு சிறிதும் சம்பந்தப்பட்டதும் இல்லை. வளர்ந்துவரும் தொழிற் பிரதேசங்களிலும் சுரங்கப்பகுதிகளிலும் திருச்சபையின் பணிகள் அறவே காணப்படுவதில்லை; காரணம், பிரதேசங்களின் வளர்ச்சிப் போக்கைப் பின்பற்றி புதிய பாரிஷ்கள் அமைக்கப்படவில்லை. இந்தக் களம்தான் வெஸ்லிக்காக ஒதுக்கிவைக்கப்பட்டிருந்தது.

பிரபுக்களைத் தலைமையாகக்கொண்ட, சீர்திருத்தங்களை ஏற்காத, தனிமனிதத்தன்மையுடைய இத் 'தொன்மை'க் காலத்தில் (classical age) நாட்டின் இதர, நிலைபெற்ற நிறுவனங்களைப் போல அதே தன்மைகளுடன், அதே குறைபாடுகளுடன் திருச்சபையும் இயங்கி வந்தது இயற்கையானதுதான். ஒவ்வோர் ஊர் குருவுக்கும் தனக்கு எது சரியென்று பட்டதோ அதைச் செய்ய முழு உரிமையும் உண்டு. லாரன்ஸ் ஸ்டேர்னைப் (Laurance Sterne) போல அவரது மூளையில்

ஆயிரம் கோணல்கள் இருக்கலாம்; நற்பண்புகள் இல்லாதவராக அவர் இருப்பின், கூப்பரின் ஆபத்தான நண்பர் ஜான் நியூடனைப் போலத் தானும் ஒரு மெதாடிஸ்டாகவும் இருக்கலாம்; அல்லது எந்த எவர்டனைச் சேர்ந்த பெர்ரிட்ஜின் உபதேச உரைகளைக் கேட்டு மனம் பொறுக்காத அவரது பாரிஷ் மக்களும் மற்றவர்களும் சமய மாற்றம் செய்துகொண்டார்களோ, அந்த பெர்ரிட்ஜைப் போலக்கூட அவர் இருக்கலாம். பெரும்பாலும் ஊர் குருக்கள் அன்பான, அறிவுள்ள, நிதான பக்திகொண்ட 'சிறந்த ஆங்கிலேயர்கள்.' கல்வியறிவிலும், பண்பாட்டிலும், சுதந்திர உரிமைகளாலும் பெயர் பெற்றுத் திகழ்ந்தது அத் திருச்சபை. ஆனால், மதகுருமார்களை மேலும் சிரமப்பட்டுப் பணிபுரியுமாறு செய்வதற்குச் சமய அதிகாரிகளோ பொதுமக்களோ சிறிதும் முயலவில்லை.[1]

மதாலயத்தில் குருவாக நியமிக்கப்படுவது, பாராளுமன்றத்தில் உறுப்பினராயிருப்பதைப் போல, அல்லது ஒரு கல்லூரியில் பதவி வகிப்பதைப்போல வேண்டியவர்களுக்குச் செய்யப்படும் ஓர் 'உதவி'யாகக் (patronage) கருதப்பட்டது. அதைக் கொடுப்பவர் ஒரு சலுகை, ஓர் 'உதவி' என்ற விதத்தில்தான் கொடுத்தார்; துய்ப்பவர் ஒரு சிறப்புரிமை (privilege) என்ற விதத்தில் துய்த்தார். இத்தகைய சிந்தனைப் போக்கின் ஒரு வேடிக்கையான உதாரணத்தைக் கீழ்வரும் கல்லறை வாசகத்தில் காணலாம்; இது நிக்கோல்ஸின் Literary Anecdotes (III, பக்கம் 52) என்பதிலிருந்து எடுத்தாளப் படுகிறது.

> இறந்த இவ்வுடல்தான் அந்த
> எலிசபெத்தின் சடலம் அன்றோ.
> சிறந்ததோர் தெய்வ பக்தி
> செவ்விய கற்பும் கொண்டாள்.

[1] இங்கிலாந்தின் பதினெட்டாம் நூற்றாண்டின் திருச்சபையையும், அதன் ஒரு முக்கிய உறுப்பாக விளங்கிய கிராமப்புறத்து வாழ்வையும் தெரிந்துகொள்வதற்குத் தூய ஜேம்ஸ் உட்ஃபோர்டின் Diaries என்ற நூலை, திரு ஜான் பெரஸ்ஃபோர்டின் அறிமுகத்துடன் வாசிக்கவும். அவர் பத்தில்-ஒன்று வரி (tithe) வாங்கியதும், அவரது மதாலயப் பண்ணையும் விவசாயத்துறை வாழ்வுடன் ஊர்குருவான உட்ஃபோர்டை (Woodforde) நன்கு பிணைத்திருந்தன.

'1776, செப். 14 பார்லி அறுவடையினால் நாள்முழுவதும் வேலை. மாலை 5 வரை சாப்பிடவில்லை. அறுவடை செய்யும் ஆட்கள் இங்குச் சாப்பிட்டனர்; கொஞ்சம் மாட்டிறைச்சியும், கொழுத்த புட்டிங்கும், நிறைய மதுவும் கொடுத்தேன். மாலை அறுவடை முடிந்தது; தானியம் களஞ்சியத்துக்குள் சென்றது—8 ஏக்கர். டிசம்பர் 3. பத்தில்-ஒன்றை வசூலிப்பதற்கு இன்று என் பாரிஷ் மக்களிடம் வேடிக்கை, கூத்து. அவர்களுக்கு நல்ல விருந்தளித்தேன்—மாட்டுக்கறி வறுவல், வேகவைத்த ஆட்டுக்கால், நிறைய கொழுத்த புட்டிங்.

திருமண உறவினுலே
ஸ்டான்ஹோப் குடும்பத்தோடு
நெருங்கியே தொடர்பு கொண்டாள்
நற்புகழ் மிகவும் கொண்டாள்.
கணவருக்கும் குழந்தைகட்கும்
திருச்சபை மற்றும் நாட்டில்
பன்னிரு பதவி பெற்ருள்.

திருமதி எலிசபெத் பேட் தனது 75ஆவது வயதில் 1751, ஜுன் 7-ல் விண்ணுலகெய்திஞர்.

தனது சுயசரிதத்தில் கிப்பன் தான் ‘இலாபகரமான வழக்கறிஞர் தொழிலேயோ அல்லது வியாபாரத்தையோ, அரசாங்க ஊதியத்தையோ அல்லது இந்திய பயணத்தையோ அல்லது மதாலயத்தின் தூங்கு மூஞ்சி வேலையையோ ஏற்றுக்கொள்ளாமற் போனேமே’ என்பதைச் சற்று மனவருத்தத்துடன் எழுதுகிருர். இது அக்காலத்தின் தன்மையை நன்கு புலப்படுத்துகிறது. கிப்பன் ஓர் ஆர்ச்டீக்கன் பதவி வகித்து சமய வரலாற்றை எழுதியிருப்பாரேயாஞல், தான் எழுதிய ரோமாபுரி வரலாற்றைப் போலவே அதுவும் கல்விப் புலமை வாய்ந்த ஒரு நூலாக விரிவானதாக இருந்திருக்கும். ஆயினும், கனவான் எட்வர்ட் கிப்பன் எழுதிய அந்தப் பெருநூலைக் காட்டிலும் இன்னும் அதிக அலங்கார மானதாக, வஞ்சப்புகழ்ச்சி கொண்டதாக அது நிச்சயம் இருந் திருக்கும்.

பணக்கார குருமார்களுக்கும் ஏழை குருமார்களுக்குமிடையிலான சமூக வேற்றுமைகள் இடைக்காலத்தில் இருந்ததைப்போல் அவ்வளவு அதிகமாகவே இப்பொழுதும் இருந்தன. ஆயினும், பணக்கார குருமார்களின் விகிதம் அதிகமாயிற்று. ஏனெனில், தலைமை குருமார் களும் (prelates), பல்பதவி குருமார்களும் (pluralists), பல பாரிஷ் குருமார்களும்கூட இப்பொழுது இப் பட்டியலில் சேர்ந்திருந்தனர். இந்தப் பணக்கார பாரிஷ் குருமார்கள் வசதிமிக்க குடும்பத்தைச் சேர்ந்தவர்கள்; அவர்களுக்கு நல்ல செல்வாக்கு இருந்தது; பாரிஷ் மதா லயத்துக்குச் சொந்தமான வீடு, நிலம் முதலானவற்றை நன்கு அனுபவித்து, தமது கடமைகளைச் செய்துவந்தனர். விவசாய அபி விருத்தியை அடுத்து பத்தில்-ஒன்று வரி (tithe) மதாலயத்துக்குச் சொந்தமான பண்ணை ஆகியவற்றின் விலைமதிப்பு ஏறியதால், பாரிஷ் குருமார்கள் முன்னைக்காட்டிலும் இப்பொழுது வசதியுடனிருக்க முடிந்தது. ஆன் அரசியின் காலத்தில் மொத்தம் சுமார் 10,000 குருமார் பதவிகளில் 5,597 பதவிகளுக்கு ஆண்டொன்றுக்கு £50-க்குக் குறைவான வருவாயே கிடைத்தது ; நூருண்டுகட்குப் பிறகு £150-க்குக்

குறைந்த வருவாய் உடையவைகளின் எண்ணிக்கை 4,000-க்கும் குறைவு. பதினெட்டாம் நூற்றுண்டில், தங்களது கட்டுப்பாட்டின் கீழிருந்த பாரிஷ் குருமார் பதவிகளைத் தங்களது இளைய குமாரர்களுக்கே நாட்டுப்புறக் கனவான்கள் (country gentlemen) கொடுத்துவந்தனர்; இது அவ்வளவு இலாபகரமான பதவியாகத் தோன்றியது. 'ரெக்டரி' (Rectory) என்ற ஊர் மதகுருவின் இல்லம் இப்பொழுது தோன்றியது. மேனர் இல்லத்திலிருந்து ஒரு மைல் தூரத்தில் ஒர் அழகிய இடத்தில் இது கட்டப்பட்டது ; வளைவு சன்னல் (bow-window) அதன் சிறப்பு அம்சம். இதில் கனவானின் (squire) மகனே அல்லது மருமகனே வசித்தார். இந்த அருமையான அமைப்பு ஜேன் ஆஸ்டின் காலத்தில் நன்கு நிலைபெற்றுவிட்டது என்பதை அவரது வாசகர்கள் அறிவார்கள். இவ்வழியாகக் குடும்பம் கலையாமல் ஒன்றுசேர்ந்து இருக்கமுடிந்தது. அதேசமயம், அக் கிராமத்தின் சமயப் பணிகள் கல்விகற்ற, நவீனப் பண்புகள் நிறைந்த ஒரு கனவானல் நிறைவேற்றப்பட்டுவந்தன. அக் கனவானுக்குச் சமயப் பணியில் ஆர்வம் அவ்வளவு அதிகமாக இல்லாமலிருக்கலாம் ; ஏனென்றுல், பத்தொன்பதாம் நூற்றுண்டின் தொடக்கத்தில்தான் இக் கனவான்—மதகுருக்கள் ' தீவிரம் ' மிக்கவர்களாக அதாவது, சமயப் பிரசார ஆர்வமிக்க எவஞ்சலியர்களாகக்—காணப்படுவது சாத்தியம்.

ஆனுல், ஒரு கனவானின் பிள்ளைக்குப் போதுமான அளவு வருவாய் கிடைக்கும் சொத்துகள் சில பாரிஷ்களுக்கு மட்டுமே இருந்தன. இங்கிலாந்தின் மொத்த பாரிஷ்களின் தொகையில் இது பாதிக்குமேல் போகாது. எனவே, ஏழை குருமார்களும் (parsons) அதிக அளவில் இருக்கத்தான் செய்தனர். ஆனுல், அவர்களின் தொகை சாசரின் (Chaucer) காலத்தைக் காட்டிலும் அல்லது இரண்டாம் சார்லஸின் காலத்தைக் காட்டிலும் குறைவுதான். சார்லஸின் காலத்தில்தான் 'Grounds and Occasions of the Contempt of the Clergy' என்ற நூலை ஈச்சர்ட் (Eachard) எழுதினுர் ; இந்த வெறுப்புக்குத் தலையாய காரணம் அவர்களது ஏழ்மையும் தாழ்குடிப்பிறப்பும்தான். ஆயினும், மூன்ரும் ஜார்ஜின் ஆட்சியிலுங்கூட வறுமையில் வாடிய, வெறுக்கப்பட்ட 'கருப்புக் கோட்டுகள்' ஆயிரக்கணக்கிலிருந்தன ; இவர்களில் சிலருக்கு மதாலயச் சொத்திலிருந்து ஐம்பது முதல் நூறு பவுன்கள் வரை வருவாய் கிடைத்தது. வேறு சிலர் பல்பதவி குருமார்களுக்குத் துணை குருமார்களாகப் (curate) பணிபுரிந்து ஐம்பது பவுன் சம்பளம் வாங்கினர். இப் பல்பதவி குருமார்கள் பெரும்பாலும் ஊரில் இருப்பதேயில்லை. என்றுலும், பல்பதவிமுறை (Pluralism) எப்பொழுதுமே தீயது என்று கூற முடியாது. சொத்துகள் அதிகமில்லாத இரு அண்டை பாரிஷ்களையும் ஒரு குருவே நிர்வகிப்பது மிகவும் சிறந்தமுறை ; இது பலவிடங்களில் காணப்பட்டது.

பிஷப்புகள் பெரும்பாலும் பிரபுக்களின் உறவினர்களாகவோ அல்லது பிரபுக்களின் பழைய குடும்ப மதகுருக்களாகவோ (chaplains) அல்லது அவர்களது பிள்ளைகளின் சொந்த ஆசிரியர்களாகவோதான் (tutors) இருந்தனர். அவர்களில் சிலர் ஜோசப் பட்லர், பெர்க்ளி, வார்பர்டன் போன்றவர்கள், சிறந்த தத்துவ அறிஞர்களும் மேதைகளும் ஆவர். ஆனால், அவர்கள் பிஷப்புகள் ஆக்கப்பட்டதற்குக் காரணம், அவர்கள் திருச்சபைக்கு ஆற்றிய தொண்டு அன்று; கல்விக்கு அரசியல் கட்சிகளுக்கு அல்லது தம்மை ஆதரித்த பிரபுக்களுக்கு ஆற்றிய பணிதான் அதற்குக் காரணம். முன்பெல்லாம் திருச்சபையில் பதவி உயர்வு என்பது மன்னர்களால் வழங்கப்பட்டது. ஆனால், இப்போழுதோ விக், டோரி கட்சிகளின் தலைவர்களால் தங்களுக்குப் பிடித்தமான மனிதர்கட்கு அது வழங்கப்பட்டது. 'இக்காலத்தில் இக் கட்சிப் பெரியவர்களின் கைகளில் சிக்கிய பல நல்ல விஷயங்களில் இதுவும் ஒன்று! இடைக்காலத்தில் பிஷப்புகள் அரசர்களின் சிவில் அதிகாரிகளாக இருந்தனர்; இப்பொழுது அவர்களது அரசியல் பணி வெகுவாகக் குறைந்துவிட்டது. பாராளுமன்றத்தின் கூட்டங்களுக்கு ஒழுங்காகச் செல்வது, தங்களுக்குப் பதவியளித்த, பதவி உயர்வு அளிக்கக்கூடிய அமைச்சர்களுக்கு ஆதரவாக வாக்களிப்பது—சில பிஷப்ரிக்குகள் (Bishoprics) மற்றவைகளைவிட பத்து மடங்கு வரும்படியுள்ளவைகளாக இருந்தன—இவைதாம் அவர்களது கடமைகள்.

இடைக்காலப் பிஷப்புகள் அரசனின் முழு நேர ஊழியர்கள்; ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டின் தலைமை குருக்களோ (prelates) பாராளுமன்ற வேலைகளைக் கவனித்துவிட்டு, தம் ஆலயப் பணிகளையும் கவனித்தனர். அவர்களுக்கு அவ்வளவு ஓய்விருந்தது. ஹனோவிரிய காலத்து பிஷப்புகளில் சிலர் தத்தம் பகுதிகளில் கடினப் பட்டுப் பணிபுரிந்தனர்; தீக்கைச் சடங்கு (confirmation) செய்வதற்காக மோசமான சாலைகளில் நெடுந்தூரம் பயணம் செய்தனர். 1768-லிருந்து 1771 வரை யார்க் (York) ஆர்ச் பிஷப்பு 41,600 ஆட்களுக்கும், எக்சிடர் (Exeter) பிஷப்பு 1764–65-ல் கார்ன்வாலிலும் டெவானிலும் (Devon) மட்டும் 41,642 பேர்களுக்கும் தீக்கை செய்தனர். பிஷப்புகள் தங்களது சமயக் கடமைகளில் முழுவதும் தவறிவிட்டார்கள் என்றோ, அல்லது நாட்டு மக்களின் சமயப் பற்றை வெஸ்லி சங்கத்தின் நடவடிக்கைகளில் மட்டும்தான் காணமுடியும் என்றோ ஒருவர் கூறினால், அதை இந்த எண்கள் தவறென நிரூபிக்கும். பல மாவட்டங்களில்—எல்லா மாவட்டங்களிலும் என்று சொல்லமுடியாமற்போனாலும்—திருச்சபை வாழ்வானது வலியுடையதாயும் சுறுசுறுப்புடையதாயும் திகழ்ந்தது என்பதற்குச் சான்றுகள் நிறைய உண்டு. ஆயினும், மற்றவிடங்களில் ஒழுங்கின்மையும் பொறுப்பின்மையும்

ஏராளமாகக் காணப்பட்டன. மற்றவர்கள் எப்படி இருந்தாலும், நாம் ஏற்கெனவே வருணித்த பிரபுக் குடும்பத்திலிருந்து வந்த குருமார்கள் பெரும்பாலும் லாடிடுடினேரியக் கொள்கைகட்கு உதாரணமாக விளங்கினர்களேயொழிய, மெதாடிச நெறிகளுக்கல்ல.

'மெதாடிசம்' என்றழைக்கப்படும் அந்த வாழ்க்கை நெறி அதன் பெயரைக்காட்டிலும் பழையது; வெஸ்லி சகோதரர்களின் மெதாடிசச் சங்கத்தைவிடவும் பழையது. உயர் திருச் சபையைச் (High Church) சேர்ந்த தங்களது தந்தையால், எப்வொர்த்திலிருந்த (Epworth) தங்களது 'ரெக்டரி'யில் (பாரிஷ் மதகுருவின் இல்லம்) மெதாடிச வாடை வீசிய ஒரு சூழ்நிலையில் அவர்கள் சிறுவர்களாக இருந்த பொழுதே வளர்த்துவரப்பட்டனர். சமயச் சடங்குகளைப் பின்பற்றுவது மட்டுமில்லாமல், சுய கட்டுப்பாடு, பிறருக்காக உழைத்தல் ஆகிய நல்லியல்புகளும் அவ் வாழ்க்கை நெறிக்கு அடிப்படையாய் விளங்கின. இதற்கு எடுத்துக்காட்டாக விளங்கியவர்களில் ஒருவர் 'நான்-ஜுரரான' ராபர்ட் நெல்சன், வில்லியம், ஆனின் ஆட்சிகளில் கிறிஸ்துவ அறிவைப் பரப்பும் சங்கத்தையும், அறப்பள்ளிக்கூடங்களை யும் நிறுவுவதில் அவருக்கு உதவிய நிறுவப்பட்ட திருச்சபைக்காரர் களுக்கும் டிஸ்ஸென்டர்களுக்கும் தூண்டு சக்தியாக விளங்கியதும் இந் நெறிதான். எலிசபெத் ஹேஸ்டிங்ஸ் (1682–1739) சீமாட்டியின் கண்டிப்பான, பொதுப்பணி நிறைந்த வாழ்விலும் மெதாடிசத்தின் பெருமைகளைக் காணலாம்; 'அந்தப் பெண்மணியை நேசிப்பதே ஒரு பரந்த நோக்குடைய கல்வி' என்று சாகாவரம் பெற்ற எழுத்துகளில் அவரை ஸ்டீல் (Steele) வருணித்துவிட்டார்; எல்லோர் உள்ளத்திலும் இடம்பெற்ற அந்தப் பெண்மணி தனது பெரும் செல்வமனைத்தையும் அறப்பணிகளுக்கே செலவிட்டார்; ஏழைப் பிள்ளைகளின் பள்ளிப் படிப்புக்கும், கல்லூரிப் படிப்புக்குமான நல்ல திட்டங்களை வகுத்தது அவரது பணிகளில் சிறப்பானது. அந் நூற்றுண்டின் பொதுப்பணி வேலைகளில் பெரும்பகுதி 'மெதாடிசத்தின்' விளைவுதான். அப் பணி வில்பர்ஃபோர்சுடன் (Wilberforce) முடிவுற்றது.

சமய வாழ்வின் இந்த 'முறை' ('method') ('மெதாடிசம்' என்ற சொல் இதிலிருந்துதான் வந்தது—மொ. ர்.) வியாபாரிகளிடையிலும், வழக்கறிஞர், மருத்துவர் முதலியவர்களிடையிலும்—அவர்கள் நிறுவப்பட்ட திருச்சபையைச் (Established Church) சேர்ந்தவர்களா யிருப்பினும், டிஸ்ஸென்டர்களாயிருப்பினும்—நன்றுகப் பரப்பப்பட்டது. அதில் பியூரிட்டானிய இயக்கத்தின் தன்மைகளும், நடுத்தர வகுப்பின் (middle class) தன்மைகளும் ஒரே சமயத்தில் கலந்திருந்தன; அது மதகுருமார்களைவிட, மற்றவர்களிடையில் வலுப்பெற்றுக் காணப் பட்டது; இம்முறையைப் பின்பற்றியவர்கள் சமுதாய வாழ்வைக்

கைவிட்டுவிடவில்லை ; ஆனால், அதை ஆண்டவனுக்கு அர்ப்பணிக்க முயன்றனர். 'பதினெட்டாம் நூற்றாண்டுப் பியூரிட்டானியர்களின் மீது பதிக்கப்பட்டிருந்த முத்திரை நடத்தை ; கோட்பாடு அன்று........ கடவுளுக்கே உரித்தான புகழை வறுமை, அறியாமை, தீயொழுக்கம் ஆகியவை காரணமாக மனிதர்கள் பறித்துக்கொண்டார்கள் ; அம் மனிதர்களுக்குப் பணிபுரிவதே அந்தப் பியூரிட்டானியர்களின் வேலையா யிருந்தது. ஏழை, எளியவர்களிடத்தில் பேரன்பு காட்டுவது அத்தகைய வழியில்வந்த தொண்டர்களது இன்றியமையாத கடமை.'[1] இத்தகைய வாழ்வு முறைக்குக் களமாக விளங்கியது நடுத்தர வகுப் பினரின் (middle class) இல்லம் ; அங்குக் குடும்பம் முழுவதும் சேர்ந்து வழிபாடு செய்தது. அங்கிருந்து அது புறப்பட்டு, ஏழைகளின் ஆன்மாக்களை மதமாற்றம் செய்யவும், மூளைகட்குக் கல்வி புகட்டவும், உடல்களுக்குப் பணிபுரியவும் அகன்ற உலகத்தில் அடியெடுத்து வைத்தது.

'மெதாடிசத்தின்' தோற்றங்களில் மிகப் பெரியதும், பெரும் புகழ் வாய்ந்ததும், வெஸ்லி சகோதரர்களும் ஒயிட்ஃபீல்டும் (Whitefield) பிரசாரம் செய்த புத்துயிர்ப்பு (revivalist) இயக்கம்தான். இதுவரை திருச்சபையினாலும் அரசாலும் புறக்கணிக்கப்பட்டதொரு மக்கள் திரளை இது தீவிரமாக ஆட்கொண்டது. ஜான் வெஸ்லியின் திறமைகள் புத்துயிர்ப்பு இயக்கப் பிரசாரகர் என்ற வகையில் மட்டுமன்றி, ஒரு திறமைவாய்ந்த தாபகர் என்ற வகையிலும் வெளிப்பட்டது நமது நல்வினைதான். தன்னால் சமய மாற்றம் செய்யப்பட்ட மனிதர்களை நிலையான சபைகளாக (Congregations) அமைத்ததன் மூலமாக, தொழிலாளி மக்களின் சமய, சமூக, கல்வி வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தை அவர் தொடங்கினார். வெஸ்லியும் தொழிற் புரட்சியும் ஒரே சமயத்தில் தோன்றியது இங்கிலாந்தைப் பல தலைமுறைகளுக்கு வெகுவாகப் பாதித்தது.

சமய வாழ்வு வாழ்ந்த குருமார்களின் சமயமாக இருந்ததுபோய் 'பொதுமக்களின் சமயமாக அது மாறியது', அக்காலத்திய இங்கிலாந் தில் நிலவிய புராடஸ்டன்ட் சூழ்நிலையின் இயற்கையான விளைவே. பொதுமக்கள் தனிப்பட்ட முறையிலும், கூட்டாகவும், சமயத்தாபக வேலைகளிலும் பொதுப்பணி வேலைகளிலும் பங்குகொண்டதைப்பற்றி இதுவரை குறிப்பிட்டோமல்லவா? இது ஆன் அரசியின் காலத்தில்

[1]பார்க்க : குமாரி ஜோன்ஸ் எழுதிய 'The Charity School Movement' (கேம்பிரிட்ஜ் அச்சகம், 1938), பக். 1–7-ம், பின்னரும். இச் சிறந்த நூலும், "Johnson's England" (ஆக்ஸ்ஃபோர்ட் அச்சகம், 1933) நூலில் பேராசிரியர் நார்மன் சைக்ஸின் அத்தியாயமும், 1913–33-க்கான அவரது 'Berkbeck Lectures', 'Life of Gibson' ஆகியவையும் பதினெட்டாம் நூற்றாண்டின் சமயம் பற்றிய புதுத் தகவல்களை நமக்கு அளிக்கின்றன.

ராபர்ட் நெல்சனின் (Robert Nelson) நாட்களில் நன்கு காணப் பட்டது; நூருண்டுகளுக்குப் பிறகு, குறிப்பாக வெஸ்லி சகோதரர் களைப் பின்பற்றிய சபைகளில் (Congregation), இது இன்னும் சிறப் பாகக் காணப்பட்டது.

நவீன ஆங்கிலேயச் சமயத்துக்குப் பதினெட்டாம் நூற்ருண்டு ஆற்றிய மற்ருெரு பணி ஞானப்பாட்டு நூல் (Hymn-book) தொகுத்தது. ஐசக் வாட்சும் (Isaac Watts-1674-1748), ஜான் வெஸ்லியின் சகோதரர் சார்லஸும், மற்றவர்களும் ஞானப்பாட்டுகளை வரைந்தனர். எல்லோருக்கும் பொதுவான மதாலயங்களிலும், தனி ஆலயங்களிலும் இப் பாடல்கள் ஆண்டவனின் முன் உரத்த குரலில் பரவசத்துடன் பாடப்பட்டன. சீர்வரிசைப்படி அமைக்கப்பட்ட பழைய சங்கீதங்களின் (psalms) இடத்தை இத் துதிப்பாடல்கள் பிடித்துக் கொண்டன.

கடவுளுக்கும் மனிதனுக்கும் வாழ்வை அர்ப்பணிக்கும் வேறு பல வழிகளில் குவேக்கர்களின் (Quakers) அமைதியான பணியும் ஒன்று. பொதுமக்களிடையிலான புத்துயிர்ப்பு (revivalism) இயக்கத்தில் இவர்களும் முன்னர் தீவிரத்துடன் பங்குகொண்டு உழைத்தனர்; ஆனல், இப்பொழுது அவ்வியக்கத்தை வெஸ்லிக்கு விட்டுவிட்டு, மதிப் புடன் கூடிய பூர்ஷ்வா வாழ்க்கையில் அமிழ்ந்துவிட்டனர். பொதுப்பணி ஆர்வமிக்க, எல்லோரும் நுழையமுடியாத தங்களது நண்பர்களின் சங்கத்தில் (society of Friends) விரவிக்கிடந்த தூய்மையான நேச உணர்விஞல் இப்பொழுது பரிசுத்தமடைந்து மேல் வகுப்பு வாழ்க்கை யில் இறங்கினர். நேர்மையுடன் தொழில் நடத்தி முன்னுக்கு வருவதில் இவர்களுக்கிருந்த தனித்திறமை இரண்டாம் ஜார்ஜின் காலத்தின் முன் பகுதியிலேயே எங்கும் புகழப்பட்டது; 1737-ல் இறந்த கவிஞர் மேத்யூ கிரீன் (Matthew Green) குவேக்கர்களையும், அவர்களது நவீன காலத்துக்கேற்ற தத்துவங்களைப்பற்றியும் இவ்வாறு எழுதியிருந்தார்:

> நிலமும் பாங்கில் பணமும் குவித்து
> அதன்மேல் அசையா சமயக்கோட்பாடும்
> கொண்ட மனிதர் புதியன புனைவார்
> வேண்டும்படி வேதமும் படிப்பார்.

நண்பர்களின் சங்கமானது ஓர் அவக்கேடாகத் திருவாளர் உலகியல் புத்திசாலிக்குத் (Mr. Worldly Wiseman) தோன்றிய காலம் போய் விட்டது; தேசத்தின் பல சங்கங்களில் ஒன்ருக அது இப்பொழுது ஏற்றுக்கொள்ளப்பட்டுவிட்டது.

ஏழை எளியவர்களின் உடலுக்கும் உள்ளத்துக்கும் தொண்டு செய்த பதினெட்டாம் நூற்ருண்டின் மனிதாபிமான உணர்வு வாழ்வில்

உண்மையான முன்னேற்றங்களை ஏற்படுத்தியது. அதே சமயம் அதில் குறைபாடுகளும் இல்லாமலில்லை. மருத்துவ நிலையங்கள் நிறுவப்பட்டது, மருத்துவப் பணியிலும் குழந்தைநலப் பணியிலும் அபிவிருத்தி ஆகியவை இதனால் விளைந்த சிறந்த நன்மைகள். ஆனால், கல்வித்துறைப் பணிகள் போற்றக்கூடியவையாக இருந்தாலும்கூட, அவைகளில் சில குறைபாடுகள் இருந்தன. பழைய இலக்கணப் பள்ளிகள் (Grammar Schools) ஒருசில கெட்டிக்காரப் பிள்ளைகளுக்கு மட்டுமே முன்னுக்கு வர வாய்ப்புகள் அளித்தன. ஆனால், அறப் பள்ளிக்கூடங்களும், அவைகளையடுத்து 1780-க்குப் பிறகு மாபெரும் அளவில் வளர்ச்சியுற்ற ஞாயிறு பள்ளி இயக்கமும் (Sunday School movement), உழைப்பாளி மக்களில் பெரும்பான்மையினருக்குச் சிறிதளவாவது கல்வி புகட்ட வேண்டும் என்பதற்கான முதல் முயற்சிகள். இவ்விருவகைப் பள்ளிகளும் எல்லோருக்கும் ஏதாவது கொஞ்சம் செய்யமுயன்றன ; இது நல்லதுதான். ஆனால், இளம் மாணவர்களுக்கு அவரவர்கள் வகுப்புக்கு (class) ஏற்ற கல்வியே அளித்து, ஓர் அடக்க ஒடுக்கமான தலைமுறையாக அவர்களை வளர்ப்பதில் அவை பெரும் அக்கறை காட்டின. நமது காலத்திய நவீனக் கல்வி முறையானது தேவையில்லாத கல்விப் புலமை மிக்க தொழிலாளர்களைத் தோற்றுவித்து, எதிர்த்திசையில் வெகுதூரம் சென்றுவிட்டது என்பது உண்மையாக இருக்கலாம். ஆயினும், வகுப்பு (class) வேறுபாடுகளையும், ‘ தாழ்வகுப்பு மக்கள் பணிவையும் அடக்கத்தையும் கொண்டிருக்கவேண்டும் ’ என்பதையும் அளவுக்கு அதிகமாக வலியுறுத்தியது பதினெட்டாம் நூற்றாண்டுக் கல்வியின் தவறு ; பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஆரம்ப ஆண்டுகளிலும்கூட இது காணப்பட்டது.

அறப்பள்ளிக்கூடங்களின் வரலாற்றை எழுதிய ஆசிரியர் மிகவும் பொருத்தமாக எழுதியிருக்கிறார் :

‘ அன்றாட வாழ்க்கைத் துறையிலும் ஆன்மீகத் துறையிலும் மிகவும் புறக்கணிக்கப்பட்ட குழந்தையிடம் உண்மையான பரிவும் பொறுப்புணர்வும் காட்டியது பதினெட்டாம் நூற்றாண்டின் சிறப்பு மிக்க ஓர் அம்சம் ; அதேசமயம், டீஃபோவால் ‘ கீழ்ப்பணிதல் என்ற அந்தப் பெரு விதி ’ என்று மிகவும் பொருத்தமாக வருணிக்கப்பட்ட அந்த நல்லியல்பை அவர்களிடம் புகுத்தி அவர்களைச் சீர்த்திருத்தவேண்டும் என்ற உறுதியும் அப்பொழுது காணப்பட்டது. பதினேழாம் நூற்றாண்டில் அரசியல், சமயக் கொந்தளிப்புகள் நிகழ்ந்தன அல்லவா ? அதனால், ஏழை மக்களிடத்தில் சமூக ஒழுங்குக் கட்டுப்பாட்டை நிறுவவேண்டுமென்று மேல்வகுப்பு மக்களும், நடுத்தரவகுப்பு மக்களும் விரும்பினர். கிளர்ச்சி, விசுவாசமின்மை ஆகிய நோய்களுக்கு ஏழை மக்கள் மிகவும் எளிதில் இரையாகிவிடுகின்றனர் என்பது அக்காலத்திய நம்பிக்கை...... ஆனால், கீழ்ப்பணிதல் என்ற இந்தக் கோட்பாடு அன்று தலை

நிமிர்ந்து நின்றது என்பதை வைத்துக்கொண்டு, மேல்வகுப்பினர் தாழ்வகுப்பினரை இரக்கமின்றிக் கொடுமையுடன் நடத்தினர் என்று முடிவு செய்வது தவருகும்; உண்மை அதற்கு மாருனது. ஏனெனில், அது ஒரு நற்பணிக் காலம். பதினெட்டாம் நூற்ருண்டில் சமூக வேறுபாடுகள் நன்கு வரையறுக்கப்பட்டிருந்தன; தனது சமூக அமைப்புக்கு ஒத்ததொரு மொழியை அது பயன்படுத்தியது.'[1]

பதினெட்டாம் நூற்ருண்டில் காணப்படாத ஒரு சமத்துவ உணர்வு பத்தொன்பதாம் நூற்ருண்டின் முதல் ஆண்டுகளில் தலை தூக்கிக்கொண்டிருந்தது. ஹன்ன மூர் (Hannah More) வாழ்ந்த அச்சமயத்தில் ஏழைகளுக்கான கல்வியும் அன்புப்பணியும் வகுப் புணர்வின் அடிப்படையிலும், ஒருவித பெருமை உணர்வுடனுமே இன்னமும் செய்யப்பட்டுவந்தன. இது புதிய காலத்தின் தேவை களுக்கும் பிரச்சினைகளுக்கும், இணங்காததாகவும் ஏற்புடையதல்லாத தாகவும் போய்விட்டது.

> கனவானையும் அவன் உற்ருரையும் கடவுள் காப்பாற்றுவாராக!
> எங்களை எமக்குரிய இடங்களிலேயே வைப்பாராக!

இத்தகைய கருத்துகள் சர் ரோஜர் டி காவர்லியின் (Sir Roger de Coverley) நாட்களில் ஏற்றுக்கொள்ளப்பட்டன; ஆனல், இந்த ஞாயிறுப் பள்ளிக் கருத்துகளும் செயல்களும் தொழிற் புரட்சிக்குப் பிறகு கேலிக்கும் ஆத்திரத்திற்கும் இடமளித்தன. ஏனெனில், அப் புரட்சியானது பழங்காலத்து நிலமானிய முறையின் (Feudalism) இயற்கையான எளிமைக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டது.

அறப்பள்ளிக்கூடங்களையும் ஞாயிறு பள்ளிக்கூடங்களையும் ஆரம் பித்து ஏராளமான மக்களுக்குக் கல்வி புகட்டத் தொடங்கியது பதினெட்டாம் நூற்ருண்டு; ஆனல், பல பழைய இலக்கணப் பள்ளி களும் மானியப் பள்ளிகளும் சீர்கேடடையலாயின. இதனல் இடைத்தரக் கல்வி (Secondary Education) பாதிக்கப்பட்டது. தனியார் முயற்சியும், பொதுப்பணி ஆர்வமும் முன்னேறிய அதே சமயத்தில், பழைய நிறுவனங்கள் குன்றி, அழிந்துபோயின; இது அக்காலத்தின் ஒரு பொதுவான அம்சம். சட்டங்களின் மீதும் அரசியல் உரிமைகள் மீதும் இரண்டாம் ஜேம்ஸ் தொடுத்த தாக்குதல் பலமாக முரியடிக்கப்பட்டதால் அடுத்து வந்த நூருண்டுகள் ஒரு

[1] குமாரி M. G. ஜோன்ஸ், 'The Charity School Movement', பக்கம் 4. மேலும் பார்க்க: மே 1939-க்கான 'Economic History Review' என்ற பத்திரிகையில் வெளியான, பேராசிரியர் டாவ்னி (Tawney) எழுதிய, மேற்சொன்ன நூலின் விமர்சனம்.

சட்டரீதியான, பழமை-விரும்பித் தன்மையைப் பெற்றன; அது அளவுக்கும் அதிகமாகக் காணப்பட்டது. ஓர் உரிமைப் பத்திரத் தைக் (Charter) காட்டிவிட்டால் எதிர்ப்பெல்லாம் அடங்கிவிடும். எந்தவிதமான சீர்திருத்தத்தைப்பற்றியும் பேச்சு கிடையாது. பாராளுமன்றத் தொகுதிகள், நகரசபைகள், பல்கலைக் கழகங்கள், அறநிலையங்கள் ஆகிய எதிலும் அந் நூற்றுண்டு முடியும் வரை சீர்திருத்தம் என்ற பேச்சே இல்லை; மேலும் 'ஃபிரான்சின் வருந்தத்தக்க உதாரணம்' சீர்திருத்தம் என்ற சொல்லையே நஞ்சாக்கியது. நகரசபை ஆலிகார்க்கிகள் (Oligarchies) எவ்வாறு தங்களது பணத்தைப் பெருந்தீனி விருந்துகளில் செலவிட்டு, நகராட்சி வேலைகளை அலட்சியம் செய்தனவோ, அதே முறையில், மானியப் பள்ளிக்கூடங்களின் தலைமை ஆசிரியர்களும் தங்களது பள்ளிகளை அக்கறையின்றி நடத்தினர்; சிலர் அவைகளை இழுத்து மூடிவிட்டு, மானியத்தைத் தமது சொந்த சொத்தாகக் கருதி அனு பவித்து வந்தனர்.

ஆனால், தனியார் பள்ளிகள் இடைத்தரக் கல்வியைக் காத்தன; மாணவர்களிடத்தில் வசூலிக்கப்படும் சம்பளத்தைக் கொண்டே இவை நிர்வகிக்கப்பட்டன. பதினெட்டாம் நூற்றுண்டில் இத்துறையில் பெரு வளர்ச்சி காணப்பட்டது. டிஸ்ஸென்ட்ர்களின் கல்வி நிலையங் களையும் உள்ளிட்ட இப் பள்ளிகள் மிதமான சம்பளத்தை வசூலித்து, நல்ல கல்வியைப் புகட்டின. இங்கு கிரேக்க, லத்தீன் மொழிகளைத் தவிர, பேசப்பட்ட மொழிகளும் விஞ்ஞானமும் சொல்லித்தரப்பட்டன. இப் புதிய பாடங்கள் பழைய மானியப் பள்ளிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் கற்றுத்தரப்படவேயில்லை.

ஆக்ஸ்ஃபோர்டிலும் கேம்பிரிட்ஜிலும் கற்றுத்தராத இப் பாடங்களை டிஸ்ஸென்டர்களின் கல்வி நிலையங்களும்கூட கற்றுத்தந்தன. இக் கல்வி நிலையங்களில் பிரீஸ்ட்லி (Priestley) போன்ற பேரறிஞர்கள் காணப்பட்டனர். இந்த இரு பல்கலைக்கழகங்கள் மட்டுமே அச்சமயம் இங்கிலாந்தில் இருந்தன; நிறுவப்பட்ட திருச்சபையைச் சேர்ந்தவர்கள் மட்டுமே அவைகளில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். அவர்களுக்கும் மிகவும் மட்டமான கல்வியே அளிக்கப்பட்டது; அதிகச் சம்பளம் வசூலிக்கப்பட்டது. இதன் விளைவாக அங்கு மாணவர்களின் தொகை கேவலமான அளவுக்குச் சுருங்கிப்போயிற்று; லாட் (Laud), மில்டன் ஆகியோரின் காலத்தில் அவைகளில் வாசித்த மாணவர்களின் தொகையில் பாதிகூட இப்பொழுது காணப்படவில்லை.

உரிமைப் பத்திரம் பெற்ற சர்வாதீனத்தின் தீய விளைவுகள் இவ்விரு இடங்களிலும் நன்கு காணப்பட்டன. ஒரு கல்லூரி 'டான்' (Don) தனது 'ஃபெலோஷிப்பை' (Fellowship) ஆயுள் முடியும் வரை

பெற்றிருக்கமுடியும் ; ஆனால், திருச்சபை உத்தியோகம் கிடைத்ததும் சிலர் ஃபெலோஷிப்பைக் கைவிட்டுச் சென்றனர். படிப்பு வேலை எதை யும் அவர்கள் செய்யவேண்டும் என்ற கட்டாயம் இல்லை ; அவர்கள் திருமணம் செய்துகொள்வதற்கும் அனுமதிக்கப்படவில்லை ; பல கல்லூரிகளில் அவர்கள் மத குருக்களாகுமாறு வற்புறுத்தப்பட்டனர்.

சோம்பேறித்தனமான, சுய கட்டுப்பாடற்ற, பிரம்மசரிய மத வாழ்வு வாழ்ந்த இந்த டான்களை (Dons), பதினைந்தாம் நூற்றாண்டின் துறவிகளுடன் (Monks) ஒப்பிடலாம் ; அத் துறவிகளால் எவ்வளவு பயன்கள் விளைந்தனவோ, அவ்வளவு பயன்கள்தாம் இவர்களாலும் விளைந்தன. கனவான்கள் குடும்பத்தில் பிறந்த கிப்பன் 1752-ல் ஆக்ஸ்ஃபோர்டு மேக்டலீன் (Magdalen) கல்லூரியில் ஃபெலோவாகச் (Fellow) சேர்ந்தார். அங்கு ஃபெலோக்களின் வாழ்க்கையை அவர் வருணிக்கிறார் :

'படித்தல், சிந்தித்தல், எழுதுதல் ஆகிய கடின உழைப்புகளி லிருந்து அவர்கள் தங்களை விடுதலை செய்துகொண்டார்கள். கல்லூரி விஷயங்கள், டோரிக் கட்சி அரசியல், தங்களைப்பற்றிய கதைகள், யாரையாவதுபற்றிய அவதூறுகள்—இவைகள்தாம் அவர்களது உரை யாடல்களில் நிறைந்திருந்தன. குடித்துவிட்டு சோம்பேறித்தனமாக அவர்கள் பொழுதைக் கழிக்கின்றனர். இதைப் பார்த்தால் இளைஞர் களின் மட்டற்ற குடிவெறியாட்டங்களைப்பற்றி நாம் எப்படிக் குறைகூற முடியும்?'

இவ்விரு பல்கலைக்கழகங்களிலும் பட்டப்படிப்பு மாணவர்களைப் (undergraduates) பற்றி ஃபெலோக்கள் சிறிதும் கவலைப்படுவ தில்லை. ஆயினும், இங்கும் அங்கும் ஓர் உதவியாசிரியர் (Tutor) தனது கடமைகளை மிக ஆர்வத்துடன் செய்துவந்தார். பிரபுக்களின் பிள்ளை களும், பணக்காரக் குடும்பத்திலிருந்து வந்த, பொதுமக்கள் வகுப் பைச் சேர்ந்த ஃபெலோக்களும் (Rich Fellow Commoners) நிறைய இருந்தனர். ஒழுங்குக் கட்டுப்பாட்டு விதிகளில் இவர்களுக்குப் பல சலுகைகள் காட்டப்பட்டன. இவர்களுடன் குடும்ப ஆசிரியர்களும் (private tutors) கூடப் பெரும்பாலும் இருந்தனர். பல்கலைக்கழகப் பேராசிரியர்கள் தங்களது பணிகளை நிறைவேற்றியது மிகமிக அருமை. 1725-க்கும் 1773-க்குமிடையில் கேம்பிரிட்ஜில் நவீன வரலாற்றின் எந்த ஒரு ரீஜியஸ் பேராசிரியரும் (Regius Professor) ஒரு விரிவுரைகூட ஆற்றவேயில்லை ; அப் பதவியை வகித்தவர்களில் 'மூன்றாம் நபரும், மிகவும் இழிச்செயல்கள் செய்தவருமான' ஒரு பேராசிரியர் 1768-ல் நன்கு குடித்துவிட்டு ஓவரிலிருந்த தனது விகாரேஜி லிருந்து (Vicarage) வீட்டுக்குத் திரும்புகையில் குதிரைமீதிருந்து விழுந்து இறந்துபோனார்.

1770ஆம் ஆண்டு வாக்கில் ஆக்ஸ்ஃபோர்டில் பட்டப்படிப்புக்கு எந்த விதமானதொரு நல்ல தேர்வும் நடத்தப்படவில்லை. கேம்பிரிட்ஜில் ஆனர்ஸ் (honours) பட்டத்துக்கான மாணவர்களுக்கு கணித ட்ரைபாஸ் (Tripos) ஓர் உண்மையான தேர்வாக விளங்கியது. 'ஆக்ஸ்ஃபோர்டைக் காட்டிலும் கேம்பிரிட்ஜில் கிளாய்ஸ்டர் பாபங்கள் (vices of the Cloyster) குறைவாகவே இருக்கின்றனபோல் தோன்றுகிறது. ஹனோவர் வம்சத்தை ஆக்ஸ்ஃபோர்டைக் காட்டிலும் முன்னதாகவே கேம்பிரிட்ஜ் ஏற்றுக்கொண்டுவிட்டது; சாகாவரம் பெற்ற நியூடனின் பெயரும் தத்துவமும் அவரது அக் கல்விக் கழகத்தில்தான் முதன் முதலில் போற்றிக் கௌரவிக்கப்பட்டன" என்று கிப்பன் எழுதினர்.

இவ்விரு பல்கலைக்கழகங்களிலும் அந் நூற்றுண்டின் இறுதியாண்டுகளில்தான் சீர்திருத்தங்கள் தொடங்கின. இதன் விளைவாக அவை முன்னேற்றப்பாதையில் அடியெடுத்து வைத்தன. கேம்பிரிட்ஜ் டிரினிட்டி (Trinity) கல்லூரியில் 1787ஆம் ஆண்டிலிருந்து சீர்திருத்த காலம் தொடங்கியது என்று கூறலாம். அப்பொழுது இரு சாராருக்குமிடையில் போராட்டம் வலுத்து, சான்சலர் பிரபுவுக்கு முன்னுலேயே அவர்கள் நீதிமன்றத்தில் நிற்கவேண்டிய அளவுக்குப் போய்விட்டது. பிறகு ஒரு முறையான, நல்ல தேர்வு நடத்தி, அதன் முடிவுகளைக் கொண்டே ஃபெலோஷிப்புகள் நியாயமாக வழங்கப்படவேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. இந்த மாறுதல் காரணமாக, மாணவர்களின் எண்ணிக்கையிலும் கல்விப் புகழிலும் தன்னை விஞ்சியிருந்த செயின்ட் ஜான்ஸ் கல்லூரியை டிரினிட்டி கடைசியில் பின்னுக்குத் தள்ளிவிட்டு முன்னுக்கு வர முடிந்தது. ஆயினும், வேர்ட்ஸ்வொர்த்தும், வில்பர்ஃபோர்சும் பயின்ற அக் கல்லூரியும் பெருஞ்சிறப்பு வாய்ந்த மனிதர்களை உற்பத்தி செய்துகொண்டுதானிருந்தது.

முதலிரண்டு ஜார்ஜுகளின் ஆட்சிவரை ஆக்ஸ்ஃபோர்டு யாகோபியக் கட்சியைச் சேர்ந்திருந்தது என்பது எல்லோருக்கும் தெரியும். இதிலிருந்து இரண்டு உண்மைகளை நாம் காண்கிறோம்: ஒன்று, அரசாங்கத்தின் அதிகாரம் ஒரு வரையறைக்கு உட்பட்டது; இரண்டு உரிமைப் பத்திரமும் (charter) சட்டத்தின் ஆட்சியும் (rule of law) குடிமக்களுக்குப் பெரும் உரிமைகளை அளித்திருந்தன. திருச்சபைப் பதவிகளுக்கு நியமனம் செய்யும் அதிகாரம் விக் அமைச்சர்களின் கையிலிருந்தது. இவர்கள் யாகோபியர்களை எந்தக் காரணத்தைக் கொண்டும் பிஷப்புகளாக நியமிக்கமாட்டார்கள். ஆனால், ஆக்ஸ்ஃபோர்டும் கேம்பிரிட்ஜும் இவர்களின் அதிகார எல்லைக்குள் இல்லை; மேலும் பல்கலைக்கழகங்கள்மீது இரண்டாம் ஜேம்ஸ் தொடுத்த தாக்குதல் ஒரு நல்ல எச்சரிக்கையாக விளங்கியது; அதனால், எதிர்கால அரசாங்கங்

களின் தலையீடுகளிலிருந்து கல்லூரிகளின் உரிமைகளைக் காக்க வேண்டும் என்ற உணர்வு இங்கிலாந்தில் வேரூன்றியது. ஆக்ஸ்ஃபோர்டு டான்கள் (Dons) ஹனேவிரிய வம்சத்தை ஏற்றுக்கொள்வதாக உறுதி (oath) எடுத்துக்கொண்டு தங்களது தொகைகளைப் பெற்று, பிறகு யாகோபியக் கட்சியை ஆதரித்தால் ஜார்ஜ் மன்னரின் அமைச்சர்கள் வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்கவேண்டியதுதான். இவ்விதமாகப் பல்கலைக் கழகங்களின் முக்கிய உரிமைகள் பதினெட்டாம் நூற்றாண்டு நடவடிக்கைகள் மூலமாக நன்கு நிறுவப்பட்டுவிட்டன. டியூடர்களும், ஸ்டூவர்ட்டுகளும், கிராம்வெல்களும் அவைகளில் தலையிட்ட காலம் மலையேறிவிட்டது. சிற்சில வழிகளில் இந்த உரிமை தவறாகப் பயன் படுத்தப்பட்டது என்பது உண்மை; என்றாலும்கூட, அது பாதுகாக்கப் பட்டது என்பதற்காக நாம் கடவுளுக்கு நன்றி கூறவேண்டும். ஏனென்றால், சட்டத்தின் ஆட்சி, குடிகளின் உரிமைகள் என்ற போற்றத்தக்க இத்தகைய சிறந்த மரபுகளைக் கொண்டிராத நாடுகளில் பல்கலைக் கழகங்கள் அரசாங்கங்களின் அடிமைகளாக ஆகிவிட்டன என்பதை நாம் கவனிக்கவேண்டும்.[1]

ஆயினும், அன்று இங்கிலாந்திலிருந்த இவ்விரண்டே பல்கலைக் கழகங்கள் சீர்கேடடைந்தாலும், இடைத்தரக் கல்விப் (secondary education) பொறுப்பை வகித்த மானியப் பள்ளிகள் சிதைந்து போனாலும், நாட்டின் அறிவியல் வாழ்வு (intellectual life) அக்காலத்தைவிட வேறு எப்பொழுதுமே அவ்வளவு ஒளி பெற்றுத் திகழ்ந்ததில்லை. மூன்றாம் ஜார்ஜின் இங்கிலாந்தில், ஒழுங்கான கல்வித் திட்டம் இல்லாத அக்காலத்தில் இன்றைக்குக் காணப்படுவதைக் காட்டிலும் மிக அதிக விகிதத்தில் அறிஞர்கள் வாழ்ந்தனர். மனித மூளையின் மாபெரும் படைப்புகளெல்லாம் தற்செயல் நிகழ்ச்சிகளாகத் தோன்றுகின்றன; சுதந்திரத்தின், பல்வகைப்பட்ட அமைப்புகளின் விளைவாகத் தோன்றுகின்றன—ஒரேவிதமான, வேறுவகைகளில்லாத அமைப்பின் காரணமாக அல்ல. நகர்ப்புறத்துக்கும் நாட்டுப்புறத்துக்கு மிடையில் அன்று ஒரு சமச்சீர்நிலையிலிருந்தது; இன்றையப் பெரு நகரங்களின் தாங்கொணு வாழ்க்கைச் சுமை அன்று இல்லை; இன்றையப் பத்திரிகைகள் அன்று இல்லை; ஆனால், இலக்கியம் இருந்தது; இன்றைய இயந்திரங்கள் அன்று இல்லை; ஆனால், கலைகளும் கைத்தொழில்களும் அன்று இருந்தன—மனித மூளையின்

[1] இக்காலத்தில் பல்கலைக்கழகங்களின் நிலையைப்பற்றித் தெரிந்துகொள்வதற்கு, பார்க்க: A.D. Godley, 'Oxford in the 18th Century'; C.E. Mallet, 'History of the University of Oxford', தொகுதி III; D. Winstanley, 'Unreformed Cambridge;' Gunning's, 'Reminiscences of Cambridge from the year 1780'. 1774-5-ல் ஆக்ஸ்ஃபோர்டைப் பற்றிய அதிகாரபூர்வமான, சுவைக்கத்தக்க தகவல்களை ஊர்குரு உட்ஃபோர்டின் Diaries அளிக்கிறது.

உன்னதப் படைப்புகளுக்கு இவைதான் காரணமென்று தோன்றுகின்றன. பர்க், கிப்பன், ஜான்சன்—மில்டன், நியூடன், ரென் (Wren) போன்றவர்களைப் பற்றிப் பேசவே தேவையில்லை—போன்ற மாமேதைகளை எதிர்காலம் உற்பத்தி செய்யாமற் போகலாம்; ஆயினும், ஒருவித அறிவியல் வாழ்வை அனுபவித்துச் சுவைக்கக்கூடிய கல்வியறிவு பெற்ற மக்கள் கடந்த காலத்தைக் காட்டிலும் எதிர்காலத்தில் அதிகமிருப்பர்.

பதினெட்டாம் நூற்றுண்டில் வேல்ஸ் மக்கள் விழிப்புற்றனர்; தங்களது ஆன்மீக, அறிவியல் (intellectual) வாழ்வு, இங்கிலாந்தின் ஆன்மீக, அறிவியல் வாழ்விலிருந்து வேறுபட்டது என்ற உணர்வை அவர்கள் மீண்டும் பெற்றனர்; சமயமும் கல்வியும் இதற்கு வகை செய்தன. இக் கதையே ஒரு தனிச்சிறப்பு வாய்ந்தது; முக்கியமானதுங்கூட.

வெல்ஷ்-ஆங்கிலேய மனிதரான எட்டாம் ஹென்றி இவ்விரு நாடுகளையும் அரசியல் ரீதியில் ஐக்கியப்படுத்தினுர். சுதந்திரம், சம உரிமைகள் என்ற அடிப்படையில் ஆங்கிலேய மக்களின் ஒரு பகுதியாக வேல்ஸ் மக்களை ஆக்க அவர் எண்ணிஞர்; பெருமளவில் வெற்றியடைந்தார். அதற்குக் காரணம், அயர்லாந்தில் செய்ததுபோல் ஆங்கிலேயர்கள் வேல்ஸையும் அதன் மக்களையும் சுரண்டவில்லை; அதேபோல், ஆங்கிலேயர்களையும் வெல்ஷ்காரர்களையும் சமயம் பிரித்துவைக்கவுமில்லை. டியூடர்கள் காலத்தில் வெல்ஷ் கனவான்கள் ஆங்கில மொழியையும், கண்ணுேட்டத்தையும், இலக்கியத்தையும் ஏற்றுக்கொண்டு, தங்களது பாடகர்களை (Bards) ஆதரிப்பதைக் கைவிட்டனர். குடியானவர்களுக்கு வழிகாட்டுவதற்குக் கனவான்களைத் தவிர வேறுயாருமில்லை. எனவே, அவர்களும் ஆங்கிலேயப் பண்பாட்டையே பின்பற்ற வேண்டியதாய்விட்டது; ஆயினும், அவர்கள் தங்களது சொந்த மொழியையே தொடர்ந்து பேசிவந்தனர்; அம்மொழிப் பாடல்களையே ஹார்ப் (harp) வாத்தியத்தில் இசைத்துப் பாடினர்.

எலிசபெத்தின் காலத்தில் பைபிளும் வழிபாட்டு நூலும் (prayer-book) வெல்ஷ் மொழியில் பெயர்க்கப்பட்டன; இதனுல் வெல்ஷ் மக்களை ஆங்கிலேய மயமாக்கும் அரசாங்கத்தின் கொள்கை தடைப்பட்டது. பின்னுல் நேர்ந்த விளைவுகட்கு இது வித்திட்டது; ஆயினும், அதன் முழுப்பயனும் வெகுகாலத்துக்குப் பின்னர்தான் அனுபவிக்கப்பட்டது. கிராம்வெல்லைச் சேர்ந்தவர்கள் பின்பற்றிய ஆங்கிலேய பியூரிட்டானிய சமயம் வெல்ஷ்காரர்களைக் கவரவில்லை; அவர்கள் அரசரின் கட்சியையே ஆதரித்தனர். நேஸ்பி (Naseby) போர்க்களத்தில் மடிந்த சார்லஸ் மன்னரின் காலாட்படையானது வேல்ஸ் மலைப்பகுதிகளிலிருந்தே பெரும்பாலும் திரட்டப்பட்டது.

பதினெட்டாம் நூற்ருண்டு வந்தது. இங்கிலாந்தில் நடைபெற்ற தைப் போலவே, வேல்ஸிலும் கனவான்களின் (squires) நிலங்கள் பெரிய நிலப் பிரபுக்களால் வாங்கப்பட்டன. சட்டப்படி, பெரிய பண்ணை களைக் கொண்ட ஒரு பிரதேசமாக வேல்ஸ் ஆகிவந்தது; ஆயினும், தனது அடிப்படைச் சமூக அமைப்பில், சின்னஞ்சிறு குடியானவப் பண்ணைகளைக் கொண்ட ஒரு பிரதேசமாகவே அது இருந்துவந்தது. இத்தகைய பண்ணைகள் ஒவ்வொன்றும் சராசரியில் முப்பது முதல் நூறு ஏக்கர்கள்வரை கொண்டிருந்தது; அவைகள் குறுகிய கால அல்லது ஆண்டுக் குத்தகைக்கு விடப்பட்டன; பழங்காலப் பிழைப்பு மட்ட (subsistance) விவசாயமே செய்யப்பட்டுவந்தது. மார்க்கெட்டுக்காக உற்பத்தி செய்வது அதன் நோக்கமன்று; குடும்பத்துக்கு வேண்டிய அளவு உற்பத்தி செய்வதே அதன் நோக்கம். பெரும்பண்ணைக் காரர்களும், நடுத்தர வகுப்பு (middle class) மக்களும் பெரும்பாலும் இல்லை என்றே சொல்லலாம். பெரும் பண்ணை முறை என்ற போர்வையை வேல்ஸ் போர்த்தியிருந்தாலும், சிறு குடியானவர்களைக் கொண்டதொரு சமத்துவ ஜனநாயகமே அங்கு உண்மையில் நிலவியது; மேலும் தெற்கு வேல்ஸில் சுரங்கத் தொழிலாளிகளும்கூட இருந்தனர்.

இத் தீவின் மற்ற மேற்கு, கெல்டிக் பகுதிகளைப் போலவே, வேல்ஸி லும் பழைய காலத்தில் நிலங்களுக்கு வேலியடைப்புகள் உண்டு. திறந்த வயல் முறை (open-field system) அங்கு எப்பொழுதுமே நிலவியது கிடையாது. ஆங்கிலேயர்கள் குடியேறியிருந்த பெம்பு ரோக்ஷயரின் சில பகுதிகள் மட்டுமே இதற்கு விதிவிலக்கு; அங்கும்கூட வேலியடைப்புகள் இப்பொழுது ஏற்பட்டுவந்தன. வேல்ஸ் பண்ணைகள் சாதாரணமாகக் கற்சுவராலும், புற்களடர்ந்த மண்கரையாலும் அமைக் கப்பட்ட வேலிகளையே கொண்டிருந்தன.

இந்தத் தூரத்து, நாட்டுப்புறத்து மக்களின் பண்டைப் பழக்க வழக்கங்கள் எந்தவிதமான சமூக, தேசிய, அரசியல் அல்லது சமய இயக்கத்தினுலும் ஸ்டுவர்ட்டுகளின் காலத்தில் சிறிதளவுகூட மாற்றப் படவில்லை. அவர்கள் பழைய ஹார்ப் வாத்தியத்தையும் பாடல்களையுமே இன்னும் பின்பற்றினர்; துதிப் பாடல்களைப் (hymns) பாடுவதே பெரும்பாலும் அவர்களது சமயமாக இருந்தது. ஆயினும், அன்றைய காலத்தின் பைபிள் வாசிக்கும் புராடஸ்டன்ட் சமயப் பெரு வெள்ளத்தில் அவர்களால் முழுப் பங்கு கொள்ள முடியவில்லை; காரணம் அவர்களுக்கு எழுத்து வாசனை தெரியாது. புவியியல் தடைகள் காரணமாக வேல்ஸின் பொருளாதாரமும் அறிவியல் வாழ்வும் ஆங்கிலேயர்களால் பாதிக்கப்படவில்லை. 1768-ல் கூட 'குதிரை மாதிரி பெரிய கற்களைக் கொண்ட வெறும் பாறைச் சந்துகள்' என்று வேல்ஸின் மலைச்சாலைகளை ஆர்தர் யங், (Arthur Young) வருணித்தார்.

எனவே, வேல்ஸில் சமய அல்லது கல்வித்துறை மறுமலர்ச்சி தோன்றவேண்டுமென்றால், அதை அப் பிரதேசத்து மக்களேதான் தோற்றுவிக்க வேண்டும்; அவர்களும் அப்படியே செய்தார்கள். வில்லியம், ஆன் ஆகியோரின் ஆட்சிகளில் தொடங்கி, பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதும் பொதுப்பணியார்வமிக்க வேல்ஸ்காரர்கள் சிலர் ஒரு சமய, கல்வித்துறை இயக்கத்தைத் தமது மக்களிடையில் பரப்பினர். இறுதியில், வெல்ஷ் எவஞ்சலிய இயக்கத்தின் மிக முக்கிய அங்கமாக மெதாடிச மதாலயங்கள் உருப்பெற்றன; ஆனால், ஜான் வெஸ்லி பிறப்பதற்கு முன்பே இது தொடங்கிவிட்டது.

வேல்ஸில் கல்வியைப் பரப்பியவர்களின் நோக்கங்கள் அங்குள்ள விவசாயிகட்குப் படிக்கக் கற்றுத் தருவதும், வெல்ஷ் பைபிளை அவர்கள் கையில் கொடுப்பதும்தான். இங்கிலாந்திலும்கூட சமய நோக்கங்களுக்காகவே அறப் பள்ளிக்கூடங்களும் ஞாயிறு பள்ளிக்கூடங்களும் நிறுவப்பட்டன; ஆயினும், இம்மைக்குரிய சில நோக்கங்களும் அங்கிருந்தன; டிஸ்ஸென்டர்களுக்கெதிராகவும், யாகோபியர்களுக்கெதிராகவும் நிறுவப்பட்ட திருச்சபையைக் (Established Church) காப்பது; மிகவும் கவனத்துடன் தரவரிசைப்படுத்தப்பட்ட ஒரு சமூகப் பொருளாதாரத்துக்கேற்ற, தொழிலூக்கமிக்க உறுப்பினர்களாக ஏழைகளின் குழந்தைகளைப் பயிற்றுவது—ஆகியவைதான் அந் நோக்கங்கள். எளிய, சமத்துவக் கொள்கைகள் நிலவிய வேல்ஸின் குடியானவ சமூகத்தில் அத்தகைய பிரச்னைகள் எதுவும் எழவில்லை; ‘ நடுத்தர வகுப்பினரின் ’ பயன் பற்றிய கருத்துகள் அங்குத் தெரியா; அங்குப் பள்ளிகளை நிறுவியவர்கள் ஆண், பெண்களின் ஆன்மாக்களைக் காப்பாற்றவே விரும்பினர்; அதாவது, பைபிளை வாசிக்கின்ற, சுவிசேஷத்தைப் பின்பற்றுகின்ற நல்ல கிறிஸ்துவர்களாக அவர்களை ஆக்கவே விரும்பினர்; இந் நோக்கம் ஈடேறியது; அதே சமயம், எழுத்தறிவு பெற்ற வெல்ஷ் மக்களின் கண்முன் புதிய அறிவியல் வாழ்வுக்கான புதிய தேசியப் பண்பாட்டுக்கான பாதைகள் தோன்றின; இவை எல்லாவற்றிலும் ஒரு சமயப்பூச்சு இருக்கத்தான் செய்தது; ஆயினும், வேறு பல துறைகளுக்கும்கூட அவை இட்டுச் சென்றன.

அறப்பள்ளிக்கூடங்களின் வரலாற்றை வரைந்த அந்த வெல்ஷ் மாது இவ்வாறு எழுதினர்:[1]

‘ அறப்பள்ளிக்கூட இயக்கத்தின் முக்கியத்தையும், அது வெல்ஷ் மக்களின் வரலாறு, குணவியல்பு ஆகியவைமீது தோற்றுவித்த விளைவுகளையும் கொஞ்சமும் குறைத்து மதிப்பிடமுடியாது. எல்லாக் கல்வியின்

[1] ‘The Charity School Movement, A study of Eighteenth Century Puritanism in Action’. M. G. ஜோன்ஸ், கிர்ட்டன் கல்லூரியின் ஃபெலோ, 1938, பக்கம் 321.

நோக்கமும் பயனும் தெய்வபக்தியே என்று இடைவிடாமல் போதித்து வந்ததன் காரணமாகச் சமயத்தில் அக்கறையில்லாத, அரசியல் உணர்வு ஒரு சிறிதும் இல்லாத, கவலையற்ற, மகிழ்ச்சிநிறைந்த, எளிய தன்மை கொண்டிருந்த வேல்ஸ் மக்கள், சமயத்தையும் அரசியலையுமே தமது பேச்சாகவும் மூச்சாகவும்கொண்ட மக்களாக மாறிவிட்டனர். பைபிள் வெல்ஷ் மனிதனுடைய வழிகாட்டியாக ஆகிவிட்டது. அதன் மொழிதான் அவன் மொழி. அதனது போதனைகள்தாம் அவனது சமூக வாழ்வையும் அரசியல் வாழ்வையும் ஆட்கொண்டன. அதிலும், பேன்டிசெலின் வில்லியம்ஸின் (Williams of Pantycelyn) ஞானப்பாடல்களிலும் குடியானவர்களின் இதயமும் அறிவும் மூழ்கித் திளைத்தன.

'அறப்பள்ளிக்கூட இயக்கத்தின் அரசியல் விளைவுகளும்கூட முக்கியமானவைதாம். நவீன வெல்ஷ் தேசியமானது, பதினெட்டாம் நூற்றாண்டின் மொழி, இலக்கிய மறுமலர்ச்சி ஊன்றிய வித்தேயொழிய வேறில்லை. இவ்வாறாக, சமயப் புத்துயிர்ப்பு இயக்கத்தைப் போலவே அரசியல் துறையிலும்கூட அறப்பள்ளி இயக்கமானது ஒரு தலையாய முக்கியத்துவம் வாய்ந்தது. இப் பள்ளிகள் தமது பணிகளைத் தொடங்குவதற்கு முன்பு, 'பிரபுக்களின், கவிஞர்களின் மொழியாக' ஒரு காலத்தில் இருந்த வெல்ஷ், செத்துக்கொண்டிருந்தது. ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிவாக்கில் அது மீண்டும் கவிதைக்கும் உரைநடைக்கும் தாயாகத் திகழ்ந்தது; ஆனால், பிரபுக்கள் மொழியாக அன்று, குடியானவர்களின் குழந்தையாக, தெய்வபக்தியின் ஊடகமாக.'

## 12. டாக்டர் ஜான்சனின் இங்கிலாந்து

## II

விவசாயப் புரட்சியும் தொழிற்புரட்சியும் தொடங்குகின்றன—போக்குவரத்து வசதிகளில் அபிவிருத்தி—கடல் வாணிபம்—லண்டன் நகரம்.

சாக்சானியப் (Saxon) படையெழுச்சிக்குப் பின்னர் இங்கிலாந்தின் சமூக வரலாற்றில் மிக மிக முக்கியமான நிகழ்ச்சி 'தொழிற்புரட்சியே' என்றாலும், அது எப்பொழுது தொடங்கியது என்பதைக் கூறுவது கடினம். 'இடைக்காலம்' (Middle Ages) எப்பொழுது முடிவுக்கு வந்தது என்பதைத் தீர்மானிப்பது எவ்வளவு கடினமோ அதைப் போன்றதுதான் இதுவும். ஹனேவிரிய மன்னர்கள் அரியணையேறு வதற்கு நீண்ட நாட்களுக்கு முன்பே முதலாளித்துவம், நிலக்கரி, கடல் வாணிபம், தொழிற்சாலைகள், இயந்திர சாதனங்கள், தொழிற் சங்கங்கள் ஆகிய எல்லாம் ஆங்கிலேய வாழ்வில் தத்தம் பணிகளை ஆற்றி வந்திருக்கின்றன என்பதை நாம் கண்டோம். ஆயினும், தொழில் மாற்றமானது முழு மூச்சுடன் முன்னேறிய காலம் பதினெட்டாம் நூற்றாண்டின் பின்பாதிதான்; இக் காலத்தில்தான் விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளாலும், பெருகி வரும் மக்கள் தொகையி னாலும் உந்தப்பட்டு அது விரைவாக முன் சென்றது. அந்த வேகம் இன்றுவரையும் தணிந்தபாடில்லை.

இதே முறையில் 'விவசாயப் புரட்சியும்' பதினெட்டாம் நூற்றாண் டில் ஏற்பட்டதென நாம் கூறலாம். நமது நிலங்களின் விவசாய உற்பத்தித் திறன் அன்று மாபெரும் அளவில் பெருகியது; நமது மக்கள் தொகை அப்பொழுது துரிதமாகப் பெருகியதால், இது அவசிய மாயிற்று. அந்நிய நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களைக் கொண்டு வந்து எல்லோருக்கும் உணவளிப்பது என்பது அந்நிலையில் முடியாத தாயிருந்தது. அக்காலத்தின் விசேஷ சமூக, பொருளாதார நிலைமை கள் காரணமாக இந்த மிகப் பெரும் தேசியத் தேவையானது வெற்றிகர மாகச் சமாளிக்கப்பட்டது. பதினெட்டாம் நூற்றாண்டில் நிலப்

பிரபுத்துவ வகுப்பு முழுவதுமே, நிலத்தையும் விவசாய முறைகளையும் அபிவிருத்தி செய்வதில் தன் முழுக் கவனத்தையும் செலுத்தி, தன் பெருஞ் செல்வ முழுவதையும் செலவிடக்கூடிய மன நிலையையும் திறமையையும் பெற்றிருந்தது. குழந்தைப் பருவத்திலிருந்த தொழிற் புரட்சி உற்பத்தி செய்த மூலதனம் பெரும் பண்ணை முறை (great-estate system) மூலமாக விவசாய உற்பத்திப் பெருக்கத்துக்குப் பயன்பட்டது. இவ்வாறு துணி, பருத்தி, நிலக்கரி, வாணிபம் ஆகியவைகளிலிருந்து வந்த பணம் நிலத்தில் முதலீடு செய்யப்பட்டது. அதே சமயம் மூலதனமானது எதிர்த் திசையில்கூட, நிலத்திலிருந்து தொழிலுக்கும்கூட சென்றது. பதினெட்டாம் நூற்றாண்டில் தொழிற் சாலைகள், ஆலைகள், தொழில்கள் ஆகியவற்றை நிறுவிய புதிய தொழிலதிபர்கள், தங்களது நிலத்திலிருந்து தாங்களும் தங்களது பெற்றோர்களும் சம்பாதித்துத் திரட்டி வைத்த பணத்தையே பயன் படுத்தினர். மூலதனம் தொழிலிலிருந்து விவசாயத்துக்கும், விவ சாயத்திலிருந்து தொழிலுக்கும் பெருகியோடுவதற்குக் கவுன்டி பாங்குகள் உதவின. இக் கவுன்டி பாங்குகளின் எண்ணிக்கையும் ஏராளமாகப் பெருகியது.

விவசாயப் புரட்சியும் தொழிற்புரட்சியும் ஒரே காலத்து நிகழ்ச்சி கள். இவைகளுக்கிடையிலான தொடர்பு தற்செயலானது என்று கூற முடியாது. ஒன்று வளர மற்றது உதவியது. மருத்துவ வசதியில் ஏற்பட்ட முன்னேற்றம் காரணமாக மக்கள் தொகை முன்பு எப்பொழு தையும்விட அதி துரிதமாகப் பெருகியது; இத்தனை மக்களுக்கும் உணவும் வேலையும் அளிக்கவேண்டி சமுதாயம் செய்த முயற்சியின் விளைவே இவ்விரு புரட்சிகளும் என்று நாம் கருதலாம்.[1]

இரண்டாம் ஜார்ஜின் ஆட்சியிலும் நான்காம் ஜார்ஜின் ஆட்சியிலும் நிலவிய நிலைமைகளை நாம் ஒப்பிட்டுப் பார்த்தால் நூறு ஆண்டுகளில் ஏற்பட்ட மாறுதல்கள் நமக்கு நன்கு தெரியும்.

[1] பதினெட்டாம் நூற்றாண்டில் அயர்லாந்தின் மக்கள் தொகை இன்னும் அதிக மாக, ஒன்றரை மில்லியனிலிருந்து நான்கு மில்லியனாகப் பெருகியது. ஆனால், அத் தீவின் சமூக நிலைமைகளும், மக்களினத் (race) தன்மைகளும் பொருளாதார மாற்றத்துக்கு உகந்தவையாயில்லை; எனவே, தொழிற்புரட்சியும் விவசாயப் புரட்சி யும் ஏற்படுவதற்கு மாறாக, உருளைக்கிழங்கையே முக்கிய உணவாகக் கொண்ட அம் மக்களிடையில் பட்டினியும் பஞ்சமும் அடிக்கடி தலைவிரித்தாடின; இறுதியில் 1847ஆம் ஆண்டில் இவைகளின் கொடிய விளைவுகளைக் கண்டோம்.

லண்டனில் உள்ள ஐரிஷ்காரர்களின் உடல் பலத்துக்கும் அழகுக்கும் காரணம் அவர்கள் தங்கள் நாட்டில் உருளைக்கிழங்கு உணவு அருந்துவதுதான் என்று ஆடம் ஸ்மித் கூறினார்! அவரது 'Wealth of Nations' நூலில் (நூல் I, அத். xi), இது பற்றிக் கூறும் பகுதியை எல்லோரும் அறிவர். அவர் சொல்வது சரியோ இல்லையோ, ஒன்றுமட்டும் உண்மை: பெரு மக்கள் தொகைக்கு உணவளிப்பதற்கு உருளைக்கிழங்கு ஒரு சுலபமான, ஆனால் ஆபத்தான வழி.

இரண்டாம் ஜார்ஜின் (1727–1760) ஆட்சி தொடங்கியபொழுது செய்பொருள் உற்பத்தி (manufacture) கிராமத் தொழிலாக இருந்து வந்தது. 'செய்பொருள் உற்பத்தியாளர்கள்' (manufacturers)—இச் சொல் முதலாளித்துவ வேலையளிப்போரை (employers) அப்பொழுது குறிக்கவில்லை; கைத்தொழிலாளர்களை (hand-workers) மட்டுமே குறித்தது—சாதாரண கிராமங்களில் வசித்தனர். ஒவ்வொரு கிராமமும் தனக்கு வேண்டிய ஆடைகள், கருவிகள், எளிய வீடுகள், ரொட்டி, இறைச்சி, பீர் ஆகியவற்றை உற்பத்தி செய்துகொண்டது. அருகில் பூங்காவிலிருந்த 'கனவானின் மாளிகை' மட்டும்தான் கவுன்டி தலைநகரிலிருந்து அல்லது லண்டனிலிருந்து தனது சிறந்த மரச் சாமான்கள், புத்தகங்கள், பீங்கான் சாமான்கள், மற்ற நாகரிகப் பொருள்கள், சுவை மிக்க உணவுப் பண்டங்கள் முதலியவற்றைத் தருவித்துக்கொண்டது; என்றாலும், அதன் சாதாரண, அன்றாட உணவுப் பொருள்கள் அதன் பண்ணையிலிருந்தே வந்தன.

மேலும், பல எளிய கிராமங்கள் தாங்கள் உபயோகித்த விலை மலிவான அன்றாடப் பொருள்களை மட்டுமன்றி, மார்க்கெட்டுக்கான சில தனிவிதமான ஆடம்பரப் பொருள்களையும்கூட உற்பத்தி செய்தன. ஒரே ஓர் உதாரணத்தை எடுத்துக்கொள்வோம்: நான் பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒரு நிலைக் கடிகாரத்தை வைத்திருக்கிறேன்; அது இன்னும் சரியாக வேலை செய்கிறது. அது வார்விக்ஷயரிலுள்ள சிறிய கிராமமான பிரியார்ஸ் மார்ஸ்டனில் செய்யப்பட்டது. வீட்டுக்கும் அயல்நாட்டு வியாபாரத்துக்கும் மிக முக்கியமான பொருளாகிய கம்பளித் துணி இன்னமும் நாட்டுப்புறங்களிலேயே நெய்யப்பட்டு வந்தது; வெகு வேகமாக வளர்ந்துவந்த பருத்தித் தொழில் குடிசைகளிலேயே (cottages) நடந்துவந்தது. நகரங்களும் செய்பொருள் உற்பத்தியில் ஓரளவு பங்கு கொண்டன; ஆயினும், அவைகள் பெரும்பாலும் விநியோகப் (distribution) பணியையே ஆற்றிவந்தன. காட்ஸ்வோல்ட்ஸ், கிழக்கு ஆங்கிலியா கிராமங்களில் உற்பத்தி செய்யப்பட்ட துணி பிரிஸ்டலிலும் நார்விச்சிலும் விற்பனை செய்யப்பட்டது; யார்க்ஷயரிலுள்ள துணி நெசவுத்தொழில் மிகுந்த பள்ளத்தாக்குகளின் செங்குத்தான சரிவுகளில், வயல்கள் சூழ, பசுக்கள் சுற்றிலும் மேய, கட்டப்பட்டுள்ள கல் வீடுகளிலும் குடிசைகளிலும் நெய்யப்படும் ஆடைகள் லீட்ஸிலும், ஹாலிபாக்ஸிலும் விற்கப்பட்டன.

முந்திய ஹனோவிரிய காலத்து இங்கிலாந்தின் நகரங்கள் தாம் உற்பத்தி செய்த செய்பொருள்களை மட்டும் கொண்டு வாழவில்லை; தங்களது அங்காடிகள், கடைகள், வியாபாரம் ஆகியவைகளைக் கொண்டே பெரும்பாலும் வாழ்ந்தன. லண்டன் தொழில் நகரமட்டுமன்றி, வாணிக நகரமாகவும் விளங்கியது. நவீன 'மாநகர்' வாழ்வின் பல தன்மைகளை அங்கு அப்பொழுதே காண முடிந்தது. சிறு

தொழில்கள் நிறைந்த நகரமாக பர்மிங்ஹாம் எப்பொழுதுமே திகழ்ந்தது. பெரும் பிரிஸ்டல், அதற்குப் போட்டியாய் வளர்ந்து கொண்டிருந்த லிவர்பூல் ஆகியவைகளிலிருந்து, நிலேகுன்றி வந்த சின்னஞ்சிறு ஃபோவே (Fowey), ஆல்டிபர்க் (Aldeburg) ஆகியவை வரையான துறைமுகப் பட்டினங்கள் எல்லாம் கடலே நம்பி வாழ்ந்தன. ஆனால், மற்ற நகரங்கள் அனைத்தும் தங்களைச் சுற்றியிருந்த கிராமப் புறங்களைச் சார்ந்து, அவைகளது உற்பத்திப் பொருள்களை விற்பனை செய்து வாழ்ந்தன. இடைக்காலத்தைச் சேர்ந்த மதில் சூழ் நகரங் களின் ஆர்வமிக்க நகர்ப்பற்று இன்று மறைந்துபோய்விட்டது ; அவை களது கில்டுகளின் செய்பொருள் உற்பத்திச் சர்வாதீனமும் இன்று மறைந்துபோய்விட்டது. இன்று அவைகள் குடியானவர்களுக்கான வெறும் அங்காடிகள், கூடுமிடங்கள்—அவ்வளவுதான். அங்கு, கன வான்கள் தங்களது குடும்பங்களுடன் சாமான்கள் வாங்க, நடனமாட, கவுன்டி விவகாரங்களைக் கவனிக்க வந்து கூடினர். பல நடுத்தர கனவான்கள் தலைநகரிலிருந்து நூறு மைல்களுக்கு அப்பால் வாழ்கிற காரணத்தால், கேளிக்கைப் பருவத்தில் (season) லண்டனுக்குச் செல்லப் பொருள் வசதியின்மையால், கவுன்டித் தலைநகரில் அல்லது அதற்கருகில் நல்ல வீடுகளைக் கட்டிக்கொண்டு, தங்களது பெண் களுக்கும் பிள்ளைகளுக்கும் திருமணத்துக்கு நல்ல 'ஜோடிகளைப்' பார்க்கும் எண்ணத்துடன் ஒவ்வோர் ஆண்டிலும் சில மாதங்கள் வந்து தங்கினர். மதாலயங்களைக் கொண்ட புண்ணியத் தலங்களாக விளங்கிய நகரங்கள் மதகுருமார்களின் ஆசீர்வாதத்தின் பயனாக, பக்திச் சூழலில் தழைத்து நின்றன. ஆனால், பெரிய கவுன்டி நகரங்களான நியூகாசில்-ஆன்-டைன், நார்விச் போன்றவை தேசிய வியாபாரத் தலங்களாகவும் திகழ்ந்தன.

நான்காம் ஜார்ஜ் (1820–1830) ஆட்சி புரிந்த இங்கிலாந்து வேறு விதமானது. அச் சமயத்திலேயே மேற்கு மிட்லந்து, வடக்கு மிட்லந்து போன்ற பகுதிகளில் ஒரு புதிய அமைப்பு தோன்றியது—'பல செய் பொருளுற்பத்தி நகரங்களும்', நகர்ப்புற மாவட்டங்களும் (urban districts) உருவாயின ; தொழிற்சாலைகளும் இயந்திரத் தொழில் களும் இவைகளில் மண்டின. சுற்றியிருந்த கிராமப்புற வாழ்விலிருந்து இவை தனித்து நின்றன. இணக்கமும் ஒருமையும் கொண்ட பழைய ஆங்கிலேயச் சமூக அமைப்பு இப்பொழுது செங்குத்தாகப் பிளக்கப் பட்டது ; நகரமும் கிராமமும் வேறாயின ; அதே சமயம், பணக்காரர் களுக்கும் ஏழைகளுக்குமிடையிலான பழைய குறுக்குப் பிளவு மேலும் விரிவடைந்தது. நகர வாழ்வும் கிராம வாழ்வும் முற்றிலும் வெவ்வேறான தன்மைகளைக் கொண்டவையாக அப்பொழுது சிற்சில பிரதேசங்களில் மட்டுமே காணப்பட்டன என்பது உண்மை ; ஆனால், விக்டோரியாவின் காலத்தில் அது நாடு முழுவதும் பரவிவிட்டது.

கிராமப்புற வாழ்விலுங்கூட அதையொத்த ஒரு மாற்றம் நான்காம் ஜார்ஜ் காலத்திலேயே பெருமளவில் ஏற்பட்டிருந்தது. சிறப்புத் தேர்ச்சி பெற்ற பொருள்களின் (specialised goods) உற்பத்தி கிராமப் புறத்துக் குடிசைகளைவிட்டகன்று தொழிற்சாலைப் பிரதேசங்களுக்குச் சென்றுவிட்டது. துணி, பருத்தி உற்பத்தியின் பல பணிகள் (processes) இவ்வகையிலடங்கும். சாலைகள் அபிவிருத்தியடைந்தன; எனவே, கிராமங்கள் தன்னிறைவு பெற்றிருக்கவேண்டிய தேவை போய் விட்டது. எப்பொருள்களைத் தமது பெற்றோர்கள் தாமே செய்து கொண்டார்களோ, அப்பொருள்களைக் கிராம மக்கள் இப்பொழுது நகரங்களில் வாங்கினர். தையல்காரன், தச்சன், மதுக் காய்ச்சுவோன், மாவு ஆலைக்காரன், குதிரைச் சேணம் செய்வோன் ஆகிய பல கிராமத்துத் தொழிலாளிகட்கு இன்று வேலைகள் இல்லை. குடிசைகளில் பெண்கள் நூல் நூற்கும் தக்களியின் ஓசை ஓய்ந்துவிட்டது. ‘ஸ்பின்ஸ்டர்’ (Spinster—மணமாகாத முதிய மங்கை—நூல் நூற்பவள்—மொ.ர்.) என்ற சொல் பொருந்தாச் சொல்லாக ஆகிவிட்டது. நவீன குடியானவன் முதலில் நகர அங்காடிக்காகவும், அடுத்தபடியாகவே தனக்காகவும், தானியத்தையும் இறைச்சியையும் உற்பத்தி செய்தான்.

விவசாயப் புரட்சி காரணமாக, 1820 வாக்கில், திறந்த வயல்கள் மறைந்து, வேலியடைக்கப்பட்ட நீள் சதுர வயல்கள் தோன்றின; அங்கு விஞ்ஞான ரீதியான மாற்றுப் பயிர் முறையும் (rotation of crops), மாற்று மேய்ச்சல் முறையும் (rotation of pasture) சாத்தியமாயின. கால்நடைகள் உருவத்திலும் எடையிலும் முன்பு எண்ணிப் பார்க்காத அளவுக்குப் பெருத்தன. தரிசாகவும் காடுகளாகவும் கிடந்த பல்லாயிரக் கணக்கான ஏக்கர் நிலம் இன்று வேலியடைக்கப்பட்டு, பயிரிடப்பட்டது.[1] எங்குப் பார்த்தாலும் காணப்பட்ட வழிப்பறிக் கொள்ளைக்காரன்கூட, மெகாடம் முறைப்படி அமைக்கப்பட்ட சாலைகளிலிருந்து மறைந்துபோய்விட்டான்; ஏனென்றால், அவன் ஒளிந்து கொண்டிருந்த புதர்க் காடுகள் உழுது விதைக்கப்பட்டுவிட்டன. ஒழுங்காக அமைக்கப்பட்ட புதிய ‘தோட்டங்கள்’ (plantations) விலங்குகள், மனிதர்களிடமிருந்து காவல்காரர்களாலும் பலவிதப் பொறிகளாலும் காக்கப்பட்டன.

இவ்வாறு ஏற்பட்ட இம்மாறுதல்கள் பின்னர் ‘விவசாயப் புரட்சி’ என்றழைக்கப்பட்டன; ஏனென்றால், பழைய பொருளாதார, சமூக

[1] கிரிகோரி கிங்கின் (Gregory King) மதிப்பீடும் (1696), விவசாய போர்டின் 1795-க்கான புள்ளி விவரமும், நூறு ஆண்டுகளில் இங்கிலாந்து, வேல்ஸ் ஆகியவற்றின் விவசாய நிலத்தோடு 2 மில்லியன் ஏக்கர்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டன என்று காட்டுகின்றன. இத்தகவல் சரியானதாக இருக்கும் என நம்புகிறேன்.

அமைப்பு ஒன்று பரவியதன் மூலமாக அல்லாமல், புதிய அமைப்பு ஒன்று தோற்றுவிக்கப்பட்டதன் மூலமாக அவை விளைந்தன. ஒரே இடத்திலமைந்த, விசாலமான பண்ணைகள் குத்தகைதாரர்களால் பயிரிடப்பட்டன; நிலமற்ற தொழிலாளிகள் வேலைக்கமர்த்தப்பட்டனர். இங்கிலாந்தின் விவசாய நிலம் மேலும் மேலும் அதிக அளவில் இம் முறையின் கீழ் வந்தது. எல்லா வகையான சிறு நிலச் சொந்தக்காரர் களும், சிறிய அளவிலான விவசாயமும் நசித்துக்கொண்டிருந்தன. சிறு கனவான்களும் குடியானவர்களும் நிலங்களை விற்றுவிட்டு, வெளி யேறினர்; புது அமைப்பு உருவாகிக்கொண்டிருந்தது. நடுப்பகுதியி லிருந்த பெரும் தானிய வயல்கள், சதுரங்கப் பலகைகளைப்போல் வேலி யடைக்கப்பட்டன. அன்றிலிருந்து சதுரங்கப் பலகைதான் இங்கி லாந்தின் நிலத் தோற்றத்தை நன்கு உருவகப்படுத்தியது. இங்கி லாந்தின் ஒரு பாதியில் நிலங்கட்கு வேலியமைக்கப்படுவது பழைய காலத்திலிருந்தே வழக்கமாக இருந்துவந்தது. அப் பகுதியில் கூட மேற்கூறியதை யொத்த சமூக மாறுதல்கள் நிகழ்ந்துவந்தன. ஏனென்றால், எல்லாவிடங்களிலும் பெருநிலச் சொந்தக்காரர்கள் மேலும் மேலும் நிலங்களை வாங்கிக்கொண்டே சென்றார்கள்; எல்லாவிடங் களிலும் கனவான்களும் குடியானவர்களும் நவீன முறைகளைப் பயன் படுத்தினார்கள். எல்லாவிடங்களிலும் நல்ல சாலைகளும், கால்வாய் களும், இயந்திரங்களும், தொழிலைக் குடிசைகளிலிருந்தும் கிராமங்களி லிருந்தும் தொழிற்சாலைகட்கும் நகரங்கட்கும் மாற்றிக் கொண்டிருந்தன; நூற்றல் முதலிய சிறு சிறு பணிகள் விவசாயிகளின் குடும்பங்களை விட்டு அகன்றன; இதனால் அவைகளின் வருவாய் குறைந்தது.

குடியானவர்களின் தொகையைக் குறைத்து, அதே சமயம் நாட்டுப் புறங்களின் மொத்தச் செல்வத்தை அதிகரித்த பல மாறுதல்களில் மிக மிக முக்கியமானது வேலியமைப்பு முறை என்று கூறுவது பொருந் தும். இங்கிலாந்தின் பல்வேறு விடங்களில் நிலவிய பல்வேறு நிலைமை களைக் கொண்டு பார்த்தால் இதுதான் உண்மை என்பது தெரியும்.[1]

[1] வேர்ட்ஸ்வொர்த் கூறியது போல, லேக் மாவட்டத்தில் 1770-க்கும் 1820-க்கு மிடையிலான காலத்தில் சொந்த நிலம் படைத்த 'அரசியல் மேதைகளின்' எண்ணிக்கை பாதியாகக் குறைந்தது; அவர்களின் நிலங்களின் பரப்பு இரு மடங்கானது. சின்னஞ்சிறு பண்ணைகள் ஒன்று சேர்ந்தன; ஏனெனில், அவை களின் வருவாய் போதியதாக இல்லை; நூற்கும் ஜென்னி (spinning jenny) தோன்றி நூற்பு வேலையைக் குடியானவனின் மனைவி மக்களிடமிருந்து பறித்து, தொழிற்சாலைகளிடம் ஒப்படைத்துவிட்ட பிறகு சிறு நிலச் சொந்தக்காரர்கள் நிலத்தை நம்பி வாழமுடியவில்லை. எனவே, இம்மாவட்டத்தில், ஏற்பட்ட மாறுத லானது வேலியமைப்பினால் விளைந்ததன்று. மேலும் நெடுங்காலத்துக்கு முன்னரே பள்ளத்தாக்கு முழுவதிலும் சிறு குடியானவர்கள் தங்களது வயல்களைச் சுற்றிக் கற் சுவர் எழுப்பிவிட்டனர்.

இதற்கு மாறாக, மிட்லந்துஷயர்களில் பல சிறு குடியானவர்கள் மறைந் தொழிந்ததற்கு அடிப்படையான காரணம் வேலியமைப்புதான். ஆயினும், மிட்லந்து

ட்ரபால்கர், வாட்டர்லூ போர்கள் நடைபெற்ற காலத்திலுங்கூட இம்மாறுதல்கள் நிகழ்ந்துகொண்டுதானிருந்தன ; ஆயினும், 1740-க்கும் 1789-க்கு மிடையில்தான் அவை பெருமளவில் நடைபெற்றன. எனவே, இவ்வளர்ச்சி முழுவதையும் இவ்வத்தியாயத்திலேயே குறிப்பிடுவது நல்லது. இவ்வளர்ச்சி முடிவுற்றபொழுது, இங்கிலாந்தின் கிராமப் புறத்தில் பழங்காலந்தொட்டு நிலவி வந்த வாழ்க்கை முறை மாற்ற மடைந்தது.

பிந்திய ஸ்டூவர்ட் மன்னர்கள், முதலாம் ஜார்ஜ் ஆகியவர்களின் காலத்தில் திறந்த வயல்கள், பொதுநிலங்கள், தரிசுகள் ஆகியவை களுக்கு வேலியமைக்கும் வேலை வேகமாக முன்னேறிக்கொண்டிருந்தது. அண்டை நிலத்துக்காரர்கட்கிடையிலான ஒப்பந்தம் மூலமாகவோ, அல்லது விற்றல்-வாங்கல் மூலமாகவோ இது நடைபெற்றது. ஆயினும், வேலியமைப்பு ஒரு தேசியக் கொள்கையாக இன்னும் ஆகவில்லை ; சொந்தப் பயன் கருதியே ஒவ்வொருவரும் இதில் ஈடுபட்டனர். ஆனால், 1720-க்குப் பிறகு வேலியமைப்பில் ஒரு புதிய, விரிவான செயல்முறை தொடங்கிற்று. சில நிலச் சொந்தக்காரர்கள் வேலியமைக்க மறுத்துவந்தனர் ; இவர்களைக் கட்டாயப்படுத்த சில உறுப்பினர்கள் கொண்டுவந்த மசோதாக்கள் பாராளுமன்றத்தில் நிறைவேறின ; பாராளுமன்றக் கமிஷனர்கள் இவர்களுக்கு நிலமோ அல்லது இழப்பீட்டுத் தொகையோ கொடுத்தனர். அத்துடன் இவர்கள் திருப்தி யடைய வேண்டியதுதான். இக்கமிஷனர்களின் முடிவுகளுக்குச் சட்டத் தின் வலிமை கொடுக்கப்பட்டது. மூன்றும் ஜார்ஜின் (1760–1820) ஒவ்வொரு பாராளுமன்றத்திலும் இத்தகைய புரட்சிகரமான சட்டங்கள் நிறைய இயற்றப்பட்டன. இப்பாராளுமன்றங்களின் பெருமை இச் சட்டங்களில் மட்டுமே அடங்கியிருந்தது ; வேறு எந்தத் தீவிரமான சட்டத்தையும் அவை இயற்றவில்லை. ஆனால், இச்சட்டங்கள் செல்வர் களின் தீவிர வாதத்தினால் விளைந்தவை ; பெரும்பாலும் ஏழைகளின் நலன்கள் பாதிக்கப்பட்டன.

1740-லிருந்து ஒவ்வொரு பத்தாண்டிலும் வேலியமைப்பியக்கத்தின் வேகம் அதிகரித்துக்கொண்டே வந்தது ; அந்நூற்றாண்டின் இறுதியில் அதன் வேகம் உச்ச அளவை எட்டியது. விக்டோரியா அரியணை ஏறிய சமயம் இது முடிவு பெற்றுவிட்டது என்றே சொல்லலாம் ; ஆயினும், அவரது ஆட்சியின் முதல் முப்பதாண்டுகளில் பொது நிலங்கள் (commons) வேலியிடப்படுவது தொடர்ந்து நடந்தது. வேலி

---

கவுன்டிகளிலும் கிழக்கத்தியக் கவுன்டிகளிலும் குடியானவ நிலச் சொந்தக்காரர் களின் எண்ணிக்கையானது வேலியமைப்பினால் குறைந்தது மிக அரிதுதான். பார்க்க : Clapham, I, பக். 103-105 ; நவம்பர் 1940, Ec. Hist. Rev., பத்திரிகையில் J. D. Chambers எழுதிய கட்டுரை.

யமைப்புச் சட்டங்களால் தீவிரமாக பாதிக்கப்பட்ட கவுன்டிகள் இங்கிலாந்தின் மொத்தக் கவுன்டிகளின் எண்ணிக்கையில் சுமார் பாதி இருக்கும்; யார்க்ஷயரிலுள்ள கிழக்கு ரைடிங்கில் தொடங்கி தெற்கு நோக்கி லிங்கன் நார்போக், மிட்லந்து ஷயர்கள் வழியாக, வில்ட்ஸ், பெர்க்ஸ் வரையிலும் பாதிக்கப்பட்டன. நார்தாம்ப்டன் ஷயரின் மொத்தப் பரப்பளவில் பாதிக்குமேல் பாராளுமன்றச் சட்டத்திஞல் வேலியிடப்பட்டது. ஹன்ட்ஸ், பெட்ஸ், ஆக்ஸ்ஃபோர்டு, கிழக்கு ரைடிங் ஆகியவற்றில் நாற்பது சதவீதத்துக்கும் அதிகமான வயல்கள் இம்மாற்றத்துக்கு ஆளாயின. லெஸ்டர், கேம்பிரிட்ஜ் ஷயர்களின் கதியும் இதுதான்.

ஆனால் கென்ட், எஸ்ஸெக்ஸ், சஸ்ஸெக்ஸ் கவுன்டிகளும், வடக்கத்திய, மேற்கத்திய கவுன்டிகளும், வேல்ஸும் வேலியமைப்புச் சட்டங்களிஞல் பெரும்பாலும் பாதிக்கப்படவேயில்லை; காரணம், அவைகளது வயல்களின் பெரும்பகுதி பல்லாண்டுகட்கு முன்னரே வேலியிடப்பட்டுவிட்டது; அல்லது நிலங்களின் பெரும்பகுதி சதுப்புநில மேய்ச்சல் வெளியாக இருந்தது; அவைகளின் பரப்பளவு மிகப் பெரியதாக இருந்ததால் வேலியமைக்கும் பெருஞ்செலவை ஏற்றுக் கொள்வது யாருக்கும் சாத்தியமில்லை. கம்பி வேலி நடைமுறைக்கு வந்த பிற்காலத்தில்தான் இப்பிரச்சினைக்கு முடிவு ஏற்பட்டது. இவ்வாருக நார்தம்பர்லாந்து வயல்களில் இரு சதவீதம்கூட வேலியமைப்புச் சட்டங்களால் பாதிக்கப்படவில்லை; ஆயினும், இதேசமயத்தில்தான் இப்பிரதேசத்து நிலப்பிரபுக்கள் தங்களது பெரும் டைன்சைடு மூலதனத்தை நில அபிவிருத்தியில் முதலீடு செய்துவந்தனர்.

வேலியமைக்கப்பட்ட அதேகாலத்தில்தான், வடிகால்முறை, விதைத்தல், எருவிடல், கால்நடைப் பெருக்கம், அவைகளின் தீனி, சாலைகள் அமைத்தல், பண்ணைக் கட்டடங்களைப் புதுப்பித்தல் போன்ற நூற்றுக்கணக்கான துறைகளில் புதுமுறைகள் புகுத்தப்பட்டன. இவைகட்கு நிறைய மூலதனம் தேவைப்பட்டது. முன்னிலை மீட்சிக் காலந்தொட்டு, ஒரே இடத்தில் வயல்களைக் கொண்ட பெரும் பண்ணை முறை வேகமாக வளர்ந்துவந்தது; இங்கிலாந்தின் வயல் பரப்பில் 1660ஐக் காட்டிலும் அதிக அளவை நாட்டின் பெருஞ்செல்வர்களான பெரிய அரசியல் பிரபுக்களும் (pears), குறைந்த அளவை சிறிய நாட்டுப்புறக் கனவான்களும் 1760-ல் கொண்டிருந்தனர். எனவே, விவசாய அபிவிருத்தியில் செலவிடுவதற்கு நிலப்பிரபுக்களிடம் இப்பொழுது அதிக பணம் இருந்தது. விவசாய அபிவிருத்தியானது ஒரு நாகரிக இயக்கமாக இப்பொழுது வளர்ந்துவிட்டது.

ஒரே இடத்தில் பெரிய பண்ணைகளைக் கொண்ட பிரபுக்கள் இன்று தலைமை வகித்தனர்—இரண்டாம் ஜார்ஜின் ஆட்சியின் ஆரம்பத்தில்,

'டர்னிப் டவுன்ஷெண்ட்' என்ற ஓய்வுபெற்ற அரசியல்வாதி இதற்கு ஓர் உதாரணம்; நாற்பது ஆண்டுகட்குப் பின்னர் வாழ்ந்த, ஃபாக்ஸின் (Fox) நண்பரும் மூன்றும் ஜார்ஜின் விரோதியுமான 'நார்ஃபோக் கோக்' (Coke of Norfolk) இன்னோர் உதாரணம். டவுன்ஷெண்ட், கோக் ஆகிய இருவருமே புதிய பயிர்களை, புதிய முறைகளை—எல்லா வற்றுக்குமேலாக, கிழங்குப் பயிர்களைப் பயிரிடல், நிலத்துக்குக் களிமண் உரமிடல்—நார்ஃபோக்கில் புகுத்தினர். பின்தங்கிய இவர்களது கவுன்டி, இவர்களது முயற்சியினால் ஆங்கிலேய விவசாயத்துக்குத் தலைமை தாங்கும் நிலைக்கு வந்தது. 1776-க்கும் 1816-க்குமிடையில் கோக் செய்த அபிவிருத்திகளினால், அவரது ஹோல்காம் (Holkham) பண்ணையின் குத்தகை மதிப்பு ஆண்டுக்கு £2,200-லிருந்து £20,000ஆக உயர்ந்தது; இந்த அதிகக் குத்தகைகளைக் கொடுத்துவந்த குத்தகை தாரர்களின் செல்வமும் அதிகரித்தது. அவர் நீண்டகாலக் குத்தகைக்குத் தனது நிலங்களைவிட்டு ஊக்கமளித்தார்; ஆனால், ஒரு நிபந்தனை; அவர்கள் நிலங்களை நல்ல நவீன முறையில் பயிரிட வேண்டும். குழந்தைகள் தங்களது அன்புமிக்க தந்தையைப்பற்றி எவ்வாறு பேசுமோ அதைப்போல் இக்குத்தகைதாரர்கள் தங்களது நிலச் சொந்தக்காரரைப்பற்றிப் பேசினார்கள் என்று தீவிரவாதியான காப்பெட் (Cobbett) கூறினார். அவரது ஹோல்காம் பண்ணையைப் பற்றி ஐரோப்பாவெங்கும் பேசப்பட்டது. எல்லாவிடங்களிலிருந்தும் விவசாய நிபுணர்கள் நார்ஃபோக்கின் அந்தத் தூரத்து மூலையில் வந்து கூடினர்; சிற்சில சமயங்களில் அறுநூறு பேர்கள்கூட அங்குக் கூடினர். விவசாயத்தையும் ஆடு வளர்ப்பையும் அங்குக் கற்றனர். இந்த 'மகாப்பிரபுவின்' மாளிகையில் ஒரே சமயத்தில் எண்பது விருந்தினர்கள் தங்கலாம்; மற்றவர்களுக்கு அடுத்த பண்ணைகளில் தங்க ஏற்பாடு செய்யப்பட்டது.

ஒவ்வொரு ஷயரிலுமிருந்த நிலப்பிரபுக்களில் பலர் டவுன்ஷெண் டையும் கோக்கையும் பின்பற்றினர். இப்புதிய வகைக் குடியானவர் களும்—லெஸ்டர்ஷயரைச் சேர்ந்த ராபர்ட் பேக்வெல் (Robert Bakewell) இவர்களுக்கு ஓர் உதாரணம்—புதிய கால்நடை இனங்களை உற்பத்தி செய்வோரும், பல புதிய கண்டுபிடிப்புகளைத் தாங்களும் இயற்றினர். இவைகளின் விளைவுகள் என்னவென்றால், ரொட்டி செய்யவும் பீர் மது காய்ச்சவும் தேவைப்பட்ட தானியத்தின் உற்பத்தி பெருமளவில் கூடியது; கால்நடைகள் உருவத்திலும் எண்ணிக்கையிலும் அதைவிடப் பெருவளர்ச்சியுற்றன. முன்பு திறந்த தானிய வயல்களில் அறுவடைக்குப் பின்னர் கால்நடைகள் மேய்ந்தன. ஆனால் இப்பொழுது, இங்கிலாந்திலேயே மிகச்சிறந்த அந்நிலங்களின் பெரும்பகுதி, ஓரளவு பெரிய புல்வயல்களாகத் துண்டு துண்டாகப் பிரிக்கப்பட்டு, ஹாத்தார்ன் (hawthorn) வேலியிடப்பட்டு, கால்நடை

களுக்கேற்ற மிகச் சிறந்த மேய்ச்சல் நிலமாக மாற்றப்பட்டது. மேலும், முன்னைக்காட்டிலும் அதிக அளவு நிலத்தில் புல்லும் கிழங்கும் பயிரிடப்பட்டன; குளிர்காலத்தில் கால்நடைகளுக்கு இவை சிறந்த தீவனமாக விளங்கின.

இவ்வாறு, மனித இனம் பயிரிடத் தொடங்கிய காலந்தொட்டு, இலையுதிர் காலத்தில் கால்நடைகள் கொல்லப்படும் பழக்கம் முதல் தடவையாக நின்றது. உப்பிட்ட இறைச்சிபோல் புதிய மாட்டிறைச்சியும் ஆட்டிறைச்சியும் உண்ணப்பட்டன. இதன் உடனடியான விளைவு என்னவென்றால் ஸ்கர்வியும், மற்றத் தோல் சம்பந்தமான நோய்களும் இப்பொழுது அருகிப்போயின. பதினேழாம் நூற்றாண்டில் ரஸ்ஸல், வெர்னி போன்ற பிரபுக் குடும்பங்களும்கூட இந்நோயினால் வருந்தின; ஆனால், இப்பொழுது ஏழைகளிடையில்கூட இவை மறைந்துவந்தன. ஆண்டு முழுவதும் கால்நடைகட்குத் தீவனமளிப்பதற்கான வசதிகள் இப்பொழுது தோன்றினமையால் நிலப்பிரபுக்களும் குடியானவர்களும் தலைசிறந்த கால்நடைகளை வாங்கி, விஞ்ஞான முறைப்படியான இன அபிவிருத்தியைப்பற்றி ஆராய ஆரம்பித்தனர். ஸ்மித்பீல்டில் விற்கப்பட்ட ஆடுமாடுகளின் சராசரி எடையானது 1710-க்கும் 1795-க்கு மிடையில் இரட்டிப்பாகியது.[1]

இறைச்சி உற்பத்தியில் ஏற்பட்ட இவ்வியத்தகு பெருக்கத்தினால் தானிய விளைவு குறைந்துவிடவில்லை. அதற்கு மாறாக, அந்நூற்றாண்டில் இரட்டிப்பாகப் பெருகிய மக்கள்தொகைக்குப் போதுமான ரொட்டியும் பீரும் கிடைக்குமளவுக்குக் கோதுமை, பார்லி விளைச்சல் நெடுங்காலமிருந்தது; தானியம் ஏற்றுமதியும் செய்யப்பட்டது. அந்நூற்றாண்டின் பின்பாதியில்தான், மக்கள்தொகை இன்னும் அதிகமாக ஏறியதன் காரணமாக, வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட தானியம், ஏற்றுமதி செய்யப்பட்ட தானியத்தின் அளவை எட்டிப்பிடித்து, பிறகு அதைவிட அதிகமாகவும் ஆயிற்று.

நில அபிவிருத்தி வியக்கத்தக்க அளவுக்குச் செய்யப்பட்டது காரணமாக, முன்பு ரை, ஓட்ஸ் அல்லது பார்லி மட்டுமே விளைந்த

[1] பதினெட்டாம் நூற்றாண்டு இங்கிலாந்தில் குதிரை இனங்களும்கூட குறிப்பிடத்தக்க அபிவிருத்தியடைந்தன. ஸ்டூவர்ட்டுகளின் காலத்தில், தங்களது பந்தயக் குதிரைகளையும் வேட்டைக் குதிரைகளையும் தோற்றுவிக்கக்கூடிய சிறந்த ஆண் குதிரைகளுக்காக ஆங்கிலேயர்கள் அரேபியாவுக்கும் பார்பாரிக்கும் சென்றனர். மூன்றாம் ஜார்ஜின் காலத்தில், பந்தயக் குதிரை முதல், அதற்கு எவ்வகையிலும் குறையாத வண்டிக் குதிரைவரை, எல்லாவகையான குதிரைகளையும் வாங்குவதற்கு உலகம் முழுவதுமே இங்கிலாந்துக்கு வந்தது. பொழுதுபோக்கு, பயணம் விவசாயம் ஆகிய எல்லாவற்றுக்கும் குதிரை அப்பொழுது இன்றியமையாதது; இவையனைத்திலும் அக்காலத்தில் ஆங்கிலேயக் கனவான்களுக்கு விருப்பம் அதிகம்.

நிலங்களில் இப்பொழுது கோதுமையும் விளைவிக்க முடிந்தது. இங்கிலாந்தின் மண்வளமும் தட்பவெப்ப நிலையும் ஒரு சில பிரதேசங்களில் மட்டுமே, முக்கியமாகக் கிழக்கு ஆங்கிலியாவில் மட்டுமே, கோதுமை சாகுபடிக்கு ஏற்றதாக இருந்தன. ஆயினும், பெரும் பண்ணைகளில் நிறைய மூலதனத்தைக் கொண்டு செயற்கை அபிவிருத்திகள் பெருமளவில் ஏற்பட்டிருந்தன; எனவே, பதினெட்டாம் நூற்றாண்டில், எல்லா வகுப்புகளைச் சேர்ந்த ஆங்கிலேயர்களும் சுத்தப்படுத்தப்பட்ட கோதுமை ரொட்டியே வேண்டும் என்று கேட்குமளவுக்கு நாக்குச் சுவையேறிப் போயிற்று. இதே கோதுமை ரொட்டி பணக்காரர்களின் ஆடம்பர உணவாக முன்பெல்லாம் கருதப்பட்டது. இப்புதிய தேவை (demand) நகரத்தில் ஆரம்பித்து, பின்னர் கிராமப்புறத்துக்கும், பிச்சைக்காரர்களிடையிலும் கூடப் பரவியது. பழைய முரட்டு ரொட்டியைக் கைவிட்டது ஒரு கெடுதல்; ஏனென்றால் ரொட்டி சுடுபவர்கள் நாணயமின்றிக் கலப்படம் செய்த ரொட்டிகளைச் சுட்டு விற்றனர்; ஆங்கிலேயர்களின் உடல் நலமும் பற்களும் பாதிக்கப்பட்டன. ஆயினும், முதலாளித்துவப் பெரும்-பண்ணை முறையின் வெற்றிக்கு இது ஓர் எடுத்துக்காட்டு.[1]

இந்தப் பொருளாதார முன்னேற்றத்தின் சமூக விளைவு என்ன? சுயேச்சையான விவசாயிகளின் எண்ணிக்கை குறைந்தது, நிலமற்ற தொழிலாளிகளின் தொகை அதிகரித்தது. பெரும்பாலும் இது ஓர் அவசியமான தீமைதான். ஆனால், விவசாயத் துறையில் கிடைக்கும் அதிகப்படியான லாபம் இன்னும் நியாயமான முறையில் பங்கீடு செய்யப்பட்டிருந்தால் இத்தீமை குறைந்திருக்கும். அதற்கு மாறாக, நிலச் சொந்தக்காரனுக்குச் சேரவேண்டிய குத்தகை, ஊர் மதகுருவின் பத்தில் ஒன்று (tithe), குடியானவனின் லாபம், நடுவரின் லாபம் ஆகிய எல்லாம் அதிகரித்துவந்த அதே சமயத்தில், வயலில் வேலை செய்யும் தொழிலாளியின் நிலை மோசமாயிற்று. அவனுக்கு நிலத்திலிருந்த சிறு உரிமைகளும் பறிபோயின; ஓய்வு நேரத்தில் வீட்டிலேயே அவனது குடும்பத்தினர் செய்துவந்த கைத்தொழில் போயிற்று; அதே சமயம் கூலியும் உயரவில்லை. தெற்குக் கவுன்டிகளில் அவன் பெரும்பாலும் பிறரை அண்டிப் பிழைக்கவேண்டிய, சொத்தற்ற வறிய நிலைக்கு இழிந்துபோனான்.

சுயேச்சையாகப் பிழைக்கக்கூடிய வழிகள் தொழிலாளிக்கு மறைந்துவந்த அதே வேளையில் மக்கள் தொகைப் பெருக்கமானது கூலியை ஏறவிடாமல் தடுத்தது. மூன்றும் எட்வர்டின் காலத்தில்

[1] "The Englishman's Food", J. C. Drummond and A. Wilbraham (1939), பக். 157, 195, 222–226; 'The Bread of our Fathers', Sir William Ashley, 1928.

கொள்ளைச் சாவின் (Black Death) காரணமாகத் தொழிலாளர் பற்றுக் குறை ஏற்பட்டது அல்லவா? அச்சமயத்தில் தொழிலாளிக்கு நியாய மான கூலி கிடைத்தது. ஆனால், மூன்றும் ஜார்ஜின் காலத்தில் இத் தகைய வாய்ப்பு இன்மையால் வாழ்க்கைக்குப் போதுமான கூலி கிடைக்கவில்லை. மேலும், ஏழைகளிடத்தில் இன்று ஆயுதமில்லை; அவர் களுக்குப் போர்ப் பயிற்சியும் இல்லை. 1381ஆம் ஆண்டுக் கிளர்ச்சி நடந்தபோது பொதுமக்கள் பயன்படுத்திய 'வில்லும் அம்பும்' இன்று ஒன்றும் செய்யமுடியாது. அன்று பாராளுமன்றச் சட்டங்களைக் கூடப் பொருட்படுத்தாமல் அவர்கள் மீண்டும் மீண்டும் கிளர்ச்சி செய்து, தேர்ச்சி பெற்ற வில்லாளிகள் தலைமை தாங்க, அதிகக் கூலிக் காகவும் உரிமைகட்காகவும் வேலை நிறுத்தம் செய்தனர்.

டியூடர்களின் காலத்தில் வேலியமைப்பு இவ்வளவு இல்லை. அப்பொழுது குடியானவர்களின் கோரிக்கைக்கு அரசியல்வாதிகளும் பிரசார எழுத்தாளர்களும் செவி சாய்த்தனர். ஆனால், இன்றைக்கு அவர்கள் கேளாக்காதினர் ஆயினர். வேலியமைப்பு என்பது அன்று ஒரு சமூகக் குற்றமாகக் கருதப்பட்டது; இன்றோ, அது ஒரு சமூகக் கடமையாகக் கருதப்பட்டது. பொதுமக்களின் ஆதரவு இல்லாமல் இன்று வேலியமைப்புச் சட்டங்கள் வகுக்கப்பட்டன; விவசாயியின் சொற்களுக்கு மதிப்பில்லை. திறந்த, தானிய வயலில் அவனது துண்டு நிலம் பிடுங்கப்பட்டுவிட்டது; அவனது பசு மேய்ந்த ஊர்ப் பொது நிலமும் போய்விட்டது. இழப்பீடாக அவனுக்கு அளிக்கப்பட்ட சில கினி நாணயங்களும் சாராயக் கடைகளில் சில நாட்களில் கரைந்து போயின. அல்லது, பாராளுமன்றக் கமிஷனர் எங்கோ தூரத்தில் இவனுக்குச் சில ஏக்கர் நிலம் கொடுத்தார் என்று வைத்துக் கொண்டாலும், அதற்கு வேலியிட்டு, வடிகால் வசதி செய்யப் பணத்துக்கு என்ன செய்வான்? அவன் அந்நிலத்தை மீண்டும் பெரும் பண்ணைக்காரர்களிடம் விற்க நேரிட்டது. பின்னர் அதிக லாபம் கிடைக்கும் என்று எண்ணி இப்பண்ணைக்காரர்கள் மட்டுமே வேலி யிடுதல், வடிகால் வசதி செய்தல் போன்ற பெருஞ் செலவை ஏற்க முடியும்.[1]

[1] இப் பெருஞ் செலவைப் பற்றிய ஓர் உதாரணத்தை போர்ன் (Bourn) கிராம விஷயத்தில் நாம் விவரமாகக் காணலாம். குன்னிங் எழுதிய 'Reminiscences of Cambridge', II, பக், 244–250, இதை வர்ணிக்கிறது. வேலி யமைப்பு துடன் ஒரு புது வகை வடிகால் முறையும் தேவைப்பட்டது; அதன்படி, பழைய துண்டு நிலங்களுக்கிடையிலிருந்த வாய்க்கால்கள் (அவை வடிகால்களாகவும், எல்லைக்கோடுகளாகவும் பயன்பட்டன) இப்பொழுது மூடப்பட்டன. இந்த வரப்பு—வாய்க்கால் வடிகால் முறையினால் காலப்போக்கில் மண்வளம் பாதிக்கப்பட்டது. எனவே, நிலமட்டத்தை ஒழுங்காக நிரவி, பூமியடியில் வடிகால் குழாய்கள் அமைக்கப் பெரும் செலவு செய்தனர் வேலி யமைத்தவர்கள். வரப்பானது சிலவிடங்களில் வாய்க்காலுக்கு மேல் ஐந்தடி உயரம் கூட இருந்தது!

இனி, இங்கிலாந்தில் நிலத்தைப் பயிரிடுவதற்கு ஒருவருக்கு மூலதனம் வேண்டும். குத்தகைக் குடியானவர் தனது நிலச் சொந்தக் காரரின் மூலதனத்திலுல் பயன் பெற்ருர்; இவ்விருவருமே பாங்கியி லிருந்து கடன் வாங்கினர். நிலங்களுக்கு வேலியமைக்கும் இயக்கத் துடன் பாங்குத் தொழிலும் இங்கிலாந்தில் வளர்ச்சி பெற்றது; ஏனெனில், செல்வந்தர்கள் கூட பணம் கடன் வாங்கியே வேலி யமைப்பு முதலிய அபிவிருத்தி வேலைகளைச் செய்துவந்தனர். இந்நிலையில் மிக வறிய வகுப்பைச் சேர்ந்த மக்களால் வெற்றிகரமாக விவசாயம் செய்ய முடியாது. கிராமத்து நிலங்கள் புதிதாக மறுபங்கீடு செய்யப் பட்டபோது இவர்களது நலன்கள் அதிகமாகப் புறக்கணிக்கப்பட்டதால் இவர்களது நிலை மேலும் மோசமாயிற்று. தேசிய உற்பத்தியைப் பொறுத்தவரை, ஊர்ப் பொது நிலங்களுக்கு வேலி யமைக்கப்படுவது மிகவும் விரும்பத்தக்கதுதான்; ஆயினும்கூட ஏழையின் பல உரிமைகள் அதனுல் பறிபோயின: அவனது பசு, வாத்து, விறகு வெட்டுதல் முதலிய பல சின்னஞ் சிறு உரிமைகள் பறிக்கப்பட்டன. சுயேச்சையாகப் பிழைப்பதற்கான தனது வழிகளை அவன் இவ்வாறு இழந்தான் (Ernle, ‘English Farming’, பக். 305–307).

அதேசமயம், கிராமப்புறத்து ஏழைமக்கள் இப்புதிய அமைப்பின் கீழ் முன்னைக்காட்டிலும் மோசமான நிலையில் வாழ்ந்தனர் என்பதைத் திட்டவட்டமாகச் சொல்வது கடினம் (Clapham, Ec. Hist. Mod. Britain, நூல் I, அத்தியாயம் IV). ஆனுல், இப்பொழுது கனவான்கள் மீதும் குடியானவர்கள்மீதும் அவர்கள் அதிக அளவில் சார்ந்திருந் தனர். ஒரு நிலப்பிரபுத்துவக் காலத்தில் அது ஒன்றும் வியப்பாகத் தோன்றவில்லை. ஆனுல், அடுத்த காலகட்டத்தில், நகரங்களில் நல்ல பலம் பெற்றிருந்த ஜனநாயகமானது ‘விவசாய நலன்களின்’ பக்கம் தனது கூரிய பார்வையைத் திருப்பியபொழுது, நிலப்பிரபுக்களிடத்தில் அதற்கு ஒரு வெறுப்பு வளர்ந்தது. மற்ற ஐரோப்பிய நாடுகளில் இருந்ததைப்போல், தங்களுக்குப் பாதுகாப்பு வேண்டும் என்று கோரு வதற்கு இங்கிலாந்தில் ஒரு குடியானவ வகுப்பு அப்பொழுது இல்லை; அது மறைந்துபோய்விட்டது. எனவே, விக்டோரியா ஆட்சியின் இறுதியில், அந்நியப் போட்டி உச்சநிலையை எட்டியபோது, பிரிட்டிஷ் விவசாயத்தை நசித்துப்போகாமல் காப்பாற்றவேண்டும் என்ற பேச்சையே நகர வாக்காளர்கள் காதில் வாங்க மறுத்தனர்.

பதினெட்டாம் நூற்ருண்டில் விவசாய அமைப்பில் ஏற்பட்ட இம் மாறுதல் காரணமாக நிலமிழந்த பலர் ஓரளவு திருப்தியுடனேயே வெளி யேறி, வேறு இடங்களுக்குச் சென்றனர். புதிய, செல்வமிக்க இங்கி லாந்தில் வசதியுடன் வாழ்ந்த பல வியாபாரிகளும் தொழிலதிபர்களும், வேறு தொழில் செய்தவர்களும் சிறு கனவான்கள், குடியானவர்கள்

ஆகியோரின் வழித்தோன்றல்கள்தாம். தங்களது நிலங்களை விற்றுப் பணத்தைப் பையில் போட்டுக்கொண்டு நகரங்களுக்கு வந்தவர்களே இவர்களது முன்னோர்கள். விக்டோரியா காலத்தைச் சேர்ந்த பல கீர்த்திமிக்க மனிதர்களின் வாழ்க்கை வரலாறு 'குடியானவ மூதாதை களோடுதான்' தொடங்குகிறது. இந்த உறுதிமிக்க மனிதர்களின் வருகையினால் குடியேற்ற நாடுகளும் (colonies) பயனடைந்தன. நிலச்சொந்தக்காரக் குடியானவர்கள் தங்களது நிலங்களைப் பயிரிட்டது மட்டுமின்றி, பிறரது நிலங்களையும் குத்தகைக்குப் பயிரிட்டு, விவசாயத் துறை அபிவிருத்தியின் பலனைப் பெருஞ் செல்வமெய்தினர். 'தன் னிலையை உயர்த்திக்கொள்ளும்' ஆங்கிலேயனின் இயற்கையான உணர்வு காரணமாக, செல்வமும் வலிமையும் அறிவும் கிராமங்களிலும் நகரங்களிலும் கடல் கடந்தும் துரிதமாகப் பெருகின. ஆங்கிலேயர்கள் 'பழமை விரும்பிகள்' என்று கூறப்படுவது ஒரு சில விஷயங்களில் தான் பொருந்தும். தொழிற் 'புரட்சியிலும்' விவசாயப் 'புரட்சியிலும்' உலக முழுவதுக்குமே அவர்கள் வழிகாட்டினர். புதிய வழிகளில் தாங்களே முதன் முதலில் சென்றவர்கள் ஆதலால் அவர்கள் பெருந் தவறுகள் சிலவற்றையும் செய்தனர்.[1]

மனிதர்களும் தொழில்களும் கிராமத்திலிருந்து நகரத்துக்குச் சென்றது சாலைப் போக்குவரத்திலும் நீர்வழிப் போக்குவரத்திலும் ஏற்பட்ட அபிவிருத்திகளையும் பொறுத்தது. கிராமப்புறத்தின் நலன் களைத் தன் இதயத்தில் எப்பொழுதுமே கொண்டிருந்த ஆர்தர் யங், புதிய மார்க்கெட்டுகளை உற்பத்தி செய்துகொண்டும், பயணங்கள் அதிகரிப்பதன் மூலம் புதிய கருத்துகள் பரவுவதற்கு வழிசெய்து கொடுத்தும் நல்ல புதிய சாலைகள் தோன்றுவதால், விவசாய அபி விருத்தி ஏற்பட்டு நிலக்குத்தகைகளும் துரிதமாக ஏறின என்பதைக் கண்டு மகிழ்ந்தார். அதேசமயம், அப்பொழுது தொடங்கிக்கொண் டிருந்த 'கிராம வெளியேற்றம்' பற்றியும் வருந்தினார்; இது அன்று முதல் தொடர்ந்து நடந்துகொண்டுதான் இருக்கிறது. சிறந்த சாலைகள்தான் இதற்கும் காரணம் என்றார் அவர். தனது (Farmer's Letters பதிப்பிக்கப்பட்டது 171, பக். 353) என்ற நூலில் அவர் இவ் வாறு எழுதினார் :

'நல்ல சாலைகளின்மீது குறைகூறுவது முரண்பாடாகவும், அபத்த மாகவும் தோன்றலாம்; ஆயினும், துரிதமாகப் பயணம் செய்யும்

[1] பதினெட்டாம் நூற்றாண்டின் விவசாயப் புரட்சிக்கு, பார்க்க : Mr. Orwin's Chap. X of *Johnson's England* (1933); Mr. East's Chap. XIII of Dr. Darby's *Historical Geography of England* (1936); Gilbert Slater's *The English Peasantry and the Enclosures of Common Fields* (1907); Hammond's *Village Labourer* (1911); Lord Ernle, *English Farming*, Chaps. VII–XI. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முன் பகுதிக்கு, பார்க்க : Clapham, Vol. I, Chap. V.

சக்தியைத் தோற்றுவித்ததால், இந்த நட்டிலிருந்தே மக்கள் வெளியேறி விடுகிருர்கள். நமது நாட்டுக் கிராமங்களிலுள்ள இளம் ஆண்களும் பெண்களும் லண்டன் நகரத்தையே தமது நம்பிக்கைகளின் கடைசி பற்றுக்கோடாக எண்ணியிருக்கின்றனர். அவர்கள் கிராமங்களில் உழைப்பதே லண்டன் செல்வதற்குப் போதுமான பணம் சேர்ப்பதற்காகத்தான். முன்பு லண்டன் செல்வது ஒன்றும் விளையாட்டல்ல! ஏனெனில், ஒரு நூறு மைல் ஊர்ந்து செல்வதற்கு ஒரு கோச்சு வண்டிக்கு நான்கைந்து நாட்கள் பிடித்தன. கோச்சுக் கட்டணமும் வழிச்செலவும் வெகு அதிகம். ஆனுல், இப்பொழுது பாருங்கள்! லண்டனுக்கு நூறு மைல் தூரத்திலுள்ள ஒரு கிராமத்துப் பையன் காலையில் கோச்சுவண்டியில் ஏறி, எட்டு அல்லது பத்து ஷில்லிங்குகள் கொடுத்துவிட்டு அன்றிரவு லண்டனில் இறங்குகிருன். எவ்வளவு வேறுபாடு! போவதும் வருவதும் சுலபமாகிவிட்டது; அது மட்டுமன்று, லண்டனைக் கண்ணுல் கண்டவர்களின் தொகை பத்து மடங்கு அதிகரித்துவிட்டது; அதாவது நாட்டுப்புறத்து மடையர்களின் காதுகளில் இப்பெருமைகள் பத்துத் தடவைகள் அதிகமாகப் பேசப்படுகின்றன. பிறகு, தங்களது தூய்மையான, ஆரோக்கியமான வயல் வெளிகளை விட்டுவிட்டு அழுக்கும் நாற்றமும் இரைச்சலும் மிகுந்த ஓர் இடத்துக்குப் போகும்படி அம் முட்டாள்கள் தூண்டப்படுகிருர்கள்.'

போக்குவரத்துச் சாதனங்கள் முன்னேருமல் தொழிற் புரட்சியோ அல்லது விவசாயப் புரட்சியோ நடந்திருக்க முடியாது. பாரமிக்க சரக்குகளைச் சுலபமாக அமெரிக்காவுக்கும் இந்தியாவுக்கும் ஏற்றிச் செல்வதற்கு ஆன் அரசியின் குடிகளுக்குப் பெரிய பெரிய கப்பல்கள் இருந்தன; ஆனுல் தமது தீவுக்குள்ளேயோ, நிலக்கரி மூட்டைகளையும் இரும்புச் சாமான்களையும் பொதிக் குதிரைகளின்மேல் ஏற்றியே அவர்கள் இன்னமும் அனுப்பிவந்தனர்; ஏனென்ருல், இங்கிலாந்தின் மண் சாலைகளில் வண்டிச் சக்கரங்கள் உளையில் சிக்கிக்கொண்டுவிடும்; அல்லது மேடு பள்ளங்களில் இரிசு உடைந்துவிடும். பொருளாதார முன்னேற்றம் ஏற்படுவதற்கு முன்னுல் இந்நிலை மாற்றப்படவேண்டும்.

நெடுஞ்சாலைகளைப் பராமரிப்பதற்குத் திறமையானதொரு தல நிர்வாக அமைப்போ அல்லது மத்திய நிர்வாக அமைப்போ கிடையாது. தூரத்திலிருந்துவரும் பிரயாணிகளால் பெரும்பாலும் பயன்படுத்தப்படும் நெடுஞ்சாலைகளைப் பராமரிக்கும் பொறுப்பானது மடத்தனமான முறையால் பாரிஷிடம் ஒப்படைக்கப்பட்டது; கவுன்டியிடம் அன்று. பாரிஷ் ஒன்றுமே செய்வதில்லை, அல்லது ஏதாவது செய்து ஏமாற்றியது. இது இயற்கையானதே! தல ஆட்சியைச் சீர்திருத்துவதோ அல்லது சிறிது மாற்றி யமைப்பதோ ஓர் இயலாத காரியமாகப் பதினெட்டாம் நூற்ருண்டில் தோன்றியதால், தனியார் முயற்சியின்

பக்கம் கவனம் திரும்பியது; ஏனெனில், அக்காலத்திய அபிவிருத்தி யுணர்வு அதில்தானே காணப்பட்டது! நெடுஞ்சாலையின் ஒரு பகுதியைப் புதுப்பித்துப் பராமரிக்கும் பணி சுங்கச்சாவடிக் கம்பெனி களிடம் விடப்பட்டது. வாயில்கள் அமைத்தல், சாலைகளின் குறுக்கே தடைக்கம்பங்கள் அமைத்தல், சாலையை உண்மையில் உபயோகிப்போரிடம் சுங்கம் வசூலித்தல் ஆகியவற்றுக்கு வேண்டிய பாராளுமன்ற அதிகாரம் அக்கம்பெனிகளுக்குக் கொடுக்கப்பட்டது. 1700-க்கும் 1750-க்கு மிடையில் நானூறு சாலைச் சட்டங்களும் (Road Acts) 1751-க்கும் 1790-க்கு மிடையில் ஆயிரத்து அறுநூறும் நிறைவேற்றப்பட்டன! ஹனோவிரியர் காலமுழுவதிலும் சாலைப் போக்குவரத்துச் சாதனங்கள் அபிவிருத்தி செய்யப் பட்ட முறை இதுதான். சாலை அபிவிருத்தியிலும், வாகன அபிவிருத்தி யிலும் பல கட்டங்கள் இருந்தன. ஆன் அரசியின் நாட்களில் ஆறு குதிரைகள் 'கண்ணாடிக் கோச்சை' நடைவேகத்தில் இழுத்துச் சென்றன. 1750ஆம் ஆண்டு வாக்கில் இரண்டு அல்லது நான்கு குதிரைகளால் இழுக்கப்பட்ட ஸ்டேஜ் கோச்சு (Stage coach) சற்று லேசாகவும் வேகமாகவும் இருந்தது. என்றாலும் அதில் விற்கள் (springs) கிடையாது; பொதி வண்டியைப் (waggon) போல சக்கரங்கள் பருமனாக இருந்தன. அதனுள் ஆறு பேர்கள் அமர முடியும்; வெளிப்புறம் பிரயாணிகளுக்கு அதில் ஆசனங்கள் கிடையா. சிற்சில சமயங்களில் சில ஏழை எளியவர்கள் உச்சியில் சாமான்களின் மீது தொத்திக்கொண்டு பயணம் செய்தனர். வழியில் நின்றுபோதலும், குடைகவிழுதலும் அதிகம்; பிளண்டர் பஸ் (blunderbuss) துப்பாக்கி ஏந்திய சிவப்புடைக் காவல்காரனுக்கு நிறைய கிராக்கி இருந்தது; ஏனெனில், வழிப்பறிக் கொள்ளைக்காரனின் ஆட்சி இன்னும் கொடி கட்டிப் பறந்தது. 1775-ல் எப்பிங் (Epping) காட்டில் ஏழு வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள் நார்விச் கோச்சை வழிமறித்தனர்; காவல்காரன் அவர்களில் மூன்று பேரைச் சுட்டு வீழ்த்தி, பிறகு தானும் கொல்லப் பட்டான்.

சாலைகள் அபிவிருத்தியாக ஆக, சொந்தக் கோச்சு வண்டிகளும் கூட லேசாகவும் நேர்த்தியாகவும் ஆகிவந்தன. அந்நூற்றாண்டின் இறுதிப் பகுதியில், இருவர் உட்காருவதற்காகச் செய்யப்பட்ட, உயர மான சக்கரங்களையுடைய ஒரு பேட்டன் (phaeton) வண்டியை இரு அழகிய குதிரைகள் இழுக்க, அதில் அமர்ந்து செல்வது சீமாட்டி களுக்கு ஒரு நாகரிகப் பொழுதுபோக்காக இருந்தது. பயண வண்டி களையும் வழிகாட்டும் பையனையும் வாடகைக்கு அமர்த்திக்கொள்வது நெடுந்தூரப் பிரயாணிகட்கு வழக்கமாயிருந்தது; முக்கிய நெடுஞ் சாலைகளில் இது பெரு வழக்கிலிருந்தது; ஏனெனில், அங்குதான் பயணர் விடுதிகளில் மாற்றுக் குதிரைகள் எப்பொழுதும் கிடைத்தன.

சாலைகளில் நெரிசல் அதிகமாக இருந்தது ; முன்பெல்லாம் இக்காட்சியைக் காணமுடியாது. இதற்குக் காரணம், வண்டிகள் அதிகரித்த அதே சமயத்தில், குதிரைச் சவாரி செய்வோரின் எண்ணிக்கையும் குறையவில்லை. டாக்டர் ஜான்சனின் காலத்தில் சமூக, வாணிப, அறிவியல் (intellectual) தொடர்புகள் பெருமளவில் நிலவின. அக்காலத்திய உயர் நாகரிகத்திற்கு அது ஒரு காரணம் ஆகும் ; அதே சமயம் அந்நாகரிகத்தின் ஓர் அம்சமாகவும் அது விளங்கியது. இதற்கெல்லாம் காரணம் சாலை அபிவிருத்திதான்.[1]

எல்லா ஆங்கிலேயர்களையும் பிரயாண வெறி ஆட்கொண்டது ; அவரவர்களின் பொருளாதார நிலைதான் இதில் வேறுபாடு. பெரும் பணக்காரர்கள் ஃபிரான்சுக்கும் இத்தாலிக்கும் பெரும் பயணம் சென்றனர் ; விடுதிகளிலும் அயல்நாட்டுப் பிரபுக்களின் இல்லங்களிலும் விருந்தினர்களாக ஆறு மாதங்கள் அல்லது இரண்டாண்டுகள் கழித்துவிட்டு, நிறைய ஓவியங்களையும் சிலைகளையும் வாரிக்கொண்டு இவர்கள் தங்களது கிராமப்புற இல்லங்களுக்குத் திரும்பினர். இக்கலைப் பொருள்கள் இவர்களது நல்ல கலைச்சுவையைக் காட்டின, அல்லது அறியாமையால் இவர்கள் ஏமாந்துபோனதைக் காட்டின. ஆங்கிலேய மேனர் இல்லங்களின் சுவர்களைச் சிறந்த அல்லது மட்டமான கலைப் பொருள்கள் அலங்கரித்தன ; சில அந்நிய நாடுகளிலிருந்து கொண்டு வரப்பட்டவை. சில நமது நாட்டினரான ரெய்னல்ட்ஸ் (Reynolds), ரோம்னி (Romney), கெய்ன்ஸ்பரோ (Gainsborough) ஆகியோரால் வரைந்து குவிக்கப்பட்டவை. ஐரோப்பாவில் உல்லாசப் பயணம் செய்தவர்களில் பெரும்பாலும் அத்தனை பேருமே ஆங்கிலேயப் ‘பிரபுக்கள்’தாம் (அந்நிய நாட்டு விடுதிச் சொந்தக்காரர்களுக்கு எல்லா ஆங்கிலேயக் கனவான்களுமே ‘பிரபுக்கள்’தாம்) ; கலாயி (Calais)லிருந்து நேப்பிள்ஸ்வரை எல்லாப் பயணர் விடுதிகளும் ஆங்கிலேயர்களின் தேவைப்படியே அமைக்கப்பட்டிருந்தன. 1785-ல் எஜமானர்களையும் வேலைக்காரர்களையும் உள்ளிட்டு 40,000 ஆங்கிலேயர்கள் ஐரோப்பாவில் பயணம் செய்தனர் என்று கிப்பன் கேள்விப்பட்டார்.

சாலை அபிவிருத்தி காரணமாக உள்நாட்டிலும்கூட மக்கள் வெகு தூரம் பயணம் செய்தனர். 1788-ல் ‘தேம்ஸின் கரைகளைப்போலவே விண்டர்மியரின் கரைகளும் பொதுமக்கள் கூடுமிடமாய்விட்டன’ என்று வில்பர் போர்ல் கூறினர் ; ஆயினும், அண்டை மலைகளின்மீது ஆடு மேய்ப்பவர்களைத் தவிர வேறு யாரும் இன்னும் ஏறுவதில்லை. நல்ல சாலைகள், நல்ல வண்டிகள் காரணமாக, போ நாஷின் நாட்களில்

[1] 1774-ல் ஒரு பயண வண்டியில் (post-chaise) ஆக்ஸ்ஃபோர்டிலிருந்து சாமர்செட்டிலிருந்த காசில் கேரிக்குச் செல்ல மதகுரு உட்ஃபோர்ட் 4 பவுன் 8 ஷில்லிங் கொடுத்தார் ; தூரம் நூறு மைல் ; பயணகாலம் ஒருநாள். ‘பயண வண்டிச் சவாரியின்’ வேகத்தையும் செலவையும் இது காட்டுகிறது.

பாத்தில் (Bath) பிரயாணிகள் கூட்டம் நிறைந்திருந்தது; எனவே, அக்காலத்துக்கேற்ற முறையில் அழகாகவும் வசதியாகவும் அதன் வீதிகள் புதிப்பிக்கப்பட்டன. 1801ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்பொழுது இந்தக் கேளிக்கைப் பருவ நகரில் 30,000 பேர்கள் இருந்தனர்; மக்கள் தொகைக் கணக்கின்படி இது ஆங்கிலேய நகரங்களின் பட்டியலில் ஒன்பதாவது இடம் வகித்தது.

ஆயினும், சாலைகளின் தன்மை மண்ணின் தன்மையைப் பொறுத்து வேறுபட்டது. 1789 வரையிலுங்கூட ஹியர்ஃபோர்ட்ஷயரின் நெடுஞ் சாலைகள் இலையுதிர் காலத்து மழைக்குப் பிறகு வண்டிப் போக்குவரத் துக்குப் பயன்படாமற் போயின. ஆண்டில் ஆறு மாதத்துக்குக் கவுன்டி மக்கள் ஒருவரையொருவர் காணவேண்டுமென்றால் குதிரை மீதேறித்தான் செல்ல முடியும்; இளஞ் சீமாட்டிகள் தங்களது சகோதரர் களுக்குப் பின்னால் அமர்ந்து சென்றனர். ஏப்ரல் மாதக் கடைசியில் ஒவ்வொன்றும் எட்டு அல்லது பத்துக் குதிரைகள் பூட்டிய 'ஏர்களின்' மூலம் சாலை சமம் செய்யப்பட்டது (Gunning's 'Reminiscences', I, பக். 100). சில கவுன்டிகளில் இந்த ஆதிக்காலத்து நிலைமைகள் சின்னஞ்சிறு சாலைகளில் நிலவினவேயன்றி, நெடுஞ்சாலைகளிலன்று.

சாலையமைப்பில் புதிய முறைகள் பற்றிய ஆராய்ச்சி சதா நடந்து கொண்டே வந்தது. இதன் விளைவாக, மெகாடம் சாலைகளைப் போன்ற சிறந்த நிலையைச் சுங்கச்சாவடி சாலைகள் அடைந்தன. இவைகளில் டான்டிவி (Tantivy) கோச்சுகள் மணிக்குப் பத்து மைல் வேகத்தில் சென்றன. இடையில் பயணர் விடுதிகளில் குதிரை மாற்றும் வசதி யிருந்தது. வாட்டர்லூ போரிலிருந்து ரயில்வேக்கள் ஓட ஆரம்பித்த காலம்வரை, நெடுஞ்சாலைகளின் இக்குறுகிய பொற்காலம் நீடித்தது. 1840 வாக்கில் 22,000 மைல்களுக்கு நல்ல சுங்கச் சாவடிச் சாலைகள் இருந்தன; 8,000 சுங்கச் சாவடிகளும் மதுக்கடைகளும் சாலை யோரங் களில் இருந்தன.

நெடுஞ்சாலைகள் முன்னேறவே, பிரயாணிகள் போக்குவரத்தைப் போலவே சாமான்களின் போக்குவரத்தும் வளர்ந்தது. முதலில் பொதிக் குதிரைக்குத் துணையாக வந்த பொதிவண்டி (waggon), பின்னர் அதன் இடத்தையே பிடித்துக்கொண்டது. சாலைகளில் மணி யோசை காதுகளில் சதா விழுந்தது; நான்கு பெரிய குதிரைகளால் இழுக்கப்படும் பொதிவண்டி வருவதை அது அறிவித்தது. அக் குதிரைகளின் கழுத்திலிருந்து வந்தது அம் மணியோசை. பொதி வண்டி வரிசைக்கு மற்றவை யெல்லாம் ஒதுங்கி வழிவிடவேண்டும்; இது ஒரு வழக்கமான விதி.

தொழில் முன்னேற்றத்துக்கு வழிவகுத்ததில் சாலை அபிவிருத்தி எவ்வளவு முக்கியமானதோ, அவ்வளவு 'உள்நாட்டுக் கப்பல் போக்கு

வரத்தும்' முக்கியமானது. பதினெட்டாம் நூற்றாண்டின் முன்பாதியில் கப்பல் போக்குவரத்துக்கேற்ற நதிகளை ஆழப்படுத்தும் வேலை மும்முரமாக நடந்தது. அணையடைப்புகளும் (locks) கட்டப்பட்டன; இரண்டாவது பாதியில் புதிய செயற்கைக் கால்வாய்கள் தோண்டப்பட்டன. 'உள்நாட்டுக் கப்பல் போக்குவரத்தின் தந்தையாகக்' கருதப்படுபவர் பிரிட்ஜ்வாட்டர் கோமகன் (Duke of Bridgewater); ஆனால், அவரை ஆங்கிலேயக் கால்வாய்களின் தந்தை என்று அழைப்பதுவே பொருத்தம்; ஏனெனில், நதிகளில் எப்பொழுதுமே 'உள்நாட்டுக் கப்பல் போக்குவரத்து இருந்துவந்துள்ளது. யார்க், நார்விச் போன்ற பல உள்நாட்டு வர்த்தக நகரங்கள் நதிப் போக்குவரத்தையே எப்பொழுதும் நம்பியிருந்தன. (இந்நூலின் மூன்றும் பாகத்தின் கடைசியில் கொடுக்கப்பட்டுள்ள ஆங்கிலேய நதிகளின் படத்தைக் காண்க.) பிரிட்ஜ்வாட்டர் கோமகனும், இன்னும் பல பிரபுக்களைப்போலவே, நிலக்கரிச் சுரங்கங்களைக் கொண்டிருந்தார்; தனது கடமைகளையும் வாய்ப்புகளையும் மிக அக்கறையுடன் கவனித்துவந்தார். இந்தப் பெரும் பிரபு தனது வோர்ஸ்லி (Worsley) நிலக்கரி வயல்களை மான்செஸ்டருடன் கால்வாய் மூலம் இணைக்க விரும்பினார். தனது பாராளுமன்றச் செல்வாக்கையும் மூலதனத்தையும், பிரிண்ட்லி (Brindley) என்ற தனது எழுத்தறிவு அதிகமில்லாத பொறியியல் வல்லுநரின் மேதமையுடன் ஒன்று சேர்த்து 1759-ல் தன் திட்டத்தை நிறைவேற்றினார். இதைப் போன்றதொரு கூட்டியக்கத்தை ஆங்கிலேயப் பிரபுக்களிடம் மட்டும் தான் காணமுடியும்; ஐரோப்பாவில் முடியாது. அடுத்த ஐம்பது ஆண்டுகளில் இங்கிலாந்தில் கால்வாய்கள் குறுக்கும் நெடுக்குமாகத் தோண்டப்பட்டதற்குத் தூண்டு சக்தியாக இது விளங்கியது. முன்னேறிய பொறியியல் நுட்பமானது பெனைன் மலைகளையும் காட்ஸ்வோல்டு மலைகளையும் குடைந்து, சுரங்கப் பாதைகள் அமைத்தது; நதிப் பள்ளத்தாக்குகளுக்குக் குறுக்கே உயரத்தில் கட்டுக் கால்வாய்கள் (aqueducts) அமைத்தது.

வெகு துரிதமாகத் தொழில்மயமாகிவந்த தென் லங்காஷயரிலும் மேற்கு மிட்லந்திலும் இந்தக் கால்வாய் இயக்கம் முதலில் தொடங்கியது; பிறகு நாடுமுழுவதும் விரைவில் பரவியது. 1760-க்கு பிறகு பிரிண்ட்லி, தனது கோமகனின் ஆதரவுடன் மான்செஸ்டர்—லிவர்பூல் கால்வாயை வெட்டிப் பொறியியல் துறையில் ஒரு வியத்தகு செயலைச் செய்து முடித்தார். 1770-க்குப் பிறகு மெர்சியையும் (Mersey) டிரென்ட்டையும் (Trent) கிராண்ட் ஜங்ஷன் கால்வாய் மூலம் அவர்கள் இணைத்தனர். அதைச் சுற்றியிருந்த பகுதிகளின்மீது இதனால் ஏற்பட்ட விளைவுகளை 1782-ல் தாமஸ் பென்னன்ட் (Thomas Pennant) கீழ்வருமாறு வருணித்தார்:

'குடிசைகள் பரிதாபமாகக் காட்சியளித்த விழல்களால் வேயப் பட்டிருந்தன, முன்பு; இப்பொழுதோ தூரத்து வேல்ஸ் மலைகளி லிருந்தும் கம்பர்லந்திலிருந்தும் கொண்டுவரப்பட்ட ஓடுகளாலும் பலகைகளாலும் உறுதியாக வேயப்பட்டுள்ளன. முன்பு தரிசாகக் கிடந்த வயல்களில் இப்பொழுது வடிகால் அமைக்கப்பட்டுள்ளன. கால்வாய் மூலம் சுங்கமில்லாமல் கொண்டுவரப்பட்ட உரத்தினால் வயல்கள் அழகிய பசுமைப் போர்வையுடன் காணப்படுகின்றன. முன்பு நிலக்கரியையே கண்டிராத இடங்களில் அது நியாயமான விலைக்கு ஏராளமாகக் கிடைக்கிறது; இதைவிடவும் பொதுமக்களுக்கு இன்னும் நல்லது என்னவென்றால் தானிய சர்வாதீன வியாபாரிகள் தங்களது நாசத்தொழிலைச் செய்யமுடியாமற் போய்விட்டது. ஏனெனில், லிவர்பூல், பிரிஸ்டல், ஹல் ஆகியவற்றுக்கிடையில் போக்கு வரத்து வசதி தொடங்கி, தானியம் குவிந்துகிடக்கும் பகுதிகள் வழியாகக் கால்வாய் செல்வதால், மிகவும் எளிதாகத் தானியமானது கொண்டு செல்லப்படுகிறது.'

கால்வாய்களும் சுங்கச் சாலைகளும் உள்நாட்டில் பண்டப் பரிவர்த் தனையை மட்டும் அதிகரிக்கவில்லை; கடல் வாணிபத்தையுங்கூட துரிதப்படுத்தின. ஐரோப்பா, அமெரிக்கா, ஆசியா, ஆஃப்ரிக்கா ஆகிய கண்டங்களிலிருந்து வந்த பொருள்கள் இங்கிலாந்து முழு வதிலும் பெருமளவில் விநியோகிக்கப்பட்டன; இங்கிருந்து நிலக்கரியும் செய்பொருள்களும் அதிக அளவில் ஏற்றுமதி செய்யப்பட்டதால் அக் கண்டங்களிலிருந்து அப்பொருள்கள் தயக்கமின்றி வாங்கப்பட்டன. பிளாக் (Black) பிரதேசத்திலும் பெனைன் பகுதியிலும் உற்பத்தியான பளுமிக்க கனிப்பொருள்களும் துணியும், ஸ்ட்ராபோர்ட்ஷயரில் உற்பத்தியான களிமண் பாண்டங்களும் இப்பொழுது எளிதாக லண்டன், லிவர்பூல், பிரிஸ்டல், ஹல் துறைமுகங்களுக்கு நதி மூலம் அனுப்பப்பட்டு, அங்கிருந்து வெளிநாடுகளுக்குக் கப்பலில் ஏற்றப் பட்டன.

இவ்வாறு, பிரிட்டிஷ் வாணிகம் தனது நவீன உருவத்தை மேற் கொண்டது. பணக்காரர்களுக்கு மட்டும் ஆடம்பரப் பொருள்களை அளிப்பதுபோய், எல்லோருக்கும் தேவையான பொருள்களை அளிக்க ஆரம்பித்தது. இடைக்காலத்தில் பிரபுக்களுக்கும் நைட்டுகளுக்கும் (Knights) வியாபாரிகளுக்கும் தேவையான மது, வாசனைப் பொருள் கள், பட்டு முதலிய நவநாகரிகப் பொருள்களைக் கொண்டுவந்து தருவதாகவே இங்கிலாந்தின் கடல் வாணிபம் அமைந்திருந்தது. விவசாயிகட்கும் அதற்கும் சம்பந்தமே இல்லை. ஸ்டூவர்டுகள் காலத் தில்கூட இது பெரும்பாலும் உண்மையாகவே இருந்துவந்தது; ஆயினும், அப்பொழுது கப்பல்களின் டன் அளவு பெருகி அதிக அளவில் இறக்குமதி ஏற்றுமதி நடைபெற்றன; எண்ணிக்கையிலும்

செல்வத்திலும் பெருகிப்போன அக்காலத்திய நடுத்தர வகுப்பு மக்களுங்கூட ஆடம்பரப் பொருள்களை அதிகம் பயன்படுத்த ஆரம்பித்தனர். என்றாலும், நம்மரசரின் ஏழைக் குடிகளின் உடலை மூடவும், பசியைத் தணிக்கவும் தேவையான துய்ப்புப் பொருள்கள் (consumer goods) பதினெட்டாம் நூற்றாண்டில்தான் அயல்நாடுகளிலிருந்து கொண்டுவரப்பட்டன.

ஒரே ஒரு மேற்கோளை இங்கு நாம் காட்டுவோம்: இரண்டாம் சார்லஸின் ஆட்சியில் ஆயிரக்கணக்கான, வசதிபடைத்த லண்டன்காரர்கள் 'காஃபி விடுதிகளுக்குச்' சென்றனர்; கிழக்கிந்தியக் கம்பெனி கொண்டு வந்த நவீன, நாகரிக பானங்களை அருந்துவதற்காக. ஆனால், மூன்றாம் ஜார்ஜின் ஆரம்ப ஆண்டுகளில் நகரத்திலும் கிராமத்திலும் வாழ்ந்த எல்லா வகுப்பினரும் தங்களது இல்லங்களிலேயே தேநீர் அருந்தினர். ஆர்தர் யங்கின் 1767-க்கான (Farmer's Letters) 'நான்கு மில்லியன் மக்களுக்கு ரொட்டி வாங்குவதற்கான அவ்வளவு பணம் தேநீரிலும் சர்க்கரையிலும் செலவிடப்படுகிறது' என்று வருந்தின. தேநீர் அருந்துவது ஒரு தேசியப் பழக்கமாகி, சாராயவகைகளுக்கும் பீருக்கும் போட்டியாகிவிட்டது; 'உற்சாகமூட்டுகிற, ஆனால் போதையூட்டாத அப்பானம்' கவிஞர் கூப்பரின் வீட்டில் எவ்வாறு போற்றப்பட்டதோ, அதேபோல் தொழிலாளிகளின் குடிசைகளிலும் போற்றப்பட்டது. 1797-ல் சர் ஃபிரடெரிக் ஏடன் (Sir Frederick Edan) எழுதினார்.

'மிடில் செக்ஸிலும் சர்ரேயிலும் (Surrey) உள்ள குடிசைகளில் உணவு வேளைகளில் ஒருவர் உள்ளே நுழைந்து பார்ப்பாரேயானால் அங்குள்ள ஏழைக் குடும்பங்களுக்குக் காலையிலும் மாலையிலும் தேநீரே பழக்கப்பட்ட பானமாக ஆகிவிட்டதைக் காண்பார்; அதுமட்டுமின்றி சாப்பாட்டின்போதுகூட அது பெரிய அளவில் அருந்தப்படுவதையும் காண்பார்.'

இந்தக் கசப்பான இலையோடு அதிகச் சர்க்கரை சேர்த்து இனிப்பூட்டினர் ஏழைகள். பிரிட்டிஷ் மேற்கிந்தியத் தீவுகளிலிருந்து வந்த சர்க்கரை ஒவ்வொரு மேசையின்மேலும் இப்பொழுது காணப்பட்டது. ஆனால், ஷேக்ஸ்பியரின் காலத்திலோ இந்த ஆடம்பரப் பண்டம் ஒரு சிறிய அளவிலேயே மத்தியதரைக் கடல் துறைமுகங்களிலிருந்து கொண்டுவரப்பட்டது.[1]

[1] 1700-ல் இங்கிலாந்துக்குச் 'சர்க்கரைக் குடியேற்ற நாடுகள்' இருந்தன; ஆயினும்கூட அப்பொழுது அந்நாட்டில் 10,000 டன் சர்க்கரையே சாப்பிடப்பட்டது. ஆனால், 1800-ல் இது 150,000 டன் ஆயிற்று. மக்கள்தொகை இரட்டிப்பாயிற்று என்று கொண்டாலுங்கூட, பதினெட்டாம் நூற்றாண்டில் ஒவ்வோர் ஆங்கிலேயனும் உபயோகித்த சராசரி சர்க்கரையின் அளவு ஏழரை மடங்கு அதிகரித்தது. தொழிலாளிகளின் தேநீர்ப் பழக்கத்துக்கு, பார்க்க: J. C. Drummond, *The Englishman's Food*, பக். 242–244.

அதிகமான இறக்குமதி வரிகளை இளைய பிட் குறைக்கும்வரை, கள்ளக் கடத்தல் வியக்கத்தக்க அளவில் நடைபெற்றுவந்தது. 1784-ல் இங்கிலாந்தில் 13 மில்லியன் பவுண்டு தேயிலை உபயோகிக்கப்பட்ட தென்றும், அவற்றில் 5½ மில்லியன் பவுண்டுகளுக்கு மட்டுமே வரி செலுத்தப்பட்டது என்றும் பிட் கணக்கிட்டார். (Lecky's *England*, பதிப்பு 1902, V, பக். 296.) பிறரது காட்டில் புகுந்து வேட்டையாடுதல் எவ்வளவு தூரம் வாழ்க்கைக்குச் சுவாரஸ்யமூட்டியதோ, அதே போன்றதுதான் கள்ளக்கடத்தலும்; அது ஒரு தவருன செயலாகவும் கருதப்படவில்லை. உண்மையிலேயே நல்லவராகவும், நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவராகவும் கருதப்பட்ட மதகுரு உட்ஃபோர்ட் 1777, மார்ச் 29ஆம் தேதி எழுதினுர்: 'கள்ளக்கடத்தல்காரன் ஆண்ட்ரூஸ் இன்றிரவு 11 மணிக்கு 6 பவுண்டு எடையுள்ள ஹைசன் (Hyson) தேயிலை கொண்டுவந்து தந்தான். நாங்கள் படுக்கைக்குச் செல்லும்பொழுது வெளியே சன்னலுக்குக் கீழ்ப்புறமிருந்து அவன் சீழ்க்கையடித்ததால் நாங்கள் சிறிது பயந்தே போனேம். நான் அவனுக்குக் கொஞ்சம் ஜெனீவா மது கொடுத்து, பிறகு ஒரு பவுண்டு 10/6 வீதம் தேயிலைக்குப் பணம் கொடுத்தேன்.' அந்தப் பாரிஷிலிருந்த மக்கள் 'கடைக்காரன் ஆண்ட்ரூஸைப்'பற்றி எவ்வளவு சாதாரணமாகத் தாம் பேசுவார்களோ, அதேபோலவே 'கள்ளக்கடத்தல்காரன் ஆண்ட்ரூஸை'ப் பற்றியும் பேசினுர்கள்!

இவ்வாறு தேயிலை, சர்க்கரை, புகையிலை ஆகியவை எல்லா வீடுகளிலும் புகுந்தன (துறைமுகத்தில் சுங்கவரி செலுத்திவிட்டு உள்ளே வந்தனவா அல்லது கள்ளக்கடத்தல்காரனின் குகையிலிருந்து வந்தனவா என்பது இப்பொழுது முக்கியமன்று). அதேபோல் மரமும் வெளிநாடுகளிலிருந்து இங்கிலாந்தில் இறக்குமதி செய்யப்பட்டது.[1] இவ்வாறு நவீன இங்கிலாந்தின் அமைப்பினுள்—உலக முழுவதும் பரவிக்கிடந்த ஒரு பேரரசின் மையமாக, எல்லா வகுப்பினருக்கும் தேவையான எல்லாப் பொருள்களையும் உலகின் எல்லா மூலைகளிலிருந்தும் கப்பல்கள் கொண்டுவந்து கொட்ட நன்கு வாழ்ந்த ஒரு சமுதாயத்தினுள்—நாம் அடியெடுத்து வைக்கிறேம். மூன்றும் ஜார்ஜ் அரியணை ஏறிய அப்பொழுதே, தூரத்து நாடுகளிலிருந்து வந்த கச்சாப்பொருள்களை இங்கிலாந்தின் பிரதான தொழில்கள் சில நம்பி நிற்கவேண்டிய நிலை ஏற்பட்டுவிட்டது. லங்காஷயரில் துரிதமாக வளர்ந்துவந்த பருத்தியாடைத் தொழில் இதற்குச் சிறந்த உதாரணம். பெரும்பாலும் அயல்நாடுகளிலிருந்தே தருவிக்கப்பட்ட பொருள்களின் பட்டியலில் ரொட்டியையும் இறைச்சியையும் சேர்த்த பெருமை

[1] 1788லிருந்து 1802 வரை ஒவ்வோர் ஆண்டும் 200,000 பொதி (load) ஃபிர் (fir) மரக்கட்டைகள் வடக்கு ஐரோப்பாவிலிருந்து இங்கிலாந்தில் இறக்குமதியாயின (கிளாப்ஹாம், I, பக். 237).

விக்டோரியாவின் காலத்துக்குரியது. செல்வத்திலும் மக்கள் தொகையிலும் இச் சின்னஞ்சிறு தீவு வளர்ச்சியுறுவதற்கு இதுவரை இருந்து வந்த எல்லைகள் இதனால் அகற்றப்பட்டுவிட்டன; ஆனால், போர்க் காலத்தில் நல்லூழை நம்பியிருக்க வேண்டிய ஓர் ஆபத்தான நிலையை இது தோற்றுவித்துவிட்டது.

பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப் பகுதிக்கு மீண்டும் செல்வோம். உலகின் எல்லா மூலைகளிலிருந்தும் லண்டன் துறைமுகத்துக்குக் கப்பல்கள் வந்தன; இங்கிலாந்தின் கிழக்கிந்தியக் கம்பெனியின் வியாபாரம் முழுவதும் இதன் வாயிலாகவே நடந்தது. வெடியுப்பு, வாசனைப் பொருள்கள், பட்டாடைகள் ஆகியவை சீனாவிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் தேம்ஸில் எப்பொழுதும்போல் வந்து குவிந்துகொண்டேயிருந்தன; அது மட்டுமன்றி, அத்தூரத்து நாடுகளிலிருந்து இப்பொழுது தேயிலை, பீங்கான் சாமான்கள், பருத்தி ஆடைகள் ஆகியவையும் ஏராளமான அளவில் வரத்தொடங்கின; சாதாரண பொதுமக்கள் கூட அவைகளை வாங்குமளவுக்கு விலை மலிவாயிருந்தது. இவைகளால் புதிய தேவைகள் விளைந்தன; மக்களிடத்தில் கிராக்கி அதிகரித்தது; எனவே, உள்நாட்டிலேயே பருத்தியாடையும் சீனப் பீங்கான் சாமான்களும் செய்யத் தொடங்கினர்.

அமெரிக்காவுடனான வாணிபம் லண்டன், பிரிஸ்டல், லிவர்பூல் ஆகிய துறைமுகங்கள் மூலம் நடைபெற்றது. இடைக்காலத்தில் லிவர்பூலானது செஸ்டர் துறைமுகத்துக்குத் துணையாக விளங்கியது; ஆனால் டீ (Dee) ஆற்றின் கழிமுகம் அடைந்துபோனதால் அப்பழைய ரோமானிய நகரம் சிறுகச் சிறுகத் தனது கடல் வாணிபத்தை இழந்தது. மெர்சி நதியின் முகத்துவாரத்திலமைந்திருந்த அந்தக் குட்டி நகரம் லிவர்பூல் அதனிடத்தைப் பிடித்துக்கொண்டது. 1801-ன் மக்கள் கணக்கெடுப்பின்படி லிவர்பூலில் 78,000 மக்கள் வாழ்ந்தனர். இதைவிட அதிகமான மக்கள் தொகையைக் கொண்டிருந்த ஒரே மாவட்ட நகர் மான்செஸ்டர்-சால்ஃபோர்ட்தான் (Manchester-Salford); இதன் மக்கள் தொகை 84,000.

அமெரிக்க வாணிபத்தில் லிவர்பூலுக்கே சொந்தமானது அடிமை-வர்த்தகம்; இது லங்காஷயர் துணி உற்பத்தியோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. அட்லான்டிக் பெருங்கடலுக்குக் குறுக்கே கப்பலில் சென்ற அடிமைகளில் பாதிக்கும் அதிகமானவர்கள் ஆங்கிலேயக் கப்பல்களிலேயே தமது 'இடைப் பயணத்தைச்' செய்தனர். இந்தக் கோர வாணிபத்தில் ஃபிரெஞ்சுக்காரர்களும், டச்சுக்காரர்களும், போர்ச்சுகீசியர்களும்கூடப் பங்கு கொண்டனர். 1771-ல் லண்டனிலிருந்து 58 'அடிமைக்காரர்களும்' (slavers), பிரிஸ்டலிலிருந்து 23 பேரும், லிவர்பூலிலிருந்து 107 பேரும் பயணம் செய்தனர்.

அவ்வாண்டில் அவர்கள் பிடித்து அனுப்பிய அடிமைகளின் எண்ணிக்கை 50,000.

அடிமை-வர்த்தகத்தை நீதி நெறியின் அடிப்படையில் எதிர்த்த முதல் மனிதர்களில் ஒருவர் டாக்டர் ஜான்சன்; இன்னொருவர் ஹொரேஸ் வால்போல் (Horace Walpole). இவர் 1750ஆம் ஆண்டிலேயே மேனுக்குக் (Mann) கீழ்வருமாறு எழுதினர் :

'ஆஃப்ரிக்கக் கம்பெனி பற்றி இந்த இரண்டு வாரங்களாக நாங்கள் விவாதித்துக் கொண்டிருந்தோம். சுதந்தர உரிமைகளின் ஆலயமும், டஸ்டன்ட் கிறிஸ்துவ சமயத்தின் கோட்டையுமான பிரிட்டிஷ் செனேட்டைச் சேர்ந்த நாங்கள், நீக்ரோக்கள் விற்பனை என்ற இந்த அருவருக்கத்தக்க, பயங்கரமான தொழிலை இன்னும் திறமையாக நடத்தும் முறைகளைப்பற்றி இவ்விரண்டு வாரங்களாகச் சிந்தித்துக்கொண்டிருந்தோம். நமது தோட்டங்களுக்கு (plantations) மட்டுமே ஒவ்வோர் ஆண்டும், இப் பரிதாபத்துக்குரிய ஜீவன்கள் 46,000 விற்கப்படுகின்றன என்று தெரியவருகிறது ! இதை நினைக்கும்பொழுது நமது இரத்தம் உறைந்துபோகிறது. நானும் அதில் வாக்களித்தேன் என்று சொல்லத் தேவையில்லை ; எல்லாம் அமெரிக்கக் கண்டத்துக்காக !'

லிவர்பூல் 'அடிமைக்காரர்கள்' லங்காஷயர் பருத்தியாடைகளை ஆஃப்ரிக்காவுக்கு எடுத்துச் சென்று, அங்கே அவைகட்குப் பதிலாக நீக்ரோக்களை வாங்கி, அவர்களை அட்லான்டிக்குக் குறுக்கே கொண்டு சென்று, பருத்தி மூட்டைகளுடன் திரும்பிவந்தனர் ; புகையிலையும் சர்க்கரையும் கூடக் கொண்டுவரப்பட்டன. மேற்கிந்தியத் தீவுகளிலும் அமெரிக்கக் கண்டத்திலும் உள்ள தோட்டக்காரர்கள் தங்களது அடிமைகளுக்காக லங்காஷயர் பருத்தித் துணியை வாங்கினர். ஆஃப்ரிக்காவிலிருந்து நீக்ரோத் தொழிலாளிகள் வந்ததால், லங்காஷயரின் பெருந்தொழிலுக்கான கச்சாப் பொருளை இவர்களால் விளைவிக்க முடிந்தது. இந்தக் குற்றம் நிறைந்த வர்த்தகமும் ஒரு குற்றமும் புரியாத செய்தொழிலும் பல வழிகளில் ஒன்றுக்கொன்று உடந்தையாயிருந்தன.

இங்கிலாந்திலும்கூட எல்லா வகுப்பினரும் பருத்தி யாடையை அணிந்தனர் ; 'நல்ல ஆங்கிலேயத் துணிக்கு' அது ஏற்கெனவே பெரும் போட்டியாகிவிட்டது. 1782ஆம் ஆண்டின் துண்டுப் பிரசுரம் ஒன்றில் நாம் படிக்கிறோம் : 'பெண்களைப் பொறுத்தவரை அவர்கள் இப்பொழுதெல்லாம் பருத்தியாடை, காலிகோக்கள், மஸ்லின், பட்டு ஆகியவற்றைத் தவிர வேறெதையுமே அணிவதில்லை ; கம்பளி உடைகளைப்பற்றி நினைத்துக்கூடப் பார்ப்பதில்லை. பழைய பஞ்சாங்கத்தைப் போலவே இதுவும் புறக்கணிக்கப்பட்டது. நமது படுக்கைப் பக்கம்

போர்வையைத் தவிர, கம்பளிப் பொருள் ஒன்றுகூட இப்பொழுது கிடையாது; குளிரிலிருந்து உடலைக் காத்துக்கொள்ள வேறு வழி யிருந்தால், அப்போர்வையைக்கூடத் தூக்கி யெறிந்துவிடுவார்கள் போலிருக்கிறது.' அந்நூற்றுண்டின் நடுவில் பருத்தி விளைவு அதிகரித்ததால் பல்லாயிரக் கணக்கான ஆண், பெண், குழந்தைகளுக்குத் தத்தம் வீடுகளிலேயே நிறைய வேலை கிடைத்தது. பருத்தித் தொழிலாளியின் குடிசையே ஒரு சிறு தொழிற்சாலைதான்; பெண்களும் குழந்தைகளும் பஞ்செடுப்பதிலும் ஆண்கள் அதை நெய்வதிலும் காலத்தைச் செலவிட்டனர். இந்த இல்லத் தொழில் முறையானது பல குடும்பங்கட்கு சுதந்திரத்தையும் பிழைப்பையும் அளித்தது; வறுமையில் வாடிக்கொண்டிருந்த பல ஒண்டிப் பெண்களும்கூட இதனால் பிழைக்க முடிந்தது. ஆயினும், இது ஒரு சிறந்த வாழ்க்கை முறையன்று. ஏனென்றால், வீடானது பருத்திக்கான பட்டறையாகப் போய்விட்டால் அங்குத் தூய்மையுமிருக்காது, வசதியுமிருக்காது; மேலும், உற்பத்தியாளராக மாறிவிட்ட வீட்டுக்காரிக்கு சமைக்கவும் வீட்டு வேலை செய்யவும் நேரமேது?[1]

அந்நூற்றுண்டு செல்லச் செல்ல ஆர்க்ரைட் (Arkwright) முதலிய பலர் புதிய புதிய கண்டுபிடிப்புகளைச் செய்தனர். இதனால் இத் தொழில் சிறுகச் சிறுகப் பருத்தி ஆலைக்குள் அடைக்கலம் புகுந்தது. இவ்வாலைகள் குன்றுகள் நிறைந்த பிரதேசங்களில் நீரோட்டத்துக் கருகில் எழுந்தன; நீர் விசையானது நீராவி விசையினால் தோற்கடிக்கப் படும்வரை பருத்தித் தொழில் தனது பட்டண வாசத்தை ஆரம்பிக்கவே யில்லை. லங்காஷயர் நூறே ஆண்டுகளில் 160,000 மக்களைக் கொண்ட தொரு கவுன்டியிலிருந்து 695,000 பேர்களைக் கொண்டதொரு கவுன்டி யாக வளர்ந்தது என்பதை 1801ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்குக் காட்டுகிறது. மிடில்-செக்ஸுக்கு அடுத்தபடி செல்வமிக்க, நிறைய மக்கள் தொகை கொண்ட கவுன்டி இதுதான். பருத்தித் தொழில் இதற்கு ஒரு காரணம்; குடிசைகளிலும், பென்னைன் மலைகளின் ஆற்றங் கரைகளிலும் இது நடைபெற்றது. லிவர்பூலின் கடல் வாணிகமும், மான்செஸ்டரின் பருத்தியாடைத் தொழிலும் வியாபாரமும் இதற்கு வேறு காரணங்கள்.

பருத்தித் தொழில் ஏற்கெனவே ஒரு பெரிய தேசியத் தொழிலாக ஆகிவிட்டது. ஆயினும், கம்பளித் தொழில்தான் அதைவிடவும் பெரிய, எங்கும் பரந்த தேசியத் தொழிலாக விளங்கிற்று; பாராளு மன்றத்துக்கு மிகவும் பிடித்தமான தொழிலும்கூட இதுதான். ஆட்டின் ரோமம் ஏற்றுமதி செய்யப்படுவதற்கெதிராகவும், கம்பளித்

[1] Ivy Pinchbeck, *Women Workers and the Industrial Revolution*, Chap. VI.

துணி இறக்குமதி செய்யப்படுவதற்கெதிராகவும் நல்ல விரிவான சட்டங்களியற்றி இத் தொழிலைப் பாராளுமன்றம் பாதுகாத்தது; ஊக்குவித்தது. ஹார்கிரீவ்ஸ் 'நூற்கும் ஜென்னி'யையும் (1767), கிராம்ப்டன் 'மியூலையும்' (1775) கண்டுபிடித்த பின்னர் கம்பளி நூற்றல் குடிசையிலிருந்து தொழிற்சாலைக்கும், நாட்டுப்புறத்திலிருந்து நகர்ப்புறத்துக்கும் குடி பெயர்ந்தது. ஆயினும், பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை இம் மாற்றம் முற்றுப் பெறவில்லை. ஆனால், இதைவிடத் திறமைமிக்க நெசவுத் தொழில் இன்னமும் பண்ணைகளிலும் குடிசைகளிலுமே செய்யப்பட்டுவந்தது; அவைகள் சிலவற்றில் பல தறிகளும்கூட இருந்தன. கம்பளியாடை நெய்வது இங்கிலாந்து முழுவதிலும் நூற்றுக்கணக்கான விவசாயக் குடும்பங்களுக்கு ஒரு துணைத் தொழிலாக விளங்கி, கூடுதல் வரும்படியைச் சம்பாதித்துத் தந்தது. லீட்ஸ், ஹாலிபாக்ஸ், நார்விச், எக்சிடெர் ஆகிய நகரத்து வியாபாரிகள் இவைகளை வாங்கி, விற்பனை செய்தனர். பிற்காலத்தில் நீராவி சக்தி வந்த பின்னர்தான் நெசவாளிகளும் நூற்பாளிகளைப் பின்பற்றிக் குடிசையைவிட்டுத் தொழிற்சாலைக்கும், கிராமத்தையும் சிறு நகரத்தையும் விட்டுப் பெரு நகரத்துக்கும் குடி பெயர்ந்தனர். இம் மாற்றம் சிறிது சிறிதாக நடைபெற்றுவந்த பல தலைமுறைகளிலும் இல்லத் தொழில் முறை, தொழிற்சாலை முறை ஆகிய இரண்டுமே ஆடைத் தொழிலில் ஒரே சமயத்தில் இயங்கிவந்தன.

பிரிட்டிஷ் மேற்கிந்தியத் தீவுகளும், அமெரிக்கக் கண்டத்தின் தெற்குக் குடியேற்ற நாடுகளும் பருத்தியை மட்டுமின்றி சர்க்கரையையும் புகையிலையையும் கூடத் தாய்நாட்டுக்கு அனுப்பிவந்தன. நீண்ட 'சர்ச்வார்டன்' குழாய் உபயோகிக்கப்பட்ட காலம் அது. பிறகு திடீரென்று மூன்றும் ஜார்ஜின் காலத்தில் மேல் வகுப்பு மக்களிடம் புகை பிடிக்கும் வழக்கம் மறைந்துபோயிற்று. '**புகை பிடிப்பது போய்விட்டது**' என்று 1773-ல் டாக்டர் ஜான்சன் சொன்னார் (பாஸ்வெல் எழுதிய 'Tour to the Hebrides', ஆகஸ்ட் 19). அது எண்பது ஆண்டுக் காலம் 'போய்விட்டிருந்தது.' ஆனால், வாழ்க்கையைப் பற்றிய தங்களது அலட்சிய தோரணையுடன் படையதிகாரிகள் மட்டும் இன்னும்

போர்த் தெய்வமே போல்
புகைத்தனர் குழாயும் சுருட்டும்!

ஆனால், புகையிலை உபயோகிப்பது 'கீழ்ச் செயல்' என்று மற்ற கனவான்களால் கருதப்பட்டது. இறுதியில், கிரிமியாப் போர் வந்தது; 'நமது கிரிமியா வீரர்களைப்' பின்பற்றிப் புகைப்பதையும் தாடி வளர்ப்பதையும் மக்கள் கைக்கொண்டனர்.

ஆனால், மேல் வகுப்பு நாகரிக மாற்றங்களைப்பற்றி பொதுமக்கள் கவலைப்படவில்லை; எனவே, மூன்றும் ஜார்ஜின் ஆட்சி ஆண்டுகள் செல்லச் செல்ல நாட்டின் புகையிலை நுகர்வு (consumption) அதிகரித்தது. அதேபோல் பருத்தியாடை யணிதலும் சர்க்கரை உபயோகித்தலும் அதிகமாயின. ஆகவே, ஆங்கிலேய மகுடத்தில் பதித்த மிகச் சிறந்த மாணிக்கங்களாக மேற்கிந்தியத் தீவுகள் கருதப்பட்டன.

இன்று 'அமெரிக்கக் கோடீஸ்வரர்களைப்' பற்றிப் பேசுகிறோமே, அவர்களை யொத்தவர்கள் சிலர் அன்று இங்கிலாந்தில் இருந்தனர்; அவர்கள்தான் கிரியோல்ஸ்கள். இந்த பிரிட்டிஷ்காரரர்கள் மேற்கிந்தியத் தீவுகளில் அடிமைகளைக் கொண்டு தோட்டங்களை வளர்த்தனர். பெரு மூலதனம் அவைகளில் 'முதலீடு செய்யப்பட்டது. அதிகம் பேசப்பட்ட, குறை கூறப்பட்ட இன்னொரு செல்வமிக்க வகுப்பு 'நாபாபுகள்'. கிளைவின் வெற்றிகளை நன்கு பயன்படுத்தி, நெறி முறைக் கஞ்சாத பேராசையுடன் பெரும் பொருளீட்டி, தாய்நாடு திரும்பிய சில ஆங்கிலோ-இந்தியர்களுக்கு இந்தக் கேலிப் பெயர் கொடுக்கப்பட்டது. இந்தியாவில் அடுத்த தலைமுறையில் ஆண்ட ஆங்கிலேய ஆட்சியாளர்கள் இத்தகைய பேராசையைத் தடை செய்தனர். பாராளுமன்ற உறுப்பினர் பதவிக்கான விலையை உயர்த்துதல் முதலிய பல அருவருக்கத்தக்க செயல்களாலும் நடவடிக்கைகளாலும் இவர்கள் அன்று நிலவிய பிரபுக்கள் சமூகத்தை விரோதித்துக்கொண்டனர்.

அமெரிக்கக் கண்டத்தின் வடக்குக் குடியேற்ற நாடுகள் ஆங்கிலேயத் துணியையும் மற்றச் செய்பொருள்களையும் வாங்கிக் கொண்டு, மரத்தையும் வார்ப்பிரும்பையும் பதிலுக்கு அனுப்பின. மரம், இரும்பு, கடற்படைத் தளவாடங்கள் ஆகியவை ஸ்காண்டிநேவியாவிலிருந்தும் பால்டிக்கிலிருந்தும்கூட வாங்கப்பட்டன. ஏனெனில், பதினெட்டாம் நூற்றுண்டு இங்கிலாந்து தனது காடுகளை ஏற்கெனவே அழித்துவிட்டிருந்தது; எனவே, கப்பல் கட்டவும், வீடு கட்டவும், அடுப்பெரிக்கவும் அதற்கு மரம் தேவைப்பட்டது. வீடுகளிலும் பல தொழிற்சாலைகளிலும் நிலக்கரி இப்பொழுது எரி பொருளாயிற்று. ஆயினும், இரும்பு காய்ச்சுவதற்கு அது இப்பொழுதுதான் பெருமளவில் பயன்படத் தொடங்கி யிருந்தது; எனவே, இங்கிலாந்தில் இரும்புக் கனிவளம் அதிகமாக இருந்தாலும்கூட, எரிப்பதற்குக் காடுகளை இன்னும் கொண்டிருந்த நாடுகளிலிருந்து அதிக இரும்பு இறக்குமதி செய்யப்பட்டது.

அது ஒரு மகிழ்ச்சி நிறைந்த காலம். பதினெட்டாம் நூற்றுண்டில் இங்கிலாந்தின் தொழில் வளர்ச்சி துரிதமாக இருந்தாலும்கூட இத் தீவின் வாழ்க்கை வசதிகளுக்கு அது எவ்விதத் தீமையும் விளைவிக்க

வில்லை. இன்னமும் ஒரே 'பெரு நகர்' லண்டன்தான்; வெஸ்ட் மின்ஸ்டர் பாலத்திலிருந்து காணப்படும் லண்டன் நகரின் காட்சியை 'விஞ்சக் கூடியதாக உலகில் ஒன்றுமே யில்லை' என்று 1802-ல் வேர்ட்ஸ்வொர்த் கருதினர். ஏனெனில், நிலத்தின் அழகுக்குக் கட்டடங்களும், கடலின் அழகுக்குக் கப்பல்களும் மேலும் இனிமை கூட்டின. 'நிலக்கரி-இரும்புக் காலம்' இன்னும் வரவில்லை.

பெரிய அளவில் உற்பத்தி செய்யத் தொடங்கிய தொழிலானது, கலையிலிருந்தும் கலையுணர்விலிருந்தும் இன்னும் விடை பெற்றுக் கொள்ளவில்லை; இந்தக் காலத்துக்கு ஒரு சிறந்த உதாரணமாகத் திகழ்ந்தவர் ஜோசையா வெட்ஜ்வுட் (Josiah Wedgwood 1730–1795). பதினெட்டாம் நூற்றாண்டு இங்கிலாந்தின் நேர்த்திமிக்க பூர்ஷ்வா வாழ்வுக்கு அவர் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறார். நடுத்தர வகுப்பைச் சேர்ந்த தொழிலளிப்போர் (employers) தங்களது தொழிலைப் பெரிய அளவில் பெருக்கிக்கொள்ளும் அதே சமயத்தில் தங்களது தொழிலாளிகளுடனும் நெருங்கிய, நேரடித் தொடர்பு கொண்டிருந்தனர். அவர்களில் பலர் அக்காலத்திய மிகச் சிறந்த கலாசார, கலை வாழ்வில் சுறுசுறுப்போடு பங்கு கொண்டனர். அக்காலத்தியத் 'தொழிலதிபர்கள்' எல்லோருமே பணத்தையே குறிக் கோளாகக் கொண்டு, கலை வாழ்வைப் புறக்கணித்த 'பிலிஸ்தியர்கள்' (Philistines) என்று கூறமுடியாது.

ஆங்கிலேயக் கிழக்கிந்தியக் கம்பெனியும் டச்சுக் கிழக்கிந்தியக் கம்பெனியும் இறக்குமதி செய்த சீனப் பீங்கான் சாமான்களைப் பார்த்து ஐரோப்பாவும் அவைகளைச் செய்தது. இந்த அழகிய கலைப்பொருளுற் பத்தியில் இவ்வாறு ஆசியாவுக்குப் போட்டி ஏற்பட்டது. இங்கிலாந்தும் இதில் பின்தங்கிவிடவில்லை. செவ்ரீயிலும் (Sevres) மெய்செனிலும் (Meissen) செய்யப்பட்ட நேர்த்தியான பீங்கான்களைப் போலவே செல்சீ (Chelsea), போ (Bow), டெர்பி, வோர்செஸ்டர் ஆகியவிடங்களிலும் செய்யப்பட்டன. இவையெல்லாம் ஆடம்பரப் பொருள்கள்; சாதாரண மக்களால் விலைகொடுத்து வாங்கமுடியாதவை. ஆனல், வெட்ஜ்வுட் தனது ஸ்டாஃபோர்ட்ஷயர் தொழிற்கூடத்தில் எல்லா வகுப்பினரும் வாங்கக்கூடிய பீங்கான் சாமான்களை உற்பத்திசெய்து, உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் அவைகளுக்கு ஒரு பெரிய மார்க்கெட்டை உருவாக்கினர். அவர் 'உபயோகத்துக்காகவும்' 'அலங்காரத்துக்காகவும்' இருவகையான பீங்கான்களைச் செய்து வெற்றி கண்டார். அவைகளுக்குப் பலவிதமான அழகையும் ஊட்ட முயன்றார். அப்பொழுதுதான் அகழ்ந்தெடுக்கப்பட்ட புராதன பாம்பீ நகரத்தின் இடிபாடுகளில் காணப்பட்ட களிமண்பாண்ட ஒப்பனை முறைகளையும் பின்பற்றினர். அதேசமயம் தனது தொழிலை மேலும்

வளர்ப்பதிலும், விலையைக் குறைப்பதிலும்கூடக் கவனம் செலுத்தினர். புதிய விஞ்ஞான முறைகள், புதிய அச்சுகள், புதிய டிசைன்கள் ஆகிய வற்றையும் இடைவிடாமல் பயன்படுத்தினர். இவரது பீங்கான் தொழிற்சாலை தூரத்து ஸ்டாஃபோர்ட்ஷயரில், மிகவும் உள்நாட்டில், இருந்தது; அதற்கு வேண்டிய சீனக் களிமண் கார்ன்வாலிலிருந்து வரவேண்டும்; உள்நாட்டு மார்க்கெட்டை மட்டுமின்றி, வெளிநாட்டு மார்க்கெட்டையும் பிடிக்க இவர் திட்டமிட்டார். எனவே, போக்கு வரத்துச் செலவைக் குறைக்கவும், பீங்கான்கள் சேதமுறுதலைக் குறைக்கவும் வேண்டி கால்வாய்கள் வெட்டுவதிலும் சுங்கச்சாலைகள் அமைப்பதிலும் சிறிதும் தளராமல் கவனம் செலுத்தினர். 1760–க்கும் 1790–க்குமிடையில் இங்கிலாந்தில் மட்டுமின்றி, ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும்கூடத் தனது பொருள்களைப் பரப்புவதில் அவர் வெற்றி கண்டார். இக்காலத்தில் ஈயப்பாத்திரங்கள் வழக்கொழிந்து, பீங்கான் தட்டுகளும் கிண்ணங்களும் புழக்கத்துக்கு வந்தன; உண்ணு வதும் அருந்துவதும் சுகாதாரமாகவும், நாசூக்காகவும் மாறின. அடுத்த தலைமுறையில் 'ஈயப் பாத்திரங்களைப்' பற்றி மக்கள் பேசுவது மறைந்து, 'வெட்ஜ்வுட் பாத்திரங்களைப்' பற்றிப் பேசுவது தொடங்கியது. இவ்வாருக, 'பிரபுக்களைப் பற்றியும் சீமாட்டிகளைப் பற்றியும்' எழுதிய ஒரு தீவிரவாதப் பத்திரிகையானது, இவர்கள் 'நமது தேசத்தின் பளபளக்கும் சீனத்துப் பீங்கான் ஓடுகள்; பொது மக்களின் சாதாரண வெட்ஜ்வுட் பாத்திரங்களுக்கு இவை மிகமிக உயர்ந்தவை' என்று வஞ்சப் புகழ்ச்சியாக எழுதியது. (The Black Dwarf, செப். 17, 1817.)

தொழிற்புரட்சி முழுவதிலும் மிகமிக முக்கியமான, பெரும் விளைவுகளைத் தோற்றுவித்த கட்டம் இப்பொழுதுதான் தொடங்கிக் கொண்டிருந்தது—இரும்புக்கும் நிலக்கரிக்கும் உறவு ஏற்பட்டது. ஆன் அரசியாரின் ஆட்சியிலிருந்தே இரும்பை உருக்குவதற்கு மரக்கரிக்குப் பதிலாக நிலக்கரியைப் பயன்படுத்தும் லாபகரமான முறையை டார்பி (Darby) குடும்பம் தலைமுறை தலைமுறையாகக் கடைப்பிடித்துவந்தது. 1779–ல் அப்ரஹாம் டார்பி சகோதரர்களில் மூன்றுமவர் உலகிலேயே முதல் இரும்புப் பாலத்தைக் கட்டி முடித்தார்; 'அயர்ன்பிரிட்ஜ்' (Ironbridge) என்னுமிடத்தில் செவர்ன் (Severn) நதிக்குக் குறுக்கே இது அமைந்திருந்தது; ஷ்ராப்ஷயரில் கோல் புரூக்டேலில் இருந்த இவர்களது தொழிற்சாலைக்கருகில் இது கட்டப் பட்டது. இதையடுத்து, குறிப்பாகப் பத்தொன்பதாம் நூற்றுண்டின் ஆரம்பத்தில், இரும்புத்தொழிலில் பெருமுன்னேற்றங்கள் வெகு துரிதமாக நடைபெற்றன. தெற்கு வேல்ஸ், தெற்கு யார்க்ஷயர், டைன்சைடு ஆகியவிடங்கள்தான் இதற்கு முக்கிய களனாகத் திகழ்ந்தன. இங்கு இரும்பும் நிலக்கரியும் அருகருகில் கிடைத்தன; இவை கடற்கரையில், அல்லது கடலைச் சுலபமாக அடையக்கூடிய

வகையில் நதிக்கரையில் அல்லது கால்வாய்க் கரையில் அமைந்திருந்தன. ஆயினும் 'நிலக்கரி-இரும்புக் காலம்' நெப்போலியப் போர்களுக்கு முன்னுல் தொடங்கியதாக நாம் கூற முடியாது.

'1769-ல் ஆர்க்ரைட் தனது நீர்ச் சட்டத்துக்கும் (water frame) ஜேம்ஸ்வாட் தனது நீராவி இயந்திரத்துக்கும் 'பேடன்ட்டு' பெற்றனர். இவ்வாறு, பருத்தியாடைத் தொழிலிலும் பொறியியலிலும் இயந்திர சக்தி தோன்றிய ஆண்டு 1769. தொழில் வளர்ச்சி முழுமூச்சில் பெருகிவந்த வடக்கில்தான் வாட், ஆர்க்ரைட் ஆகிய இருவருக்கும் தேவையான சூழ்நிலை—இயந்திரத்தைப் படைப்பதற்கான முன் ஊகம் (mechanical speculation) தோன்றும் சூழ்நிலை வாய்த்தது.' 1760-க்குப் பின்வந்த கால் நூற்ருண்டில் வழங்கப்பட்ட பேடன்டுகளின் எண்ணிக்கை அதற்கு முந்திய ஒன்றரை நூற்ருண்டுகளில் வழங்கப் பட்ட பேடன்டுகளின் எண்ணிக்கையைவிட மிகவும் ஏராளம். (C. R. Fay, 'Great Britain from Adam Smith to the Present Day', 1928, பக். 303.)

தொழிற்புரட்சி தொடங்கிவிட்டது. அந்நூற்ருண்டின் இறுதியில் இங்கிலாந்து, வேல்ஸின் மக்கள்தொகை 9 மில்லியனுக உயர்ந்து விட்டது. அதில் மூன்றில் ஒரு பகுதியினரே விவசாயத்தில் ஈடுபட்டனர்; ஆனுல் 78 சதவீதத்தினர் இன்னும் கிராமப்புறங்களிலேயே வசித்துவந்தனர்.

பதினெட்டாம் நூற்ருண்டு முழுவதும் இங்கிலாந்தின் தொழிலும் கடல் வாணிபமும் பெருகுவது அவைகட்குத் தேவையான பணம் கிடைப்பதைப் பொறுத்திருந்தது. ஆனுல், பிற்காலத்தைப்போல் அப்பொழுது அது எளிதாகக் கிடைக்கவில்லை; கடன் வாங்குவதில் அரசாங்கம் ஒரு பெரிய போட்டியாக விளங்கியது. ஆனுல், பண அங்காடியின் இயக்க முறைகள் லண்டனில் இடைவிடாமல் செம்மைப் படுத்தப்பட்டுவந்தன. ஹாலந்தின் வீழ்ச்சிக்குப் பிறகு லண்டன் நகரமே 'உலக நிதிச் செல்வத்தின் மையமாயிற்று; உலகின் எவ்விடத்தைக் காட்டிலும் அவ்விடத்தில்தான் மூலதனம் எளிதாகக் கிடைத்தது.'

1720-ல் தென்கடற் குமிழி (South Sea Bubble) வெடித்ததன் விளைவாக ஜாயின்ட்-ஸ்டாக் முறைகட்கு ஒரு பெரிய அடி விழுந்தது; ஆயினும், அவை மெதுவாகப் பிழைத்தெழுந்தன; மனிதர் இன்னும் சிறிது புத்திசாலிகளாயினர். பிரபுக்கள் ஆண்ட, ஆனுல் வர்த்தக நோக்கம் கொண்ட அந்நூற்ருண்டின் சமூக அமைப்புக்கு ஜாயின்ட்-ஸ்டாக் கம்பெனி முறை மிகவும் சிறப்பாகப் பொருந்தியது என்பதில் சந்தேகமேயில்லை. ஏனெனில், நிலம் படைத்த பிரபுக்கள், தாங்கள்

‘வியாபாரி’ என்ற அருவருக்கத்தக்க வேடம் பூணுமலேயே, அந்த நகரத்து மனிதனை டைரக்டர்கள் போர்டில் சந்தித்து, அவனுடன் கூடிச் செயல்பட முடியும்; இவ்வாறு ஒரு மனிதனின் அரசியல் செல்வாக்கு மற்றொருவனின் வியாபார மூளையோடு இணைவது சாத்தியம். ஆனால், ஜாயின்ட் ஸ்டாக் கம்பெனியைவிட முக்கியமானது மாவட்ட பாங்குகளின் தோற்றம்தான். இவை நாடு முழுவதும் தோன்றி தொழிற் புரட்சிக்கும் விவசாயப் புரட்சிக்கும் தேவையான மூலதனத்துக்கு வகை செய்தன. இப்பாங்குகள் ஒரு குடும்பத்தை அல்லது ஒரு தனிநபரைச் சேர்ந்தவை; எனவே, எப்பொழுதும், பாதுகாப்பானவை என்று கூறமுடியாது. ஆயினும், வளர்ந்துவரும் தொழிலுக்கும் வியாபாரத்துக்கும் தேவையான தொகையை இவை அளித்தன.

பிறகு, யூதர்களும் குவாக்கர்களும் வேறு இருந்தனர்; இவ்விருவரும் லண்டன் நகரிலும் இங்கிலாந்தின் பாங்கு உலகிலும் முதலிடத்தைக் கைப்பற்ற விரைந்துகொண்டிருந்தனர்; இவ்விருவராலுமே சில போற்றத்தக்க தன்மைகள் தொழிலுலகில் புகுந்தன.

முதலாம் எட்வர்ட் யூதர்களை வெளியில் விரட்டினார்; கிராம்வெல் அவர்களை மீண்டும் நாட்டில் அனுமதித்தார். இவ்விருவராட்சிக்குமிடையில் தங்களது தொழில், வர்த்தக, நிதி விவகாரங்களைத் தாங்களே நிர்வகித்துக்கொள்ள ஆங்கிலேயர்கள் கற்றுக்கொண்டனர். எனவே, யூதர்களின் ஆதிக்கம் வளர்ந்துவிடும் என்ற அச்சமோ, அதற்கெதிராக யூத-வெறுப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும் என்ற அச்சமோ இல்லாமற் போயிற்று. ஒரு மிதமான அளவில் இங்கிலாந்துக்குள் நுழைந்த யூதர்களை நன்கு ஜீரணித்துக்கொள்ளும் வலிமையை, ஹனேவர் மன்னர்களின் காலம் தொடங்கியபொழுது இங்கிலாந்து பெற்றுவிட்டது; ஹாலந்தின் செழிப்புக் குன்றவே, பல யூதர்கள் ஆம்ஸ்டர்டாமிலிருந்து லண்டன் வந்து, அங்கு பங்குத் தரகில் (stock-broking) முன்னணிக்கு வந்தனர். லண்டன் நகரத்தின் வளர்ச்சிக்கு யூதர்கள் உதவினர். ‘அவர்கள் எங்கும் காணப்பட்டனர்; தொழில் துணிவு மிக்கவர்கள்; விடாமுயற்சி கொண்டவர்கள்; ஆனால், சண்டைக்காரர்கள் அல்லர். தங்களுடைய கௌரவத்தைப்பற்றிக் கருதாமல் வாடிக்கைக்காரர்களுக்குப் பின்னால் ஓடினர். மற்றவர்கள் அலட்சியம் செய்த, அல்லது வெறுத்தொதுக்கிய பொருள்களில் அல்லது வியாபாரத்தில் ஈடுபட்டு லாபம் ஈட்டினர். சர்வதேச நிதி விவகாரத்தில் யூதர்களுக்கு ஒரு தனித் திறமை இருந்தது; ஏனென்றால், அவர்கள் தங்களது இன ஒருமைப்பாட்டு உணர்வில் தேச எல்லைகளைக் கடந்தவர்கள். அதே சமயம் தனி நபர்கள் என்ற விதத்தில், நிதி விவகார ஆய்வுக்கு மிகவும் தேவையான விருப்பு வெறுப்பற்ற, நடுநிலை மனப்பான்மையை

அவர்கள் பெற்றிருந்தனர்.'[1] ஏழாண்டுப் போர் நடந்தபொழுது சாம்ப்சன் கிடியன் (Sampson Gideon) என்ற யூதர் லண்டனில் ஒரு முக்கிய பாங்கராக விளங்கினர்; அடுத்த தலைமுறையில் கோல்ட்ஸ்மிட்டுகள் (Goldsmids) முன்னணிக்கு வந்தனர்; 1805-ல் நாதன் ரோத்ஸ்சைல்ட் (Nathan Rothschild) எல்லா யூத பாங்குகளிலும் புகழ்பெற்ற ஒரு பாங்கை லண்டனில் நிறுவினர்; மற்ற ஐரோப்பிய நாடுகளில் இருந்த ரோத்ஸ்சைல்ட் குடும்பத்துக்குச் சொந்தமான நிறுவனங்களோடு இது பயனுள்ள முறையில் இணைந்திருந்தது. இந்த லண்டன் நகரத்து யூதர்கள் தவிர, கீழ்த்தரமான லேவாதேவித் தொழில் செய்த சில யூதர்களும் இன்று முன்னுக்கு வந்தனர்; எல்லா வகுப்புகளையும் சேர்ந்த ஏழைகளும் ஊதாரிகளும் இவர்களிடம் கடன் வாங்கினர்; இவர்களை வெறுத்தனர்; இந்தக் கீழ்த்தரமான யூதர்களின் தொழில் முறைகள் அவ்வளவு கொடியவை.

குவாக்கர்களும்கூட நிதியுலகில் ஒரு முக்கியமான சக்தியாக வளர்ந்துவந்தனர். நார்விச்சின் குர்னி (Gurneys) குடும்பத்தைப் போல் இவர்களும் பாங்குத் தொழிலில் புகுந்தனர். அத்தொழிலில் சிறந்த ஆங்கிலேய மரபுகளைத் தோற்றுவித்ததில் இவர்கட்குப் பெரும் பங்கு உண்டு; நேர்மை, நிதானம், தாராள குணம், அமைதி விழைதல் ஆகிய நற்பண்புகள், நிதி உலகின் பரபரப்பூட்டும் தீக்குணம், போட்டி வெறி ஆகியவற்றை ஓரளவு தணித்து, நல்விளைவுகளைத் தோற்றுவித்தன.

[1] C. R. Fay, 'Great Britain from Adam Smith to the Present Day', பக். 128.

## 13. டாக்டர் ஜான்சனின் இங்கிலாந்து

### III

கலைக்கும் பண்பாட்டுக்கும் சாதகமான சமூக நிலைமைகள்—இயற்கைக் காட்சியின்மீது விருப்பம்—நாட்டுப்புற இல்லங்களில் வாழ்க்கை—பொழுது போக்கு—உணவு—நாடகம், இசை—செய்தித் தாள்கள்—அச்சிடலும் பதிப்பித்தலும்—நூல் நிலையங்கள்—வீட்டு வேலையாட்கள்.

பிரபுக்களால் ஆளப்பட்ட பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த இங்கிலாந்தில் கலையும் கலையுணர்வும் பெருகிக் காணப்பட்டன; அதற்குச் சமூக, பொருளாதார அமைப்பு உதவியது. பொருள்களை மொத்தமாக உற்பத்தி செய்து, கைவினைத் திறனையும் கலையுணர்வையும் அழித்து, வேலையளிப்போரையும் வேலை செய்வோரையும் அறவே பிரித்து வைக்கக்கூடிய தொழிற்சாலைகள் இன்னும் பெரிய அளவில் வளரவில்லை. கூலி பெறுவோரில் பெரும்பான்மையோர் சிறந்த கைவினைஞர்கள்; பலர் நன்கு படித்தவர்கள்; வசதி படைத்தவர்கள்; சமுதாயத்தில் சிறு வேலையளிப்போருக்கும் கடைக்காரர்களுக்கும் சமமாக மதிக்கப்பட்டவர்கள்.

இத்தகைய மகிழ்ச்சி நிறைந்த சூழ்நிலையில் திறம்பெற்ற மனிதர்கள் சாதாரண மக்களுக்காக மிக அழகிய டிசைன்களையும் வேலைப்பாடுகளையும் கொண்ட பொருள்களை உற்பத்தி செய்தனர்; அவைகளை இன்றுங்கூடக் கலைப்பொருள் திரட்டுவோரும் கலையுணர்வு மிக்கோரும் பெரிதும் போற்றுகின்றனர்: சீனத்துப் பீங்கான் சாமான்கள், கண்ணாடிச் சாமான்கள், வெள்ளித் தட்டுகள், அழகாக அச்சிடப்பட்டு 'பைன்டு' செய்யப்பட்ட புத்தகங்கள், 'சிப்பன்டேல்' (Chippendale) நாற்காலிகள், அலமாரிகள், மற்றும் அலங்காரத்துக்கும் உபயோகத்துக்குமான எல்லாவிதப் பொருள்களும் இவர்களால் செய்யப்பட்டன. பண்ணையில்லங்களின் சமையலறைகளிலிருந்த நிலைக்கடிகாரங்களில் மிகவும் சாதாரணமான வகைகள்கூட எளிமையுடனும் அழகுடனும் திகழ்ந்தன; இவை எண்ணற்ற சின்னஞ்சிறு கடிகாரத்

தொழிற் கூடங்களில் மரபை ஒட்டி செய்யப்பட்டவை; ஆயினும், ஒவ்வொன்றும் மற்றதிலிருந்து மாறுபட்டது.

இன்று 'ஜார்ஜ் மன்னர்கள் காலத்துக் கட்டடக் கலை' என்றழைக்கப்படுகிற எளிய ஆங்கிலேய பாணி அன்று நிலவியது; அதில் கலையழகு நிறைந்திருந்தது. அக்காலத்தில் நகரத்திலும் கிராமத்திலும் கட்டப்பட்ட நகர மண்டபங்கள், கிராமப்புறத்து மாளிகைகள் முதல் பண்ணைக் கட்டடங்கள், குடிசைகள், தோட்டக் கருவிகள் வைக்கும் கூடங்கள்வரை எல்லாக் கட்டடங்களுமே கண்ணுக்கு இன்பமூட்டின; ஏனெனில், கதவுகளையும் சன்னல்களையும் கட்டடத்துக்குப் பொருத்தமான அளவில் அமைப்பதுபற்றிய தகவுப் பொருத்த விதிகள் (rules of proportion) எல்லாக் கட்டடக்காரர்களுக்கும் தெரிந்திருந்தன; தங்களுக்காகவென்றே கிப்ஸின் கைநூலில் (Gibbs' guide-book) கொடுக்கப்பட்டிருந்த தகவுப் பொருத்த விதிகளை இவ்வெளிய மனிதர்கள் பின்பற்றி, ஓர் அரிய இரகசியத்தை அறிந்து வைத்திருந்தனர். பின்னர் விக்டோரியா காலத்தின் வெளிவேடக் கட்டடக்கலை வல்லுநர்களுக்கு இந்த இரகசியம் தெரியாது; எனவே, எளிய ஆங்கிலேய ஜார்ஜிய பாணியைவிட்டு, கிரேக்கப் பாணி, இடைக்காலப் பாணி போன்ற நூற்றுக்கணக்கான அந்நிய விநோதங்களைப் பின்பற்றினர் இவர்கள்; அடிப்படை விஷயங்கள் தவிர மற்றெல்லாவற்றிலும் இவர்கள் கட்டடக்கலை நூல்களைக் கரைத்துக் குடித்திருந்தனர்.

பதினெட்டாம் நூற்றாண்டில் கலையென்பது சாதாரண வாழ்விலும் தொழிலிலும் ஒரு பகுதியாக விளங்கிற்று. ஹொகார்த், கெய்ன்ஸ்பரோ, ரெய்னால்ட்ஸ், ரோம்னி, சொஃபானி (Zoffany) ஆகியோரின் ஓவியங்கள்; இறுதியில் காஸ்வேயாக (Cosway) உருவெடுத்த சிறு உருவப்படக்கலைப் பாணி; வெர்சூ (Vertue), உல்லெட் (Woollett) ஆகியோரின் செதுக்குக் கலை; ரூபிலாக்கின் உருவச்சிலைகள், மார்பளவுச் சிலைகள். ஆடம் சகோதரர்களின் மேசை நாற்காலிகள், அலங்காரங்கள்—இவைகள் அனைத்தும் சூழ்நிலையை எதிர்த்து மேதைகள் கிளப்பிய ஆட்சேபத்தின் கலையுருவங்கள் அல்ல; அதற்கு மாறாக, அக்காலத்தின் பழக்க வழக்கங்களின் இயற்கையான விளைவுகள்; தேவை—அளிப்பு (demand and supply) என்ற அந்த உறவின் விளைவாக எழுந்தவை. கிரே, கோல்ட்ஸ்மித், கூப்பர் ஜான்சன், பாஸ்வெல், பர்க் ஆகியோரது இலக்கிய உலகும் இதேபோன்றதுதான். குறிக்கோளும் சிந்தனையும் அமைதியாக, திடமாக ஒன்றிணைந்தன; இவ்வகையில் இது ஒரு தொன்மைக்காலம் (classical age); விக்டோரியாவின் தொல்லைபிடித்த காலத்துக்கு இது மாறுபட்டது; இக்காலத்தியப் பேரறிஞர்களில் பெரும்பாலோர்—கார்லைல், ரஸ்கின், மேத்யூ ஆர்னல்ட், ரபேலுக்கு முந்தியவர்கள் (Preraphaelites),

வில்லியம் மோரிஸ், விஸ்லர், பிரௌனிங், மெரிடித்—தங்களது காலத்தின் கீழ்த்தரமான லட்சியங்களுக்கெதிராகக் கிளர்ச்சி செய்தனர் ; அல்லது ஒவ்வொருவரும் தத்தம் விநோதக் கருத்துகளை மக்கள்மீது சுமத்துவதற்காகத் தீவிரமாகப் போராடினர். ஆயினும், எல்லோரைக் காட்டிலும் பெரிய கிளர்ச்சிக்காரரைத் தோற்றுவித்தது பதினெட்டாம் நூற்றாண்டுதான் ; வில்லியம் பிளேக் (William Blake) 1757-ல் பிறந்தார்.

உணர்வு எங்கெங்கு விரும்புகிறதோ அங்கெல்லாம் ஒளி வீசுகிறது. கலையும் இலக்கியமும் ஏன் ஒரு குறிப்பிட்ட காலத்தில் தழைத்தன அல்லது ஒரு குறிப்பிட்ட வழியைப் பின்பற்றின என்பதை ஒரு சமூக வரலாற்று ஆசிரியன் விளக்க முடியாது. ஆனால், டாக்டர் ஜான்சனின் இங்கிலாந்தில் ஒரு சிறந்த கலைச்சுவையும் கலையுற்பத்தியும் நிலவு வதற்குச் சாதகமாகவிருந்த சில பொது நிலைமைகளை அவன் சுட்டிக் காட்ட முடியும்.

செல்வமும் ஓய்வும் வளர்ந்துகொண்டேயிருந்தன ; எல்லா வகுப் பினரிடையிலும் அவை பரந்திருந்தன. முன் எப்பொழுதைக் காட்டிலும் உள்நாட்டமைதியும் தனி மனித சுதந்திரமும் அதிகமாகக் காணப்பட்டன ; நன்கு பயிற்சிபெற்ற சிறிய படைகளைக்கொண்டு அயல்நாடுகளில் நாம் நடத்திய சிறிய போர்கள் நமது நல்லூழ் மிக்க தீவின் அமைதியான வாழ்வைப் பாதிக்கவில்லை. கானடாவிலும் இந்தியாவிலும் மிகக் குறைந்தபட்சச் செலவில் நாம் நமது பேரரசை நிலைநாட்டியதைப்போல் வேறெந்த நாடும் செய்தது கிடையாது. ஆஸ்திரேலியா விஷயத்திலும் இப்படித்தான். காப்டன் குக் அதைக் கடலில் கண்டுபிடித்துப் பையில் போட்டுக்கொண்டு வந்துவிட்டார் ; அவ்வளவுதான் (1770). நமது பழைய அமெரிக்கக் குடியேற்ற நாடு களின் அன்பை ஒரு போரில் நாம் இழந்தோமே, அந்தப் போர்கூட நமது தோற்ற நாட்டின் வாழ்க்கை அமைதியை ஒன்றும் குலைத்துவிட வில்லை ; வர்த்தகத்துக்கு மட்டுமே பெரும் குந்தகம் விளைத்தது. இதற்குக் காரணம், சவால்களை எல்லாம் சமாளித்து நாம் நமது கடல் வலிமையைக் காப்பாற்றிக்கொண்டதுதான் ; ஃபிரெஞ்சுக் கடற்படை யானது இங்கிலீஷ் கால்வாயில் சில மாதங்கள் (1779) உலவிய காலத்தி லுங்கூட நாம் பட்டினிச் சாவைப்பற்றி அஞ்சவில்லை, படையெடுப்பைப் பற்றியே அஞ்சினோம். இந்த ஆபத்தும் விரைவில் விலகியது. நெப் போலியப் போர்கள் நடைபெற்றபொழுதும் இதே கதைதான். நமது தீவிலேயே நமது உணவுப் பொருள்கள் பெரும்பாலும் பயிராயின ; கடல் அலைகளையும் நாம் கட்டி ஆண்டோம் ;

‘பிரிட்டனின் கவலையில்லா மகிழ்ச்சிக்கும் எல்லையில்லா வலிமைக் கும்’ இரு காரணங்கள் இவைதாம். புரட்சிகரமான ஃபிரான்ஸுடனான

போரின் இருபதாவது ஆண்டில் பிளாக் கோம்ப் (Black Combe) சிகரத்திலிருந்து கடலேயும் நிலத்தையும் கண்களால் பருகிய வேர்ட்ஸ் வொர்த்தும் இவை இரண்டு காரணங்களேயும் கருத்தில் கொண்டுதான் நம்பிக்கை என்னும் பெருவெள்ளத்தில் திளேத்தார். நவீன, சர்வாதி காரப் போரின் (totalitarian war) ஓராண்டில் இங்கிலாந்தின் சமூகத்துக்கும், அதன் நாகரிகத்தின் உயர் சிகரங்களுக்கும் ஏற்பட்ட சேதத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கையில், பிட்டுகளின் (Pitts) காலத்தில் நடைபெற்ற தொடர்ச்சியான போர்கள் சிறுபிள்ளே விளேயாட்டுகள்.

ஆனால், கலேயும் கலேச்சுவையும் சிறந்து காணப்பட்ட ஒரு காலத் துக்கு, செல்வத்தையும் காப்பையும் மட்டும் காரணமாகக் காட்ட முடியாது. விக்டோரியாவின் காலம் இதைவிடவும் செல்வமும் காப்பும் மிகுந்த காலம்; ஆனாலும் அக்காலத்தில் கட்டப்பட்ட வீடுகளும், அவைகளுள் அடுக்கி வைக்கப்பட்ட பொருள்களும் (புத்தகங்கள் மட்டும் விதிவிலக்கு) எவ்விதத்திலும் உயர்ந்தவையல்ல. பதினெட்டாம் நூற்றுண்டில், இயந்திர உற்பத்தி அளவுக்கு அதிகமாகப் பெருகி, கலேச்சுவையை இன்னும் கெடுக்க ஆரம்பிக்கவில்லே. பொருள்களேச் செய்வோனும் வாங்குவோனும் கைத்தொழிலேப்பற்றியே இன்னும் நினேத்தனர். கலேஞனும் செய்பொருள் உற்பத்தியாளனும் இரு துருவங்களாக இன்னும் பிளவுண்டு போகவில்லே. அவர்கள் இரு வருமே ஒரே தொழிலேச் சேர்ந்தவர்களாக விளங்கி, ஒரு சிறிய அளவி லான மக்களுக்காகப் பொருள்களே ஆக்கினர். இச்சிறிய அளவு மக்களின் சுவையும் இன்னும் கெட்டுப்போகவில்லே; காரணம், கெட்டது எதையும் அவர்கள் இன்னும் அதிகம் காணவில்லே. வாழ்வும் கலேயும் இன்னமும் மனிதத்தன்மை பூண்டவையாக, இயந்திர உற்பத்தியின் காலடியில் வீழாதவையாக இருந்துவந்தன; எண்ணிக்கையைவிடத் தரத்துக்கே இன்னும் மதிப்பு இருந்துவந்தது.

ஹனேவிரிய மன்னர்களின் காலத்தில் கலேவளர்ச்சிக்குச் சாதக மாக இருந்த மற்றெரு சூழ்நிலே மேல்வகுப்பு மக்களின் செல்வாக்கு. இச் செல்வாக்கு அரசியலே மட்டுமின்றி, வாழ்வின் வேறு பல துறை களேயும் பாதித்தது. பெரும் பிரபுக்கள் மட்டுமல்லாமல் கனவான்கள், செல்வமிக்க மதகுருக்கள், நாகரிக வாழ்வை ஏற்றுக்கொண்ட நடுத்தர வகுப்பினர் ஆகிய எல்லோருமே கூடியதுதான் அக்காலத்திய மேல் வகுப்பு என்பது. இந்த நடுத்தர வகுப்பானது மற்ற மேல் வகுப்பின ரோடு நன்கு அளவளாவிப் பழகியது; பாஸ்வெலின் ஜான்சன் உரை யாடல்களில் நாம் இதைக் காண்கிறேம்; தமது வகுப்பினரிடையில் தலேசிறந்து விளங்கிய சர் ஜோஷுவா ரெய்னல்ட்ஸின் வாழ்க்கை வரலாற்றிலும் நாம் காண்கிறேம். கணிசமான மக்களேக்கொண்ட,

விசேஷ சமூக உரிமைகளை ஏராளமாகக்கொண்ட அந்த மேல்வகுப்புச் சமுதாயத்துக்கு எல்லாவற்றிலும் தரத்தைப் பார்ப்பது என்பது சாத்தியமே. இந்த மேல்வகுப்பின் மேல்தட்டிலிருந்த பிரபுக்கள், பூர்ஷ்வாக்களுக்கும் மற்றக் கற்ற மக்களுக்கும் தலைமை பூண்டனர்; இந்த பூர்ஷ்வாக்களும் மற்றவர்களும் பிரபுக்களுக்கு அறிவையும் கருத்துகளையும் பதிலுக்குத் தந்தனர். உதாரணமாக, பர்க், ராக்கிங் ஹாம் பிரபுவுக்குத் தந்தார். பத்தொன்பதாம் நூற்றுண்டில் வாழ்ந்த, பணத்தேவதையின் வல்லமை பொருந்திய குழந்தைகள் மேலும் மேலும் பணம் சேர்க்கவேண்டும், மேலும் மேலும் பொருள்களை உற் பத்தி செய்து குவிக்கவேண்டும்—தரத்தைப்பற்றிக் கவலையில்லை!—என்ற ஓர் இடையருத நமைச்சலை இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் உலகம் முழுவதிலும் பரப்பினர்; ஆனல், பதினெட்டாம் நூற்றுண்டின் தலைவர்களை இந்த நமைச்சல் பிடிக்கவில்லை. பிரபுக்கள் சமுதாயச் சூழ்நிலையானது கலைக்கும் கலைச்சுவைக்கும் மிகவும் ஏற்றதாயிருந்தது. நடுத்தர வகுப்பு ஆட்சி அல்லது ஜனநாயக ஆட்சி நிலவிய சூழ்நிலை கூட இங்கிலாந்தில் அவ்வளவு சாதகமாயில்லை என்பது நிரூபிக்கப் பட்டுவிட்டது. அதேபோல் ஐரோப்பாவில் சர்வாதிகாரச் சூழ்நிலையும் தோல்வியே கண்டது.

அரசனைவிடவும் சிறப்பான முறையில் கலையையும் இலக்கியத்தை யும் மேல்வகுப்பினர் பேணினர். மன்னர்களுக்கும் சிற்சில சமயங் களில் கலைச்சுவை இருந்திருக்கலாம்; உதாரணம், ஃபிரான்சின் 14, 15ஆம் லூயிகள். ஆனல், முடியாட்சியின்கீழ், அரசவையே கலைக்கும் அறிவுக்கும் களனகத் திகழ்ந்து, அதைச் சுற்றியே அவை இயங்கவேண்டியிருக்கிறது. ஆனல், ஆங்கிலேய உயர்குடிகளிடத்தில் ஒன்றல்ல, நூற்றுக்கணக்கான மையங்கள் இருந்தன; நாடு முழுவதும் பரந்துகிடந்த ‘கனவான்களின் மாளிகைகளும்’ மாவட்ட நகரங் களுமே அம் மையங்கள். அவை ஒவ்வொன்றும் கல்விக்கும் கலைக்கும் களனக விளங்கி, பல்கலைக்கழகங்களில் காணப்பட்ட கல்வியின் அழிவுக்கும் ஹனேவிரிய மன்னர்களின் அவையில் காணப்பட்ட கலைச்சுவையின் அழிவுக்கும் ஈடுசெய்து, அவைகளைக் காத்தன. 2ஆம் ஜார்ஜ் ஹேண்டெலின் (Handel) இசையைப் பேணினர்; ஆனல், அதற்குமேல் ஒன்றுமில்லை. ஆனல், அதைப்பற்றிக் கவலையில்லை; ஏனென்றல், கலையை ஆதரிக்கும் பணியைச் செய்ய லட்சக்கணக்கான மக்கள் தோன்றுவிட்டாலுங்கூட, பணியைச் செய்ய ஆயிரக்கணக்கான மக்கள் தோன்றிவிட்டார்கள். ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழகம் கிப்ப னுக்கு ஒன்றுமே செய்யவில்லை; மன்னர் என்ன சொன்னர்? ‘ஏ கிப்பன், நீ கிறுக்கு, கிறுக்கிக்கொண்டேயிரு!’ என்றர்; வேறென்று மில்லை. ஆனல், அவரது முதல் தொகுதி வெளியாயிற்றே இல்லையோ (1776), வாசகர்கள் அதைக் கொண்டாடினர்கள்; அவரது மேதையை

நன்கு உணர்ந்து போற்றும் அளவுக்கு எண்ணிக்கையிலும், கலைச் சுவையிலும் அக் கால வாசகர்கள் வளர்ந்திருந்தனர்.

பதினெட்டாம் நூற்றுண்டின் சுவை தலைசிறந்தது என்று கூற முடியாது. இலக்கியத்தில் அதற்குப் பிடித்தது வெகு சிலவே. கலையிலுங்கூட ரெய்னல்ட்ஸ் அதிகம் புகழப்பட்டார்; ஹொகார்த்தும் கெய்ன்ஸ்பரோவும் ஓரளவு குறைத்தே மதிப்பிடப்பட்டனர். 1768-ல் சர் ஜோஷுவா ரெய்னல்ட்ஸால் ராயல் அகாதமி நிறுவப்பட்டது; இதைக் கொண்டு, ஓவியங்களை வாங்கும் பழக்கத்தை வளர்ந்துவரும் நடுத்தர வகுப்பிடம் வளர்க்க சர் ஜோஷுவா முயன்ருர். ஓவியத்தை வாங்கி மாட்டிவைப்பவர்தான் மேல்வகுப்பைச் சேர்ந்தவர் என்று கருதப்பட்டார். ஓவியத்துக்குப் பெருங் கிராக்கியை இவ்வாறு தோற்றுவித்ததன் மூலம் இவர் தனது சகோதரக் கலைஞர்களுக்கு அதிகப் பணத்தைத் தேடித்தந்தார் என்பதில் சந்தேகமில்லை. ஆனல், அந்த உயர்குணம் படைத்த வீரர், கலையின் தர வீழ்ச்சிக்குத் தன்னையுமறியாமல் வழிவகுத்தாரா? ஒரே வகையான ஓவியங்களையும் சிற்பங்களையுமே பேணியதன் விளைவாக, அவரது ராயல் அகாதமி புதிய கலைப் பாணிகட்குத் தடையாய் விளங்கியதா?

ஹெர்குலானியம், பாம்பீ ஆகிய இரு புதையுண்ட நகரங்களும் வியக்கத்தக்க விதத்தில் கண்டுபிடிக்கப்பட்டது மாபெரும் ஆர்வத்தைத் தூண்டிவிட்டது. கலைக்கு இதனல் விளைந்த பலன்களைவிடத் தொல்பொருள் ஆராய்ச்சிக்கு ஒருவேளை அதிகப் பலன் விளைந்திருக்கலாம். இரண்டாந்தரமான கிரேக்க-ரோமானியச் சிலைகள் முன்மாதிரியாக எடுத்துக்கொள்ளப்பட்டன; அடுத்த தலைமுறையில் தோன்றிய, அகாதெமியைச் சேர்ந்த சிற்பிகளாகிய நொல்லிகென்ஸ் (Nollekens), ஃபிளாக்ஸ்மன் (Flaxman) ஆகியோர் எல்லாச் சிலைகளும்—அக்காலத்தைச் சேர்ந்த பிரிட்டிஷ் அரசியல்வாதிகளின் சிலைகளும்கூட—அதே மாதிரிதான் அமைக்கப்படவேண்டும் என்றும், பழைய காலத்து ரோமானிய மேலங்கியையே (toga) அவர்களும் அணிந்திருக்கவேண்டுமென்றும் [உதாரணம், புளூம்ஸ்பரி சதுக்கத்திலுள்ள (Bloomsbury square) ஃபாக்ஸின் (Fox) சிலை], மற்ற விதங்களில் ரூபிலாக்கின் (இறப்பு: 1762) உண்மையான மறுமலர்ச்சிக் (Renaissance) கால மரபைப் பின்பற்றுவதை விட்டொழிக்க வேண்டுமென்றும் வலியுறுத்தினர். வேடிக்கை என்னவென்றல், இதே சமயத்தில்தான் வரலாறு சம்பந்தமான ஓவியங்களில் உடை பற்றிய இவ் விதியை பெஞ்சமின் வெஸ்ட் (Benjamin West) தலைகீழாக மாற்றினர்; சர். ஜோஷுவாவின் தீவிரமான, ஆனல், நட்பு முறையிலான கண்டனத்தையும் மதியாமல், உல்ஃபின் (Wolfe) மரணம் பற்றிய தனது ஓவியத்தில் (1771ஆம் ஆண்டின் அகாதெமியில் இது காட்சிக்கு வைக்கப்பட்டது) அத் தளபதி

யும் அவரது மனிதர்களும் தற்காலத்திய பிரிட்டிஷ் இராணுவ உடையில் தான் காட்டப்படவேண்டுமேயன்றி, பண்டைய கவசத்தில் அன்று என்று வெஸ்ட் வலியுறுத்தினர். நவீன வீரர்களுக்குப் பெரும் புகழ் அளிக்க வேண்டி பண்டைக் கவசங்களில் அவர்களைக் காட்டுவது அப்பொழுது வழக்கம். தனது துணிச்சலான புதிய முறையை விடாமுயற்சியுடன் இவர் பின்பற்றியதன் பலனாக அரச சாசனம் பெற்று ஒரு புதிய வரலாற்று ஓவியப் பாணியை நிறுவினர்; செதுக்குவேலை (engravings) மூலமாக அதை மக்களிடம் வெகுவாகப் பரப்பினர்; அவர்கள் அதை ஆர்வத்துடன் ஏற்றுக்கொண்டனர்.

கலைப் பாணிகள் மாறுபட்டன; கலைஞர்களின் திறமைகளிலும் பலவிதங்கள் காணப்பட்டன; ஆயினும், பதினெட்டாம் நூற்றாண்டானது கலையிலும் கைத்தொழிலிலும் உயர்ந்த தரம் நிலவுவதற்குச் சாதகமாயிருந்தது. எல்லாவகையான அழகிய பொருள்களும் இங்கிலாந்தில் நிரம்பியிருந்தன; சில பழையவை, சில புதியவை; சில நம் நாட்டுக்கே உரியவை, சில அந்நிய நாட்டைச் சேர்ந்தவை. நகரங்களிலும் கிராமங்களிலும் கட்டப்பட்ட வீடுகளிலெல்லாம், பொருட்காட்சிசாலைகளிலும் கலைக்கூடங்களிலும் நிரம்பியிருப்பதைப்போல் பொருள்கள் நிறைந்திருந்தன. ஆனால், நூல்கள், செதுக்கு வேலைப்பாடு நிறைந்த பொருள்கள், சீனத்துப் பீங்கான்கள், மரச்சாமான்கள், ஓவியங்கள் ஆகியவை கண்காட்சிக்காகக் குவித்துவைக்கப்படவோ அல்லது ஆடம்பரத்துடன் காட்டப்படவோ இல்லை; அதற்கு மாறாக, வரவேற்புமிக்க இல்லங்களில் குடும்ப உபயோகத்துக்காக, ஒவ்வொன்றுக்கும் இயற்கையாக உரிய இடங்களில் அவைகள் வைக்கப் பட்டிருந்தன.

வீட்டிற்கு உள்ளும் வெளியும் அது ஒரு கவர்ச்சி மிக்க நாடு. மனிதனுடைய உழைப்பானது இயற்கையின் அழகை எவ்வளவு பறித்ததோ, அதற்கும் அதிகமாகவே கொடுத்தது. தலப் பாணியில், தலத்தில் கிடைத்த பொருள்களையே கொண்டு கட்டப்பட்ட பண்ணைக் கட்டடங்களும் குடிசைகளும் அந்த இனிமையான சுற்றுப்புறத்தோடு நன்கு ஒன்றின; அதற்கு விகாரமற்ற முறையில் புதுவகை அமைப்பைக் கூட்டி அலங்கரித்தன. பழைய திறந்த வயல்கள், புதர்க்காடுகள் ஆகியவை இன்று அருகிப்போயின; முழுதுமாக மறைந்துவிடவில்லை. உதாரணமாக, கிட்டத்தட்ட ஒவ்வொரு கிராமத்தின் அருகிலும் ஒரு மேனர்-இல்லத் தோட்டம் இருந்தது; அதைச் சுற்றி பெரிய, முற்றிய மரங்கள் அடர்ந்து கிடந்தன; மான்கள் அதன் நிழலில் இன்னும் மேய்ந்துகொண்டிருந்தன. உயர்ந்த எல்ம் மரங்களை இடையிடையே கொண்ட, பிராம்பிள், ஹாத்தார்ன் வேலிகளால் சூழப்பட்ட வயல்களும், ஓக், பீச் மரத் 'தோட்டங்களும்' இன்று புதியவாகத் தோன்றின.

முந்திய காலத்திய திறந்த வயல்களையும் புதர்க்காடுகளையும் கொண்ட இயற்கை வனப்புக்கு இவை எவ்விதத்திலும் குறைந்தவையல்ல.

அந் நூற்றுண்டின் கடைசி பத்தாண்டுகளில் ஓவியர்கள் இயற்கைக் காட்சியைத் தீட்டி ஒரு புதிய முறையை ஏற்படுத்திச் சிறப்பெய்தினர். இவர்கள் பெரும்பாலும் நீர் வர்ணங்களையே உபயோகித்தனர். கிர்ட்டின் (Girtin), இளைஞரான டர்னர் (Turner) ஆகியோர் இவர்களில் முக்கியமானவர்கள்; அவர்களுக்குப் பின்னர் வந்தவர்களில் நார்விச் பாணியைச் சேர்ந்த கிரோம் (Crome), காட்மன் (Cotman) ஆகியோரும் கான்ஸ்டபிளும் (Constable) முக்கியமானவர்கள். இங்கிலாந்தின் இய்ற்கையழகு உச்சகட்டத்தில் இருந்த காலத்தில், அவ்வழகு சிதைக்கப்படுவதற்கு முன்னுல், அதை அவர்கள் சித்திரித்தார்கள். முன்பு கெய்ன்ஸ்பரோவும் (Gainsborough) ரிச்சர்ட் வில்சனும் பெருந்திறமையுடன் இயற்கைக் காட்சிகளைத் தீட்டினுலுங்கூட, அன்றைக்கு அத்தகைய ஓவியங்களுக்கு அவ்வளவு கிராக்கி இல்லை. உருவப் படங்களுக்கும் கருத்தமைந்த படங்களுக்குமே கிராக்கி அதிகம். ஆனுல், நிலத்தோற்றத்தை, இயற்கைக் காட்சியைக் கண்டு இரசிக்கும் பண்பு வளர்ந்துவந்தது. இலக்கியம் இதைப் பிரலிபலித்தது மட்டுமன்றித் தூண்டவும் செய்தது. 1726-ல் தோன்றிய தாம்சனின் பருவங்கள் (Seasons) தொடங்கி, கூப்பர் வழியாக வளர்ந்து, இறுதியில் வேர்ட்ஸ்வொர்த்தின் கவிதைகளில் இக் கருப்பொருளானது என்றுமிலா அழகு பெற்று மிளிர்ந்தது. ஆனுல், நமது தீவின் ஈடுஇணையற்ற, தனித்தன்மை வாய்ந்த எழிற் பெருக்கை வருணிக்க எழுத்துகள் போதா; நீர்ச் செறிவு மிகுந்த நமது காற்று மண்டலத்தில் வானம், மண், இலைகள் ஆகியவற்றின் ஒளி ஜாலங்களையும் வர்ண பேதங்களையும் ஓவியன் மட்டுமே காட்டமுடியும். இவ்வாருகப் பதினெட்டாம் நூற்றுண்டு முடிவுற்று, ஒரு புதிய காலகட்டம் தோன்றும் வேளையில், ஆங்கிலேயர்கள் தங்களது இயற்கை அன்னையின் எழில் வண்ணத்தைக் கண்டுகொண்ட களிப்பெல்லாம் எழுத்தாகவும் கலையாகவும், வேர்ட்ஸ்வொர்த்தின் பேனு முனையிலும், இயற்கைக் காட்சி ஓவியர்களின் தூரிகையிலும் வெளிப்பட்டன.

இயற்கையின் கரடுமுரடான, விரிவான அம்சங்களில் மக்கள் காட்டிய புதிய மகிழ்ச்சியும் விருப்பமும், நாட்டுப்புற இல்லங்களின் (Country houses) தோட்டங்களை அமைக்கும் விதத்தில் மாறுதல்களைத் தோற்றுவித்தன. இரண்டாம் ஜார்ஜின் ஆட்சிவரையில் இதை நாம் காணலாம். பழைய தோட்டங்களில் பாதைகள் நெடுகிலும் டச்சு பாணியில் செய்யப்பட்ட காரீயச் சிலைகளை வைத்து அலங்கரித்திருப்பர்; இந்த டச்சுப் பாணி வில்லியம், ஆன் ஆகியோரின் காலத்தில் நிலவியது. யூ (Yew) புதர்கள் வேடிக்கையான வடிவங்களில்

கத்தரித்துவிடப்பட்டிருந்தன. ஆனால், இவையனைத்தும் இப்பொழுது போய்விட்டன. மேனர்-இல்லத்தின் சுவர் உயரத்துக்குப் புற்களும் மரங்களும் இப்பொழுது கால்நடை வளர்ப்புத் தோட்டத்தில் வளர விடப்பட்டன; உயர்ந்த செங்கல் மதில்களுக்குள் போடப்பட்ட பழ, காய்கறித் தோட்டம்—இது நாட்டுப்புற இல்லத்தின் ஓர் அவசிய அங்கமாக இப்பொழுது கருதப்பட்டது—முன்பக்கத்துச் சன்னல்களி லிருந்து தெரியாதவாறு தூரத்தில் அமைக்கப்பட்டது. வில்லியம் கென்டும் (William Kent) அவரைப் பின்பற்றிய 'வாய்ப்பு நிறைந்த பிரௌனும்' தாம் ('Capability Brown') இம் மாறுதல்களுக்குக் காரணம். யாராவது ஒரு கனவான் தோட்டம் அமைப்பதுபற்றி ஆலோசனை கேட்பதற்காகத் தன்னை வரவழைத்தால், 'இங்கு அபிவிருத்திக்கான **வாய்ப்பு நிறைந்து** இருப்பதை நான் காண்கிறேன்' என்று பிரௌன் கூறுவது வழக்கம்; இதுதான் அவரது இந்தப் பெயருக்குக் காரணம்.

இதில் இலாபமும் இருந்தது; நஷ்டமும் இருந்தது. இந்த அழகிய காரீயச் சிலைகள் அமெரிக்கர்களையும் பிரெஞ்சுக்காரர்களையும் சுடுவதற் காக நூற்றுக்கணக்கில் உருக்கப்பட்டன. இது ஒரு பெரும் இழப்பு. ஆனால், டச்சு முறைத் தோட்டங்களை அகற்றி, சன்னலிலிருந்து காணும் கண்ணுக்கு இனிமையூட்டுவதற்காகப் புல்லும் மரங்களும் வளர்த்தது, இயற்கைக் காட்சியில் மக்களது வளர்ந்து வரும் ஆர்வத்தைக் காட்டியது. இதன் விளைவாக சீக்கிரமே ஆங்கிலேயர்கள் மலைப் பகுதிகளுக்கும் லேக் மாவட்டத்துக்கும் (Lake District) கும்பல் கும்பலாகச் சென்று இன்பத்தில் திளைத்தனர்; இது வரை நாகரிக மனிதன் அஞ்சி வெறுத்த ஸ்காட்லந்தின் ஹைலந்துக்கும் ஆல்ப்ஸ் மலைகளுக்கும்கூட அடுத்த நூற்றாண்டில் சென்றனர்.

அளவுக்குமதிகமாக நாகரிகமடைந்துவரும் ஒரு சமூகம் இவ் வாறு இயற்கையின் வனப்பில் மனத்தைப் பறிகொடுத்தது தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சி. பழங்காலத்தில் தன்னைச் சுற்றி எல்லா இடங் களிலும் காடுகளையும் புதர்களையுமே மனிதன் கண்டான்; அவை களுடன் சதா போராடினான்; அந் நாள்களில்தான் முறையான தோட் டங்களை அமைப்பதன் மூலம் அப் போராட்டத்திலிருந்து ஓய்வு பெற விரும்பினான். இப்பொழுதோ அவன் வென்றுவிட்டான். நாட்டுப் புறம் இன்னும் அழகாகவே இருந்தது என்பது உண்மை. ஆயினும், வேலி வரிசைகள், 'தோட்டங்கள்' அமைத்ததன் மூலம் அவன் இயற்கையைத் தலைகுனிய வைத்துவிட்டான். எனவே, ரூசோவின் மாயாவாதத் தத்துவத்தின்படி, இயற்கையை அதன் தலைவிரி கோலத்தில் செயற்கையான முறையில் தனது வீட்டுக்கு அப்பால் மனிதன் காணவேண்டும்.

பதினெட்டாம் நூற்றுண்டின் பின் பகுதியில் மலைமீது ஏற்பட்ட விருப்பத்தைத் தொடர்ந்து, இதுவரை ஏறெடுத்தும் பார்க்காத 'கடற்கரை' மீதும் காதல் பிறந்தது. அந் நூற்றுண்டின் முதல் பாதியில் 'கடற்கரை நீர்ப் பகுதிகளுக்குச்' (Seaside watering-places) செல்லும் புதிய வழக்கம் மருத்துவ நோக்கத்துடன்தான் தோன்றியது என்பது உண்மை. கடற்காற்றைச் சுவாசிப்பதற்காக பிரைட் ஹெல்ம்ஸ்டோன் (பிரைட்டன்) கிராமத்துக்கும், கிணற்று நீரை அருந்துவதற்காக ஸ்கேர்பரோவுக்கும்—சிற்சில சமயங்களில் கடலில் நீராடுவதற்கும்—மக்கள், மருத்துவர்களின் ஆலோசனையின்படி சென்றனர். 1745-ல் ஸ்கேர்பரோ (Scarborough) கடற்கரையில் அயலூரிலிருந்து வந்த ஆண்கள் நீந்திக்கொண்டிருப்பதை ஓர் ஓவியத்தில் நாம் காண்கிறோம்; 1750-ல் மார்கேட்டில் (Margate) 'பீலின் (Beale) குளிக்கும் இயந்திரங்கள்' உபயோகிக்கப்பட்டன; குதிரைகளால் இழுக்கப்பட்ட இவ் வியந்திரங்கள் ஆண், பெண் இரு பாலாரையும் தண்ணீருள் கொண்டு சென்றன; முகமூடி அணிந்து ஏணி வழியாக அவர்கள் அதில் இறங்க முடியும்; பிறகு வேண்டும்பொழுது நீந்தி வெளியில் வரலாம்.

உடலுக்கு மருந்து தேடிச் சென்றவர்களுக்கு உள்ளத்துக்கும் மருந்து கிடைத்தது. கடலையும் கடற்கரைக் காட்சியையும் காணச் சென்றவர்கள் மனத்தைப் பறிகொடுத்து, மலையுச்சிகளுக்கும் மணற் பரப்புகளுக்கும் மேலும் அதிக எண்ணிக்கையில் சென்றனர். இதற்கு முக்கிய நோக்கம் உடல்நலம் பெறுதலே என்றுலும், அவ்வுடல் நலத்துக்கு வேண்டிய மனமகிழ்வைப் பெறுதலும் இன்னெரு நோக்கம். மூன்றும் ஜார்ஜின் ஆட்சியின் பிற்பகுதியில் முதல் முறையாகக் கடலலைகள் உண்மையுடனும் நேசத்துடனும் டர்னரால் ஓவியமாகத் தீட்டப்பட்டன என்பது குறிப்பிடத்தக்கது. ஏற்கெனவே கப்பல்கள் நன்ருக வரையப்பட்டிருந்தன; ஆயினும், அவை மிதந்த நீர்ப் பரப்பைப்பற்றி ஓவியர்கள் இதுவரை கவலைப்பட்டதில்லை. இதற்கு முன்னர் மாக்கடலின் பயங்கரத்தை மட்டுமே பாடிய கவிஞர்களும் கூட, இப்பொழுது அதன் அழகைக் கண்டு பரவசப்பட்டு, கடலலைகள் பொங்கிவரட்டும் என்று பாடி வரவேற்கத் தொடங்கினர்!

முன்பெல்லாம், நாட்டுப்புற இல்லங்கள் கட்டும்பொழுது, வசதி பற்றிய எண்ணத்தோடுதான் மனைகள் தேர்ந்தெடுக்கப்பட்டன. ஆனல், பதினெட்டாம் நூற்றுண்டில் முதன் முதலாக அழகுணர்ச்சிக் கண்ணேட்டத்துடன் அவை தேர்ந்தெடுக்கப்பட்டன. மேடான இடங்களில், 'பரந்த காட்சியைப் பெறும்' (to 'command the prospect') நோக்கத்துடன் அவை பெரும்பாலும் கட்டப்பட்டன. செயற்கையான முறையில் தண்ணீர் வசதியைப் பெறுவது செல்வந்தர்களுக்கு இப்

பொழுது எளிதாகப் போய்விட்டதால், உயரமான இடங்களில் வீடுகள் அமைப்பது சாத்தியமாயிற்று. கட்டடத் துறையில் புகழ்பெற்று விளங்கிய 'அந்தப் பெரிய மாயவித்தைக்காரர் பிரௌனைக்' கூப்ப ருக்குப் பிடிப்பதில்லை; திறந்த குன்றுகளின் உச்சியில் தமது இல்லங் களை அமைக்குமாறு மக்களை வசியப்படுத்தி பிரௌன் கட்டிய வீடுகள், சுற்றிலும் மரங்கள் வளர்ந்து பாதுகாப்பு அளிக்கும் வரையில் மிகவும் குளிராயிருந்தன வென்றும், அவரது மலைச்சரிவுத் தோட்டங்களால் பெருஞ்செலவு ஏற்பட்டு, அவரை வெகு ஆர்வத்துடன் பின்பற்றிய பல குடும்பங்கள் அழிந்துபோயின வென்றும் அவர் குறை கூறினர் (Task, நூல் III). உண்மையில் மக்கள் தமது திறமைக்கு விஞ்சிய அளவில் நாட்டுப்புற இல்லங்களைக் கட்டுவதில் பொருள் செலவிட்டு, 'அபிவிருத்தி' செய்யும் ஆர்வத்தில் சொத்துகளை அடகு வைத்தனர்; இதற்குக் கிளேடனைச் சேர்ந்த கடைசி வெர்னி பிரபு (the last Earl Verney of Claydon) ஓர் எடுத்துக்காட்டு.

நவநாகரிகம் என்பது இன்றிருக்கும்; நாளை போகும். இலக்கியத் திலும், சமயத்திலும், கட்டடக் கலையிலும் 'காதிக் மறுமலர்ச்சி' தோன்று வதற்குப் பல்லாண்டுகட்கு முன்பு செயற்கையான இடிபாடுகளில் ஒரு கவர்ச்சி தோன்றியது. பியூகின் (Pugin), சர். வால்டர் ஸ்காட் ஆகியோர் பிறப்பதற்கு முன்னால், அவர்களது செல்வாக்கு பரவுவதற்கு அரைநூற்றாண்டுக்கு முன்னால், 'இயற்கைக் காட்சியின்' ஓர் அங்கம் என்ற முறையில் இடிந்த இடைக்காலத்துக் கோட்டையில்லங்கள் கட்டப்பட்டன. வேடிக்கையான 'காதிக்' அலங்காரங்களும் சில வீடு களில் சேர்க்கப்பட்டன.[1] ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டு மக்கள் தாங்கள் வசிப்பதற்காகக் கட்டிய வீடுகள் பெரும்பாலும் சிறந்த ஜார்ஜிய பாணியையே (Georgian style) பின்பற்றியவை; இது மகிழத்தக்கது. சிற்சில சமயங்களில் மூடுமுன்றில் வில் (portico) முகப்பு முகடு (pediments) போன்ற பழைய கிரேக்க-ரோம அமைப்பு களும் வீடுகளில் காணப்பட்டன. இவைகளை ஜார்ஜிய பாணியுடன் நல்ல முறையில் இணைத்தமைப்பது எளிது; ஏனெனில், ஜார்ஜிய பாணியே மறுமலர்ச்சிக் காலத்தில் உதித்ததுதானே! இத்தாலிப் பயணம் செய்து திரும்பிய சிலர் அங்குத் தாம் கண்ட பலவித முறைகளில் தமது வீடுகளை அமைத்தனர்; வேறு சிலர் பலாடிய (palladian) முறையையும் பின்பற்றினர்—இவையெல்லாம் அதிகப் பகட்டாகக் கவர்ச்சியின்றி இருந்தன.

[1] ஸ்ட்ராபரி குன்றில் காதிக் பகுதிகளைக் கட்டும் வேலையை 1750-ல் ஹொரேஸ் வால்பேல் ஆரம்பித்தார். ஆனால், அதற்கு முன்னாலேயே பல வெளிப்பகட்டான காதிக் அலங்கார வேலைப்பாடுகள் சில வீடுகளின் உட்புறத்திலும் வெளிப்புறத்திலும் செய்யப்பட்டன; இதையடுத்துச் 'சீன' வேலைப்பாடுகளில் மோகம் பிறந்தது. ஆனால், இத்தகைய மோகங்கள் மிக அரியவே. பார்க்க: Ketton—Cremer, 'Horace Walpole', பக். இங்கள் 151–154.

சிறியவும் பெரியவுமான இந்த நாட்டுப்புற இல்லங்களில் வாழ்வானது மகிழ்ச்சி நிரம்பியதாக விளங்கியது. பண்ணை வேலைகளிலும் விவசாய அபிவிருத்தியிலும் ஆர்வம் கொண்டிருந்த கனவான் பகற்பொழுது முழுவதும் வீட்டுக்கு வெளியிலேயே, குதிரைமீது கழித்தார்; அவருக்கு நிறைய வேலை இருந்தது. வீட்டிலிருந்த மாதர்களும் சுறுசுறுப்புடன் பயனுள்ள வேலைகளைச் செய்துகொண்டே யிருந்தனர்; குடும்ப வேலைகளை நிர்வகித்தனர்; பின்னல் வேலை செய்தனர்; அல்லது வேறு வேலைகளைச் செய்தனர். பல வாரங்கள் அல்லது மாதங்கள் விருந்தினர்கள் தொடர்ச்சியாக வந்துகொண்டே யிருந்தனர்; நல்ல உணவு, பானங்கள், வெளிப் பொழுதுபோக்குகள், இசை, இலக்கியம், சீட்டாட்டம், சதுரங்கம்—இவ்வாட்டங்கள் சில சமயம் விருந்தாளிக்கும், சில சமயம் வீட்டுக்காரனுக்கும் நாசத்தைக் கொண்டுவந்தன—இவைகளில் காலம் கழிந்தது. ஒவ்வொரு நாட்டுப்புற இல்லத்திலும் நூல் நிலையம் இப்பொழுது இருந்தது; அதில் தோலால் 'பைண்டு' செய்யப்பட்ட நூல்கள் குடும்பச் சின்னம் அல்லது 'முத்திரையிடப்பட்டு வைக்கப்பட்டிருந்தன. ஆங்கில, இலத்தீன், இத்தாலியப் பண்டை இலக்கியங்கள், சிறந்த முறையில் கவர்ச்சிகரமான படங்களுடன் வெளியிடப்பட்ட பயண நூல்கள், தல வரலாறுகள், சிற்ப வேலைப்பாடுபற்றிய நூல்கள் முதலியவை அவை. இந்தத் தனியார் நூலகங்களுக்கு இணையாகக் காட்டுவதற்கு இருபதாம் நூற்றுண்டிடம் ஒன்றுமேயில்லை.

பலவிதங்களில் அது ஒரு சுதந்திரமான, கவலைகள் இல்லாத காலம். அலட்சியமான முறையில் உடையணியும் ஒரு நாகரிக முறையை சார்லஸ் ஃபாக்ஸ் (Charles Fox) நிறுவினூர். ஆங்கிலேய மேல்வகுப்பினரின் மையமாக விளங்கிய காமன்ஸ் சபையை (House of Commons) 1782-ல் கண்ணுற்ற ஓர் அன்னியருக்கு அது ஓர் அவலட்சணக் கூட்டமாகத் தோற்றியது.

'உறுப்பினர்களின் உடையில் ஒன்றுமே விசேஷமாக இல்லை; தங்களது பெரிய கோட்டு, பூட்சுகள், குதிரை முட்கள் ஆகியவற்றுடன் சபைக்கு உள்ளேகூட அவர்கள் வருகிறுர்கள். ஒருவர் பெஞ்சியின்மேல் நீட்டிப் படுத்துக்கொண்டிருப்பார்; மற்றவர்கள் விவாதம் நடத்திக் கொண்டிருப்பர்—இது சர்வ சாதாரணமாகக் காணக்கூடியது. சிலர் கொட்டைகளைத் தின்பார்கள், சிலர் ஆரஞ்சுப் பழம் தின்பார்கள். அவர்கள் முடிவில்லாமல் உள்ளே வருவதும் வெளியே போவதுமாக இருப்பார்கள்; ஒருவர் வெளியே போக விரும்பும்போதெல்லாம் சபாநாயகருக்கெதிரில் போய் நின்று குனிந்து வணங்குவார், பள்ளி மாணவன் தன் ஆசிரியரிடம் அனுமதி கேட்பது போலத்தான்.'
(Moritz, 'Travels', H. Milford, 1924, p. 53.)

உலகம் தொடங்கிய நாள்தொட்டு வாழ்க்கையின் பல்வேறு கூறு களையும் இக் காலத்தில் ஆங்கிலேய உயர்வகுப்பினரைப்போல் வேறு யாருமே அவ்வளவு உற்சாகத்துடன் அனுபவித்ததில்லை என்று நம்பு கிறேன். இலக்கியம், பொழுதுபோக்கு, நவநாகரிகம், அரசியல் ஆகிய எல்லாவற்றிலும் ஈடுபட்ட மக்கள் ஒருவரேதாம். எல்லாப் பெரும் அரசியல்வாதிகளிலும் பெருந்தோல்வியுற்றவரான சார்லஸ் ஃபாக்ஸ், தான் ' மகிழ்வோடு ' வாழ்ந்ததாக மரணப்படுக்கையில் கூறினரே அது முற்றிலும் உண்மை. காட்டாற்று வெள்ளம் போன்ற மிகச் சிறந்த சொற்பொழிவு, தீவிரமான அரசியல், நாள் முழுதும் கௌதாரி வேட்டை, கிராமத்துக் கிரிக்கெட்டு, இன்பமான முடிவற்ற உரையாடல், கிரேக்க, இலத்தீன், இத்தாலிய, ஆங்கிலேயக் கவிதைகளிலும் வரலாற் றிலும் பேரார்வம்—இவையனைத்தையும், இரங்கத்தக்க விதத்தில் சூதாட்டப் பைத்தியத்தையும் இவர் அனுபவித்தார் ; தன்னை நேசித்த எண்ணிறந்த நண்பர்களுடன் சேர்ந்து அவைகளைத் துய்த்தார் ; ஹோல்காமில் கொட்டும் மழையில் வேலிக்கடியில் அமர்ந்துகொண்டு, டர்னிப் பயிரிடும் இரகசியத்தை ஏர் ஓட்டுபவன் சொல்லக் கேட்டு மகிழ்ந்தார்.

எல்லாவிதமான செயல்களையும் செய்து, எல்லாவிதமான இன்பங் களையும் துய்த்து, தன் காலத்துச் சமுதாயத்தின் ஒரு சிறந்த பிரதிநிதி யாக விளங்கினர் ஃபாக்ஸ் ; அச் சமுதாயத்தின் ஒரு தலையாய உறுப்பினராக அவர் நெடுங்காலம் திகழ்ந்தார். பரந்த மனம் படைத்த, திறந்த உள்ளம் படைத்த உயர் வகுப்பினர் நகர்ப்புற வாழ்விலும், நாட்டுப்புற வாழ்விலும், பொது வாழ்விலும், சொந்த வாழ்விலும் எல்லா விதமான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டனர் ; இன்பம் பெற்றனர். இவர்களைச் சிரச்சேதம் செய்ய வேண்டுமென்று இவர்களது நாட்டு மக்கள் ஒரு கணமும் விரும்பியதில்லை. இவர்களுக்குள் நவநாகரிகர் களிடத்தில் பெருங் குற்றங்கள் இருந்தன. ' பிரபுவைப்போன்ற பெருங் குடியன் ' என்று சொல்லுவதுண்டு ; ஆயினும், ஆங்கிலேயர்களில் எல்லா வகுப்பினரும், கீழ்வகுப்பினரும் மேல்வகுப்பினரும், நிறையக் குடித்தனர் என்பதற்குச் சான்றுகள் இருக்கின்றன. என்றாலுங்கூட, படுமோசமான சூதாட்டமும் திருமண வாழ்வில் தீயொழுக்கமும் சமுதாயத்தின் உயர்மட்டத்தில்தான் அதிகம் காணப்பட்டன. ஆனால், அடுத்த நூற்றாண்டில் எவஞ்சலிய இயக்கம் பரவியது ; முதன்முதலில் பொதுமக்களைத் தொட்டுவிட்டுப் பிறகு மேல்வகுப்பு மக்களின் தீய நடத்தைகளை அது குறைத்தது ; இவ்வாறாகப் பத்தொன்பதாம் நூற் றாண்டில் வரப்போகும் சோதனைக்கு அவர்களைத் தயார் செய்தது ; ஏனெனில், அந் நூற்றாண்டில் அவர்களது நடத்தை தாக்கப்படும் ; சிறப்புரிமைகள் எதிர்க்கப்படும். அதுவரை, காலம் அவர்களுடையது; அது ஒரு பொற்காலம்.

இந்தச் சிறந்த காலத்தில்தான் டாக்டர் ஜான்சனின் அகராதி (1755) வெளியாயிற்று. நல்ல ஆங்கில வார்த்தைகள் என்று எவை யெவை கருதப்பட்டனவோ, அவைகளனைத்தையும் தொகுத்து அது ஓர் உருக்கொடுத்தது. சொற்களைப் பிழையில்லாமல் எழுதும் முறைக் கான விதிகளும் அன்றுதான் வகுக்கப்பட்டன; கற்றவர் அனைவருக்கும் இன்றியமையாதன என்று இவ் விதிகளைத்தான் நாம் இன்று கருது கிறோம். மார்ல்பரோவின் காலத்தில் அரசிகளும் பெருந் தளபதிகளும் கூடத் தாங்கள் விரும்பியவாறெல்லாம் சொற்களை எழுத்துக்கூட்டினர். ஆனால், 1750-ல் செஸ்டர்ஃபீல்ட் பிரபு தன் மகனுக்கு இவ்வாறு எழுதினார்:

'சிறந்த படிப்பாளிகளுக்கும் கனவான்களுக்கும் எழுத்திலக்கணம் எனப்படுவது மிகமிக அவசியமானது என்பதை நான் உனக்குக் கூற வேண்டும்; ஏனெனில், ஒரே ஒரு சொல்லைத் தவறாக எழுதினாலுங்கூட அவர்கள் ஆயுள் முழுவதும் கேலிக்கு ஆளாகிவிடுகிறார்கள். எனக்குத் தெரிந்த ஒரு பெரிய மனிதர் 'wholesome' என்ற சொல்லில் 'w'வை விட்டுவிட்டு எழுதினார்; என்றோ அவர் செய்த இந்தப் பிழைக்காகக் கடைசிவரை அவரைக் கேலி செய்தனர்.'

அதேசமயம், பிளேட்டோ, அரிஸ்டாடில், டெமாஸ்தனீஸ், தூசி டைடிஸ் ஆகியோரது நூல்களைப் படிக்கும்படியும் அவர் தன் பிள்ளைக்கு அறிவுரை கூறினார்; ஹோமரது கவிதைகள் பலருக்கும் தெரியும்; ஆயினும், இவர்களது இலக்கியங்களை அறிஞர்கள் மட்டுமே அறிவர். இலத்தீன்மட்டும் தெரிந்திருந்தால் போதாது; கிரேக்கமும் தெரிந்திருக்க வேண்டும். அப்பொழுதுதான் ஒருவன் சிறந்த மனிதனாக முடியும்— என்றுகூட செஸ்டர்பீல்ட் எழுதினார். நவநாகரிகத்தின் தலைசிறந்த சீடராக அக்காலத்தில் விளங்கிய ஒருவர்—அப்பொழுது நவநாகரிகத்துக் கிருந்த மதிப்பு அளவிடற்கரியது—பண்டைக் காலத்திய கிரேக்க, இலத்தீன் இலக்கியங்கள் ஒரு கனவானுக்கு இன்றியமையாதன என்று கூறுவது கவனிக்கத்தக்கது.

பண்டை வேட்டை முறைகள் போயொழிந்தன; குள்ளநரி வேட்டை இப்பொழுது நாகரிகமாயிற்று. வேட்டைகளிலெல்லாம் தலையாயது என யுகம் யுகமாகக் கருதப்பட்டுவந்த மான் வேட்டை மறைந்துபோயிற்று—விதிவிலக்காக, எக்ஸ்மூரிலும் வேறு சில இடங் களிலும் மட்டுமே இது இன்னும் நடந்துவந்தது. 1728-லேயே மான் வேட்டை என்பது அதை 'வண்டியில் பிடித்து அடைத்துக்' காட்டும் அளவுக்குப் பரிதாபகரமான நிலையை எட்டிவிட்டது; இவ்வாறு அதன் முடிவு தொடங்கிவிட்டது. இதற்குக் காரணம் ஒன்றும் புதிரன்று. காடுகள் அழிந்து, புதர்க் கரம்புகள் வேலியிடப்பட்டு, விவசாயம் அங்கெல்லாம் பரவியதால், நாட்டுப்புறமெங்கும் சுற்றித் திரிந்த காட்டு

மான் கூட்டம் அருகியது. மூன்றும் ஜார்ஜின் காலத்தில் ஓக் மரத்தடியில் மேய்ந்துகொண்டிருந்த மான்கள், கனவான்களின் விலங்குப் பட்டியின் அலங்கார அணிகள்; அவைகள் வேலிக்குள் காப்பாக அடைபட்டுக் கிடந்தன; உரிய காலத்தில் எஜமானன் அவைகளைச் சுட்டு விருந்துண்டான்.

ஷேக்ஸ்பியருக்கும் சர். ரோஜர் டி காவர்லிக்கும் மிகவும் பிடித்தமான முயல் வேட்டையின் கதியும் இதுதான்; ஆனால், இது சற்று மெல்லச் செத்தது. பதினெட்டாம் நூற்றாண்டு முழுவதும் நரி வேட்டையானது வேகமாகப் பரவிவந்தாலுங்கூட, ஒரு வேட்டைப் பத்திரிகை தந்த புள்ளிவிவரப்படி 1835-லுங்கூட நரி வேட்டைக்கான நாய்த்தொகுதிகள் 108 இருக்க, முயல் வேட்டைக்கான நாய்த் தொகுதிகள் 138 இருந்தன. முயல் வேட்டையில் ஓர் அனுகூலம் இருந்தது. அதாவது, வேட்டையாடப்படும் முயலின் குறுகிய வட்டங்களுக்குள் வேட்டையாடுவோன் எளிதாகச் செயல்பட முடியும்; ஆனால், நரியின் ஒரே நேரான, வேகமான ஓட்டத்தைத் தொடருவது கடினம். சாதாரண மனிதர்கள் நரி வேட்டையில் அதிகப் பங்கு வகிக்கவில்லை; அதற்கு மாறாக, சிவப்பு அல்லது நீலக் கோட்டு அணிந்து, வேட்டை நாய்களையும் ஊதுகொம்பு களையும் எடுத்துக்கொண்டு வேட்டைக்குப் புறப்பட்ட பிரபுக்கள்தாம் நாட்டுப்புறத்தில் எல்லா மக்களின் கவனத்தையும் கவர்ந்தனர்; மேனரில் உணவு மேசையைச் சுற்றி எவ்வாறு ஆவேசமான நரி வேட்டைப் பாடல்கள் உரத்த குரலிலும் உற்சாகத்துடனும் பாடப் பட்டனவோ, அதேபோல் ஏல்-மது மேசையைச் சுற்றியும் பாடப் பட்டன.

பிற்காலத்தில் நரிவேட்டையில் காணப்பட்ட எல்லா அம்சங்களும் மூன்றும் ஜார்ஜின் காலத்திலேயே ஏற்பட்டுவிட்டன; ஆனால், ஒரு வேற்றுமை; வேட்டையாடும் பிரபு தம் கவுன்டியைச் சேராதவராக இருந்தால், மக்கள் அதிகமாக அவரோடு செல்வதில்லை. ஆயினும், பிரபுக்கள் தம் நிலத்திலேயே வேட்டையாடும் பழக்கம் போய்விட்டது. வேட்டை நாய்கள் இப்பொழுது மாவட்டம் முழுவதும் சுற்றின. பாட்மின்டன், பைட்ச்சிலி, கோர்ன் பிரபுக்கள் ஆகியோர் நரி வேட்டையை ஒரு விஞ்ஞானமாகவே வளர்த்துவிட்டனர்; அது அப்பொழுதே உச்ச கட்டத்தை எட்டிவிட்டது. அந் நூற்றாண்டு செல்லச்செல்ல ஓட்டங்கள் நீண்டன; வேலியமைப்புச் சட்டங்கள், வேட்டைக்களமாக விளங்கிய மிட்லந்து ஷயர்களின் திறந்த வயல் வெளியில் வேலிகளை அமைத்துவிட்டதால், அவைகளைத் தாண்டும் அளவுக்குக் குதிரைகளின் திறமையும் குதிரை ஏறிகளின் திறமையும் அதிகரிக்க வேண்டியிருந்தது. வேட்டையாடுவதில் தாண்டுவது ஒரு முக்கியமான பகுதியாயிற்று; இதைக் கவிஞரான சாமர்வெல் கனவான்

1736ஆம் ஆண்டிலேயே தனது 'The Chase' என்ற கவிதையில் வருணித்தார்.

'போட்டி வெறிபிடித்து உந்த, அடைத்த வாயிலையும் ஆழ்ந்த பள்ளத்தையும் ஆகாயத்தில் தாண்டி, முள்ளும் கிளையும் பின்னிய வேலி முகத்திலடிக்க, முன்னால் ஓடமுயல்கின்றார் குதிரைக்காரர் எல்லோரும்.'

வலை, கண்ணி முதலிய முறைகளில் பறவை பிடிக்கும் வழக்கம் மறைந்து, துப்பாக்கியால் சுடுதல் பதினெட்டாம் நூற்றாண்டில் வேகமாக வளர்ந்துவந்தது. தற்காலத்தில் நடைமுறையை நோக்கி அது வளர்ந்துவந்தாலுங்கூட, வேட்டையில் ஏற்பட்ட முன்னேற்றம் அதில் இல்லை. பறவைகளை 'விரட்டுதல்' இன்னும் வரவில்லை. வயல்களில் அறுவடை கையினாலேயே செய்யப்பட்டதால், நீண்ட தாள்கள் நிலத்தில் எஞ்சியிருந்தன; குறிகாட்டும் நாயைப் பின்தொடர்ந்து மெதுவாகக் கௌதாரிகட்கருகில் வேட்டைக்காரன் வருவது எளிதா யிருந்தது. புதர்களிலிருந்து வான்கோழிகளை விரட்டித் தலைக்குமேல் ஓட்டுவதில்லை. அதற்கு மாறாக, வேலிகளிலிருந்தும் புதர்களிலிருந்தும் நாய்களைக் கொண்டு அவைகளை விரட்டி, அவை உயரே எழும்பொழுது துப்பாக்கியால் சுடுவது வழக்கம். வடக்கத்திய சதுப்பு நிலங்களில் கிரௌஸ் பறவை அப்பொழுது மிகக் குறைவு; காட்டுக் கோழிகளும் தாராக்களும் நிறைய இருந்தன; முயல் கூட்டங்களால் விவசாயிக்குப் பெருஞ் சேதம் விளைந்தது; இன்றைக்கிருப்பதைப்போல் (1939) அப்பொழுது குறுமுயல்கள் தொந்தரவு அதிகமில்லை; இதற்குக் காரணம், அன்று புல்நிலங்கள் குறைவு. வழக்கமான வேட்டைப் பறவைகளைப் போலவே உள்ளான்கள், நாரை வகைகள் போன்ற பலவிதமான பறவைகளும் அன்று நிறைய வேட்டையாடப்பட்டன.

பழைய துப்பாக்கியில் முன்புறமாக இரவைகளைப் போடவேண்டி யிருந்தது; தீக்கல்லும் எஃகும் பயன்படுத்தப்பட்டன. அது மெதுவாகத் தீப்பிடித்தது; இரவை பாயும் வேகமும் குறைவு. எனவே, பறவைக்கு வெகுமுன்னாலேயே சுடவேண்டும்; இதைப் பார்க்கும் பொழுது, நூறு தடவைகள் சுட்டு 80-க்குக் குறையாத கௌதாரிகளைப் பல சமயங்களில் கொன்ற நார்ஃபோக் கோக்கின் (Coke of Norfolk) வியத்தகு திறமையைப் போற்றாமலிருக்க முடியாது. மீண்டும் இரவை போட நேரமாகும்; கவனமின்றிச் செய்தால் ஆபத்துதான். எனவே, ஒரு தடவை சுட்டபின், வேட்டைக்காரன் நின்று, நாயையும் நிறுத்தி, துப்பாக்கியில் இரவை போடவேண்டும். பதினெட்டாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், மேனர்களின் விலங்குக் காவலர்கள்—டாம் ஜோன்ஸ் (Tom Jones) நாவலில் வரும் பிளாக் ஜார்ஜ் இதற்கு ஓர் எடுத்துக் காட்டு—சமுதாயத்தில் மதிக்கப்படுவதே இல்லை; ஆனால், பிற்காலத்தில் இந் நிலை மாறிவிட்டது. அவர்கள்தாம் 'பெரும் திருட்டு வேட்டைக்

காரர்கள். பிறரது காடுகளில் புகுந்து வேட்டையாடி, தமது எஜமானருக்கு ஒன்றும் தமக்கு இரண்டுமாக எடுத்துக்கொண்டனர்.' ஆனால், கனவான்களும் அவர்களது விலங்குக் காவலர்களும் மட்டுமே இச் செயல் செய்தனர் என்று கூறமுடியாது; பழைய இங்கிலாந்தில் திருட்டு வேட்டைக்கு முடிவேயில்லை.

ஸ்டூவர்ட்டு மன்னர்கள் காலத்தில் ஹாம்ப்ஷயரிலும் கென்டிலும் கிரிக்கெட் ஆட்டம் சாதாரண மக்களின் ஆட்டமாக வளர்ந்துவிட்டது. கல்வியறிவு பரவுவதற்கு முந்திய அக் காலத்தில் ஒரு கொம்பில் கீறல்கள் போட்டு 'ஸ்கோர்' குறித்து வைத்தனர். ஆனால், பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிரிக்கெட் ஆட்டம் அதன் பழைய பூகோள, சமுதாய எல்லைகளைத் தாண்டி விரிவாகப் பரந்தது. இந்த ஆட்டத்தில் 'பிரபுக்களும், கனவான்களும், குருமார்களும் இறைச்சிக் கடைக்காரனையும், சக்கிலியையும், கன்னானையும் தங்களது தோழர்களாக ஆக்கிக்கொண்டனர்' என்று 1743-ல் எழுதப்பட்டது. மூன்று ஆண்டுகள் கழிந்து, கென்ட் கட்சியும் அகில இங்கிலாந்து கட்சியும் பந்தயமாடி, முந்தியது 111 கீறல்களும் பிந்தியது 110 கீறல் களும் வாங்கின. வெற்றிபெற்ற கட்சியின் 'காப்டன்' நோல் என்ற இடத்தில் தோட்டக்காரன். அக் கட்சியில் ஜான் சேக்வில் பிரபு (Lord John Sackville) ஓர் உறுப்பினர். கிராமத்துக் கிரிக்கெட்டு நாடு முழுவதும் வேகமாகப் பரவியது. அது விஞ்ஞான ரீதியாகத் திருத்தி யமைக்கப்படுவதற்கு முன்னால், அக்காலத்தில் கண்டுகளிப்பவர்களுக்கு உலகிலேயே சிறந்த ஆட்டமாக அது விளங்கியது; வேடிக்கையூட்டும் சம்பவங்கள் ஒன்றன்பின் ஒன்றாக ஏற்பட்டுக்கொண்டே யிருந்தன; ஒவ்வொரு பந்திலும் ஓர் ஆபத்து, ஒரு நெருக்கடி எதிர்பார்க்கப் பட்டது! கனவான், குடியானவன், கருமான், தொழிலாளி ஆகிய எல்லோருமே தத்தம் மனைவி மக்களுடன் அவ் வேடிக்கையைக் காண வந்தனர்; கோடைகாலத்துப் பிற்பகல் மகிழ்ச்சியுடன் நன்கு கழிந்தது. ஃபிரெஞ்சுப் பிரபுக்கள் மட்டும் தங்களது விவசாயிகளுடன் சேர்ந்து கிரிக்கெட் ஆடியிருந்தால், அவர்களின் சொத்துகள் தீக்கிரை யாகாமல் தப்பிப் பிழைத்திருக்கும்.

அந் நூற்றாண்டின் பிந்திய காலம் வரை இரண்டு விக்கட்டுகளும் ஒவ்வொன்றும் இரண்டு முளைகளையே (stumps) கொண்டிருந்தன. ஒவ்வொன்றின் உயரமும் ஓர் அடி; இடையிலுள்ள தூரம் இருபத்து நான்கு அங்குலம்; அவைகட்குமேல் மூன்றாவது முளை அல்லது துண்டு (bail) குறுக்காக வைக்கப்பட்டது. இரண்டு முளைகளுக்கு மிடையிலிருந்த இடைவெளி 'போடும் சந்து' (popping hole) எனப்பட்டது. விக்கட்டுக் காப்போன் பந்தை அதில் 'போடு'முன், பந்தடிப்பவன் தனது பந்து மட்டையின் முனையை அதற்குள் வைத்து

விடவேண்டும்; சிற்சில சமயங்களில் பந்தைப் 'போடும்' (pop) பொழுது விரலில் நல்ல அடிபடும். தாழ்ந்த விக்கட்டை நோக்கிப் பந்தை வீசுபவன் தரையோடு பந்தை வேகமாக உருட்டுவான்; அது இருமுனைகளிலும் படாமல் இடையில் புகுந்து சென்றுவிட்டால், பந்தடிப்பவன் 'அவுட்' ஆவதில்லை. பந்து மட்டையானது ஹாக்கி மட்டையைப் போலவே முனையில் வளைந்திருந்தது. அந் நூற்றாண்டின் இறுதியில் இவ்வாட்டத்தில் பெருமாற்றங்கள் செய்யப்பட்டன. 'போடும் சந்து' அகற்றப்பட்டு, மூன்றாவது முளை வந்தது; விக்கட்டின் உயரமும் 22 அங்குலமாயிற்று. விரைவிலேயே நேரான மட்டையும் உபயோகத்துக்கு வந்தது.

பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஆங்கிலேயன் வாய்க்கினிய உணவிலும் நல்ல கவனம் செலுத்தினான். நமது தீவின் சமையலுக்கே இயல்பான சில நல்ல அம்சங்களும் கெட்ட அம்சங்களும் ஏற்கெனவே குடிபுகுந்துவிட்டன. ஏராளமான அளவில் மீனையும், சிவப்பு–வெள்ளை இறைச்சியையும் நாம் உபயோகிப்பதையும், அவைகளின் மிகச் சிறந்த ருசியையும் கண்டு அந்நியர்கள் வியப்பில் மூழ்கினர்; ஆனால், இறைச்சிக்கு அலங்காரம் என்ற வகையில் மட்டுமே நாம் மரக்கறி வகைகளைப் பயன்படுத்தியதை அவர்கள் குறைகூறினர். ஒரே ஒரு மரக்கறி பதார்த்தம் செய்வதற்குக்கூட ஆங்கிலேய சமையல்காரர் களுக்குத் தெரியாது. அதேபோல், காப்பி என்ற பெயரில் 'கருஞ் சிவப்புத் தண்ணீர்' மட்டும்தான் அவர்களால் செய்து கொடுக்க முடியும். ஆனால், காய்கறிகள் நல்ல முறையில் சமையல் செய்யப்பட வில்லை என்றாலும், அவைகளுக்குக் குறைவேயில்லை. ஏழைகளும் பணக்காரர்களும் தங்களது தோட்டங்களில் பலவகையான காய்கறிச் செடிகளைப் பயிரிட்டனர்; உருளைக்கிழங்கு, முட்டைக்கோஸ், கேரட்டு, டர்னிப்பு, வெள்ளரி வகைகள், கீரைகள் முதலியவை இன்று போலவே அன்றும் ஏராளமான அளவில் இறைச்சியோடு சேர்த்து உண்ணப் பட்டன. ஏற்கெனவே இனிப்பு வகைகளும் புட்டிங்கும்—சிறப்பாக, 'கொழுத்த புட்டிங்' (plump pudding) என்று ஊர்க்குரு உட்ஃபோர்டு பயங்கரமாக உச்சரித்தாரே, அதுவும்—உணவு வகைகளில் முதலிடம் வகித்தன.

1790ஆம் ஆண்டில் மதகுரு உட்ஃபோர்டு மாவு வாங்குவதில் செலவு செய்த மொத்தத் தொகை £ 5-7-6. அவர் எவ்வளவு குறைவாக ரொட்டி சாப்பிட்டார் என்பதை இது காட்டுகிறது. ஆனால், அதே ஆண்டில் மட்டும் இறைச்சிச் செலவு £ 46-5-0. அக் காலத்திய ஆங்கி லேய நடுத்தர வகுப்பினர் மாமிச பட்சணிகள்; அவர்கள் ரொட்டியை மிதமாகவே உண்டனர். அதே ஆண்டில் மது காய்ச்சுவதற்காக அவர் மாவு வாங்கிய செலவு £ 22-18-6. அந்தப் போற்றத்தகுந்த

ஊர்க்குரு தனது நாட்குறிப்பேட்டில் சாப்பாட்டையெல்லாம் குறித்து வைத்தார்: ஒரு திட்டமான எண்ணிக்கையுள்ள விருந்தினர்களுக்கு நல்ல, சாதாரண சாப்பாடு என்பது (1776), 'நன்கு கொதிக்கவைத்த ஆட்டுக்கால், மசித்த புட்டிங்கு, இரண்டு வாத்துகள்.' இன்னொரு விருந்தில் (1777), 'வெங்காயம் நிறையக் கலந்த இரண்டு குறுமுயல் கறி, வேகவைத்த ஆட்டின் கழுத்து, ஒரு வாத்து வறுவல், திராட்சை புட்டிங்கு, வெறும் புட்டிங்கு, பிறகு தேநீர்' ஆகியவை பரிமாறப் பட்டன. அவர் கிறிஸ்து சர்ச்சு, ஆக்ஸ்ஃபோர்டில் (1774) ஓர் 'அருமையான விருந்து' சாப்பிட்டார்; நமது முன்னோர்களில் நன்கு வசதிபடைத்த சிலர் சேர்ந்து, மகிழ்ந்து உண்ட விருந்துகளை அது நம் நினைவுக்குக் கொண்டுவருகிறது:

'முதலில் சாப்பிட்டது காட் (cod) மீன், ஆட்டின் முதுகெலும்பு, கொஞ்சம் சூப்பு, கோழிக்கறி சோமாஸ், புட்டிங்கு, கிழங்கு முதலியன. இரண்டாவதாக, புறவும் அஸ்பாராகஸும், கன்றிறைச்சியும், காளானும்; அத்துடன் குழம்பு, சுட்ட தித்திப்பு ரொட்டி, சுடச்சுடப் பெரிய இருல், ஆப்ரிகாட் டார்ட், நடுவில் பாகு முதலியன. இறுதியில் விருந்து முடிந்தபின் பழம், மதுவகைகள். நாங்கள் அனைவரும் வெகு குதூகலமாக இருந்தோம்.'

கிராமப்புறங்களில் நல்ல இருளில் குதிரைமீதேறி இப்படி 'வெகு குதூகலமாக' வீடு திரும்பும்போதுதான் பல விபத்துகளும் சாவும் நேரிடுகின்றன.

1782-ல் குறைந்த வருவாயோடு இங்கிலாந்தில் வாழ்ந்த ஜெர்மென் இளைஞர் மோரிட்ஸ் (Moritz) தனது ஆங்கிலேய வீட்டு எஜமானிகள் கொடுத்த மோசமான உணவையே உண்டு வாழவேண்டியிருந்தது; இன்றைக்கும்கூட அவர்களில் பலர் தங்களது பரிதாபகரமான விருந்தினர்களை அவ்வாறேதான் நடத்துகின்றனர். மோரிட்ஸ் எழுதுகிறார்:

'என்னைப் போன்ற வாடகை விருந்தாளிகட்கு உணவு இதுதான்: அரைவேக்காடு காட்டப்பட்ட ஒரு துண்டு இறைச்சி; வெறுந் தண்ணீரில் கொதித்த சில கோஸ் இலைகள்; அவ் இலைகளின்மேல், மாவாலும் வெண்ணெயாலும் செய்யப்பட்ட குழம்பை ஊற்றுகிறார்கள்.' (ஆங்கிலேயர்கட்கு மதங்கள் ஆயிரம் இருக்க, குழம்பு மட்டும் ஒன்றே ஒன்றுதான் என்று வால்டேர் கூறினாரல்லவா? இந்தத் திரவப்பொருளை நினைவில் வைத்துத்தான் அவ்வாறு கூறினார் என்று நினைக்கிறேன்!) ஆனால், மோரிட்ஸ் மேலும் எழுதுகிறார்:

'இங்கு மிக நல்ல கோதுமை ரொட்டியும், சுத்தமான, சிறந்த வெண்ணெயும், செஷயர் பாலாடைக் கட்டியும் கிடைக்கின்றன.

எனக்குக் கிடைக்கிற பற்றுக்குறை உணவுக்கு இவை ஈடுசெய்கின்றன. அவர்கள் தேநீருடன் கொடுக்கின்ற வெண்ணெய் தடவிய ரொட்டித் துண்டுகள் இலைகளைப்போல் அவ்வளவு மெல்லியனவாக இருக்கின்றன. ஆனால், இன்னொரு வகை ரொட்டியும் வெண்ணெயும் இருக்கின்றன; இவையும் வழக்கமாகத் தேநீருடனேயே சாப்பிடப்படுகின்றன. இவை நெருப்பில் வாட்டப்படுகின்றன; சுவை பிரமாதமாக இருக்கிறது. ஒவ்வொரு துண்டாக முட்கரண்டியால் எடுத்து வெண்ணெய் உருகும் வரை நெருப்பில் காட்டவேண்டும்; இவ்வாறு வெண்ணெய் எல்லாத் துண்டுகளிலும் நன்கு ஊறுகிறது. இதற்குத்தான் டோஸ்ட் என்று பெயர்.'

தொழிலாளி மக்கள் ஓரளவு மனநிறைவுடன் வாழ்ந்த காலமாகப் பதினெட்டாம் நூற்றாண்டின் முதல் பாதி விளங்கியது; பொருளாதாரச் சூழ்நிலை அவ்வளவு நன்கு அமைந்திருந்தது. அவர்களில் பலர் தங்களது காலையுணவுக்கு பீர், ரொட்டி-வெண்ணெய், பாலாடைக் கட்டி, இறைச்சி ஆகியவற்றை உண்டனர். நடுப்பகலிலும் வயிறு நிறைய இறைச்சி உணவு கிடைத்தது. தனது '*Roderick Random*' என்ற நூலில், தான் ஒரு சாப்பாட்டுக் கடையில் நுழைந்ததை ஸ்மோலெட் (Smollett) வருணிக்கிறார் (1748):

'வேகவைத்த மாட்டிறைச்சியிலிருந்து எழுந்த நீராவி என் மூச்சையடைத்தது; சுற்றிலும் கோச்சு வண்டிக்காரர்கள், நாற்காலி தூக்கிகள், பொதிவண்டிக்காரர்கள், கனவான்களின் முன்னாள் வேலையாள்கள் ஆகிய எல்லோரும் மாட்டின் கணுக்காலிறைச்சி, வயிற்றுக் கறி, பசுவின் குதிகால் கறி, பதப்படுத்தப்பட்ட இறைச்சி முதலியவற்றைத் துணி விரிக்கப்பட்ட மேசைகளின்மீது வைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். இவையெல்லாம் என் வயிற்றைப் புரட்டின.'

ஆனால், தொழிலாளிகளின் கூலியும் வாழ்க்கை நிலைமைகளும் இடத்துக்கிடம் மாறுபட்டன. எனவே, இவர்களது உணவைப்பற்றிப் பொதுப்படையாகப் பேசுவது மிகவும் ஆபத்தானது. பலர் பெரும்பாலும் ரொட்டி, பாலடைக்கட்டி, கொஞ்சம் காய்கறி, பீர், தேநீர் ஆகியவற்றையே முக்கிய உணவாகக் கொண்டனர்.

பதினெட்டாம் நூற்றாண்டு இங்கிலாந்தில் நாடகத் தொழில் மக்களிடையில் செல்வாக்குப் பெற்று உயிர்த்துடிப்புடன் விளங்கியது. சார்லஸின் இரண்டாம் காலத்தில் அது மீண்டும் தலைதூக்கியபொழுது லண்டனோடும், அரசவை தந்த ஆதரவோடும் நின்றுபோயிற்று; ஆனால், இப்பொழுது எங்கும் பரவியது. பெரிய மாவட்ட நகரங்களில் நாடகக் கம்பெனிகள் நிறுவப்பட்டன; சில நடிகர்கள் கிராமப்புறம் முழுவதிலும் சுற்றித் தானியக் கிடங்குகளிலும் நகர மண்டபங்களிலும் கிராமத்து மக்கள் முன்னிலையில் நடித்தனர். சாமர்செட்ஷயர் கிராமமான கேசில்

கேரியில் (Castle Cary) இத்தகைய நாடகக் குழுவினர் அடிக்கடி வந்து, அங்குள்ள கோர்ட் ஹவுசில் (Court House) நாடகம் நடத்துவதைப்பற்றி ஊர்குரு உட்ஃபோர்டு தன் நாட்குறிப்பேட்டில் குறித்து வைத்துள்ளார். அக் கிராமத்தின் மக்கள்தொகை 1,200. அங்கு *Hamlet*, *Beggar's Opera* போன்ற பல நல்ல நாடகங்கள் நடிக்கப் பட்டன. ஃபார்க்குவார் (Farquhar) எழுதிய "*Beaux' Stratagem*" என்ற நாடகம், 1707-ல் ஏற்பட்ட அவரது அகால மரணத்துக்கு நெடு நாட்களுக்குப் பின்னரும்கூட மக்களால் மிகவும் விரும்பப்பட்டது; ஆனால், அப்பொழுது நல்ல புதிய நாடகங்களுக்குப் பஞ்சம். அறுபது ஆண்டுகட்குப் பிறகு கோல்ட்ஸ்மித்தும் ஷெரிடனும் தோன்றி சில முதல்தரமான இன்பியல் நாடகங்களை எழுதித் தந்து இப் பஞ்சத்தை ஒருவாறாக முடிவுக்குக் கொண்டுவந்தனர்.

இன்னொரு பக்கத்தில், நாடகங்களில் இசை சிறந்து விளங்கியது. பைபிள் கதைகளுக்கு இசைகூட்டி ஹேண்டெல் உருவாக்கிய ஆரடோரியோக்களுக்கு (Oratorios) உற்சாகமான வரவேற்பளித்த ஒரு நாட்டில் இது இயற்கைதானே. தாமஸ் ஆர்ன் (Thomas Arne, 1710–1778) ஷேக்ஸ்பியரின் பாடல்களுக்கு இசையமைத்தார்; பல நாடகங்களுக்கும் அங்கங்கே இசை எழுதினார். டிப்டின் (Dibdin, 1745–1814) காலத்தில், பொழுதுபோக்குக்கேற்ற ஆங்கிலேய இசை நாடகங்கள் சிறந்த முறையில் செழித்து விளங்கின. [இத் துறையானது *Beggar's Opera* தொட்டு கில்பர்ட் (Gilbert), சுல்லிவன் (Sullivan) காலம்வரை தொடர்ந்து உயிர் வாழ்ந்தது.] அவர் இளைஞராக இருக்கும்பொழுதே *Lionel and Clarissa* என்பதற்கு இசை எழுதினார்; உணர்ச்சிப் பெருக்கு மிகுந்த, நாட்டுப்பற்று மிக்க, மாலுமிகள் பாடுவதற்கேற்ற பாடல்களை அவர் எழுதி, பல்லாண்டுகள் தனது நாட்டினருக்கு வழங்கிவந்தார். 'Poor Jack', 'Tom Bowling' போன்ற அவரது இப் பாடல்களை அவர்கள் ஆனந்தமாகப் பாடி மகிழ்ந்தனர். அன்று ஆங்கிலேய மக்களுக்கு இசை என்பது கேட்டுச் சுவைப்பதோடு நின்றுபோகவில்லை; அவர்கள் தங்களது குரலாலேயே பாடித் தாம் கேட்க விரும்பினர்; அதில் கூச்சம் கொள்ளவில்லை. என்றாலும், அவர்கள் உழைத்ததும் உலவியதும் வீட்டுக்கு வெளியில்; கூட்டமும் அவசரமும் இன்னும் வரவில்லை; மேலும் வீட்டினுள்ளும்கூட அவர்களுக்கு நிறைய ஓய்வு நேரம் இருந்தது; அவர்களுக்கு இசை தேவைப்பட்டால், அவர்களே அதை இயற்றிக்கொள்ள வேண்டியதுதான்.

அந் நூற்றாண்டின் நடுப்பகுதியில் கேரிக்கின் (Garrick) தலை சிறந்த நடிப்புத் திறமையும், அவருக்குப் பின்னர் வந்த திருமதி சிட்டன்ஸின் (Mrs. Siddons) திறமையும், லண்டன் நாடக அரங்

கைப் புகழ்மிக்கதாக்கின. ஷேக்ஸ்பியரின் நாடகங்களை அவர்கள் திரித்து நடித்தது—உதாரணமாக, *Lear* ஓர் 'இன்ப முடிவுடன்' நடிக்கப்பட்டது—இன்று நம்மைத் திகிலடையச் செய்கிறது. ஆயினும், அன்று நடிகர்களும் இலக்கியத் திறனாய்வாளர்களும் ஆற்றிய பணியை நாம் போற்றவேண்டும்; ஷேக்ஸ்பியர்தான் நமது தேசத்தின் மதிப்பில்லா மாணிக்கம் என்று ஆங்கிலேயர்களை ஏற்றுக்கொள்ளும்படி செய்தது இவர்கள்தாம். இன்றைக் காட்டிலும் அதிகமாக அன்று அவரை மக்கள் படித்தனர், எடுத்தாண்டனர், விரிவாக அறிந்திருந்தனர்; காரணம், காலை மலர்ந்து மாலை மறையும் இன்றைய இலக்கிய வகைகள் சில அன்றில்லை; எனவே, நல்ல கவிதைக்கும் சீரிய இலக்கியத்துக்கும் அன்று இவைகளால் போட்டி கிடையாது. சீரிய இலக்கியத்துக்கேற்ற அளவில் மட்டுமே அன்று வாசகர் உலகம் விரிந்திருந்தது. ஷேக்ஸ்பியருக்கு அடுத்தவராக அன்று மில்டன் மதிக்கப்பட்டார்.

பழைய கையெழுத்துச் 'செய்திக் கடிதம்' (news letter) அந்நூற்றாண்டின் நடுவில் ஒழிந்து, அச்சிட்ட செய்திப் பத்திரிகை தோன்றியது. மூன்றாம் ஜார்ஜின் ஆரம்ப காலத்தில் அதன் விலை இரண்டு அல்லது மூன்று பென்னியாக இருந்தது; இதற்குக் காரணம் வரி. அப்பொழுது அது நான்கு பக்கங்களைக் கொண்டிருந்தது. கூப்பர் தனது நாட்டுப்புற இல்லத்தில் ஒவ்வொரு மாலையும் செய்திப் பத்திரிகைக்காக எதிர்பார்த்துக் கிடந்து, அது வந்தவுடன் தேநீர் அருந்திக்கொண்டே பெண்களுக்கும் வாய்விட்டுப் படித்துக் காட்டினார்.

> பேச்சுக் கலைவல்ல பெண்கள் மௌனச்
> சங்கிலியால் பின்னுண்டு, அங்கு அமைதியை
> அழிக்க அஞ்சியிருந்தார்.

ஒவ்வொரு பக்கத்திலும் நான்கு பத்திகள் (columns) இருந்தன. 1771-ல் பாராளுமன்றத்தின் இரு சபைகளும் தமது விவாதங்களைப் பிரசுரிக்கும் உரிமையை மௌனமாக விட்டுக்கொடுத்தபின், இது செய்தித்தாளின் ஒரு முக்கியமான வேலையாயிற்று. பத்திரிகை வாசித்த மக்களின் எண்ணிக்கை குறைவே என்றாலும், அவர்கள் அரசியலில் மதிநுட்பத்துடன் தீவிர ஆர்வம் காட்டினர். எனவே, பாராளுமன்றம் நடந்த சமயத்தில் பத்திரிகையில் பாதி இடத்துக்கும் அதிகமாகவே பாராளுமன்ற விவாதத்துக்கென ஒதுக்கப்பட்டது. ஒரு பக்கம் அல்லது அதற்கும் சிறிது அதிகமாக, விளம்பரங்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட்டது; நூல்கள், இசை நிகழ்ச்சிகள், நாடகங்கள், உடைகள், வீட்டு வேலை தேடிய சிலர்—இப்படிப்பட்ட விளம்பரங்கள் செய்யப்பட்டன. மீதியிடத்தில் கவிதைகள், தீவிரமும் தமாஷுமான கட்டுரைகள், நிருபர்கள் சொந்தப் பெயரிலும் புனைபெயரிலும் எழுதிய

கடிதங்கள், நாடக சம்பந்தமான அல்லது சமூக சம்பந்தமான செய்தித் துணுக்குகள், வதந்திகள், அரசாங்க அறிவிப்புகள், அயல்நாட்டு விவகாரங்கள் பற்றிய நீண்ட அரசாங்க அறிக்கைகள் ஆகியவை வெளியாயின. நவீன செய்தித்தாள் இவ்வாறு உருவாகிக்கொண்டிருந்தது. ஆயினும், விற்பனை குறைவு; 2,000 பிரதிகள் விற்பனையானால் நல்லது எனக் கருதப்பட்டது; 1795-ல் *Morning Post*-ன் விற்பனை 350 பிரதிகளாகக் குறைந்து, *Times*-ன் விற்பனை 4,800 ஆக உயர்ந்தது. பத்திரிகைத் தொழிலில் குபேரனாகிவிடுவதோ அல்லது குடி முழுகிப் போவதோ அப்பொழுது சாத்தியமில்லை. எனவே, பத்திரிகை நடத்தியவர் விரும்பியது செல்வாக்கு; அதுவும் அரசியல் செல்வாக்கு. *Northampton Mercury, Gloucester Journal, Norwich Mercury, Newcastle Courant* போன்ற பல நல்ல மாவட்டப் பத்திரிகைகள் இருந்தன.

இரண்டாம் சார்லஸின் ஆட்சி தொடங்கி நாடகமும் செய்தித்தாள்களும் தலைநகரிலிருந்து மாவட்டங்களுக்கு எவ்வாறு பரவினவோ, அதேபோல் நூல்கள் அச்சிட்டுப் பதிப்பிக்கப்படுதலும் பரவின. மூன்றாம் வில்லியத்தின் ஆட்சியில் தணிக்கைச் சட்டமும் (Censorship Act) லைசென்சு சட்டமும் (Licensing Act) போயொழிந்ததால், அச்சுக்கூடங்களின் எண்ணிக்கைமீதான சட்டப்படியான கட்டுப்பாடுகள் நீங்கின. இதனால் லண்டனில் அச்சுக்கூடங்களின் எண்ணிக்கை பெரிதும் அதிகரித்ததுமன்றி, வேறு பல நகரங்களிலும் அவை நிறுவப்பட்டன. நூல் வெளியிடுவதும் விற்பனை செய்வதும் ஒரே நிறுவனமே.[1] 1726-க்கும் 1775-க்குமிடையில் இங்கிலாந்தில் இத்தகைய நிறுவனங்கள் லண்டனுக்கு வெளியில் மட்டும் 150 இருந்தன; லண்டனிலும் அவைகளின் எண்ணிக்கை அதற்குக் குறைந்ததன்று.

டாக்டர் ஜான்சனின் காலத்தில் மாவட்ட நகரங்கள் பலவற்றில் இலக்கிய, விஞ்ஞான வாழ்வு சுறுசுறுப்புடன் காணப்பட்டது. அங்கு வெளியான செய்தித்தாள்களும் நூல் வெளியீட்டகங்களும் இதற்கு மேலும் தூண்டுதல் அளித்தன. இச் செய்தித்தாள்களும் நூல்களும் நல்ல தரமுடையவையாக இருந்தன. அந் நூற்றாண்டு முடியுமுன் பெவிக் (Bewick) எழுதிய '*British Birds*' போன்ற முதல்தரமான நூல்களும் வெளியிடப்பட்டன. பெவிக்கின் இந்தப் புகழ்பெற்ற நூல்

[1] இத்தகைய நிறுவனங்களில் மிகவும் பழையது லாங்மன்ஸ். 1724-ல் தாமஸ் லாங்மன்ஸ் இதை வாங்கினார். அதை இன்னும் ஒரு குடும்பமே நடத்திவருகிறது. 1940 வரை அது பேட்டர்நாஸ்டர் ரோவில் (Paternoster Row) பழைய இடத்திலேயே இருந்துவந்தது; பிறகு சண்டையில் எதிரியின் குண்டுவீச்சில் அக் கட்டடம் இடிந்துபோயிற்று. இப்பொழுது வெளியிடும் தொழிலை மட்டுமே அது நடத்திவருகிறது; விற்பனை ஒரு தனித் தொழிலாக ஆகிவிட்டது.

சிறந்த படங்களுடன் நியூகாசில்-ஆன்-டைனில் அச்சிட்டு, வெளியிடப் பட்டது. பதினெட்டாம் நூற்றுண்டின் அச்சுக்கலை எலிசபெத்தின் காலத்திய அச்சுக்கலையைவிட அலங்காரத்தில் குறைந்ததே; அதே போல் விக்டோரியா காலத்தைக் காட்டிலும் அச்சுப் பிழையை அதிகம் கொண்டதே; ஆயினும், அழகிய கலை என்ற முறையில் அது இவ்விரண்டுக்குமே மேம்பட்டது.

ஆசிரியர்கள் தங்களது நண்பர்களிடமும் ஆதரவாளர்களிடமும் சந்தா வசூலித்தே தமது நூல்களைப் பெரும்பாலும் வெளியிட்டனர். குறிப்பாக, மேல் வகுப்பு மக்களின் செல்வாக்கு மிக்கிருந்த அந் நூற்றுண்டில் அதிகம் படித்து மகிழப்பட்ட பருமனை, விலையுயர்ந்த நூல்கள் அனைத்தும் இம் முறையில்தான் வெளியிடப்பட்டன. தனி மனிதர்கள் தம் வீடுகளில் வைத்துப் போற்றிய சிறந்த நூலகங்களால் இவ் வியாபாரம் நன்கு நடைபெற்றது. ஆயினும், சந்தா வசூலிக்கும் நூல் நிலையங்களும் லண்டன், மற்ற மாவட்ட நகரங்கள், குறிப்பாக சுகாதார வாசஸ்தலங்கள் ஆகியவிடங்களில் இயங்கிவந்தன; இது முதன்முதலில் 1740-ல் நிறுவப்பட்டது. பாத்திலும் சதாம்ப்டனிலும் இத்தகைய சிறந்த நூல்நிலையங்கள் இருந்தன. அண்டை மனிதர்களும் நண்பர்களும் சேர்ந்து பல புத்தகக் 'கிளப்பு'களை வைத்து நடத்தினர்.

கவிதைகள், பயண நூல்கள், வரலாறு, நாவல்கள் ஆகிய எல்லாவற்றையும் மக்கள் விரும்பிப் படித்தனர். நமது நாட்டில் சில காலம் தங்கிவிட்டுப் போன ஜெர்மானியர் மோரிட்ஸ், அக்காலத்திய நமது இலக்கிய நாகரிகத்துக்குச் சிறந்த சான்று பகருகிருர் (1782) :

'ஒப்புவமையற்ற முறையில் நமது ஜெர்மென் எழுத்தாளர்களை விட ஆங்கிலேய தேசத்துப் பெரும் எழுத்தாளர்களின் நூல்களை அதிக மான மக்கள் படிக்கின்றனர் என்பது நிச்சயம்; ஜெர்மன் நூல்களோ, மெத்தப் படித்தவர்களால்மட்டுமே அல்லது நடுத்தர வகுப்பினரால் மட்டுமே வாசிக்கப்படுகின்றன. ஆனல், ஆங்கிலேயப் பேரெழுத்தாளர் களின் நூல்களோ எல்லோரது கைகளிலும் இருக்கின்றன; எல்லா மக்களாலும் வாசிக்கப்படுகின்றன. இந் நூல்களின் பதிப்புகளுக்கு எண்ணிக்கையே இல்லை; பொதுமக்களிடம் இவைகளுக்கிருக்கும் மதிப்புக்கு இதுவே போதுமான சான்று. நான் தங்கியிருக்கும் வீட்டின் சொந்தக்காரி ஒரு தையல்காரனின் விதவை; அவள் மில்டனை நிறைய வாசிக்கிருள்; இறந்துபோன அவளது கணவன் அவள்மீது முதலில் காதல் கொண்டதே இதனுல்தான் என்று என்னிடம் சொல் கிருள்; ஏனெனில், மில்டனை அவள் அவ்வளவு அழுத்தம் திருத்தமாக வாசித்தாளாம். இந்த ஒரே ஓர் உதாரணம் மட்டும் போதாது; ஆனல், கீழ் வகுப்பு மக்கள் பலரிடம் நான் பேசிப் பார்த்திருக்கிறேன்;

அவர்கள் எல்லோருக்குமே தமது தேசத்தின் பெரும் எழுத்தாளர்களை நன்கு தெரியும்; அவர்கள் எல்லோரையும் அவர்கள் வாசிக்காமல் போனாலும்கூட, பலரை வாசித்திருக்கிறார்கள்.'

பதினெட்டாம் நூற்றாண்டில் பிரபுக்களும் செல்வம் படைத்த கனவான்களும் நிலங்களை ஏராளமாக வாங்கி, பெரும் பண்ணைகளை அமைத்ததாலும், முதலாளித்துவ முறையில் விவசாயம் வளர்ச்சியுற்ற தாலும் சின்னஞ்சிறு கனவான்கள் மறைந்துபோயினர்; நிலத்தைச் சொந்தமாகப் பயிரிட்டு, அல்லது குத்தகைக்கு விட்டு ஆண்டொன்றுக்கு £ 100 முதல் £ 300 வரை வரும்படி பெற்ற இந்தக் கனவான்களால் தலைதூக்க முடியவில்லை. கிராமப்புறத்து வாழ்விலும் அரசாங்கத்திலும் முன்பு மிக முக்கியத்துவம் பெற்றுத் திகழ்ந்த இம் மனிதர்கள் இன்று கண்ணிலேயே படுவதில்லை. ஆனால், எண்ணிக்கையில் அதிகரித்து விட்ட கனவான்களும், பல்வேறு வழிகளில் சிறு வருவாய் சம்பாதித்த பலரும் ஒரு விதத்தில் இம் மனிதர்களின் வேலையைச் செய்துவந்தனர்; என்றாலும், பழைய கிராமப்புறத்து சிறு கனவானைப்போல இவர்களது ஆணி வேர் அம் மண்ணிலேயே ஆழப் புதைந்திருக்கவில்லை. இம் மாற்றத்தில் லாபமும் அதே சமயம் நஷ்டமும்கூட இருந்தன. இதனால் சற்று உயர்ந்ததொரு கலாசாரம் தோன்றியது: (*Pride and Prejudice*) என்ற நாவலில் வரும் திரு. பென்னெட்டுக்குத் (Mr. Bennet) தனது நிலத்தைவிட நூல்களில் அதிகக் கவனம்; அவர் இப் புதிய கலாசாரத்தின் பிரதிநிதி. சிறந்த நாட்குறிப்பேட்டை நமக்கு விட்டுச் சென்ற மதகுரு உட்ஃபோர்டுக்கு ஆண்டு வருமானம் £ 400 தான்; ஆயினும், வேலைகளைச் செய்ய ஐந்து அல்லது ஆறு வேலையாள் களை வைத்துக்கொள்ளவும், தனது உறவினர்களைக் கவனித்துக் கொள்ளவும், நன்றாக ஊர் சுற்றவும், ஏழைகளையும் பணக்காரர்களையும் நன்கு உபசரிக்கவும் அவருக்கு முடிந்தது. தான் செலவழித்த சிறு தொகைகளையும்கூட அவர் தனது ஏட்டில் குறித்துவைத்தார்; தான் செலவில் கவனத்துடன் இருக்கவேண்டுமென்பதும், இல்லாவிட்டால் ஒரு திட்டமான வருவாயைக் கொண்டு வசதியாக வாழ்வது சாத்திய மில்லை என்பதும் அவருக்குத் தெரிந்திருந்தது என்பது இதிலிருந்து விளங்குகிறது.

வீட்டிலோ அல்லது வயலிலோ வேலை செய்வதற்குச் சிறந்த ஒரு வேலையாள் வேண்டுமென்றால் £ 10 போதும்; பிறகு சாப்பாட்டுச் செலவுதான் கூடுதல். இதற்கும் குறைவான சம்பளத்துக்குங்கூட பலர் திருப்தியுடன் வேலை செய்தனர். எனவே, கனவான்களின் வீடு களில் வேலையாள்கள் கூட்டங்கூட்டமாக நிறைந்திருந்தனர். பலர் 'பழைய வேலைக்காரர்'களாகி, தமது எஜமானர்களுடன் அன்னி யோன்னியமாகப் பழகி, மதிப்புடன்கூட வாழ்ந்தனர்; அவர்களை

வேலையைவிட்டு நீக்கிவிடுவதுபற்றி நினைப்பதுகூட எஜமானர்களுக்கு வருத்தத்தையூட்டியது; பண்டை ஆங்கிலேய வாழ்வில் இது ஒரு முக்கிய மான, மனிதத்தன்மையூட்டும் அம்சம். சில வேலைக்காரச் சிறுமிகள், சில ஆண்டுகள் கழிந்து திருமணம் செய்துகொண்டு வேலையை விட்டனர்; ஆனால், அதற்குள் சமையல், வீட்டை வைத்துக்கொள்ளும் முறை ஆகியவை கற்றுக்கொண்டனர்; பின்னர் மனைவியாகவும் தாயாகவும் ஆன பின்னர் இவை பெரிதும் பயன்பட்டன. இத்தகைய விஷயங்களில் ஒவ்வொரு கிராமத்துக்கும், ஒவ்வொரு குடிசைக்கும் ஒரு தொன்மையான மரபு இருந்தது. தெருக்கோடியிலுள்ள கடையில் டப்பாவிலடைக்கப்பட்ட உணவு முதல் எல்லாவற்றையும் வாங்குவது இயலாத அக்காலத்தில், திறமையற்ற, பயிற்சியற்ற மனைவியால் பெருந் தீமையே விளையும்; எனவே, இன்றைய நகரங்களில் நாம் சாதாரண மாகக் காணுவதுபோல் அவர்களை அன்று காணமுடியாது.

## கலைச்சொற்கள்

(தமிழ்—ஆங்கிலம்)

அ

| | | |
|---|---|---|
| அணை அடைப்புகள் | — | Locks |
| அமைதி காக்கும் நீதிபதிகள் | — | Justices of the peace |
| அறியொணுக் கொள்கையினர் | — | Agnostics |

ஆ

| | | |
|---|---|---|
| ஆக்ஸ்ஃபோர்டு இயக்கம் | — | Oxford Movement |
| ஆல்டர்மன் | — | Alderman |
| ஆள் திரட்டும் குழு | — | Press-gang |

இ

| | | |
|---|---|---|
| இடைத்தரக் கல்வி | — | Secondary Education |
| இயற்கைச் சமயம் | — | Deism |
| இரட்சண்ய சேனை | — | Salvation Army |
| இரவலர் வரி | — | Poor-rate |
| இல்லத்தொழில் முறை | — | Domestic System |

உ

| | | |
|---|---|---|
| உயர் டோரிக் கட்சி | — | High Tory Party |
| உயர்திருச்சபை | — | High Church |
| உரிமைப்பத்திரக் குடியானவர்கள் | — | Copy-holders |
| உலகாயதம் | — | Materialism |

ஊ

| | | |
|---|---|---|
| ஊர்குரு | — | Parson |

எ

| | | |
|---|---|---|
| எவஞ்சலிய சமயம் | — | Evangelism |

ஐ

| | | |
|---|---|---|
| ஐயக்கொள்கையினர் | — | Scepticism |

ஒ

| | | |
|---|---|---|
| ஒயிட் ஹால் | — | White Hall |

க

| | | |
|---|---|---|
| கட்டற்ற பகுத்தறிவாளர்கள் | — | Free-thinkers |
| கண்டத் திட்டம் | — | Continental System |
| கவுன்டி | — | County |
| கவுன்டிக் காவலர் | — | County-keeper |
| கனவான்கள் | — | Gentry, Squires |
| கீழ்த் திருச்சபை | — | Low Church |
| குடிசை | — | Cottage |
| குடும்பச் சின்னம் | — | Coat of Arms |
| குத்தகைக் குடியானவர்கள் | — | Tenant farmers |
| குத்தகை நிலம் | — | Tenant farm |
| குவேக்கர்கள் | — | Quakers |
| கூட்டுறவு இயக்கம் | — | Co-operative Movement |

ச

| | | |
|---|---|---|
| சங்கீதங்கள் | — | Psalms |
| சமயச் சீர்திருத்த இயக்கம் | — | Reformation |
| சமயப் பிரபுக்கள் | — | Spiritual Lords |
| சார்டிச இயக்கம் | — | Chartist Movement |
| சிதைந்த பரோக்கள் | — | Rotten Boroughs |
| சீர்திருத்த மசோதா | — | Reform Bill |
| சுதந்திரமான திருச்சபைகள் | — | Free Churches |
| செவிலி | — | Nurse |

ட

| | | |
|---|---|---|
| டயோசீஸ் | — | Diocese |
| டிஸ்ஸென்டர் | — | Dissenter |

த

| | | |
|---|---|---|
| தடையிலா வாணிபம் | — | Free Trade |
| தலைமை குரு | — | Prelate |
| தனிநபர் வாதம் | — | Individualism |
| திரித்துவம் | — | Trinity |
| திருச்சபைக் கட்டணம் | — | Church-rate |
| தீக்கைச் சடங்கு | — | Confirmation |
| தீவிரவாதிகள் | — | Radicals |
| துணை குருமார் | — | Curates |
| துறை | — | Dock |
| தொழிலகம் | — | Work House |

தொழிற்சாலை — Factory
தொழிற்சாலைச் சட்டங்கள் — Factory Acts
தொழிற் சங்கம் — Trade Union
தொழிற் கூட்டுச் சட்டம் — Combination Act
தொழுகை — Prayer
தொன்மைக் காலம் — Classical Age

### ந

நகரத்தார் — Burgesses
நாத்திகம் — Atheism
நிதி செலுத்தியவர்கள் — Fund Holders
நிலச்சொந்தக்காரர் — Freeholder
நிலச்சொந்தக்கார குடியானவன் — Freehold yeoman
நிலைப்படை — Standing Army
நீடித்த பாராளுமன்றம் — Long Parliament
நூற்கும் ஜென்னி — Spinning Jenny
நெப்போலியப் போர்கள் — Napoleonic wars

### ப

பகல் பள்ளிகள் — Day Schools
பகுதி நேர வேலை — Part-time work
பங்கு வியாபாரிகள் — Stock-jobbers
பட்டா நிலம் — Freehold
பண்ணை — Estate
பயன்முதற் கோட்பாடு — Utilitarianism
பரோ — Borough
பல்பதவி முறை — Pluralism
பல்பதவி குருமார்கள் — Pluralists
பிரபு — Lord, Noble, Earl
பிஷப்பு — Bishop
பிஷப்ரிக்குகள் — Bishoprics
புதுநன்மை — Communion
புனித நன்மை — Holy Communion
பேப்பிஸ்ட் — Papist
பொதுப் பள்ளிகள் — Public schools
பொது மகளிர் — Prostitutes

### ம

மகிழ்ச்சிக் கொள்கை — Hedonism
மக்கட்படை — Militia

| | | |
|---|---|---|
| மான்புறு புரட்சி | — | Glorious Revolution |
| மானியப் பள்ளிகள் | — | Endowed schools |
| மூன்று வயல்முறை | — | Three-field system |
| மெதாடிசம் | — | Methodism |
| மேயர் பிரபு | — | Lord Mayor |
| மேனர் இல்லம் | — | Manor House |
| மேனர்ப் பண்ணை | — | Manor |

ர

| | | |
|---|---|---|
| ரேவு | — | Pier |

வ

| | | |
|---|---|---|
| வழிபாட்டு நூல் | — | Prayer Book |
| வேலியமைப்பு | — | Enclosure |

ஜ

| | | |
|---|---|---|
| ஜெர்னிமேன் | — | Journeyman |

ஷ

| | | |
|---|---|---|
| ஷயர் | — | Shire |

## கலைச்சொற்கள்

(ஆங்கிலம்—தமிழ்)

**A**

Agnostics — அறியொணாக் கொள்கையினர்
Alderman — ஆல்டர்மன்
Atheism — நாத்திகம்

**B**

Bishop — பிஷப்
Bishoprics — பிஷப்ரிக்குகள்
Borough — பரோ
Burgesses — நகரத்தார்

**C**

Chartism — சாட்டிச இயக்கம்
Church-rate — திருச்சபைக் கட்டணம்
Classical age — தொன்மைக் காலம்
Coat of Arms — குடும்பச் சின்னம்
Combination Act — தொழிற்கூட்டுச் சட்டம்
Communion — புதுநன்மை
Confirmation — தீக்கைச் சடங்கு
Continental system — கண்டத் திட்டம்
Co-operative movement — கூட்டுறவு இயக்கம்
Copy-holder — உரிமைப் பத்திரக் குடியானவன்
Cottage — குடிசை
County — கவுன்டி
County-keeper — கவுன்டிக் காவலர்
Curate — துணை குருமார்

**D**

Day School — பகல் பள்ளி
Deism — இயற்கைச் சமயம்
Diocese — டயோசீஸ்
Dissenter — டிஸ்ஸென்டர்
Dock — துறை
Domestic system — இல்லத் தொழில்முறை
Duke — கோமகன்

E

Enclosure — வேலியமைப்பு
Endowed School — மானியப் பள்ளி
Estate — பண்ணை
Evangelism — எவஞ்சலிய சமயம்

F

Factory Acts — தொழிற்சாலைச் சட்டங்கள்
Free-Churches — சுதந்திரமான திருச்சபைகள்
Free hold — பட்டா நிலம்
Free holder — நிலச் சொந்தக்காரர்
Free hold yeoman — நிலச்சொந்தக்காரக் குடியானவன்
Free-thinker — கட்டற்ற பகுத்தறிவாளர்கள்
Free Trade — தடையிலா வாணிபம்

G

Gentry — கனவான்கள்
Glorious Revolution — மாண்புறு புரட்சி
Governess — சொந்த ஆசிரியை

H

Hedonism — மகிழ்ச்சிக் கொள்கை
High Church — உயர் திருச்சபை
High Tory Party — உயர் டோரிக் கட்சி
Holy Communion — புனித நன்மை

I

Individualism — தனிநபர் வாதம்

J

Journeyman — ஜெர்னிமேன்
Justice of the Peace — அமைதி காக்கும் நீதிபதி

L

Locks — அணையடைப்புகள்
Long Parliament — நீடித்த பாராளுமன்றம்
Lord Mayor — மேயர் பிரபு
Low Church — கீழ்த் திருச்சபை

M

Manor — மேனர்ப் பண்ணை
Manor House — மேனர் இல்லம்
Materialism — உலகாயதம்
Methodism — மெதாடிசம்
Militia — மக்கட்படை

N

Napoleonic Wars — நெப்போலியப் போர்கள்
Nurse — செவிலி

O

Oxford Movement — ஆக்ஸ்ஃபோர்டு இயக்கம்

P

Papist — பேப்பிஸ்ட்
Parson — ஊர் குரு
Part-time work — பகுதி-நேர வேலை
Pier — ரேவு
Pluralism — பல்பதவி முறை
Pluralists — பல்பதவி குருமார்
Poor-rate — இரவலர் வரி
Prayer-book — வழிபாட்டு நூல்
Prelate — தலைமை குரு
Press-agng — ஆள்திரட்டும் குழு
Protitutes — பொது மகளிர்
Psalms — சங்கீதங்கள்
Public Schools — பொதுப் பள்ளிகள்

Q

Quaker — குவேக்கர்

R

Radicals — தீவிரவாதிகள்
Reformation — சமயச் சீர்திருத்த இயக்கம்
Reform Bill — சீர்திருத்த மசோதா
Revivalism — புத்துயிர்ப்பு இயக்கம்
Rotten borough — சிதைந்த பரோ

**S**

Salvation Army — இரட்சண்ய சேனை
Sceptic — ஐயக் கொள்கையினர்
Scepticism — ஐயக் கொள்கை
Secondary Education — இடைத்தரக் கல்வி
Service — தொழுகை
Shire — ஷயர்
Spinning Jenny — நூற்கும் ஜென்னி
Spiritual Peers — சமயப் பிரபுக்கள்
Squire — கனவான்
Standing Army — நிலைப்படை
Stock-jobbers — பங்கு வியாபாரிகள்

**T**

Tenant farm — குத்தகை வயல்
Tenant farmers — குத்தகைக் குடியானவர்கள்
Three-field system — மூன்று வயல் முறை
Trinity — திரித்துவம்

**U**

Unitarianism — தனியொருமைக் கோட்பாடு
Utilitarianism — பயன்முதற் கோட்பாடு

**W**

White Hall — ஒயிட் ஹால்
Work House — தொழிலகம்

**Y**

Yeoman — குடியானவன்

## பொருள்குறிப்பு அகராதி

